

# கம்பன் - புதிய பார்வை

அ.ச.ஞானசம்பந்தன்



கங்கை
புத்தக
நிலையம்



# ர் - புதிய பார்வை

## amban-A new Approach)

திய அக்காடெமி பரிசு பெற்ற பதிப்பு


பேராசிரியர்

**அ.ச.ஞானசம்பந்தன்**





கை புத்தகநிலையம்

23, தீனதயாளு தெரு,
பாகராய நகர், சென்னை-600 017

# பதிப்புரை

ர் என்றொரு மானிடன் வாழ்ந்ததும், தமிழர் ில் கொள்ளத்தக்க விழுப்பொருள்கள் த் தன் காப்பியத்தில் வரும் பாத்திரங் ாண்டு அவன் விளக்கியதும், அறிஞர்கள் ாம் அறிந்தனவே.

னக் கம்பன் கழகம், 1984ஆம் ஆண்டு 19 தேதிகளில் ஏவி.எம். இராஜேசுவரி மண்டபத்தில், **பேராசிரியர் அ. ச. ஞான**ர் அவர்களைக் கொண்டு, **அமரர் ஏவி.எம்.** **ளை நினைவுச் சொற்பொழிவுகள்** தொடரில் னவுச் சொற்பொழிவினை '**கம்பன் — புதிய** ன்னும் தலைப்பில் நிகழ்த்திற்று.

சாற்பொழிவினைச் செவி வாயாக, நெஞ்சு கேட்டு உள்ளம் மகிழ்ந்து பாராட்டிய ர்.

வருடைய பாராட்டையும் பெற்ற சொற் நூல் வடிவாக்கி எமது பதிப்பாக தமிழ் ஆர்வலர்கட்கு வழங்க அவாவி, **ருமகன் அ.ச.ஞா.** அவர்களை அணுகிய

கங்கை முதற் பதிப்பு : ஆகஸ்ட், 1993
இரண்டாம் பதிப்பு : நவம்பர், 2003



விலை: ரூ. 100.00

- Title : KAMBAN PUTHIYA PARVAI
- Author : A.S.Gnanasambandan
- Language : Tamil
- Subject : Literary Criticism
- Edition : Second Edition, November, 2003
- Pages : xvi + 392 = 408
- Published by : **Gangai Puthaga Nilayam**
  23, Deenadayalu Street,
  T.Nagar, Chennai - 600 017.
- Price : Rs. **100.00**

---

Printed at : Malar Printers, 044-28224803

# பதிப்புரை

கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும், தமிழர் தம் வாழ்வில் கொள்ளத்தக்க விழுப்பொருள்கள் இவை எனத் தன் காப்பியத்தில் வரும் பாத்திரங் களைக் கொண்டு அவன் விளக்கியதும், அறிஞர்கள் அறிவிக்க நாம் அறிந்தனவே.

சென்னைக் கம்பன் கழகம், 1984ஆம் ஆண்டு ஜூலை 18, 19 தேதிகளில் ஏவி.எம். இராஜேசுவரி கல்யாண மண்டபத்தில், **பேராசிரியர் அ. ச. ஞான சம்பந்தனார்** அவர்களைக் கொண்டு, **அமரர் ஏவி.எம். அறக்கட்டளை நினைவுச் சொற்பொழிவுகள்** தொடரில் முதல் நினைவுச் சொற்பொழிவினை **'கம்பன் — புதிய பார்வை'** என்னும் தலைப்பில் நிகழ்த்திற்று.

அச் சொற்பொழிவினைச் செவி வாயாக, நெஞ்சு களனாகக் கேட்டு உள்ளம் மகிழ்ந்து பாராட்டிய வர்கள் பலர்.

அனைவருடைய பாராட்டையும் பெற்ற சொற் பொழிவை நூல் வடிவாக்கி எமது பதிப்பாக வெளியிட்டு தமிழ் ஆர்வலர்கட்கு வழங்க அவாவி, **அறிஞர் பெருமகன் அ.ச.ஞா.** அவர்களை அணுகிய

பொழுது முழு மனத்துடன் இசைவு தந்தார். அன்னார்க்கு எங்கள் நன்றி.

**இலக்கியக் கலை (1953)** எனும் நூலை ஆக்கியும், 'கம்பன் — கலை' என்ற தலைப்பில் 'இராவணன் — மாட்சியும் வீழ்ச்சியும்' முதலாய பல நூல்களை அமைத்தும், தமிழ் கூறு நல்லுலகில் தனக்கெனத் தனி இடம் வரைந்துகொண்ட சீரிய சிந்தனையாளர், எழுத்தாளர், கேட்டார்ப் பிணிக்கும், வேட்பவே மொழியும் சொற்பொழிவாளர், ஆய பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தனார். இந்நூற்றாண்டின் நாற்பதுகளில் பெருஞ் சிறப்பெய்திய **'பெருஞ்சொல் விளக்கனார்' அரசங்குடி, சரவணனார்** அருந்தவப் புதல்வர். (தந்தை அறிவு மகன் அறிவு அன்றோ?)

இத்தகைய பெருமகனார்க்கு எங்கள் நெஞ்சு நேர் நன்றிகள் என்றும் உரியன ஆகும்.

கங்கை புத்தக நிலையத்தார்

# முன்னுரை

பல ஆண்டுகளாகக் கம்பனைப் பயின்றும் மேடைகளில் பேசியும் வரும்பொழுது இடை இடையே ஓர் எண்ணம் தோன்றலாயிற்று. ஒப்பற்ற இலக்கியக் காப்பியம் ஒன்றை இத் தமிழ் மொழியில் படைக்க வேண்டும்; அதன் பயனாகத் தன் புகழ் சாகா வரம் பெற்று நிலைபெற வேண்டும் என்று கருதிக் கம்பநாடன் இக் காப்பியத்தைப் படைத்தானா? என்று என்னையே பல சமயங்களில் கேட்டுக்கொண்டதுண்டு. 'உலகம் விரும்பினாலும் சாகடிக்க முடியாத ஓர் ஒப்பற்ற காப்பியத்தைப் படைக்கப்போகிறேன்' என்று 'மில்டன்' கூறியது போலக் கம்பனுக்கும் ஒரு குறிக்கோள் இருந்திருக்குமோ? என்று பலகாலம் நினைத்ததுண்டு.

இவ்வுலகில் வாழும் மக்களை உய்கதி அடையச் செய்யும் தாரகம் இராமபக்தி என்று நினைத்து அதனை வளர்க்க வேண்டும் என்று கருதியே இக் காப்பியத்தைப் படைத்தான் போலும் என்று சில காலம் எண்ணி இருந்தேன். வைணவ சமய மறுமலர்ச்சிக்கு வழிகோல வேண்டும் என்று கருதினானோ என்ற ஐயமும் தோன்றியதுண்டு. ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் ஈடுபட்ட அவன், அவர்கள் செய்தவற்றிற்கும் மேலாகத் தான் ஒரு நூலை இயற்றி, அச் சமய வளர்ச்சிக்கு உதவ வேண்டும் என்று நினைத்தான் என்று கருதுவதும் தவறு என உணர்ந்தேன். நூலில் மேலும் மேலும் தோயும்பொழுது இராமன் என்ற பெயரை, மூலப் பரம்பொருளுக்குப் பெயராக இக் கவிஞன் பயன்படுத்துகிறானே தவிர, மும்மூர்த்திகளுள்

ஒருவராகக் கூறப்பெறும் திருமாலுக்கு இப்பெயரை வழங்கவில்லை என்பதையும் அறிய முடிந்தது. ஆழ்வார்களின் பாடல்களிலும், தேவார திருவாசகங்களிலும் இவன் துளையம் ஆடியுள்ளான் என்பது உண்மையானாலும், சைவம் வைணவம் என்ற சிறிய வட்டத்துள் சிக்கவில்லை என்பதுடன் இவ்வட்டமே முழு உண்மையாகும் என்று கூறுபவர்களையும் இவன் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதையும் அறிய முடிந்தது. எனவே, சமயம் என்ற பெயருக்கு இன்றும், ஒன்பதாம் நூற்றாண்டிலும் நாம் தந்த குறுகிய பொருளை இவன் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதையும் அறிய முடிந்தது. நாம் ரூபங்கடந்த மூலப் பரம்பொருளை நம்பி, அதனிடம் சரணம் அடைவோர் அனைவரும் ஒரே சமயத்தைச் சேர்ந்தவர் என்ற கொள்கையை வலியுறுத்துபவன் இவன் என்பதையும் அறிய முடிந்தது. குறுகிய சமய வட்டத்தை ஏற்றுக்கொள்ளாதவன் என்பதை அறிந்தபிறகு, இவன் சமயப் பிரசாரம் செய்வதற்கு தன் காப்பியத்தைப் படைக்கவில்லை என்பது உறுதிப்பட்டது. ஒன்பதாம் நூற்றாண்டில் நிலவிய சைவம், வைணவம் இரண்டுமே நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்பவர்களின் செல்வாக்கின் கீழ் முழுவதுமாகத் தத்தம் பெருமை பேசும் சிறு வட்டங்களாக இருந்ததை அறிய முடியும்.

நிறுவப்பட்டதும், அக்கால மக்களுள் பெரும்பான்மை யோரால் ஏற்றுக்கொள்ளப் பெற்றதுமான வைணவ சமயத்தைக் கம்பநாடன் தன் காப்பியம் முழுவதிலும், எந்த ஓர் இடத்திலும் குறிப்பிடவே இல்லை. 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய பெரிய புராணம், அன்றைய சைவ சமயக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு செல்கிறது என்றாலும், சைவத்தைப் புகழ்வதையும் அதன் கொள்கைகளைப் பரப்புவதையும் தன் தலையாய கடமையாகக் கொள்ளவில்லை. அன்றையத் தமிழர் வாழ்க்கைக்குத் தேவையான **'குறிக்கோள்'** பற்றியே பெரிய புராணம் பேசுகிறது. சிந்தாமணி அன்றைய சைன சமயக் கொள்கைகளை ஒல்லுவாய் எல்லாம் கூறிச் செல்கிறது.

மணிமேகலை வெளிப்படையாகவே பௌத்தக் கொள்கைகள், நம்பிக்கைகள் என்பவற்றைப் பிரசாரம் செய்கிறது. பெருங்கதை என்று கூறப்பெறும் உதயணன் கதை ஒரு பகுதியே கிடைத்திருப்பினும் அதிலும் அன்றைய சமய வாடை ஓரளவு வீசாமல் இல்லை.

எனவே சங்ககாலம் தொடங்கிப் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரைத் தோன்றிய காப்பியங்களை எடுத்துக் கொண்டால், சமயப் பிரசாரம் செய்யாமல் மனித இனத்துக்கு இன்றியமையாத நீதிகளையும், வாழ வேண்டிய முறையையும் கூறுவதே தலையாய நோக்கம் என்று கொண்டு தோன்றிய காப்பியங்கள் இரண்டே இரண்டுதான். ஒன்று சிலப்பதிகாரம்; அடுத்தது கம்பனின் இராமகாதை. சிலப்பதிகாரம் சைன சமய முனிவரால் இயற்றப்பெற்றதாகும். அவர்கள் கடவுட் கொள்கையை ஏற்காதவர்கள். சைன சமயப் பிரசாரம் அதிகம் செய்யாததுடன், கடவுட் கொள்கையையும் சிலம்பு பேசவில்லை. இவைகளின் இடையே கம்பநாடன் காப்பியம் தனக்கென ஒரு வழி வகுத்துக்கொண்டு, பிற காப்பியங்கள் எதனுடனும் ஒப்புமை கூற முடியாதபடி தனித்து விளங்குவதை அறிய முடிந்தது. சிலம்பு முதல் பெரிய புராணம் வரை உள்ள காப்பியங்கள் அனைத்தும், காப்பியம் என்ற பெயருள் அடக்கப் பெற்றாலும், எந்த ஒரு பொது இலக்கணத்தையும் பின்பற்றி இவை எழுந்தன என்று கூறுமாறு இல்லை. இவை ஒன்றுபோல் மற்றொன்று இல்லை. இவை அனைத்தையும் கற்ற ஒருவன் இவற்றின் அடிப்படையில் காப்பிய இலக்கணம் என்ற ஒன்றை வகுக்க முற்பட்டால், அது இயலாத செயல் என்பதை விரைவில் அறிந்துகொள்ள முடியும். கம்பனுடைய காப்பியக் கட்டுக் கோப்பு, காப்பிய உத்திகள், பாத்திரப் படைப்பு, பாவிகம் என்பவை அவனுக்கு மட்டுமே, அவனுடைய நூலுக்கு மட்டுமே உரியன என்ற முடிபிற்குத்தான் வர வேண்டி உள்ளது.

தன் புகழ் நிலைக்கக் காப்பியம் அமைத்தான் என்ற எண்ணமும், சமயப் பிரசாரம் செய்யக் காப்பியம் செய்தான்

என்ற எண்ணமும், இக் காப்பியத்தை மேலும் கற்கத் தொடங்கியவுடன் அடிபட்டுப் போயின. அன்றுவரை யாரும் செய்ய முடியாத முயற்சி ஒன்றை இவன் மேற்கொண்டான் என்பதை ஓரளவு ஊகிக்க முடிந்தது. 'கல்வியில் பெரியவன் கம்பன்' என்ற முதுமொழி உண்மை என்னும்படி இவன் கல்லாத கலையோ, வேதக் கடலோ, உபநிடதங்களோ இல்லை என்பதையும் ஓரளவு அறிய முடிந்தது. இத்துணை நூல்களைக் கற்றிருப்பினும், இவனை அதிகம் ஈர்த்த நூல் 'திருக்குறளே' என்ற உண்மையையும் அறிய முடிந்தது. திருக்குறள் ஒப்பற்றதும், கால தேச வர்த்தமானங்களைக் கடந்து நிற்பதும் ஆகிய நீதிநூல் என்ற முறையில், இவன் அதில் ஈடுபட்டானோ என ஆராய்கையில் மற்றோர் கருத்தும் மெள்ளத் தோன்றல் ஆயிற்று.

தனக்கு இரண்டாயிரம் ஆண்டுகள் முற்பட்டு நன்கு வளர்ந்துள்ள இத் தமிழ்ச் சாதியின் நாகரிகம், பண்பாடு என்பவற்றை நன்கு ஆய்ந்த வள்ளுவப் பேராசான், இந்த நாகரிகத்தில், வெளியில் தெரியாமல் புரையோடிப் போயிருந்த பெருங்குறையை இலைமறை காயாகப் பல இடங்களிலும், வெளிப்படையாகச் சில இடங்களிலும் சுட்டிக்காட்டினான் என்பதைக் கம்பன் அறிய நேர்ந்தது. ஏனையோர் போலப் பொதுவான நீதிகளைக் கூறியதுடன், இத் தமிழ்ச்சாதிக்கு மிக இன்றியமையாத சில நீதிகளையும் அவன் கூறியிருந்தான். அவற்றுள் மிக மிக முக்கியமானவை புலனடக்கம், பரத்தையர் தொடர்பு நீக்கம், கள்ளுண்ணாமை என்பனவாம். பாலுணர்ச்சி (Scx) என்பது மிக மிக வலுவானது என்ற மனத்தத்துவத்தை அறிந்த வள்ளுவன், அதனைக் கட்டுப்படுத்திக்கொண்டு செலுத்தினால் அதுவே மனிதனைத் தேவனாக மாற்ற உதவும் என்பதை அறிவுறுத்தவே, 'காமத்துப் பால்' என்ற ஒன்றை வகுத்தான். இவன் கடிந்த சிலவற்றை எடுத்து, ஏன் இவற்றைக் கடிந்தான் என்று ஆராய்ந்த கம்பநாடன், அவன் கடிந்ததன் காரணத்தை உடனே விளங்கிக் கொண்டான். வள்ளுவன் காலம்

வரை இத் தமிழர்கள் புலனடக்கத்தையோ, பரத்தையர் தொடர்பையோ, கள்ளுண்ணுதலையோ கடியவே இல்லை. கடியாதது மட்டுமன்று, அவற்றிற்குத் தம் வாழ்க்கையிலும், அதன் பயனாக இலக்கியத்திலும் இடம் தந்து போற்றினர்.

இத் தமிழ் நாகரிகத்திற்கு, இதனால் விளைந்த பேராபத்தை முதன் முதலில் கண்டு, எடுத்துக்கூறிய பெருமை முற்றிலும் வள்ளுவனையே சாரும் என்றாலும், அவன் காட்டிய சிவப்புக் கொடியை, அவனுக்குப் பின்வந்த புலவர்கள் யாரும் அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை. புலனடக்கம் என்ற பெயரில் இதனை வலியுறுத்தாவிடினும், புலனடக்கம் உடைய கண்ணகி, அது இல்லாத கோவலன், இருவரைப் பற்றியும் கூறும் சிலப்பதிகாரம் ஓரளவு இதன் பெருமையைக் கூறிற்று என்பதில் ஐயம் இல்லை. கண்ணகியின் கற்பின் பெருமையைச் சிலம்பு மிகுதியாகக் காட்டிற்றே தவிர, அக்கற்பு நிலைப்பதற்கு அடித்தளமாக இருந்தது அவள் புலனடக்கமே என்பதை அக்கால நிலைமைக்கு ஏற்ப வலியுறுத்திக் கூறவில்லை. பரத்தையிடம் சென்று வாழ்ந்த கோவலனை அச் சமுதாயம் கண்டித்ததாகவும் தெரியவில்லை. காரணம் 'மருதம்' என்ற ஒரு திணையையே வகுத்த இத் தமிழர் கோவலனை எவ்வாறு கண்டிக்க முடியும்? இளங்கோவடிகள் அவனைக் கண்டிக்க விரும்பியிருப்பினும், அன்றையச் சூழ்நிலை அதற்கு இடந்தர வில்லை. எனவே, கோவலன் மாதவியிடம் சென்றது தவறு என்று கூற வழியில்லாத அடிகள், அவன் தன் மனைவியையும் வீட்டையும் மறந்துவிட்டு, மாதவியிடமே நீண்டகாலம் தங்கி விட்டதுதான் தவறு என்று கூறுபவர்போல, 'விடுதல் அறியா விருப்பினன் ஆயினன். வடு நீங்கு சிறப்பின் தன் மனையகம் மறந்து' (அரங்கேற்று - காதை 173, 174) என்று கூறிவிட்டார். வள்ளுவன் சுட்டியதை இளங்கோவும் நன்கு அறிந்திருந்தார் எனினும், தம்முடைய காப்பியத்தில் அதற்கு இடங்கொடுக்க அவர் துணியவில்லை. வள்ளுவனை அடியொற்றி இளங்கோ சென்றிருந்தால் கோவலனைக் கருணையின்றிக் கண்டிக்க

நேரிட்டிருக்கும். அவனிடம் அன்பும், பரிவும் கொண்ட அடிகள் அதனை விரும்பவில்லை. மேலும் சைனராகலின் மனிதன் செயல்கள் அனைத்துக்கும் விதியையே காரணம் காட்டும் கொள்கை உடையவராக இருந்தார். எனவே கோவலன் தவறு இழைத்தான் என்று கூறாமல், 'ஊழ்வினை உருத்து வந்து ஊட்டிற்று' என்று அமைதி கூறி, அமைந்துவிட்டார்.

இந்த நிலையில் கம்பநாடன் பழந்தமிழ் இலக்கியங்களை நன்கு கற்றவுடன் அந்த இலக்கியங்களைப் படைத்த தன் முன்னோர்களின் வாழ்க்கை முறையில் இருந்த குறைவு நிறைவுகளைக் கண்டான். தனக்குச் சில நூற்றாண்டுகள் முன்னர் வாழ்ந்த வள்ளுவன், அவன் காலத்திலேயே தான் கண்டதை அறிந்திருந்தான் என்பதை அறிந்தான். அப்படி அறிந்தும், அக்குறைகளைச் சுட்டிக்காட்டிய வள்ளுவனை, ஏன் தமிழ்ச் சாதி அறிந்துகொண்டு தன் குறைகளைத் திருத்திக்கொள்ள முன்வரவில்லை என்ற வினாவை எழுப்பிக்கொண்டு, அவன் விடை தேடி இருத்தல் வேண்டும். இத்தமிழர்கள் மட்டுமல்லாமல், உலகின் எந்தப்பகுதியில் வாழ்கின்றவர் ஆயினும் மக்கள் தம் வாழ்வுக்கு அரண் செய்யும் நீதி நூல்களைப் போற்றி ஏற்றுக்கொண்டதாகவோ, அந்த நூல்களின்படி வாழ்வை மாற்றி அமைத்துக்கொண்டதாகவோ தெரியவில்லை. அதிலும் அந்த நீதிநூல்கள் தோன்றிய சமுதாயம் வெற்றி உடையதாகவும் வாழ்க்கை வளம் உடையதாகவும் இருந்துவிட்டால், கேட்கவே வேண்டியதில்லை. வாழ்க்கை வளத்தில் இன்ப வேட்டை ஆடும் மனித குலம் நீதிநூல்களைப் பின்பற்றுவது முடியாத காரியம். அச்சமுதாயத்தில் வாழும் அறிவுடைப் பெருமக்கள் அந்த நீதிநூல்களைப் போற்றினர்; ஏத்தினர்; அத்துடன் சரி. அது வாழ்வில் இடம்பெற வேண்டிய ஒன்று என்பதைச் சிந்திப்பதும் இல்லை; அதனைச் செய்ய முயல்வதுமில்லை. இதன் காரணம் ஒன்று உண்டு. அடி வாங்கினால் ஒழிய, மனிதன் திருந்துவதும், வாழ்க்கையை மாற்றிக்கொள்ள முயல்வதும் இல்லை; சமுதாயத்துக்கும் இது பொருந்தும்.

திருக்குறள் தோன்றிய காலத்தில் (கி.பி. 2ஆம் நூற்றாண்டு) இத் தமிழர்கள் தம் பழைய வாழ்க்கையில் முழுவதுமாக ஈடுபட்டிருந்தனர். தம்முள் சண்டை இட்டுக் கொண்டாலும், அப் போர்களில் யார் வெற்றி பெற்றாலும் துன்பம், துயரம், பொருள் இழப்பு, உயிர்ச்சேதம் என்பவை ஏற்பட்டனவே தவிர, அவர்கள் வாழ்க்கைக் குறிக்கோளை, அடிப்படை நம்பிக் கைகளை, எண்ணங்களைத் தடைசெய்யும் சூழ்நிலை ஏற்பட வில்லை. எனவேதான் அவர்கள் வாழ்க்கையில் உள்ள குறைகளை வள்ளுவன் சுட்டிக் காட்டினபோது, அது யார் காதிலும் நுழைந்ததாகத் தெரியவில்லை. அவனைப் புகழ்ந்தார்கள். போற்றினார்கள். பிற இலக்கியங்களைப் போற்றுவதுபோலத் திருக்குறளையும் போற்றினார்கள். ஆனால் அது தம் வாழ்க்கைக்கு வழிகாட்டும் ஒன்று என்பதை அறிந்து பயன்படுத்தினார்கள் என்று கூறச் சான்றுகள் இல்லை.

இந்தச் சூழ்நிலையில், களப்பிரர்கள் தமிழ்நாட்டில் புகுந்து வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகை ஆட்படுத்திவிட்டனர். களப்பிரர் தமிழரல்லர். தமிழர் நாகரிகம் பண்பாடு என்ற எதையும் போற்றாதவர்கள். தமிழர் வாழ்வில் முக்கிய விழுப்பொருள்களாக (values) இடம் பெற்றிருந்த பெண்கள் உரிமை, பெருமை, சமத்துவம் என்பவையும், இல்வாழ்க்கையின் சிறப்புகள் என்பவையும், பொறி புலன்களை வைத்துக்கொண்டு, இன்பமான வாழ்க்கை நடத்தல் என்பதையும், இசை நாடகம் என்பவை மனவளர்ச்சிக்கு வேண்டியவை என்பதையும், தெய்வம் கொள்கை என்பதையும் களப்பிரர் ஏற்றுக்கொள்ளவில்லை. சுருங்கக் கூறினால், இத்தமிழர் எவ்வெவற்றைத் தம் உயிரினும் மேலாக மதித்தனரோ, அவை அனைத்தையும் அவர்கள் புறக்கணித்து ஒதுக்கினர்.

புறத்தே இருந்து விழுந்த இந்த அடியால் தமிழர் கதிகலங்கிப் போயினர்! இப்பொழுதுதான் வள்ளுவன் கூறிய

அறிவுரைகள் தேவை என்பது புலப்படலாயிற்று. இக்கால கட்டத்தில் பாண்டியன் கடுங்கோன் உள்ளிட்ட மன்னர்கள் களப்பிரரை வெல்லத் தொடங்கினர். நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றி இத் தமிழர்களின் பழைய விழுப்பொருள்களுக்கு (values) புத்துயிர் கொடுத்தனர். இந்தக் காலகட்டத்தில் தோன்றிய கம்பநாடன் இத் தமிழக வரலாறு, இலக்கியம், ஆகிய அனைத்தையும் கண்டு சிந்தித்த பிறகு, அன்றைய நிலையில் இத்தமிழர்கள் வீறுகொண்டு எழவேண்டும் எனின் கொள்ளத் தக்கன யாவை? தள்ளத் தக்கன யாவை? என்பவற்றைத் தெளிந்து கொண்டான். இவற்றை எவ்வாறு மக்களுக்கு அறிவுறுத்துவது? திருக்குறள் போன்ற மற்றொரு நீதிநூலை இயற்றினால் அதுவும் அது அடைந்த கதியைத்தான் அடையும். அறிஞர் பெருமக்கள் போற்றும் அளவுக்கு ஒரு நீதிநூலை இயற்றலாம். ஆனால் சாதாரணப் பொதுமக்களிடம் அது செலாவணி ஆகுமா? என்பன வினாவுக்குரிய ஒன்றாகும்.

மக்கள் மத்தியில் தான் கூறவந்த கருத்துகள் சென்று பரவ வேண்டுமாயின், அதற்குரிய ஒரே வழி அந்த மக்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு நூலை, அவர்கள் விரும்பிக் கற்கும் ஒரு நூலைப் படைக்க வேண்டும். அவர்கள் சுவைக்கும்படி ஒரு நூலை இயற்றி, தான் விரும்பும் கருத்துகளை அதில் ஏற்றிவிட வேண்டும். இந்த முடிவுக்கு வந்த கம்பநாடன் இந்தப் பண்புகளுடன் கூடிய கதையைத் தேடி இருக்க வேண்டும். தொன்றுதொட்டு இத் தமிழ்நாட்டில் பலரிடமும் பயின்றுவந்த கதை இராமகாதை என்பதையும் அவன் கண்டுகொண்டான். சைனராகிய இளங்கோவடிகளையும் இக்கதை ஈர்த்தது என்றால் அதன் வலுவை அறிந்துகொண்ட கம்பநாடன் அக் கதையையே தன் கருத்து நிறைவேற்றத்திற்குப் பயன்படுத்திக் கொண்டான்.

கதை அனைவருக்கும் நன்கு தெரிந்த கதையானாலும் தன் குறிக்கோளை நிறைவேற்றும் முறையில் அதை அமைக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். மூலக் கதையில்

வேண்டுமான திருப்பங்களைச் செய்துகொண்டான். தன்னுடைய காப்பியத்தில், முக்கியமாக அவன் ஏற்றிய குறிக்கோள் 'புலனடக்கம்' என்பதாகும். இந்தப் புலனடக்கம் இன்மையால்தான், தமிழினம் களப்பிரர் காலத்தில் அடிபட்டது என்பதைக் கண்ட கவிஞன் இதற்கு முதல் இடம் கொடுத்ததில் வியப்பே இல்லை. முதல் பாட்டிலேயே 'பொறிகள் தம் எல்லைவிட்டுப் புறஞ்செலாத மக்கள் வாழும் நாடு' என்று தொடங்கினான். காப்பியம் முழுவதிலும் புலனடக்கம் உடையவர்கள் மேன்மை, அஃதில்லாதவர்கள் தாழ்மை என்பவற்றைக் காட்டிக்கொண்டே சென்றதுடன், இப் புலனடக்கத்திற்காகவே அனுமன் என்ற பாத்திரத்தையும் படைத்துக் காட்டுகிறான். முதல் பாடலில் புலனடக்கம் பற்றித் தொடங்கிய கவிஞன் இறுதியாக இராவணன் இறந்ததைக் கூற வருகையிலும் 'சினம் அடங்க, மனம் அடங்க, வினையம் வீய... மும்மடங்கு பொலிந்தன அவன் முகங்கள்' என்று கூறி முடிக்கிறான். புலனடக்கம் இல்லாத இராவணன் கூட அப் பொறிபுலன்கள் செயலிழந்த பிறகு, மும்மடங்கு பொலிந்தான் என்று கூறிக் காப்பியத்தை முடிக்கின்றான்.

புலனடக்கத்தின் மொத்த உருவமாக அனுமனைப் படைத்துவிட்ட பிறகு, இராமனாகிய பரம்பொருளே, அனுமனுள் அடக்கம் என்பதையும் விடை கொடுத்த படலத்தில் கூறிக் காட்டுகிறான்.

புலனடக்கத்தை அடுத்துக் கவிஞன் செய்த புது முயற்சி பரம்பொருளை இந்த உலகத்திற்குக் கொண்டுவந்து நிறுத்தித் தொழிற்படச் செய்ததாகும். இம் முயற்சியை உலக காப்பியங்கள் பலவற்றுள்ளும் காணலாமேனும், கம்பன் கையாண்ட உத்தி இதுவரை யாரும் செய்யாத ஒன்றாகும். அவனுடைய காப்பியத்தில் பிற பாத்திரங்கள் இராமனைப் பரம்பொருள் என்று அறிந்திருப்பினும், இராமன் தன்னை ஒரு மனிதனாகவே கருதியும் பேசியும் நடந்துகொள்கிறான். அறத்தை

நிலைநிறுத்த வந்தவனாகவும், அறத்தின் மூர்த்தியாகவும், புலனடக்கத்தின் உருவமாகவும், சாதாரண மனிதர்கட்குரிய துயரம், இடர் என்பவற்றை உடையவனாகவும் காட்சி யளிக்கிறான் கம்பன் படைத்த இராமன். எதிர்பாரா நேரங்களில் உணர்ச்சி வசப்பட்டு நம்முடைய பரிவுக்கும் ஆளாகிறான் மனிதனாக வந்த பரம்பொருள். உணர்ச்சி வசப்பட்டு அவசரமாக 'வாலியைக் கொல்வேன்' என்று சூளுரைத்துக் கொன்றும் விடுகிறான். இறக்கப் போகும் வாலியின் வார்த்தைகளைக் கேட்டுக் கழிவிரக்கங் கொண்டு அவன் மகனிடம் 'நீ இது பொறுத்தி' என்று பேசும் மனிதனாகவும் காட்சியளிக்கிறான் கம்பன் கண்ட இராமன்.

உலக இலக்கியங்கள் பலவும், கடவுளர்களை இவ்வுலகில் வந்து தொழிற்படுமாறு செய்துள்ளன. ஆனால் ஒன்றாவது அம் முயற்சியில் வெற்றி பெற்றது என்று கூற முடியவில்லை. இதன் எதிராகக் கம்பநாடன் இம் முயற்சியை மேற்கொண்டு அதில் முழு வெற்றியும் பெற்றுவிடுகிறான்.

எனவே கம்பநாடன் சில குறிப்பிட்ட விழுப்பொருள்களை (Values) இத் தமிழ்ச் சாதிக்கு எடுத்துக்காட்டி அவர்களைத் திருத்துவதற்காகவே இக் காப்பியத்தைப் பாட எடுத்துக் கொண்டான் என்பதையும், சைவம், வைணவம் என்று சிறு வட்டத்தை விட்டு வெளிவந்து பரம்பொருள் ஒருவனே என்பதை விரிவாக அவன் பேசுகிறான் என்பதையும், வடமொழியில் உள்ள உபநிடதக் கருத்துகளைத் தமிழில் கூறிய முதற் புலவன் அவனே என்பதையும், இக் காப்பியத்தின் உயிர்நாடியாக விளங்குவது புலனடக்கத்தின் இன்றியமையாமையே என்ப தையும் அறிய முடிந்தது. அதனாலேயே **கம்பன்-புதிய பார்வை** என்ற தலைப்பில் இந்நூல் வடிவு பெறுகிறது.

இந்நூலை எழுத்து வடிவில் கொணரத் தூண்டுதல் அளித்தவர்கள், அமரர் ஏ.வி.எம். அறக்கட்டளையினராவர்.

1984ஆம் ஆண்டில் அந்த அறக்கட்டளையின் சார்பில் நிகழ்த்திய சொற்பொழிவினை நூல் வடிவாக்கிட முன்வந்த **கங்கை புத்தக நிலையத்தாருக்கு** நன்றி உரியதாகும்.

இக்காலத்தில் தமிழரின் உயர்வை நிலைநாட்ட வேண்டும் என்ற கருத்துடன், சங்கப் பாடல்களில் காணப்பெறும் பழந்தமிழ் வாழ்வு முறை அனைத்தையும் 'ஓகோ' என்று புகழும் பழக்கம் மிகுதியாக உள்ளது.

இந்நூலின் பல பகுதிகள் இக் காலத்தில் பலரும் தமிழர் நாகரிகம் பற்றிக் கூறிவரும் புகழுரைக்கு எதிராகக் காணப் படலாம். எனவே இவற்றை அனைவரும் ஏற்றுக்கொள்வர் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இக் கருத்துக்களை நன்கு சிந்தித்துப் பார்த்த பிறகு, கொள்ளுதலோ அன்றித் தள்ளுதலோ செய்க, என்று மட்டும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

அ. ச. ஞானசம்பந்தன்

# பொருளடக்கம்

# கம்பன் - புதிய பார்வை

## 1. கம்பனுக்கு மூலம் யார்?

வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் இவ் வண்மைத் தமிழ் மொழியில், ஏறத்தாழ இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முற்பட்ட இலக்கியத்திலிருந்து நேற்று பிறந்த இலக்கியம் வரை, நூற்றுக்கணக்கான இலக்கியங்கள் இன்று இருந்து வருகின்றன. பழமையான கிரேக்கம் போன்ற மொழிகளில் இத்தகைய தொடர்பான இலக்கியங்கள் இல்லை என்பதையும் அறிதல் வேண்டும். மற்றும் ஒரு சிறப்பையும் இங்குக் கூறல் பொருத்தமுடையதேயாகும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட திருக்குறளை இன்று படிப்பவர்கள்கூடப் பெரும்பகுதிப் பாடல்களை உரை உதவி இல்லாமல் புரிந்துகொள்ள முடியும். இதில் ஏதேனும் சிறப்பு உண்டா என்று சிலர் மனத்திலாவது ஐயம் தோன்றலாம். முந்நூறு ஆண்டுகட்கு முற்பட்ட ஆங்கில நூல்களை, இன்றுள்ள ஒருவர், சிறந்த ஆங்கிலப் பயிற்சி உடையவராயினும், படித்துப் புரிந்து கொள்ளல் இயலாத காரியம். பழைய ஆங்கிலம் என்று அழைக்கப்படும் அம்மொழி இன்றைய ஆங்கிலத்திலிருந்து பெரிதும் மாறுபட்டுள்ளது. இது வளர்ச்சி என்று கருதப் பெற்றாலும் முன்பின் தொடர்பு அதிகம் இராத வளர்ச்சி யாகும்.

### முழு வளர்ச்சி பெற்ற மொழி

தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் தைலதாரை என்று சொல்லப்படும் முறையில், வளர்ச்சி முன்பின் தொடர்புடன் இருந்து வருகிறது. இதன் உட்கருத்து ஒன்று

உண்டு. மொழி என்பது, ஒருவர் உள்ளத்தில் எண்ணங்கள் தோன்றி வளர்வதற்கும், அந்த எண்ணங்களைப் பிறருடன் பங்கிட்டுக் கொள்வதற்கும் பயன்படும் கருவியாகும். எனவே இந்த மொழியில் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் முன்னர்த் தோன்றிய நூல்கள் இன்றும் நம்மால் புரிந்துகொள்ளும் நிலையில் உள்ளன என்றால், அன்றே இந்த மொழி பெருவளர்ச்சி பெற்றிருந்தது என்பதுதான் பொருள். அகில உலகமும் இன்று மதித்துப் போற்றும் திருவள்ளுவர் தம் கருத்தை வெளியிட நன்கு வளர்ச்சி பெற்ற மொழியைத்தான் பயன்படுத்தி இருப்பார். அந்த மொழியை இன்றுகூட அகராதியின் உதவி இல்லாமல், பெரும்பகுதியை நாம் புரிந்து கொள்கிறோம் என்றால், அந்த மொழி அதிகம் மாறுபாடு இல்லாமல் இரண்டாயிரம் ஆண்டுகளாக இருந்து வருகிறது என்பதுதானே பொருள்! பூரண வளர்ச்சி பெற்றிருந்தால்தான் இத்தகைய நிலை ஒரு மொழிக்கு ஏற்பட முடியும். எனவே, இத் தமிழ் மொழி இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டே கூட முழு வளர்ச்சி பெற்று, பண்பாடு நாகரிகம் நிறைந்த அன்றையத் தமிழனின் எண்ண ஓட்டங்கட்கு வடிவு கொடுக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தது என்பது உறுதியாகிறது.

## பழமையால் பெற்ற சிறப்பு

இத்தகைய ஒரு மொழியில் இலக்கியம் தோன்றும் பொழுது அவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையதாய் அமைந்திருத்தல் இயல்பேயாம். பின்னர்த் தோன்றுகின்ற இலக்கியங்கள் முன்னர்த் தோன்றிய இலக்கியங்களிலிருந்து தேவையானதும், நிலையானதுமான உயிர்ச்சத்தை ஏற்றுக்கொண்டுதான் தோன்றும். பராரியாக உள்ள ஒரு மொழியில் அத்தி பூத்தது போன்று என்றோ ஒருநாள் ஓர் இலக்கியம் தோன்றினால், அது முன்பின் தொடர்பு

இல்லாததாய் இருக்கும். ஆனால் வளம்பெற்ற மொழியில் அவ்வாறு இருத்தல் முடியாது.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, தொல்காப்பியம் ஆகிய இலக்கிய இலக்கண நூல்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவையா யினும், இத் தமிழர்களின் வாழ்வு உச்சநிலையில் இருந்த பொழுது அவை தோன்றியிருக்க வேண்டும். மிகமிகப் பண்பட்ட கவிதை வடிவம் பெற்ற இத்தகைய இலக்கியங் கள் ஒரு காலகட்டத்தில் தோன்றின என்றால், அதற்கு முன்னர்ச் சில ஆயிரம் ஆண்டுகளாவது அம் மொழியும் இலக்கியமும் வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும். எனவே, இத்தமிழ் மொழியின் தொன்மை நம் ஆராய்ச்சிக்குள் அடங்காத ஒன்று என்பது கருதித்தான் போலும்

தொன்று நிகழ்ந்தது அனைத்தும்
உணர்ந்திடு சூழ்கலைவாணர்களும் இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பினளாம் எங்கள் தாய்

(எங்கள் தாய்—1)

என்று இந்த நாட்டையும்,

ஆதி சிவன் பெற்றுவிட்டான் என்னை (தமிழ்த்தாய்—1)

என்று இம் மொழியின் தொன்மையையும் கவியரசர் பாரதியார் பாடிச் சென்றார்.

## செவிவழிக் கதைகள்

இத்துணைப் பழமையானது இம் மொழியும், நாகரிகமும் என்றால் பழமைக்குரிய அடையாளமாகப் பல்வேறு செவிவழிக் கதைகள் இம்மொழி இலக்கியத்தில் இடம்பெறுவது இயற்கைதான். இச் சங்கப் பாடல்களில் பல்வேறு கதைகள் இடம் பெற்றிருக்கின்றன என்பதும் நாம் அறிந்த ஒன்றே. அவற்றுள் பலவற்றை, இத்துணைக்

காலம் கழித்து வாழும் நாம், இன்னதைத்தான் குறிக்கின்றது என்று புரிந்துகொள்ள முடிகிறது. சில கதைகளைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதும் உண்மைதான்.

புரிந்துகொள்ளக்கூடிய கதைகளில் இராமனைப் பற்றிய இரண்டு குறிப்புகள் இங்கு அறிய வேண்டியவை.

புறநானூற்றில் நகையை உண்டாக்கும் ஒரு நிகழ்ச்சியைக் கூறும்பொழுது இராமகாதை பேசப்படுகிறது. சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் என்ற புலவர் பாட வருகின்றார்.

## பெருநகைக்குரிய செயல்

சோழனுடைய அரண்மனையில் பாணர்கள் தடாரிப் பறையை முழக்கிக்கொண்டு, பகைவர்மேற் செல்லும் அவனுடைய சிறப்பைப் பாடினர். உடனே, சோழன் மிகச்சிறந்த பொன்னாபரணங்களை வாரிவாரி வழங்கினான். முன்னர்ப் பின்னர் ஆபரணங்களைப் பார்த்தறியாத அப்பாணரின் துணைவியரான விறலியர் எந்த அணிகளை எவ்வாறு எந்த உறுப்பில் அணிய வேண்டும் என்பதை அறியாதவராகையினாலே விரல்களில் போட வேண்டிய மோதிரத்தைக் காதுகளிலும், காதிற் போட வேண்டியவற்றை விரல்களிலும், இடையில் கட்ட வேண்டியவற்றைக் கழுத்திலும், கழுத்தில் அணிய வேண்டியவற்றை இடையிலும், அணிந்து கொண்டனராம். இச்செயல் எதுபோல உள்ளது என்று கூறவந்த கவிஞர், 'மிக்க ஆற்றலையுடைய இராமனுடன் வந்திருந்த சீதையை வன்மையுடைய அரக்கன் (இராவணன்) கவர்ந்து சென்ற பொழுது, சீதையிடத்திருந்து நிலத்தில் விழுந்த மதிப்புயர்ந்த ஆபரணங்களை. (கிட்கிந்தையிலுள்ள) சிவந்த முகத்தையுடைய குரங்கின் கூட்டம் எடுத்து (எவ்வாறு அணிவது என்று தெரியாமல்) அணிந்துகொண்டு பெருநகைக்கு இடம் அளித்ததுபோல உளது' என்ற பொருளில்,

எமக்கு எனவகுத்தன அல்ல மிகப்பல
மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந்தோனே அதுகண்டு
இலம்பாடு உழந்தஎன் இரும்பேர் ஒக்கல்
விரல்செறி மரபின் செவித்தொடக் குநரும்
செவித்தொடர் மரபின் விரல் செறிக்குநரும்
அரைக்கு அமை மரபின் மிடற்று யாக்குநரும்
மிடற்று அமை மரபின் அரைக்கு ஆக்குநரும்
கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலம்சேர் மதர் அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தாங்கு
அறாஅ வருநகை இனிது பெற்றிகுமே

*(புறம்—378)*

*[எமக்கென வகுத்தன அல்ல—எங்கள் அளவுக்கென்று செய்யப்படாத; அருங்கலம்—ஆபரணம்; வெறுக்கை—செல்வம்; இலம்பாடு—வறுமை; ஒக்கல்—சுற்றம்; கடும்தெறல்—மிகுதியான அழிக்கும் வன்மை; மதரணி—மதிப்புயர்ந்த அணிகள்; செம்முகப் பெருங் கிளை—சிவந்த முகத்தை உடைய குரங்கின் கூட்டம்.]*

## பலரும் அறிந்த கதை

*இக் கவிஞர் அக்காலத்தில் வழங்கிய இராமகாதையில் ஒரு நிகழ்ச்சியைப் போகிற போக்கில் கூறும் முறையிலிருந்து ஒன்றை அறிந்துகொள்ள முடிகிறது. உவமையில் இந்நிகழ்ச்சியை வைத்துக் கூறுவதனால், மக்கள் மத்தியில் இக்கதை பலருக்கும் நன்கு தெரிந்ததாக இருந்திருக்க வேண்டும் என்பதை ஊகிக்க முடிகிறது.*

*இதேபோன்று அகநானூற்றுப் பாடல் ஒன்றிலும் இராமகாதை நிகழ்ச்சி ஒன்று பேசப்படுகிறது. காதலில் ஈடுபட்டிருக்கும் தலைவி ஒருத்தியைப்பற்றி ஊரார்*

பழிதூற்றிக் கொண்டிருந்தனராம். ஒருநாள் அத்தலைவி அத்தலைவனையே மணம் முடித்துக்கொண்டாள். அன்றே ஊரார் வாய் அடங்கிப் போயிற்றாம். அதுவரை ஊர்ப்பெண்கள் பழிதூற்றிக் கொண்டிருந்தது, மாலை நேரத்தில் மரக் கூடுகளில் வந்து பறவைகள் கலகல என்று பெருஞ் சப்தம் செய்துகொண்டிருப்பதைப் போல் இருந்ததாம். அவ்வாறு பறவைகள் ஓயாது ஒலி செய்துகொண்டிருந்த ஒரு மரத்தின் அடியில், இலங்கைப் படையெடுப்பின்போது இராமன் வந்து தங்கித் தன் உடன் வந்தவர்களுடன் மந்திராலோசனை தொடங்கினானாம். அவன் கூட்டம் தொடங்கியவுடன் மரத்தின்மேல் இருந்த பறவைக்கூட்டம் 'கப்' என்று தம் ஒலிகளை அடக்கிக் கொண்டனவாம். இந்தப் பறவைகளைப் போலவே கலகலவென்று பழிதூற்றிக் கொண்டிருந்த பெண்கள் அப்பறவைகள் ஒலி அடங்கியதைப் போலத் திருமணத் தின் பின்னர் வாயடைத்துப் போயினராம். இக்கருத்தை

..............................................................
வெல்வேல் கவுரியர் தொன்முது கோடி
முழங்கு இரும் பௌவம் இரங்குமுன் துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்விழ் ஆலம்போல
ஒலி அவிந்தன்று இவ் அழுங்கல் ஊரே (அகம்—70)

என்று பேசுகிறது.

[கவுரியர்—பாண்டியர்; தொன்முது கோடி—பழமையான தனுஷ்கோடி. பௌவம்—கடல். அருமறை—மந்திராலோசனை; பல்வீழ் ஆலம்—பல விழுதுகளை யுடைய ஆலமரம்.]

இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் வான்மீகத்திலோ, கம்பனிலோ இடம்பெறவில்லை என்பதையும் அறிதல் வேண்டும். எனவே ஆதிகாவியம் என்று போற்றப்பெறும்

*வான்மீகத்தில் இல்லாத பல நிகழ்ச்சிகள் இராமகாதையில் மக்கள் மத்தியில் வழங்கின என்பதற்கு இவை இரண்டும் எடுத்துக்காட்டுகளாகும். அதே நேரத்தில் இராமனைப் பற்றிய கதைகள் சங்ககால மக்களிடம் மிகுதியாகப் பயின்றன என அறியலாம். இந்திய நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் இராமன் கதை பரவியிருந்ததுடன் கீழ்த்திசை நாடுகளிலும் பரவியிருந்ததாக அறிகிறோம். சங்கப் பாடல்களின் அமைப்பு முறை இன்னும் அதிகமான அளவில் இராம காதையைப் பயன்படுத்த இடம் அளிக்கவில்லை.*

## பின் இலக்கியக் குறிப்புகள்

*சங்கப் பாடல்களை அடுத்து வந்த இலக்கியங்களில் இக்குறை நீக்கப் பெற்றதையும் அறிய முடிகிறது. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று துணியப் பெறும் சிலப்பதிகாரம், இராமகாதையின் மிக இன்றியமையாத இரண்டு நிகழ்ச்சிகளை ஓரளவு விரிவாகவே கூறுகிறது என்பதையும் அறிகிறோம். இராமன் தன் தந்தையாகிய தசரதன் ஆணையின் பேரிலேயே மனைவியுடன் காடு சென்றான். அக்காடுறை வாழ்க்கையில் மனைவியை இழந்து பெருந்துயர் உழந்தான் என்ற செய்தி ஒன்று. இதனைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. அவ்வாறு கூறும்பொழுது முதனூலாகிய வான்மீகத்திற்கு மாறுபட்டு, இராமன் திருமாலின் அவதாரம் என்ற கருத்தையும் கூறுகிறது.*

'தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடும்துயர் உழந்தோன்
வேத முதல்வன் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ? நெடுமொழி அன்றோ?

*(ஊர்காண்—46—49)*

*[தாதை—தசரதன்; மாது—சீதை; வேத முதல்வன்—நான்முகன்; பயந்தோன்—அவனை நாபிக் கமலத்தில் பெற்ற திருமால்; நெடுமொழி பழங்கதை.]*

## திருமால் அவதாரம் என்ற குறிப்பு

*இராமன் தந்தை ஏவலில் காடு சென்று மனைவியை இழந்த கதையை, நெடுமொழி என்று சிலம்பு கூறுமே யானால், இராமகாதை பல்லாயிரம் ஆண்டுகளாக இத் தமிழ்நாட்டில் வழங்கிற்று என்று கருதுவதில் தவறு இல்லை. சங்கப்பாட்டில் வரும் குறிப்புகளில் காணாத செய்தி, இராமன், வேத முதல்வனைப் பயந்தவன் என்பதாகும். எனவே இராமன் திருமாலின் அவதாரம் என்ற செய்தியும் இத் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை பழைய செய்தி என்றே தெளிய வேண்டியுளது. பிற்காலத்தில் கம்பநாடன் திருமால் அவதாரமாக இராமனைக் கூறக் காரணமாக இருந்தவர்கள் ஆழ்வார்களே என்று சிலர் கூறக் கேட்கிறோம். அந்த வாதம் ஊற்றம் இல்லாததாகும். ஏன் எனில், முதல் ஆழ்வார்கள் தோன்றுதற்கு ஐந்நூறு ஆண்டுகளின் முன்னர்த் தோன்றிய சிலப்பதிகாரம், இராமன் திருமாலின் அவதாரமென்ற கருத்தை வெளிப்படையாகவே கூறுகிறது.*

*இராமகாதையில் முக்கியமான நிகழ்ச்சி இராவண வதமாகும். அதையும் சிலப்பதிகாரம் பேசுகிறது:*

மூஉலகும் ஈர் அடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சே அடி சேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோ அரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவி என்ன செவியே?

*(ஆய்ச்சியர்—குரவை)*

*[ஈர் அடி—இரண்டு கால்களால்; நிரம்பாவகை—மாவலி கொடுத்த மூன்றடி மண் என்ற அளவில் குறைவுபடும்படி; தாவிய சேவடி—ஆகாயத்தில் நீட்டிய சிவந்த அடி; சேப்ப—காட்டில் நடப்பதால் சிவந்து தோன்ற; சோ அரண்—சோ என்ற அரண்.]*

அரசனை 'இறை' என்ற சொல்லால குறிப்பதும், அவன் உறையும் இடத்தைக் 'கோயில்' என்று அந் நாட்களில் குறித்ததும் அரசர்களைத் திருமாலின் அவதாரமென்று கருதும் கொள்கை சங்க காலத்திலிருந்தே வருகிறது என்று துணிய உதவுகின்றன.

சங்க காலத்தை அடுத்துள்ள காலத்திலும், இக் கொள்கை வலுப்பெற்றது என்றே கருத வேண்டியுள்ளது.

இரு நிலம் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கிடை

(பெரும்பாண் 29—30)

[வாமனாவதாரத்தில் பெரிய பூமியை ஓரடியால் அளந்து கடந்தவனும், திருவாகிய மறுவை மார்பில் உடையவனும், கடல்நிற வண்ணமுடையவனுமாகிய திருமாலின் வழித்தோன்றல் (பிறங்கிடை—வழித்தோன்றல்) என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்ற புலவர் பேசுகிறார். அதாவது சோழ மன்னனை திருமால் குடியில் தோன்றியவன் என்று கூறுகிறார். 'திருமால் குடியில் தோன்றிய உரவோன்' என்று பாடல் கூறுவதற்கு விளக்கமாக டாக்டர் உ.வே.சா. ஐயரவர்கள், 'திருமால் என்றது இராமபிரானை' என்று எழுதுகிறார்.]

சோழ மன்னனைத் திருமால் என்று கூறும் இச் சங்ககாலக் கொள்கை தொடர்ந்து வந்துள்ளது. தொல் காப்பியம் புறத்திணை இயலில், புறத்திணை வழு ஏழைக் கூறும் 5ஆவது சூத்திரத்தில்

'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பில்
தாவா விழுப்புகழ் பூவை நிலை.

என்ற பகுதிக்கு உரையிட்ட நச்சினார்க்கினியர். 'மாய வனுடைய காத்தல் புகழை மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவை நிலை' என்று கூறிவிட்டு,

அதற்கு விளக்கமாக 'என்றது ஒன்றினை ஒன்றுபோல் கூறுந் துறை' என்றும் எழுதுகிறார். இதற்கு மேற்கோளாக இன்ன நூல் என்று இன்று அறியப்பட முடியாத ஒரு நூலிலிருந்து பின்வரும் பாடலையும் எடுத்துக்காட்டுகிறார்:

குருந்தம் ஒசித்தஞான்று உண்டால் அதனைக்
கறந்தபடி எமக்குக் ·காட்டாய்—மறம்பெறாப்
போரில் குருகுஉறங்கும் பூம்புனல் நீர்நாட
மார்பில் கிடந்த மறு

*(தொல் புறத்திணை—5 உரை மேற்கோள்)*

[வைக்கோல் போரில் குருகுப்பறவை உறங்கும் நீர் நாடாகிய சோழ நோட்டின் தலைவனே! நீ குருந்த மரத்தை ஒடித்தபொழுது உன் மார்பில் கிடந்த மறுவை எங்ஙனம் மறைத்துக் கொண்டாய் என்பதனை எனக்குக் கூறுக.]

உரையாசிரியர் கூறுவதுபோல் ஒப்புமைப்படுத்திக் கூறாமல், பெரும்பாணாற்றுப் படையும், இந்த மேற்கோள் பாடலும், சோழனைத் திருமால் என்றே குறிக்கின்றன என்பதை அறிதல் வேண்டும்.

## கம்பனுக்கு மூலம் யார்?

இராம காதையின் குறிப்புகள் இரண்டும், புறத்திலும் அகத்திலும் வந்துள்ளமை முன்னர்க் குறிக்கப் பெற்றது. அக் காதையின் இன்னும் இரண்டு பகுதிகள் சங்கத்தை அடுத்த காலத்தில் பரவி இருந்தமையைப் பின்வரும் பாடல்கள் காட்டுகின்றன.

ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய இராமன் அவனொடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றை
மதியும்பட்ட மடக்கண் சீதை

கடுவிசை வில்ஞாண் இடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்டம் எய்தித்
துயில் எழுந்து மயங்கினள்.

*(தொல். அகத்திணை—54 உரை மேற்கோள்)*

*[விசுவாமித்திர முனிவன் தன் வேள்வி முற்ற இராமன் துணை கொண்டான். அது முடிந்தபின் அவனொடு மிதிலையாகிய பழைய ஊரை அடைந்த பொழுது, இராமனுடைய மனத்தில் தோன்றிய காதல் உணர்வு அவன் கண்மூலம் வெளிப்பட்டதைத் தன் கண்மூலம் பார்த்து அறிந்துகொண்ட அழகிய கண்களையுடைய சீதை, மறுநாள் வில் ஒடிக்கப்பட்ட ஓசையால் துயிலெழுந்து, அதை ஒடித்தவன் யார் என்று அறிய முடியாமையால் மனங்கலங்கி இருந்தாள்.]*

*நச்சினார்க்கினியர் உரைக் குறிப்பில் மேற்கோளாகக் காட்டும் இப்பாடல், கம்பன் பிற்காலத்தில் தன் காப்பியத்தில் அற்புதமான நாடகச் சூழ்நிலையாக அமைப்பதற்கு உதவுகிறது என்பதையும் அறிய முடிகிறது.*

*வேறு எந்த மொழியிலுள்ள இராமகாதையிலும் இல்லாத ஒரு கற்பனையாகும், இராமனும் சீதையும் கண்களால் ஒருவரை ஒருவர் சந்தித்துக் காதல் கொண்டனர் என்று கம்பன் பாடுவது.*

எண்ண அரு நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.

பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்.

*(மிதிலைக் காட்சி—35, 37)*

'மதி உடம்படுதல்' என்ற சொல் அகத்திணையில் பயிலப்படும் ஒரு சொல்லாகும். அதாவது, தலைவி அல்லது தலைவனுடைய மதியைத் தன் மதியுடன் ஒன்றாக இணைத்து அவர் கருத்தை அறிதல் என்று பொருள்படும். நச்சினார்கினியரால் மேற்கோளாகக் காட்டப்பட்ட இப் பாடலில் 'மதியுடம் பட்ட மடக்கண் சீதை' என்று மட்டுமே வருகிறது. மடக்கண் சீதை என்று சீதையின் கண்ணுக்குச் சிறப்புத் தந்து கவிஞன் அதனை அடையாகக் கூறினானாயினும். அவள் இராமன் மனக்கருத்தை (மதியுடம் படுதற்கு) அறிதற்குத் தன் கண்ணையே பயன்படுத்தினாள் என்ற கருத்தை நுண்மையாக விளங்க வைக்கின்றான். இந்த நுண்ணிய கருத்தை விளங்கிக் கொண்ட கம்பன் அதனை விரித்துக் கூறுமுகமாக ஓர் அற்புதமான நிகழ்ச்சியைப் படைத்துக் காட்டிவிடுகிறான்.

இராமன் வில்லை முறித்துவிட்டான் என்ற செய்தியை நீலமாலை என்ற தோழி வந்து சீதையிடம் கூறுகிறாள். ஆனால் முறித்தவன் யார் என்பதை அறியுமுன்னர் சீதை பெருங் கவலைக்கு உள்ளானாள். காரணம், தான் காதல் கொண்டவன் யார் என்பதை அறிந்துகொள்ளப் பிராட்டிக்கு வாய்ப்பு இல்லை. நீலமாலை கூறின செய்தியிலிருந்து தான் காதல் கொண்டவனும், வில்லை ஒடித்தவனும் ஒருவனே என்பதைப் பல்வேறு சுற்றுப்புறச் செய்திகளால் அறிய முடிகிறது. அறிந்தவுடன் பெருமகிழ்ச்சி கொண்டாள். இதுவே கம்பன் வரையும் ஓவியம். நீலமாலை சீதையிடம் வந்து 'தசரதன் மைந்தன், இராமன் என்பது பெயர்' என்பதோடு நிறுத்தாமல் 'இளைய கோவொடும், பராவரு முனியொடும் பதிவந்து எய்தினான்' (கார்முக—59) என்று கூறி, 'அவன் தோளின் வாங்கினான் அவை நடுக்குற முறிந்து வீழ்ந்தது,' (கார்முக—61) என்றும் கூறினாள்.

இதனைச் செவியுற்ற சீதை,

கோமுனியுடன் வருகொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினான் என்ற தன்மையால்
ஆம்! அவனே கொல்! என்றும் ஐயம் நீங்கினாள்.

(மிதிலைக்காட்சி—62)

என்கிறான் கம்பன்

இந்தக் கற்பனையைக் கம்பன் செய்வதற்கு உதவியது முன்னர்க் கண்ட பழம்பாடல் என்பது தெளிவு. எனவே கவிச்சக்கரவர்த்தி கம்பன் இத் தமிழ் மொழியில் தோன்றிய பல்வேறு இலக்கண இலக்கியங்களையும் உண்டு, தேக்கெறிந்து அவற்றைத் தன் வசமாக்கிக் கொண்டு, தேவை ஏற்படும் பொழுது முன்னோர் மொழி பொருளையும், அவர் சொன்ன சொற்களையும் பொன்னேபோல் போற்றித் தன் பாடல்களில் பதித்துக்கொண்டான் என்பதும் தேற்றமாகிறது.

இனி இதே நச்சினார்கினியர், தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் புறத்திணை இயல், உழிஞைத் திணையின் எட்டுத் துறைகள் பற்றி வரும் சூத்திர உரையில், மறுபடியும் இராமகாதை பற்றிய மற்றோர் பாடற் பகுதியை மேற்கோளாகக் காட்டுகிறார் (தொல்—புறத்—12—உரை மேற்கோள்.)

பகைவர் கோட்டை மதிலை வளைத்து அதன்மேல் ஏறி, உள்ளே புக விரும்புபவர்கள் மிகுதியான கிடுகும், கேடகமும் கொண்டு செல்வர். அதுபற்றிக் கூறவந்த 'தோலின் பெருக்கம்' என்ற துறைக்கு மேற்கோளாக இப் பழம் பாடல் காட்டப் பெறுகிறது.

"இருசுடர் இயங்காப் பெருமூது இலங்கை
நெடுந்தோள் இராமன் கடந்த ஞான்றை
எண்குஇடை மிடைந்த பைங்கண் சேனையில்
பச்சை போர்த்த பல்புறத் தண்டை

எச்சார் மருங்கினும் எயில்புறத்து இறுத்தலின்
கடல்சூழ் அரணம் போன்றது
உடல்சின வேந்தன் முற்றியே ஊரே"

*(ஆசிரியமாலை—புறத்திரட்டு 852)*

*[சூரிய சந்திரர் அதன்மேல் செல்ல முடியாத பழைய இலங்கா நகரை, வலிய தோளையுடைய இராமன் முற்றுகை இட்டபொழுது, கரடிகள் (எண்கு) நிறைந்த பலவாகிய படைவகுப்பு (தண்டை) கேடயத்துடன் (பச்சை). மதிலைச் சுற்றி எல்லாப் பக்கமும் நிறைந்து நின்றமையின். கடலால் சூழப்பெற்ற கோட்டை போலிருந்தது, சினத்துடன் இராமனால் முற்றுகை இடப்பட்ட அவ்வூர்.]*

*இப்பாடலும் முன்னர்க் காட்டப்பெற்ற பழம்பாடலும் ஒரே நூலின் இரு பகுதிகள் என்பதை அறிந்துகொள்ள அதிக நேரம் ஆகாது. இப்பாடலின் நடை, சொல் ஆட்சி, ஓசை நயம் என்பவற்றைக் காணும்பொழுது சங்க காலத்தை அடுத்த காலத்தில் ஏறத்தாழச் சிலப்பதிகாரம் தோன்றிய காலத்தில், இத்தகைய பாடல் முறையில், இராமகாதை இந்நாட்டில் வழங்கியது என்று நினைய வேண்டியுளது. கடந்த ஞான்றை—கடந்தபொழுது, பச்சை—கேடயம்; தண்டை—படைவகுப்பு, எயில்புறத் திறுத்தல்—கோட்டையை வளைத்து நிற்றல், முதலிய சொல்லாட்சிகள் சிலப்பதிகார காலத்துக்கும் முற்பட்ட வையோ என்றுகூட ஒருவாறு நினைய வேண்டியுளது. உதாரணமாகக் காட்டப்பெற்ற இரண்டு பகுதிகளும் ஒரே நூலின் பகுதிகள் என்பதையும் ஊகிக்க முடிகிறது என்றால் இராமகாதை, வெண்பாவும், ஆசிரியமும் பெருகி வளர்ந்திருந்த காலத்தில் ஒரு முழு நூலாகவே இத் தமிழ் நாட்டில் வழங்கி இருக்க வேண்டும். அத்தகைய நூல் இன்று கிடைக்காமற் போனது பெரிதும் வருத்தத்திற்குரிய ஒன்றாகும். இந்த நூலை இயற்றியவர் வான்மீகத்தைப்*

பயின்று அதன் வழித் தம் நூலை இயற்றினாரா என்றும் அறிய முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. வான்மீகத்தை இவர் அறிந்திருந்தாலும், அறியாமல் இத்தமிழ் நாட்டில் வழங்கிய செவி வழிக் கதையை மூலமாக வைத்துக்கொண்டு தம் நூலை ஆக்கியிருந்தாலும், ஒன்றைக் கடைப்பிடித்தார் என்பதை அறிய முடிகிறது. 'மதியுடம் பட்ட மடக்கண் சீதை' என்று பாடினார் என்றால், வடநாட்டுக் கதையைத் தமிழ்மரபு கெடாதபடி பாடினார் என்பது உறுதியாகிறது.

சிலப்பதிகாரத்தின் பின்னர், ஒன்று அல்லது இரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றிய மணிமேகலையிலும் இராமகாதையின் நிகழ்ச்சி ஒன்று பேசப்படுகிறது. காயசண்டிகை என்னும் பெண், யானைத்தீ என்னும் நோயால் பீடிக்கப் பெற்றாள். எவ்வளவு உண்டாலும் அவள் பசி அடங்குவதில்லையாம். வாய்வழிச் சென்ற உணவு அவள் பசியை அடக்காமல் மறைந்த புதுமைக்கு உவமை கூறும் முறையில், இராமன் சேதுவில் அணை கட்டியபொழுது குரங்குகள் எடுத்து எறிந்த கற்கள் கடலினுள் சென்று மறைந்து விட்டதைக் கூறுகிறாள்.

நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடல் அருமுந்நீர் அடைத்த ஞான்று
குரங்கு கொணர்ந்து எறிந்த நெடுமலை எல்லாம்
அணங்கு உடை அளக்கர் வயிறு புக்காங்கு'

(உலக அறவி புக்க காதை 9—13)

[நெடியோன்—திருமால்; மயங்கு—அவித்தை; அடல் அரு முந்நீர்—வலிமை மிக்க கடல்; அளக்கர்—கடல்.]

எனவே சங்கப் பாடல்களில் தொடங்கிய இராம காதை நிகழ்ச்சிக் குறிப்புகள் அவற்றை அடுத்துத் தோன்றிய நூல்கள் பலவற்றிலும் இடம்பெற்றதை அறிய முடிகிறது. என்றாலும் பாரதக் கதை இடம்பெற்ற

அளவுக்கு இராமகாதை இடம்பெறவில்லை என்பதும் தெளிவு. சிலப்பதிகார ஆசிரியர் சைனராயினும் பிற சமய நம்பிக்கைகளைப் பாடும் பொழுது அச்சமயத்தார் கொள்கைக்கு முரண்படாதபடி பாடுபவர் என்பதும் அனைவரும் அறிந்த ஒன்றுதான். அவர் காலத்தில் இராமன் திருமாலின் அவதாரம் என்ற கருத்து வலுப்பெற்றிருந்தமையின் 'தாதை ஏவலின்' என்ற பகுதியில் காடு சென்ற இராமன் வேத முதல்வனாகிய நான்முகனைப் பயந்த திருமாலே என்று கூறுகிறார். பின்னர் வந்த மணிமேகலை ஆசிரியரும், இராமன் திருமாலின் அவதாரம் என்பதை மறுக்கவில்லை. அவர்காலச் சூழ்நிலை, நம்பிக்கை என்பவற்றைப் பின்பற்றி மறைக்காமல் கூறிவிடுகிறார். ஆனால் திருமால் மனிதனாகப் பிறந்தது அவருடைய கருணையால் என்பதைக் கூற அந்தச் சுருங்கிய மனமுடைய பௌத்தருக்கு ஏற்கவில்லை. எனவேதான் மயக்கத்தினால் (அவித்தையால்) நெடுமால் இராமனாகப் பிறந்தான் என்று கூறுகிறார். அவருடைய சொந்த விருப்பு வெறுப்புகளை நீக்கிவிட்டுக் கண்டால் ஒரு கருத்து உறுதிப்படுகிறது. இராமன் திருமாலின் அவதாரம் என்பதை ஏறத்தாழச் சங்க காலத்திலிருந்தே இத் தமிழர்கள் ஏற்றுக்கொண்டு வந்துள்ளனர் என்பதே அக் கருத்தாகும்.

## ஆழ்வார்களின் முற்பட்ட கருத்து

இத்துணை விரிவாக இதனைக் கூறுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது இன்றும் சிலரால் பேசப்படும் கருத்து ஒன்றை மறுக்க வேண்டிய இன்றியமையாமை நேர்ந்துள்ளது. வான்மீகி கூறிய மனித இராமனை தெய்வமாகக் கம்பன் கூறுவதற்கு முக்கியமான காரணம் ஆழ்வார்களின் பாடல்களே என்று சிலர் இன்றும் கூறுகின்றனர். இராமன் திருமால் அவதாரம் என்பது ஆழ்வார்கள் காலத்தில் புகுத்தப்பட்ட புதுமையான கருத்து

என்பது இவர்களுடைய நம்பிக்கை. இது சரியன்று, முதலாழ்வார்கள் தோன்றும் 7ஆம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் 8 நூற்றாண்டுகள் முற்பட்ட சங்கப் பாடல்களிலும், 5 நூற்றாண்டுகள் முற்பட்ட மணிமேகலையிலும் இராமன் திருமாலின் அவதாரம் என்று பேசப்படுகிறது. இக்கருத்து இத்தமிழ் நாட்டில் புதிதாக நுழைந்ததன்று.

## ஏன் மொழிபெயர்க்கவில்லை?

இரண்டாவது, கம்பன் எந்த அளவிற்கு வான்மீகியிடம் கடன்பட்டான் என்பதை ஆராய வேண்டும். கம்பன் வான்மீகத்தை நேரிடையாகத் தமிழாக்கம் செய்யவில்லை என்பதை அனைவரும் அறிவர். இன்னும் கூற வேண்டுமானால் இராமாயணம், பாகவதம், மகாபாரதம் முதலிய தமிழ் நூல்கட்கு மூலம் வடமொழியிலேயே இருப்பினும், அவற்றைத் தமிழ் மொழியில் ஆக்கஞ் செய்தார்களே தவிர, யாரும் மொழிபெயர்க்க முன்வரவில்லை. இலக்கிய வளம் நிறைந்த தமிழ்மொழி போன்ற ஒரு மொழியில் வேற்றுமொழி இலக்கியத்தை மொழிபெயர்த்தால் அதனை யாரும் விரும்பிப் படிக்க முன்வாரார். இந்த உண்மையை நன்கு அறிந்துகொண்ட நம் முன்னோர் வடமொழிக் கதைகளையும் கதைப் பகுதிகளையும் வாங்கிக் கொண்டதுடன் அமைந்துவிட்டனர்.

தமிழாக்கம் செய்யப் பெற்றதாயினும் அவை தமிழில் மூலநூல் போன்ற சிறப்பைப் பெற்றன. இந் நாட்டுக்கும், இம் மொழிக்கும், இந் நாகரிகத்திற்கும், இப் பண்பாட்டிற்கும் ஏற்றமுறையில் மூலக்கதைக்கு வேண்டுமான வேறுபாடுகளை அமைத்து, ஏலாதனவற்றை நீக்கிப் புதிய படைப்பாகவே படைத்தனர்.

இவ்வாறு ஆக்கம் பெற்ற நூல்களைப் பற்றிக் கூறவந்த முதல் தமிழ்த் திறனாய்வாளராகிய வ.வே.சு. ஐயரவர்கள் தம்முடைய கம்பன் என்ற ஆங்கில நூலில், "தமிழில்

மட்டுமல்லாமல் இந்திய மொழிகள் அனைத்திலும் இந்த இயல்பைக் காண்கிறோம்" என்று கூறுகிறார். "இந்தக் கொள்கையைத் தெலுங்கு மொழியிலும் காண்கிறோம். தமிழ் மொழியைப் பார்த்துத்தான் இவ்வாறு வடமொழி மூலக்கதையை தம் மொழியில் ஆக்கம் செய்ய ஏற்றுக் கொண்டார்கள் என்று கூறச் சான்று ஏதும் இல்லை. தெலுங்கில் பாரதம் பாடிய நன்னையா. திக்கண்ணா இருவரும் வடமொழிக் கதையை மட்டுமே ஏற்றனர். பாஸ்கரரின் இராமாயணமும், துளசிதாசரின் இராம சரிதமனஸ் என்ற நூலும் இவ்வகையிலேயே அமைந்தன. மூலக் கதையில் வேண்டுமான விகற்பங் கூறுவதுடன் கற்பனை, இயற்கை வருணனை, அணிகள் என்பவற்றைத் தம் மொழிக்கு ஏற்பவே செய்தனர். சில நிகழ்ச்சிகளை நீட்டியும், சிலவற்றைக் குறைத்தும் புதியனவற்றை உட்புகுத்தியும், புதிய கிளைக் கதைகளைப் புகுத்தியும் தம் விருப்பத்திற்கேற்பச் செய்துள்ளனர். இம்முறை தமிழகம், ஆந்திரம் என்பவற்றோடு நில்லாமல், குஜராத், வங்காளம் என்ற நாட்டின் பிற பகுதிகளிலும் இருக்கின்றது. முதல் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை இந்நிலை நீடித்து வருகின்றது" (V. V. S. Iyer's Kamban, page-2)

## இடைச் செருகல்கள்

வான்மீகக் கதையை மிகப் பெருமளவு கம்பன் பின்பற்றி இருக்கின்றான் என்று கூறுவதில் தடை இல்லை. ஆனாலும் வருணனை, நிகழ்ச்சி, அமைப்பு, பாத்திரப் படைப்பு என்பவற்றில் பெரிதும் மாறுபாடு செய்துள்ளான் என்பதை இவ்விரு நூல்களைக் கற்றுத் துறைபோகிய வ.வே.சு. ஐயர் போல்வார் கண்டு கூறியுள்ளனர். வான்மீகத்தில் இடைச் செருகல் பாதிக்கு மேல் உள்ளன என்று இற்றைநாள் ஆராய்ச்சியாளர் ஆய்ந்து தெளிந்துள்ளனர். பாலகாண்டம், உத்தரகாண்டம் என்பவை இடையே செருகப்பட்டதுடன், நூலுள்ளும் பல பாடல்கள்

செருகப் பெற்றுள்ளன என்பர் ஆராய்ச்சியாளர். ஒரு நூல் ஒப்புயர்வற்ற சிறப்பை அடைந்து விட்டால் அதில் தம் சரக்கும் இருக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் என்றும் உண்டு. ஈடு இணையற்ற பழமையும் சிறப்பும் வாய்ந்த காரணத்தால் அரசின் பாதுகாப்புப் பெற்ற கட்டடங்களில், இன்றும் அவற்றைக் காணச் செல்லும் சிலர் தம் பெயரைச் செதுக்கிவிட்டு வருதலைக் காண்கிறோம் அல்லவா? இப் பெருமக்களுக்கு முன்னோடிகளான பலர் அவ்வக்காலத்துக்கு ஏற்பவும், தத்தம் பெருமை கருதியும் இடைஇடையே கவிதைகளைப் புனைந்து பெருநூல்களில் செதுக்கியுள்ளனர். கிறித்தவ வேதமாகிய விவிலிய நூலில் எவ்வளவு இடைச் செருகல்களும் மாற்றங்களும் புகுந்துள்ளன என்பதை, டால்ஸ்டாயின் 'பாவ மன்னிப்பும் என் நம்பிக்கையும்' (A confession and what I believe) என்ற நூலில் பரக்கக் காணலாம். எனவே எது மூலம் என்று காண வேண்டு மாயின் நீண்ட ஆராய்ச்சியை மேற்கொள்ள வேண்டும்.

கம்பனைப் பொறுத்துங்கூட இதே நிலைதான் இருந்து வருகிறது. அவனுடைய இராமகாதையிலும் நூற்றுக்கணக் கான பாடல்கள் இடைச்செருகலாகப் புகுந்துள்ளன. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், ஒவ்வொரு பிராந்தியத்தில் காணப்படும் சில பாடல்கள் பிற பிராந்தியங்களில் உள்ள ஏடுகளில் இல்லை. ஒரே பாடலில்கூட சில சமயங்களில் இருபது பாடபேதங்கள் உள்ளன. இத்தனை இடையூறுகட் கிடையேதான் உண்மைக் கம்பனைக் காண வேண்டி யுள்ளது. கம்பனின் இராமாயணத்தைப் பாராதவர்கள் கூட 'கடன்பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்ற அடியைக் கம்பன் பாடியதாகக் கூறுவதுண்டு. 'மன்னனே! அவனியை மகனுக்கு ஈந்து' என்று தொடங்கும் பாடலும் கம்பனுடையது என்று கருதியேற்றவர்கள் இன்றும் உண்டு. இத்துணை இடையூறுகளையும் தாண்டிச் சென்றால் கம்பனை உள்ளவாறு காண முடியும்.

## கடவுள் வாழ்த்து

*கம்பன் வடமொழி இராம கதையைத் தழுவித் தமிழில் முதனூலாகவே இராமாயணத்தை ஆக்கினான் என்று முன்னர்க் கூறப்பெற்றது. இந்த அடிப்படையில் அவனுடைய நூலில் நுழைந்தால் பாயிரம் என்ற தலைப்பில் கடவுள் வாழ்த்து என்ற உள்தலைப்பில் மூன்று பாடல்களும், அவையடக்கம் என்ற உள்தலைப்பில் ஆறு பாடல்களும், நூல் வரலாறு என்ற உள் தலைப்பில் ஒரு பாடலும், அடுத்து ஒரு பாடலும் இருக்கக் காண்கிறோம். இத் தலைப்புகளும் உள்தலைப்புகளும் உறுதியாகக் கவிஞன் தந்திருக்க முடியாது. அனைவருக்கும் பயன்பட வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் பிற்காலத்தில் நல்லறிஞர் யாரோ தந்திருக்க வேண்டும். (இங்குத் தரப்பெறும் பாடல்கள் சென்னைக் கம்பன் கழகப் பதிப்பில் உள்ளபடி அமைந்தவை.)*

*கடவுள் வணக்கம் பாடுகின்ற மரபு சங்க காலத்திலிருந்தே இருந்து வருகிறதாகலின் இப்பகுதி மூன்று பாடல்களையும் ஏற்பதில் தவறில்லை. மேலும் இந்த மூன்று பாடல்களுமே அவனுடைய பார காவியத்தின் அடித்தளம் என்பதைப் பின்னர்க் காணலாம். எனவே இதனை இப்போதைக்கு விட்டுவிட்டு மேலே செல்லலாம். அடுத்து, அவையடக்கம் என்ற தலைப்பில் உள்ள ஆறு பாடல்களும் சிந்திக்க வேண்டியவை. இந்த ஆறு பாடல்களும் கவிதை நயம் நிறைந்து காணப்படுகின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால், அவையடக்கம் ஒரு நூலின் முகப்பில் இருத்தல் வேண்டும் என்ற கருத்து எப்பொழுது தோன்றிற்று? கம்பன் தோன்றிய 9ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை என உறுதியாக நாம் அறியும் காப்பியங்கள் மூன்று, அவற்றுள் சிலம்பும், மணிமேகலையும் முழுவதுமாகக் கிடைத்துள்ளன. மூன்றாவதான பெருங்கதை தலையும் வாலும் இல்லாமல்*

இடைப்பகுதி மட்டிலும் இன்று கிடைத்துள்ளது. சிலம்பு, மேகலை ஆகிய இரண்டும் தொடங்கு முறையில் ஓரளவு மாறுபட்டுள்ளன. சிலம்பு 'மங்கல வாழ்த்து' என்ற பெயருடன் கதிரவன், திங்கள், மழை என்ற இயற்கை வாழ்த்துடன் தொடங்குகிறது. மணிமேகலை அதுவும் இல்லாமல் சம்பாபதி என்ற தெய்வம் பற்றிப் பேசுகிறது. சிலம்பு சைன காப்பியமாகவும், மேகலை பௌத்த காப்பியமாகவும் இருத்தலினால் அவை இரண்டும் கடவுள் வாழ்த்து என்ற ஒன்றைக் கூறவில்லை. காரணம் இவ்விரு சமயங்களும் கடவுள் பற்றிப் பேசும் கொள்கை உடையனவல்ல.

## அவையடக்கம் புதிது

ஆனால் இந்த இரண்டு காப்பியங்களும் பதிகம் என்ற பெயரில் சில கருத்துகளைப் பேசுகின்றன. அவையடக்கம் என்று கருதக்கூடிய பகுதி எதுவும் இவற்றில் இல்லை. அதற்குப் பதிலாகப் பதிகம் என்ற பகுதி நூலின் உள்ளே உறையும் பெரும் பகுதிகளின் பெயர்களை வரிசைப் படுத்திக் கூறி, இப் பகுதிகளைக் கொண்டே இந்நூல் செய்யப் பெற்றுள்ளது என்று கூறும். கம்பனுக்குப் பிற்பட்டுத் தோன்றிய சீவகசிந்தாமணியும் இந்த முறையைப் பின்பற்றிச் செல்கிறது. ஆனால் முன் இரண்டு நூல்களிலும் இல்லாத அவையடக்கம் சிந்தாமணியில் இடம் பெறுகிறது. எனவே அவையடக்கம் என்ற புதுப்பகுதியைத் தமிழ் இலக்கியத்தில் புதிதாகப் புகுத்தியவன் கம்பனே என்று கருத இடம் தரும் முறையில் இராமாயணம் அமைந்துள்ளது. செருகு கவிகள் பிற்காலத்தில் நிரம்ப உள்ளே நுழைந்துள்ளன என்றாலும், இந்த அவையடக்கப் பகுதியைக் கவிஞனே பாடி இருத்தல் வேண்டும் என்று கருதுவதில் தவறு இல்லை. அதில் ஒரு சிறப்பான கவிதையைக் கண்டால், கவிஞன் தான் எடுத்துக்கொண்ட பொருளினிடத்துப் பரிவும் (Sympathy)

*பக்தியும்* (Devotion) *தன்னை மறந்த லயமும்* (Losing self in the subject) *கொண்டுள்ளான் என்பதை அறிய முடிகிறது.*

முத்தமிழ்த் துறையின் முறை போகிய
உத்தமக் கவிஞர்க்கு ஒன்று உணர்த்துவென்
பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும், பன்னப்படுபவோ?

*(பாயிரம்—8)*

*பித்தர் தம்மை மறந்தவர்கள்; பத்தர் தம்மை சர்வ பரித்தியாகம் செய்தவர்கள்; பேதையர் தம் செய்கையின் பலாபலன்களை அறியாதவர். இம் மூவகையினருடைய செயல்கள் அறிவுக்கு அப்பாற்பட்ட உணர்வின் அடிப் படையில் நிகழ்பவை. ஆகலின் அறிவின் துணைகொண்டு இவர்கள் செயலை ஆராய்வதால் பயனில்லை என்று கூறுகிறான். இவ்வாறு கூறுவதில் ஓர் ஆழ்ந்த கருத்தும் அடங்கியுள்ளது. இந்த நாட்டில் தோன்றிய பெரியோர்கள் யாதானும் ஓர் அரிய செயலைச் செய்ய நேரிட்டால் அதனைத் தாம் செய்ததாக நினைப்பதுமில்லை; கூறுவதும் இல்லை. அதன் எதிராக இறைவனே தம்மை ஆட்கொண்டு தம் மூலமாக அச் செயலை நிகழ்த்தினான் என்று நம்பினர்; கூறினர். திருவாய் மொழி அருளிச்செய்த நம்மாழ்வார் இக்கருத்தை அழகுபடக் கூறுகிறார்.*

என் நெஞ்சத்து உள் இருந்து இங்கு
இருந்தமிழ் நூல் இவை மொழிந்து
வல் நெஞ்சத்து இரணியனை
மார் விடந்த வாட்டாற்றான்

*(நாலாயிரம்—3132)*

பண் ஆர் பாடல் இன் கவிகள்
யான் ஆய்த் தன்னைத்தான்பாடி

*(நாலாயிரம்—3144)*

*'இரணியனை மார்பைப் பிளந்த திருவாட்டாற்றில் உறையும் திருமால் என் நெஞ்சினுள் இருந்து இந்த அழகிய*

தமிழ் நூல்களைத் தானே பாடினான். பண்ணுடன் கூடிய இனிய பாடல்களை என்னுள் புகுந்து தானே பாடிக் கொண்டான்.'

## ஏன் இவ்வாறு கூறுகிறான்?

புதியதும் ஆழமானதுமான ஒரு கருத்தை உட்கொண்டு காப்பியம் இயற்றப்போகும் ஒரு கவிஞனுக்கு இத்தகைய ஆழமான இறையுணர்வு இருந்தால்தான் அவன் மேற்கொண்ட செயலில் வெற்றியைக் காண முடியும். எனவே தமிழ்நாட்டில் பெரிதும் வழக்கத்தில் இருந்த ஒரு பழைய கதையைச் செய்யுள் வடிவில் பாடுவதாக மட்டும் அக் கவிஞர் பிரான் கருதவில்லை என்று தெரிகிறது. அப்படியானால் திருமாலிடத்து மக்கட்குப் பக்திப் பெருக்கம் ஏற்பட வேண்டும் என்ற கருத்தில் ஒருவேளை இவ்வாறு கூறினானோ என்ற ஐயமும் தேவை இல்லை. அவனுக்கு முன்னர்த் தோன்றிய சங்க இலக்கியம், திருக்குறள் என்பவற்றில் துளைந்தாடிய இக் கவிஞன், தேவார, பிரபந்தங்களிலும் பெரிதும் ஈடுபட்டிருக்கின்றான் என்பதை, அவன் நூலை ஒருமுறை கற்பாரும் அறிந்து கொள்ள முடியும். எனவே ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் வளர்க்காத திருமால் பக்தியைத் தான் வளர்த்து விட முடியும் என்றோ, வளர்க்கவேண்டும் என்றோ அவன் கருதினான் என்று நினைப்பதும் கவிஞனுக்கு நாம் செய்யும் பழியாகும். அப்படியானால் வேறு ஏதோ ஒரு கருத்தை மனத்துட் கொண்டுதான் அவன் இவ்வாறு கூறியிருத்தல் வேண்டும். அதுவரை யாரும் கூறாததும் புதுமையானதுமான ஒரு சோதனையைச் செய்யப் போகின்றானாகலின், தன்னை முழுவதுமாக இறை அன்பில் ஈடுபடுத்திக் கொண்டு அவன் அருளால் இக்காரியம் நிகழப்போகின்றது என்பதைக் குறிப்பாகப் பேசுகிறான் கவிஞன்.

## யார் பாடியது?

*இனி அடுத்துள்ள பாடல் சற்று ஐயத்தைத் தருகின்ற ஒன்றாகும். 'தேவ பாஷையாகிய வடமொழியில் இக்கதையைக் கூறினவர் மூவர். அவருள் முதலில் சொன்னவரை அடியொற்றி நான் தமிழ்ப் பாடல்களால் இதை கூறப் போகிறேன்' என்ற பொருளில் பாடல் அமைந்துள்ளது.*

தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவர் ஆனவர் தம்முளும் முந்திய
நாவினான் உரையின்படி, நான் தமிழ்ப்
பாவினால் இது உணர்த்திப் பண்பரோ!

*(பாயிரம்—10)*

*இப்பாடலில், இராமகதையை வடமொழியில் செய்தவர் மூவர் என்று மட்டுமே கூறப்பெற்றுள்ளது. இந்த மூவர் யார் என்று விளக்கம் கூறவந்த திரு வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்கள், மூவர் என்பவர் வான்மீகி, வசிட்டர், போதாயனர் என்ற மூவர் என்று கூறிவிட்டு, வசிட்டர் செய்தது வாசிஷ்ட ராமாயணம் என்றும், போதாயனர் செய்தது போதாயன ராமாயணம் என்றும் கூறுகிறார். இக் கருத்துக்கு மாறுபாடாக வசிட்டர் பெயரை நீக்கிவிட்டு வியாசர் என்று கூறி அவர் செய்தது அத்யாத்ம ராமாயணம் என்று பலர் கூறுவர் என்றும் அவரே கூறுகிறார். இதற்கு அடுத்த வாக்கியத்தில் இன்னுஞ் சிலர் இந்த மூன்று இருடியரினும் மேம்பட்ட நாவையுடைய ஆழ்வார்கள் என்று பொருள் கூறுவாரும் உளர் என்று கம்பநாடனுடைய பெருங்காப்பியத்திற்கு உரையிட்ட திரு. வை. மு. கோ. அவர்களே குறிக்கின்றார். இந்த மூவர் என்பவர்கள் வான்மீகி, பாஸகவி, காளிதாசன் என்பவர்களாவர் என்று கூறுபவர்களும் உண்டு.*

*இத்துணை இடர்ப்பாட்டிற்கும் காரணமாய் அமைந்த சொல் மூவரானவர் என்பதாகும். உண்மையிலேயே கம்பநாடன் வான்மீகிக்கு நன்றி பாராட்ட நினைத்திருந்தால்*

அந்த மூவர் யார் என்று கூறிப் பிறகு அம்மூவருள் வான்மீகி முந்தியவர் என்பதைக் குறிப்பிட்டிருக்க வேண்டும். இராமனுக்கு உபநயன விதிமுடித்துக் கல்வி கற்பித்து வளர்த்தவனே வசிட்டன் என்று கதை பேசுகிறது. ஜனகனிடம் இராம இலக்குவர்களை அழைத்துச் சென்று அறிமுகஞ் செய்துவைக்கும் விசுவாமித்திரன் இதனைக் கூறுகிறான். அவ்வாறு அவன் கூறுவதற்கும் ஒரு காரணம் உண்டு. தான் வளர்க்கும் பெண்ணை இராமனுக்கு மணம் செய்து கொடுக்க விரும்பும் ஜனகனுக்கு மருமகனாக வரப் போகிறவனைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஆனால் அவன் தந்தையாகிய தசரதனைப் பற்றி நன்கு தெரியும். 'அறுபதினாயிரம் மனைவியரை மணந்த ஒருவனுடைய மகன் எப்படி இருப்பானோ? இவனுக்கு எவ்வாறு தன் ஒரே மகளைத் தரமுடியும்?' என்ற எண்ணம் பெண்ணைப் பெற்றவன் மனத்தின் ஆழத்தில் இருக்கத்தானே செய்யும்? அவ்வாறு அவன் கருதினால் அதில் தவறு கூற ஒன்றும் இல்லை. எனவே இந்த ஐயத்தைப் போக்குபவன் போல, விசுவாமித்திரன்

திறையோடும் அரசு இறைஞ்சும்
செறிகழல் கால் தசர தனாம்
பொறையோடும் தொடர்மனத்தான்
புதல்வர் எனும் பெயரே காண்
உறை ஒடு நெடுவேலாய்!
உபநயன விதிமுடித்து
மறை ஓதுவித்து, இவரை
வளர்த்தானும் வசிட்டன் காண்

(குலமுறை—24)

என்று பேசுகிறான். அப்படியானால் வசிட்டனுக்கு முன்னவனாக வான்மீகியைக் கூறுவது எவ்வாறு?

மேலும், வடமொழியைத் தேவபாடை என்று கூறும் மரபு உண்டேனும், பின்னர் 'வடசொற்கலைக்கு எல்லை

தேர்ந்தான்' (நகர் நீங்கு—136) என்று பேசும் கவிஞன், தேவபாடை என்று கூறுவானா என்பதும் சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். இதைவிடப் புதுமை ஒன்றும் காணப்படுகிறது. 'அவையடக்கம்' என்ற பெயரில் ஆறு பாடல்களைப் பாடிவிட்டான் என்றே வைத்துக் கொள்வோம். 'பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல் தெய்வமாகக் கவி மாட்சி தெரிக்கவே' வையம் இவன் ஏன் பாடினான் என்று இகழ்ந்தாலும் அதுபற்றிக் கவலைப்படாமல், பாடினதாக அவையடக்கம் மூன்றாவது கவிதை தெரிவிக்கிறது. இதனுடன் கவிஞனின் அவையடக்கம் முடிந்ததாகத் தெரியவில்லை.

இதனை அடுத்துள்ள ஆற்றுப் படலம் கடந்து, நாட்டுப் படலம் தொடங்கும்போது மறுபடியும் அவையடக்கம் என்ற பெயர் இல்லாமல் ஒரு கவிதை காணப்படுகிறது.

வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி என்பான்
தீங்கவி, செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவம் மாந்தி
மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியல் உற்றேன்
(நாட்டுப் படலம்—1)

மேலே அவையடக்கத்தின் மூன்றாவது பாடலில் கூறிய அதே கருத்தை மறுபடியும் ஆற்றுப் படலத்தின் முதலில் அமைக்க வேண்டிய இன்றியமையாமை எங்கே வந்தது? வான்மீகிபால் கொண்ட நன்றி உணர்ச்சி மிகுந்துவிட்டதால், படலந்தோறும், கடவுள் வாழ்த்துப் போல் வான்மீகி வணக்கம் கூறுகிறான் என்று கருதினால், அதற்கு ஏற்ற முறையில் நூலில் வேறு எங்கும் வான்மீகி பற்றிய பேச்சையே காணவில்லை. இதைவிட ஒரு வியப்பும் உள்ளது. அவன் (வான்மீகி) புகழ்ந்த நாட்டை யான் மொழியலுற்றேன் என்று பாடல் கூறுகிறது. ஆனால் வான்மீகி நாடுபற்றிக் கூறியுள்ளது ஒரே ஒரு கவிதைதான். (பாலகாண்டம் சருக்கம் 5 பாடல் 2 மட்டும்) கம்பன்தான்

61 பாடல்களில் நாட்டு வருணனை பேசுகிறான். இதிலிருந்து ஒன்றை ஊகிக்க இடம் உளது. பிற்காலத்தில் வான்மீகி பக்தர்கள் இந்தப் பாடலையும் எழுதி உள்ளே திணித்துள்ளனர் என்பதேயாகும்.

## ஏன் திணித்தனர்?

இத்துணை அளவு இதுபற்றிக் கூற ஒரு தக்க காரணம் உண்டு. கம்பநாடன் அதற்கு முன்னர் யாரும் சிந்தித்துக் கூறாத ஒரு கருத்தை நூல் முழுவதும் பேசிக்கொண்டு செல்லப் போகின்றான். அது அவனே சிந்தித்து முடிவு செய்ததாகும். பழைய தமிழ் மரபு பற்றி வந்த ஆசிரிய மாலைப் பாடல்கள்தாம் அவனை இப்புது வழியில் சிந்திக்கத் தூண்டின என்று கருதுவதில் தவறு இல்லை. வான்மீகக் கதையை எடுத்துக் கொண்டான்; அதில் வரும் பாத்திரங்களையும், பல நிகழ்ச்சிகளையும் ஏற்றுக் கொண்டான். ஆனால் இவை அனைத்தையும் பெரிய அளவில் மாற்றம் செய்துவிட்டான். இதனை அறிந்த பிற்காலச் சுவைஞர்களுள் யாரோ ஒருவர் வான்மீகத்திற்குத்தான் கம்பன் கடன்பட்டான் என்று முடிவு கட்ட விரும்புகிறார். அவர் இந்த முடிவுக்கு வருகின்ற காலத்தில் இந்த நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் இராம காதை பல்வேறு மாறுபாடுகளுடன் வேரூன்றி வளர்ந்துவிட்டதை அறிகிறார். இக்கதைகளுள் ஏதோ ஒன்றைக் கம்பன் அடித்தளமாகக் கொண்டான் என்று எங்கே பிறர் கருதி விடுவார்களோ என்று நினைத்து ஒன்றுக்கு இரண்டாகப் பாடல்களைப் பாடித் தக்க இடத்தில் செருகிவிட்டார் என்று ஊகிக்கலாம். வான்மீகியிடம் கதையைப் பெற்றிருந்தாலும் தமிழ் மரபுக்கு ஏற்ப அக்கதையை வளைத்துத் திருப்பித் தன் கருத்துக்கும் குறிக்கோளுக்கும் ஏற்ப எவ்வாறு அமைக்கின்றான் என்பதை அடுத்துக் காண்டல் வேண்டும்.

# 2. கம்பனுக்கு முன்

## கவிஞன் காலம்

*கம்பநாடன் திருவரங்கத்தில் தன் இராம காதையை கி. பி. 689 பிப்ரவரி மாதத்தில் அரங்கேற்றினான் என்று கூறும்.*

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று
ஏழின்மேல் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர்
தன்னிலே, கம்ப நாடன்,
பண்ணிய இராம காதை
பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே
கவிஅரங் கேற்றி னானே!

*(தனிச் செய்யுள்)*

*—என்ற இப் பாடலின்படி சக ஆண்டு பங்குனி அத்தம் கூடிய நன்னாளில் திருவரங்கத்தில் தன் நூலை அரங்கேற்றினான் என்றால் கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவன் என்பது தெளிவாகும். இதனை மறுத்து வேறு ஒரு தனிப்பாடலைக் காட்டிக் கம்பன் காலம் 12ஆம் நூற்றாண்டு என நிறுவ முனைந்தார் திரு வையாபுரிப் பிள்ளை. அவருடைய பிற ஆய்வுகளின்படி சிலப்பதிகார காலமே 6ஆம் நூற்றாண்டு என்ற முடிவுக்கு வருபவர். சிலம்பு 6ஆம் நூற்றாண்டு என்றால், கம்பரைப் பன்னிரண்டுக்குக் கொண்டு செல்லவேண்டிய இன்றி யமையாமை அவருக்கு ஏற்பட்டது. அந்த விவகாரத்தில்*

நுழையாமல் கம்பன் 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்தான் என்று கொண்டு மேலே செல்லலாம்.

## பாரம்பரியக் காவலன்

*திறனாய்வாளர் கருத்துப்படி எந்த ஒரு பெருங் கவிஞனும் திடீரென்று எந்த ஒரு சமுதாயத்திலும் தோன்றிவிட முடியாது. பெருங்கவிஞன் ஒருவன் தோன்றினான் என்றால், அவனுக்கு முன்னர் அவன் தோன்றிய மொழியில், நாகரிகத்தில், மக்கள் இடையில், ஒரு பாரம்பரியம் இருந்திருத்தல் வேண்டும் என்று கருதுகின்றனர். பெருங் கவிஞன் ஒவ்வொருவனும் தான் பிறந்த சமுதாயத்தில், மொழியில் உள்ள பாரம்பரியத்தில் ஊறித் திளைத்துத்தான் வெளிப்படுகிறான். இவ்வாறு கூறுவதனால் அக்கவிஞனிடம் தனித்தன்மை (Originality) இல்லாமல் போய்விடுமோ என்று யாருங் கருத வேண்டா. பழைமையின் சாரத்தை ஏற்றுக்கொண்ட பிறகு கவிஞன் தன்னுடைய மனத்திலும், அகமனத்திலும் அந்தச் சாரத்தை நிறைத்துக் கொள்கிறான். இந்த நிறைவுடன் புதிதாக ஒன்றை அறிகிறான் என்றால் அந்தப் புதியதாக அறிகின்ற ஒன்றை, பழைய சாரத்தின் அடிப்படையில் காணும்பொழுது அக்கவிஞன் புதிய ஒரு காட்சியைக் காணுகிறான். அவன் காணுவதை அல்லது கேட்பதை ஏனையோரும் காணுகின்றனர் என்றாலும், அவர்களைப் பொறுத்தமட்டில் கவிஞன் காணும் காட்சியைக் காண முடியாது. பழமையில் ஊறித்திளைத்த அவன் காணும் காட்சியைப் பிறர் எவ்வாறு காண முடியும்?*

*கம்பநாடன் இத்தமிழ் நாட்டில் 6ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றுவதற்கு முன்னர் இந்நாட்டின் நாகரிகம், பண்பாடு, இலக்கியம், அரசியல் என்பவை எவ்வாறு இருந்தன என்பதைச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும்.*

## கம்பனாரிடைப் புலமை உள்ளது

*கம்பன் பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளின் முன்னரே முற்றிலும் வளர்ச்சி அடைந்த மொழி, இலக்கியம், இலக்கணம் என்பவை இந்நாட்டில் தோன்றிவிட்டன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை என்ற நூல்கள் இன்றுகூட நாம் காணும் நிலையில் உள்ளன என்றால், கம்பன் காலத்திலும் இவை இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. சிலப்பதிகாரத்திற்கு உரையிட்ட அடியார்க்கு நல்லார் பட்டியல் தரும் நூல்கள் பல இன்று இல்லை. நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகார முற்பகுதிக்கு உரையிட்டு அவற்றிற்கு மேற்கோளாகக் காட்டிய பாடல்கள் சில இன்று இல்லை என்றால், அவர்கள் காலத்தில் அவை இருந்தன என்பதுதானே பொருள். அவர்கள் காலத்தில்கூட இந்நூல்கள் இருந்தன என்றால், கம்பன் காலத்திலும் அவை இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை என்பது தெளிவு. இந்நூல்களையும், வடமொழியில் உள்ள நூல்களையும் கசடறக் கற்றுத் தேர்ந்தவன் கம்பன் என்பதை ஆயிரம் ஆண்டுகளாக இந்நாட்டு மக்கள் அறிந்தும் வெளிப்படையாகக் கூறியும் உள்ளனர். 'கல்வியிற் பெரியவன் கம்பன்', 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்', 'கம்பனாரிடைப் புலமை உள்ளது' என்பன போன்ற முதுமொழிகள் இக்கருத்துக்குச் சான்று பகரும்.*

## பக்தி இலக்கியத்திலும் ஈடுபாடு

*சங்க நூல்கள், அவற்றை அடுத்துத் தோன்றிய சிலம்பு, மேகலை, பெருங்கதை என்பவை போக, 7ஆம் நுற்றாண்டின் தொடக்கத்திலிருந்து 9ஆம் நூற்றாண்டு வரை இத்தமிழ் கூறும் நல்லுலகத்தைப் பற்றி நின்று நிறைத்த, தேவார, பிரபந்தங்களையும் அவன் கரைத்துக்*

குடித்திருக்க வேண்டும். இவற்றை அல்லாமல் வடமொழிப் பயிற்சி மிகுதியாகப் பெற்றிருந்தமையின் உபநிடதங்கள் தொடங்கி சங்கரருடைய அத்வைத விளக்கம் வரையும் அவனுடைய கூர்த்த மதிக்கு உணவாயின.

## நால்வகைப் பிரிவு

சங்கப் பாடல்களில் ஈடுபட்ட அவன் அப்புலவர்கள் இயற்கையில் ஈடுபட்டு ஒன்றி நின்று, இயற்கைக்கும் தம் வாழ்க்கைக்கும் இருந்த தொடர்பைக் கண்டு, அதில் தம்மைப் பறிகொடுத்தனர் என்பதை அறிந்தான். அவர்கள் தாம் பிறந்த மண்ணைப் புனல்பரந்து பொன்கொழிக்கும் பூமியாக மட்டும் கருதவில்லை; மண்ணில் தோன்றி மண்ணில் மடியும் தம் வாழ்க்கையில் அந்த மண்ணுடன் பின்னிப் பிணைந்து கிடக்கும் ஆழமான உண்மையை அறிந்து உணர்ந்தமையால் தான் மண்ணை நால்வகை (குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம்) நிலமாகப் பகுத்துக் கூறினர். நால்வகையாகப் பிரித்ததுடன் அமையாமல், அதில் உள்ள இயற்கைப் பொருள்களையும் தம்முடன் தொடர்புடையனவாகக் கூறினர். தங்கள் வாழ்வை வளப்படுத்தும் கதிரவன் (பகல்), திங்கள் (இரவு) என்பவற்றின் தொடர்புடைய காலத்தையும் பெரும்பொழுது என்றும் சிறுபொழுது என்றும் பிரித்துக் கூறினர். இவற்றை முதற்பொருள் (நிலம், பொழுது) என்றும், கருப்பொருள் என்றும் கூறிவைத்தனர். இந்த அளவு இயற்கை யைத் தம் வாழ்வுடன் இணைத்துக்கொண்ட அவர்கள் இந்தப் பிரிவின் அடிப்படையிலேயே தங்கள் வாழ்க்கையின் பல கூறுகளையும் பிரித்துக் கண்டனர். திணை என்ற சொல்லுக்கே கூட ஒழுக்கம் என்ற பொருளும் கூறினர்.

## முதல், கரு, உரிப்பொருள்கள்

வாழ்க்கையின் கூறுகளைப் பிரித்து அவற்றை உரிப்பொருள் என்று கூறிய அவர்கள், முன்னர்க் கண்ட

இரண்டு பிரிவுகளையும் வாழ்க்கைக் கூறுடன் சேர்த்து முதல், கரு, உரி என்றே கூறினர். அத்துடன் நில்லாமல் இவை ஒன்றுடன் ஒன்று பிரிக்க முடியாத தொடர் புடையன என்பதையும் கூறினர்.

முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறை சிறந்தனவே....

(தொல்—அகத்திணை—3)

உலகத் தோற்றத்தைப் பற்றிக் கூறும் விஞ்ஞானிகள் கூட முதலில் தோன்றியது உலகம் என்றும், அதனுடன் தோன்றியது பகலும் இரவும் என்றும் கூறுவர். அடுத்துப் பல்லாயிரம் ஆண்டுகள் கழித்துக் கருப்பொருள் என்று தமிழ் இலக்கணம் கூறும் விலங்குகள், பறவைகள் முதலாய உயிர் வருக்கங்கள், இவற்றுடனோ அன்றி இவற்றின் முன்னோ தோன்றிய நிலையியற் பொருளாகிய மரம், செடி, கொடி முதலியன தோன்றின. இவை தோன்றிய பிறகு பல்லாயிரம் ஆண்டுகள் கழித்துத்தான் மனிதன் தோன்றி வளர்ந்தான் என்று கூறுவர். இதனைக் கூர்தல் அறம் (Evolution) என்பர் இற்றை நாள் அறிவு நூலார். இக்கருத்தைத்தான் பழந்தமிழ் இலக்கணமாகிய தொல் காப்பியம்,

'முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்றே' என்று அறுதியிட்டுக் கூறிவிட்டு, அடுத்த அடியில் 'நுவலுங்காலை முறை சிறந்தன' என்று பேசுகிறது. அதாவது சிந்தித்துப் பேச வேண்டுமாயின் இவை ஒன்றைவிட ஒன்று கூர்தல் முறையில் வளர்ச்சி பெற்றுச் சிறந்தன என்கிறது அவ்விலக்கண நூல். தொல்காப்பியப் பொருளதிகாரம் என்பது, வெறும் மொழிக்கு மட்டும் இலக்கணம் கூறும் எழுத்து, சொல் என்பவற்றின் தொடர்பாய், அந்த எழுத்தையும் சொல்லையும் கண்டுபிடித்துப் பயன் படுத்தும் மனிதனுடைய வாழ்வுக்கு இலக்கணம் கூறும்

பகுதியாகும். எழுத்து, சொல் இலக்கணத்துடன் மனித வாழ்வுக்கும் இலக்கணம் கூறும் ஒரு நூல் தமிழ் மொழி தவிர இந்த உலகில் வேறு எந்த மொழியிலும் இல்லை என்பதையும் மனத்துட் கொள்ள வேண்டும்.

## அகம் புறம் பிரிவு

இந்தப் பொருள் இலக்கண அடிப்படையில் தோன்றிய இலக்கியம் அகம், புறம் என்ற இருபெரும் பகுதிகளாக அமைந்து இத்தமிழ் மக்கள் வாழ்வு முழுவதையும் கவிந்து நிற்கின்றது. இலக்கியம் ஒரு கால மக்களின் மனப்பாங்கை அறிவிக்கும் கண்ணாடி என்பது திறனாய்வாளர் கூறும் சட்டம். அவ்வாறானால், உணர்ச்சி அடிப்படையில் தோன்றிய அகப்பாடல்கள், தமிழர்கள் தம் வாழ்க்கையின் ஒரு பகுதியை எவ்வாறு பகுத்துக்கொண்டனர் என்பதை அறிவிக்கும் பகுதி ஆகும். சமுதாயத்தில் கூடி வாழ்ந்து நாகரிக வளர்ச்சி பெற்ற அவர்கள் பிறருடன் எவ்வாறு பழகினர் என்பதையும், என்ன நினைந்தனர், எவற்றைத் தம் வாணாளில் விழுப்பொருள்கள் (Values) என்று கருதினர், என்பவை முதலானவற்றையும் அறிவிப்பது புறப்பகுதியாகும்.

## அகத்தில் இழுக்கு

இவற்றைக் கற்றுத் துறைபோகிய கம்பநாடன் தன் முன்னோரின் வாழ்க்கை முறையின் குறைவு நிறைவுகளை ஊகித்துக் கண்டிருக்க வேண்டும்.

மக்கள் நுதலிய அகன் ஐந்திணை

(தொல்—அகத்திணை—57)

என்று தொல்காப்பியம் வரையறுத்துக் கூறிவிட்டமையால், இந்த ஐந்து திணைகளைப் பற்றிச் சிந்தித்த கம்பன் குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை, மருதம் என்ற ஐந்துவகை

ஒழுக்கங்களில் தமிழர் முழு வாழ்வு வாழ்ந்தமையை அறிந்திருக்க வேண்டும். ஆனாலும், அதில் வரும் 'மருதம்' என்ற திணை இவர்கள் வாழ்வை நாசப்படுத்திய பகுதி என்பதையும் திருவள்ளுவர் மூலமாகக் கம்பன் அறிந் திருத்தல் வேண்டும். மருதம் என்பது பரத்தையருடன் வாழும் வாழ்க்கையைச் சித்திரிப்பதாகும். இத் தமிழ் நாகரிகம் சங்ககாலத்திலிருந்த சிறப்பை இழப்பதற்கு இதுவே காரணமாக நின்றது என்பதை யாரும் அறிய முடியும். எனவேதான் சமுதாய நீதி, ஒழுக்கம் பேசவந்த திருக்குறள் பரத்தைமை ஒழுக்கத்தை வலுவாகச் சாடிற்று.

பொருட் பொருளார் புன்நலம் தோயார்—அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்.

பொதுநலத்தார் புன்நலம் தோயார்—மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

இருமனப் பெண்டிரும், கள்ளும், கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு

*திருக்குள்—914, 915, 920*

[கருணை நாடும் அறிவுடையார், கையில் கொடுக்கும் பொருளையே பெரிதெனும் பொதுமகளிர் உறவு கொள்ளார். மாட்சிமைப்பட்ட அறிவின் வளர்ச்சியை நாடுபவர், பலருக்கும் பொதுவான மகளிரிடம் உறவு கொள்ளார். கொடுக்கும் பணத்திற்கு ஏற்ப அன்பு காட்டும் பொதுமகளிர் தொடர்பு, கள், சூதாடு கருவி என்பன வற்றுடன் தொடர்பு கொண்டவரை இலக்குமி கைவிட்டு விடுவாள்.]

சங்ககால மக்கள் வாழ்க்கையில் அவர்கள் வாழ்வை அழிக்கும் இக்களங்கம் புரையோடிப் போனதைக் கவிஞன் அறிய முடிந்தது. சிலம்புக் கதையும் அவன் எண்ணத்தை வலியுறுத்தியது.

## வள்ளன்மை - போர் வீரம்

*அடுத்து அவர்களின் புறப்பாடல்களை ஆய்ந்த அவன், அதன் நிறைவு குறைவுகளையும் காண முடிந்தது. புறப்பாடல்களில் அதிகமாக இடம்பெற்றிருந்த பகுதி அவன் மனத்தில் துணுக்கத்தை உண்டாக்கியது. ஒவ்வொரு பாடலும் இரவலர்க்கு அரசர்கள் வழங்கும் வள்ளன் மையைப் போற்றுவதாக அமைந்திருத்தலைக் கண்டான். புற வாழ்க்கைக்கு இலக்கணம் வடித்த தொல்காப்பியப் புறத்திணை இயலும் இந்த வள்ளன்மையைப் பாராட்டிப் பேசிற்று.*

கொடுத்தல் எய்திய கொடைமை யானும்

*(புறத்திணை—7)*

கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தல்

*(புறத்திணை—29)*

*என்று இலக்கணம் பேசிய காரணத்தால், உடையார் இல்லாதவர் என்ற பாகுபாட்டை அந்தச் சமுதாயம் ஏற்றுக் கொண்டிருந்தது என்பதையும், அவன் அறிய நேர்ந்தது.*

*அடுத்துப் புறத்தில் மிகுதியாகக் காணப்பெறும் பாடல்கள் போர்க்களத்தில் காட்டும் வீரம் பற்றியன வாகும். இந்த வீரத்தைப் புகழும் அதே நேரத்தில். போரால் விளையும் அவலநிலை பற்றியும் பாடல்கள் இருந்தன. தொல்காப்பியக் காஞ்சித்திணைச் சூத்திரம் போர்க் களத்தில் கணவனை இழந்த மனைவியரின் அவல நிலையை எடுத்துப் பேசிற்று. மகனை இழந்த தாயர், சுற்றத்தார் படுந்துயரம் பற்றியும் பேசிற்று என்றாலும், போர்க்களத்தில் வீரம் காட்டுதலைப் பெரிதும் விரும்பிப் போற்றின. பரத்தைமை ஒழுக்கம், கள்ளுண்டு மகிழ்தல் என்பவற்றையும் முனைந்து சாடின. குறள்கூட இப்போர்க்கள வீரத்தைப் பெரிதுபடுத்திப் புகழ்ந்து கூறிற்று.*

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்து கோள்தக்கது உடைத்து

*(திருக்குறள்—780)*

*[பக்கத்தில் நின்று பார்ப்பவர்கள் கண்ணுள் நீர் நிறையுமாறு வீரங்காட்டி ஒருவன் சாகும் நிலை வருமேயானால், அத்தகைய சாவை யாசித்தாவது பெற வேண்டும்.]*

*இத்தகைய வீரத்தைப் பாராட்டியதைக் கம்பன் ஏற்றுக்கொண்டாலும், போர் என்பதை விரும்பவில்லை.*

## வாகைத் திணையில் சிறந்தவை

*புறத்திணையில் குறிப்பிடப் பெற்ற கொடை, வீரம் என்பவை போக, வாகைத் திணையில் குறிப்பிடப் பெற்ற சான்றாண்மை, நல்லொழுக்கம், பிறர் பிழை பொறுக்கும் பண்பு, அருளை மேற்கொண்டு வாழும் வாழ்க்கை, துறவு, காமம் நீத்த சிறப்பு என்பவை கவிஞனின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. அரசச் செல்வத்தில் திளைத்தவர்கள் சிலர் அச் செல்வத்தைத் துறத்தலையும் இலக்கணம் பேசிற்று.*

...................................................
துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கட்டில் நீத்த பாலி னானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்

*(கடிமனைநீத்த பாலின் கண்ணும் என்ற பாடமும் உண்டு)*

..........................................................
அருளொடு புணர்ந்த அகற்சியானும்
காமம் நீத்த பாலினானும்

*(தொல்—புறத்திணை —17)*

*இவை அனைத்தும் கம்பனுடைய மனத்தைக் கவர்ந் திருத்தல் வேண்டும். அதிலும் சிறப்பாகக் 'கட்டில் நீத்த பாலினானும்' என்பதும், 'அருளொடு புணர்ந்த*

அகற்சியானும்' என்பதும் அவனைப் பெரிதும் ஆட் கொண்டன. போர், வெற்றி, புகழ் என்பவற்றிலேயே பெரிதும் மயங்கிக் கிடந்த இத்தமிழ்ச் சமுதாயத்தில், அரசு கட்டிலைத் துறப்பதும், அனைத்து உயிர்களிடமும் அருள்கொண்டு துறவு மேற்கொள்ளுதலும், பெருவெற்றி யாகும் என்று நம்பிய ஒரு சிலரும் இருந்தனர் என்பது, கம்பனுக்கு ஒரு தெம்பை அளித்திருத்தல் வேண்டும்.

இந்த சூத்திரத்தில் வரும் ஓர் அடி, 'கட்டு அமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும்' என்பதாகும். இதன் பொருள் விரிக்க வந்த நச்சினார்க்கினியர், 'வேதம் முதலிய வற்றாற் கட்டுதல் ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சி' என்று எழுதிவிட்டு, அதற்கு விளக்கமாகப் பின்வருமாறு கூறுகிறார்:

"இவை மனத்தான் இவ்வொழுக்கங்களைக் குறிக் கொண்டு ஐம்பொறியினை வென்று தடுத்தலாம். இல்லறத் திற்கு உரியவாக நான்கு வருணத்தார்க்கும் கூறிய அடக்க முடைமை, ஒழுக்கம் உடைமை, நடுவு நிலைமை, பிறர்மனை நயவாமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை முதலியனவாம்."

## நன்மை தீமை கலந்ததே உலகம்

கம்பநாடன் உரையாசிரியர் நச்சினார்க்கினியருக்கு முற்பட்டவன் எனினும், தமிழ் நாகரிகத்தின் சாரத்தை எடுத்துக் கூறும் தொல்காப்பியத்தையும், சங்க இலக் கியங்களையும் கற்காமல் 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்ற பெயரை எடுத்திருக்க முடியாது. எந்த ஓர் இனமும் முற்றிலும் சிறந்த பழக்க வழக்கங்களையோ, அன்றி முற்றிலும் தீய பழக்க வழக்கங்களையோ, கைக்கொண்டு வாழ்ந்தது என்பது மானிடசாதி வரலாற்றில் எங்கும் இல்லை. நல்லது தீயது என்ற இரண்டும் கலந்துதான் இருக்கும்.

[குணத்தையும் குற்றத்தையும் தனித்தனியே எடுத்து ஆராய்ந்து இவை இரண்டினுள் எது அதிகமாக உள்ளதோ அதன்படி முடிவு செய்க.]

இக்குறள் தனிமனிதனை எடை போடுவதற்கும், ஓர் இனத்தை, ஒரு நாட்டு மக்களை எடை போடுவதற்கும் பொருத்தமாக அமைந்துள்ளது.

இந்த முறையில், பழந்தமிழரின் பண்பு நலன்களை ஆராய்ந்த கம்பநாடன் இக் குறைகள் நீங்கினால் அச் சமுதாயம் பிற சமுதாயங்கட்கு ஓர் எடுத்துக்காட்டாக அமையும் என்பதையும் கண்டுகொள்கிறான்.

## பண்டைய அரசர்கள்

இதனை அடுத்துப் பழந் தமிழ்நாட்டின் அரசியலையும் அதனுடன் தொடர்புடைய பொருளாதாரத்தையும் காண்டல் வேண்டும். குருட்டுப் பற்றினால் அன்றைய தமிழ் மன்னர்கள் ஆட்சி எல்லா வகையிலும் சிறப் புற்றிருந்தது என்று நினைப்பதும், பேசுவதும், பொருத்த மில்லாததாகும். தமிழ் நாட்டின் எல்லையை, ஏறத்தாழக் கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டு நூற்றாண்டுகளின் முன்னர் இருந்த நிலையைத் தொல்காப்பியம் எடுத்துக் கூறுகிறது.

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடை தமிழ்கூறு நல் உலகம்.

(தொல் பாயிரம்—1)

என்பதே அதன் பரப்பளவாகும். கிழக்கிலும் மேற்கிலும் கடல் இருந்தமையின் இப்பாடல் அதனை வரையறுத்துக் கூறவில்லை. தென் எல்லை என்று குறிக்கப் பெற்ற குமரி, ஒரு காலத்தே கடலால் கொள்ளப்பட்டு விட்டது என்பதைச் சிலப்பதிகாரம், அதன் உரை முதலியவற்றால் அறிகிறோம். இதனைச் சேர்த்துக்கொண்டு கணக்கிட்

டாலும் தமிழ் நாடென்பது தெற்கு வடக்கில் 800 கி.மீ. கிழக்கு மேற்கில் 700 கி.மீ அளவில்தான் உள்ளது. இந்தச் சிறிய பகுதியை அக்காலத்தில் ஆட்சி செய்தவர்கள் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவர். இவர்களுடைய எல்லைக்குள் பல்வேறு சிற்றரசர்கள். ஏறத்தாழ இன்றைய மாவட்ட அளவில்கூட இல்லாத பகுதியை ஆண்ட சிற்றரசர்களும் உண்டு.

## முடிமன்னர் மூவருள்ளும்

இம்மூன்று முடிமன்னருள்ளும் ஓயாத, ஒழியாத போர்கள். இவர்கள் சிலகாலம் வாளா இருப்பினும் இவர்களைத் தூண்டிவிட்டுப் போர் செய்தவர்களும் உண்டு. பழந்தமிழ் மன்னருள் போரிடாத மன்னனே இல்லை என்று கூறும் அளவிற்கு இவர்களிடையே போர்கள் நிகழ்ந்தன. இவற்றை அல்லாமல் சோழர்கள் எனப்படுவோருள்ளும் அரசு கட்டில் குறித்த போர்கள் நிகழ்ந்துள்ளன. தந்தை மகன் இருவருள்ளுங்கூட அரசு கட்டில் குறித்துப் போர் நிகழ்ந்துள்ளது. இவை சின்னஞ்சிறிய சண்டைகள் என்று கருதுவதனால் தவறு இல்லை. இவற்றை அல்லாமல் இம்மூவருள்ளும் யாராவது ஒருவர் மிக்க வன்மையுடையவராக வந்தபொழுது, ஏனைய இருவருடைய நாட்டையும் கவர்ந்து கொள்ளுதல் இயல்பாக இருந்துள்ளது. கரிகாலன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நெல்வேலி வென்ற நெடுமாறன், சேரன் செங்குட்டுவன் போன்றோர் ஆட்சிக் காலத்தில் தமிழகம் முழுவதும் ஒரு குடைக்கீழ் இருந்தது உண்மைதான். ஆனால் அது மிகமிகச் சுருங்கிய காலமேயாகும். எஞ்சிய காலம் முழுவதும் இம் மூவருள்ளும் ஓயாத, ஒழியாத போர்தான். இவர்கள் போரிடாத நேரங்களில் இவர்களின்கீழ் வாழ்ந்த சிற்றரசர்கள் தம்முள் போரிட்டனர்.

## போரின் பின் விளைவுகள்

*போர் என்றால் மக்கள் மக்களுடன் போரிட்டு மடிவதுடன் இவர்கள் போர்கள் நிற்கவில்லை. தோற்றவன் நாட்டையும், ஊரையும், அவனுடைய விளைவயல்களையும் தீயிட்டுக் கொளுத்தி மகிழ்ந்தனர் வெற்றி பெற்றவர்கள். இந்த அளவுக்குப் பகைமை பாராட்டி மனத்தில் வெறுப் புணர்ச்சியை வளர்த்துவிட்டமையால், தோற்றோர் என்றாவது ஒருநாள் பழிவாங்கவே துடிப்பர். எனவே இந்தப் போர்வெறி இத் தமிழ் மன்னர்களை ஆட்கொண்டிருந்தது என்பதை மறுத்தற்கில்லை. போரிட்டு மாய்ந்த இருவரும் தமிழர்களேயாவர். வென்றோன் தோற்றோன் ஆகிய இருவருடைய பழக்க வழக்கங்கள், நாகரிகம், பண்பாடு, உணவு, உடை, நினைவு, எண்ணம், குறிக்கோள், வாழ்வு முறை ஆகிய அனைத்தும் ஒன்றேயாம். அவ்வாறு இருக்க இவர்கள் ஒருவரை ஒருவர் பிறவிப் பகையாகக் கருதிப் போரிட என்ன வேற்றுமை இவர்களிடை இருந்தது? நிலப்பிரிவு தவிர வேறு வேறுபாடு ஒன்றும் இல்லாதிருந்தும் இந்த அளவு போர்வெறி கொண்டிருந்ததைச் சங்க காலத்திலேயே பல சான்றோர்கள் கண்டு மனம் நொந்து பாடியுள்ளனர். சோழன் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் சோதரர்கள். இருவரிடையேயும் போர் மூண்டதைக் கண்ட கோவூர்கிழார் என்ற சான்றோர் அவர்கள் இருவரையும் அமைதி பெறுமாறு வேண்டிப் பாடுகிறார்:*

நின்ன கண்ணியும் ஆர்மிடைந்தன்றே; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினும்: தோற்பது நும்குடியே

*(புறம்—45)*

*[உன் மாலையும் ஆத்தியே உன்னுடன் சண்டை இடுபவனும் ஆத்திமாலையே அணிந்துள்ளான். இருவருள் யார் தோற்பினும் சோழன் தோற்றான் என்றுதான் உலகம் கூறும்.]*

வாடுக, இறைவ! நின் கண்ணி ஒன்னார்
நாடு சுடு கமழ் புகை எறித்தலானே

(புறம்—6)

[நீ தலையில் சூடிய மாலை உன் பகைவர் நாட்டைக் கொளுத்தும் நெருப்பால் வாடுவதாக.]

காரிகிழார் என்ற புலவர், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடியதாகும் இப்பாடல். இதனைப் பேசுகின்ற அதே புலவர் இதற்கு முதல் அடியில் 'நின்குடை வேறு யாருக்கும் பணியாமல் முனிவர்கள், சிவபெருமான் என்பவர்கள் எதிரே மட்டும் பணிவதாக' என்ற பொருளில்,

பணியியர் அத்தை, நின் குடையே—முனிவர்
முக்கட் செல்வர் நகர் வலம் செயற்கே

(புறம்—6)

என்றும் பாடுகிறார். 'இறைவன், முனிவர்கள் என்பாரின் பெருமை அறிந்து பணிக' என்று கூறும் அளவிற்கு அறிவு வளர்ச்சி பெற்று இருந்தும், ஏனோ இவர்கட்கு மனிதனை மனிதன் மதிக்கும் பண்பும், பிறரிடத்து அன்பும் இல்லாமல் குறைந்து போயிற்று என்று தெரியவில்லை. புறத்திணையில் உள்ள பாடல்களில் தொண்ணூறு சதவிகிதம் போர் பற்றிய பாடல்களாகவே உள்ளன. போர் என்று கூறினால் தமிழர் ஒருவருக்கொருவர் செய்து கொண்ட போராகவே அது இருக்கும். இதன் பயனாக ஆக்கபூர்வமான சமுதாய வளர்ச்சி குன்றி இருந்தது என்று நினைப்பதில் தவறு இல்லை.

## அறவுரை கூறுபவர் சிலரே

இதன் எதிராக என்றோ ஒருமுறை யாரோ ஒரு புலவர் தான் அன்பு கொண்டுள்ள அரசனைப் பார்த்து அறிவுரை கூறியதும் உண்டு. மாங்குடி மருதனார் என்ற சான்றோர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை 780 அடிகள் கொண்ட

*மதுரைக்காஞ்சி என்ற கவிதையால் பாடினார். அக் கவிதையில் ஓயாமல் போர் மேற்கொண்டிருந்த பாண்டியனை விளித்து,*

*'அரசே! கட்டப்பட்ட முரசம் காலை நேரத்தில் ஒலிக்கப் பகைவர் நாட்டில் வெற்றிகொண்ட படையுடன் கூடிய வன்மை மிக்க அரசர்களாக, இவ்வுலகத்தில் வாழ்ந்து இறந்தவர்களைக் கணக்கிட்டால், கடல் மணலினும் பலராவர்' என்ற பொருளில்,*

பருந்து பறக்கல்லாப் பார்வல் பாசறை
படுகண் முரசம் காலை இயம்ப,
வெடிபடக் கடந்து, வேண்டுபுலத்து இறுத்த,
பணைகெழு பெருந்திறல் பல்வேல் மன்னர்,
கரைபொருது இரங்கும், கனைஇரு முந்நீர்த்
திரையிடு மணலினும் பலரே, உரைசெல
மலர்தலை உலகம் ஆண்டு கழிந்தோரே!

*(மதுரைக் காஞ்சி—231—237)*

*என்று தொடங்கி, இறுதியாக 'நன்றாக உறங்கி (713), நல்ல உடலமைப்பைப் பெற்று (724), நின் சுற்றத்தாருடன் இனிமையாக விளங்கி (770) மகிழ்ச்சியுடன் உனக்கென்று இறைவனால் வரையறுத்துக் கொடுக்கப்பெற்ற வாழ்நாளை இனிமையாகச் செலவிடுக (782)' என்ற பொருளில்.*

கோதையின் புனைந்த சேக்கை துஞ்சி— (713)
முருகு இயன்றன்ன உருவினை ஆகி— (724)
பூத்த சுற்றமொடு பொலிந்து இனிதுவிளங்கி (770)
மகிழ்ந்து இனிது உறைமதி பெரும!
வரைந்து நீ பெற்ற நல் ஊழியையே! (782)

*என்று பாடுகின்றார். போர் விருப்பங் கொண்ட மன்னர் கட்கு இவ்வாறு அறிவுரை கூறும் பாடல்கள் அதிகம் இல்லாமையே இங்ஙனம் அறிவுரை கூறும் சான்றோர் அதிகம் இல்லை என்பதைக் காட்டுகின்றது.*

இந்தக் கவிதைகளைப் படித்து, அற்றை நாளில் வாழ்ந்த நமது முன்னோர்களின் வாழ்க்கை முறையை ஆராயப் புகுந்தால், அனைவரும் தமிழராக இருந்தும் அவர்களுக்குள் எவ்வித ஒற்றுமையோ, நட்புணர்ச்சியோ, மனித அன்போ அதிகமாக இல்லை என்பதை நினைக்க வேண்டியுள்ளது. தோல்வி அடைந்த மன்னனுடைய நாட்டைத் தீக்கொளுத்தலும், அவன் நாட்டு விளை வயல்களை அழித்துக் கழுதைகளைக் கொண்டு உழுதலும், மனிதாபிமானத்தில் விளைந்த செயல்களாகா.

கம்பநாடன் காப்பியம் இயற்றுமுன் இந் நாட்டுப் பண்பாட்டைப் பற்றிச் சிந்தித்தபொழுது, இன்று நாம் வருகின்ற இதே முடிவுக்கு வந்திருப்பான் என்பதில் ஐயம் இல்லை. பழந்தமிழர் அரசியல் வாழ்வு பல்வேறு நன்மைகளைப் பெற்றிருப்பினும், போர்வெறி, ஒற்றுமை இன்மை, மனிதாபிமானக் குறைவு என்ற குறைகளுடன் விளங்கியதை அவன் அறிய முடிந்தது.

## குறைகளிடையே ஒரு நன்மை

சங்க காலத்தை அடுத்துச் சிலம்பின் காலம்வரை இத்தமிழரின் வாழ்வு இத்தனை குறைகள் இருப்பினும் ஓடிக்கொண்டுதான் இருந்தது. அதற்கு ஒரு காரணமும் உண்டு. இத்தனை போர்களிடையே வாழ்ந்த மக்கள் எவ்வாறு சமுதாய வளர்ச்சியையும், முன்னேற்றத்தையும் பெறமுடியும் என்ற வினா எழுந்தால் அது நியாயமானதே யாகும்.

இத்தனை குறைகளிடையே, ஓயாது போர் புரிந்தாலும் எப்பொழுது யார் வென்றாலும், அவன் தமிழனே ஆவான். வென்றவன், தோற்றவன் நாட்டின் விளைவயல்களை மட்டுந்தான் கொளுத்தினானே தவிர அவனுடைய மனத்தை. எண்ணத்தை மாற்றவில்லை. காரணம், வென்றவன் தோற்றவன் இருவருமே தமிழர்களாகலின் புறத்தே ஏற்பட்ட துன்பம், வாழ்வு முறையை மாற்றவில்லை. அதனால் மேலே

கூறிய குறைபாடுகள் பல காலம் வரைப் பொருளாதார ரீதியில் தவிரப் பிற துறைகளில் சாதாரண மக்களின் வாழ்க்கை முறையைப் பாதிக்கவில்லை. இன்னுங் கூற வேண்டுமாயின், இத்தகைய ஒரு குறைகூடத் தம்முடைய சமுதாய, அரசியல் வாழ்க்கையில் ஊடுருவி இருந்தது என்பதை அக்கால மக்கள் பலரும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. மாங்குடி மருதன் போன்றவர்கள் நேரிடையாக இக்குறைபாட்டை எடுத்துக் கூறாமல், அரசர்களின் வாழ்க்கை முறையைத் திருத்த முயன்றனர். நம்முடைய உடம்பில் எதிர்ப்புச் சக்தி இருக்கின்றவரை உடலில் மறைந்து கிடக்கும் நோய்கள் வெளிவருவதில்லை. ஆனால், புறத்தே இருந்து தொற்று நோய் வந்தால் உண்மையான எதிர்ப்புச் சக்தி உள்ளவர்களை அத்தொற்று நோய் பாதிப்பதில்லை. அது குறைந்தவர்களை நோய் பற்றிக் கொள்கிறது.

## மறைந்து கொல்லும் நோய்கள்

ஆயிரம் ஆண்டுகளாக மிக்க நாகரிகத்துடனும், வளமுடனும் வாழ்ந்த சங்ககாலத் தமிழரின் சமுதாய வாழ்வில் 'பரத்தமை' என்ற நோயும், அரசியலில் சகிப்புத் தன்மை இன்மை, அன்புடைமை இன்மை, மனித அன்பு இன்மை என்ற நோய்களும் இலைமறை காயாக இருந்து இந்த சமுதாயத்தை உள் அரித்துக் கொண்டிருந்தன. ஆனால், அவை வெளியில் தெரிய வாய்ப்பே இல்லாமல் இருந்தது. கி.பி. நான்காம் நூற்றாண்டு அளவில் களப்பிரர் படை எடுப்பால், இத் தமிழர் வாழ்வு மணலில் கட்டிய வீடாகச் சரிந்துவிட்டது. இந்த வீழ்ச்சிக்குக் காரணம் களப்பிரரின் வன்மை மட்டுமன்று. இத்தமிழர்களுடைய வாழ்வில் புரைஓடி இருந்த மேலே சொன்ன குறைகள்தாம். முதல் சந்தர்ப்பம் ஏற்பட்டவுடன் ஒடிந்து விழ உதவி செய்துவிட்டன. நிலையான ஆட்சி செலுத்திய இத் தமிழ் மன்னர்களை கொள்ளைக் கூட்டத்தாராக வந்து எதிர்த்த களப்பிரர் முறியடித்தது விந்தையே! அரசியல் முறையோ,

நிர்மாணிக்கப் பட்ட படைகளோ இல்லாமல் இங்கு வந்த களப்பிரர், இவை இரண்டும் பெற்று ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இத் தமிழகத்தில் வேரூன்றி இருந்த தமிழ் மன்னர்களை வேரோடு களைந்தனர் என்றால், இத் தமிழ் நாட்டில் ஏதோ ஒரு குறை இருந்து, சமயம் வந்தவுடன் இவர்களைக் கவிழ்க்க அதுவே உதவிற்று என்று நினைக்க வேண்டி உளது.

இவர்கள் வாழ்வின் சரிவை இளங்கோவடிகளின் சிலம்பு ஓரளவு சித்திரித்துக் காட்டிற்று. சமுதாயச் சீர்கேட்டுக்குக் கோவலன் வாழ்க்கையும், அரசியல் சீர்கேட்டுக்குப் பாண்டியன் நெடுஞ்செழியன் வாழ்க்கையும் எடுத்துக்காட்டு களாய் அமைந்தன. சிலம்புக்குப் பின் இரண்டு நூற் றாண்டுகள் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு வாழ்ந்த இந்த இனம் களப்பிரரால் முற்றிலும் சாய்க்கப் பெற்று விட்டது. பாண்டியன் கடுங்கோன் தொடங்கித் தமிழக அரசர் பலருங் கூடி ஆறாம் நூற்றாண்டு அளவில் களப்பிரரை விரட்டித் தம் ஆட்சியை நிறுவினாலும் பழைய நிலையை இத் தமிழர் வாழ்வு மறுபடி அடையவே இல்லை. தமிழ் இலக்கியம் காட்டும் இத்தமிழ் இனத்தாரின் வரலாற்றையும் அதன் குறைவு நிறைகளையும் கம்பநாடன் நன்கு அறிந்து தெளிந்திருந்தான். எந்த அடிப்படையான ஒரு தனிக் காரணம் இந்த மாபெரும் வீழ்ச்சியை, இந்த இனத்திற்குத் தந்தது என்பதை அவனால் உணர முடிந்தது.

## அறிவும் உணர்வும்

மனிதன் அறிவு, உணர்வு என்ற இரண்டின் கூட்டால் ஆனவன். விலங்கிலிருந்து அவனை வேறுபடுத்துவது அவன் பெற்றுள்ள அறிவேயாகும். மனிதப் பண்பு என்று எடுத்துக்கொண்டால் அன்பு, அருள் என்பவற்றின் மேல்தான் அது நிலைத்து நிற்கின்றது என்பதை யாரும் மறுக்கமுடியாது. அப்படியானால் அறிவின் பணி என்ன என்ற வினா எழுமன்றோ? அன்பு என்பது, தான் என்ற ஒன்றின்

அடிப்படையில் பிறந்து, தன்னைச் சுற்றியுள்ளவர்கள், தனக்குத் தொடர்புடையவர்கள் என்பவர்கள் மாட்டு விரிந்து செல்வது. இது அன்பின் இயல்பு. ஆனால் அவ்வாறு செய்கையில், தனக்குத் தொடர்புடையார் தவறு செய்யினும் அதைக் காணாமல் செய்துவிடுகின்றது அன்பு. ஆனால் அறிவுடன் கலந்த அன்பானால் தவறு கண்டவிடத்து இடித்துக் கூறித் திருத்த முனையும். 'தீது ஒரீஇ நன்றின்பால், உய்ப்பது அறிவு' (422) என்றும், 'மெய்ப்பொருள் காண்பது அறிவு' (355) என்றும், 'அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின் நோய் தன் நோய் போல் போற்றாக் கடை' (315) என்றும் அறநூலாகிய குறள் குறித்துச் செல்கிறது. இத்தகைய அறிவின் துணையை நாடாமல், உணர்வு ஒன்றையே கொண்டு எந்த ஒரு சமுதாயமும் வாழத் தொடங்கினால், அது முழு வாழ்வாகாது. புறத்திலிருந்து சிறு காற்று அடித்தாலும் அந்த இனத்தின் வாழ்வு பாதிக்கப்படும்.

பழந்தமிழ் வாழ்க்கையை இன்று எடுத்துக்காட்டுவன அவர்கள் காலத்துத் தோன்றிய இலக்கியம்தான். எந்த ஓர் இனத்தின் வரலாற்றை அறிய வேண்டுமானாலும் அந்த இனத்தின் இலக்கியந்தான் சிறந்த கருவியாகும் என்பதை வரலாற்றாசிரியர்களும் திறனாய்வாளர்களும் கண்டு தெளிந்து கூறியுள்ளனர். இலக்கணம் அறியாதவர்களின் இலக்கிய அறிவு ஒருபுடை வளர்ச்சியுடையது. அதேபோல இப் பழந்தமிழர் வாழ்க்கையில் உணர்வு பெற்றிருந்த இடத்தில் ஒரு மிகச் சிறு பங்கைக்கூட அறிவு பெற்றிருந்ததா என்ற வினாவிற்கு சரியான விடை இன்றுகூடக் கூற முடியவில்லை. இத்துணைச் சிறந்த நாகரிகம்தான், அந்த நாகரிகத்தின் கொழுந்து போன்ற வெளிப்பாடுதான், அவர்கள் ஆக்கிய இலக்கியம்.

### உணர்ச்சிக்கே அதிக இடம்

அகவாழ்க்கைக்கு ஐந்து பெரும் பிரிவுகள் வகுத்து, அவற்றுள் பல்வேறு துறைகளும் வகுத்தான் பழந்தமிழன்.

வாழ்க்கையை அணு அணுவாகச் சுவைத்தான். அதேபோலச் சமுதாய வாழ்க்கை என்னும் போதும் அகத்தில் இடம்பெற்ற உணர்ச்சி அடிப்படையில், ஓயாது போர் செய்தல், குடித்தல், பிறருக்கு வாரி வழங்குதல் போன்றவற்றில் ஈடுபட்டான். இந்த அக, புற வாழ்க்கையின் இடையே 'நான் யார் என் உள்ளம் யார்?' என்ற வினாவை அவன் கேட்டதாகவோ, அவ் வினாக்கட்கு விடை காண முயன்றதாகவோ அறிய வாய்ப்பில்லை. இலக்கணம் வகுத்த தொல்காப்பியனார், புல் பூண்டில் தொடங்கி மனிதன் ஈறாக உயிர்களுள் ஒரு தொடர்பு உண்டு என்பதைக் குறிப்பாகக் கூறினார் என்பது தவிர, இத்தமிழன் மனிதனாகப் பிறந்த தன்னைப் பற்றியும், இந்தப் பரந்த உலகம் பற்றியும், இதன் கண்ணுள்ள பிற உயிர்கள் பற்றியும், அந்த உயிர்கட்கும் தனக்கும் உள்ள தொடர்பு பற்றியும், எந்த வினாவையும் எழுப்பினதாகவோ, அதற்கு விடைகாண முயன்றதாகவோ அவன் படைத்த இலக்கியங்களிலிருந்து அறிய முடியவில்லை. வடமொழியில் உபநிடதங்கள் தோன்றிய காலத்திலேயே சங்கப் பாடல்களுள் பல தோன்றி இருக்க வேண்டும். அப்படி இருந்தும் அவற்றின் துணைகொண்டு மட்டும் ஆராயப்பட வேண்டிய மேற்கூறிய வினாக்கள் எதையும், இவர்கள் எழுப்பியதாகக் கூறும் எந்த இலக்கியமும் இன்று இல்லை. தத்துவ ஆராய்ச்சியில் இந்நாட்டவர் ஈடுபட்டார்களா என்றும் தெரியவில்லை. அப்படி ஈடுபட்டிருந்து, ஏதேனும் நூல்கள் எழுதியிருந்தால் இன்று அவற்றில் ஒன்றுகூடக் கிடைக்கவில்லை.

## வாகைத் திணை

உணர்ச்சிக்கு அளவுமீறி இடங்கொடுத்து விட்டமையால் அறிவாராய்ச்சிக்கோ, தத்துவ விசாரணைக்கோ வாழ்வில் நேரம் கிடைக்கவில்லை என்று நினைக்கத் தோன்றுகிறது. அன்றியும் தொல்காப்பியப் புறத்திணை இயல் 230 வரிகளில்

அமைந்துள்ளது. புலனடக்கம் பற்றியும், துறவு பற்றியும், ஆசை நீக்கம் பற்றியும், அருளைப் பெருக்கிக் கொள்ள வேண்டிய இன்றியமையாமை பற்றியும் மொத்தம் நான்கே வரிகள்தாம் உள்ளன என்றால், அற்றைநாள் தமிழர் இவை பற்றி அதிகம் கவலைப்படவில்லை என்பது வெள்ளிடை மலையாகும். இவ்வாறு கூறுவதால் புலனடக்கம், அருளுடைமை, துறவு என்பவற்றை மேற்கொண்டு வாழ்ந்த தமிழர்களே அந்த நாளில் இல்லைபோலும் என்று யாரும் நினைத்துவிடக் கூடாது. மக்கள் கூட்டத்தில் மிக மிகச் சிறுபான்மையினர் மட்டுமே இவற்றின் உண்மை கண்டு வாழ முற்பட்டனர். எனவேதான் அதனைப் பெரிய வியப்புடைய செயலாக மற்றவர்கள் ஏற்றிப் போற்றினர். ஆகவேதான், இந்த நான்கையும் தொல்காப்பியம் வாகைத்திணையுள் அடக்கிற்று போலும். வாகை என்றால் வெற்றி, புலனடக்கம், தன்னலத்தைத் துறத்தல் என்பவை, ஒருவன் தன்னையே வெற்றி கொள்வதாகும்.

## காஞ்சித் திணை

தமிழ் இலக்கணம், நிலையாமையைக் காஞ்சித் திணையுள் அடக்கிக் கூறுகிறது. பல்லாற்றாலும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே என்று காஞ்சித்திணை விளக்கம் பேசுகிறது. தொல்காப்பியத்தில் போர் செய்து மடிதல், மடிந்த உறவினனைக் கண்டு வருந்தும் மனைவியர், உறவினர் மனநிலை என்பவை பற்றி இத்திணை பேசுவது உண்மை தான். ஆனால் நிலையாமை பற்றி நினைந்து, ஆத்ம விசாரணை செய்ததாகக் குறிப்பும் இல்லை.

## ஆன்ம விசாரணை

ஆன்ம விசாரணை இருந்ததா என்பதை அறியமுடியா விடினும் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்பவை பற்றித் தொல்காப்பியம் பேசுகிறதைக் காண்கிறோம். ஆனால் இவற்றின் சரியான பொருள் என்ன என்று கூறமுடியாதபடி

உரை எழுதியவர்கள் தம்முள் மாறுபடுகின்றனர். கடவுள் கொள்கை இருந்தது என்று நினைப்பதைக் காட்டிலும் கடவுள் நம்பிக்கை ஆழமாக இருந்தது என்று கருதுவதில் தவறு இல்லை.

ஆன்ம விசாரணையில் செல்பவர், முதலாவது, தம் எண்ணத்தை, சிந்தனையைப் புறத்தே செல்லவிடாமல் தடுத்து, அகமுகமாக (உள்நோக்கி)ச் செலுத்தல் வேண்டும். இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர்களாயிற்றே இவர்கள்! அப்படி இருக்க, அந்த இயற்கையின் மூலமாகவேனும் ஆன்ம விசாரணையில் சென்றிருக்கலாகாதா என்றுகூட எண்ணத் தோன்றுகிறது. இயற்கையைக் கண்டு அனுபவிப்பது வேறு; அதனுடன் ஒன்றித் தானும் அதனுடைய ஓர் உறுப்பு என்று கருதுவது வேறு. இரண்டாவது வழியில் சென்றிருந் தால், நான் யார் என்ற வினாவை என்றாவது ஒருநாள் சந்தித்திருக்க வேண்டும். அப்படிச் சந்தித்து, அகநோக்கில் அறிவைச் செலுத்தினவர்கள் இல்லாமல் இருந்திருக்க முடியாது. அவர்களுடைய சிந்தனையின் பயனை அவர்கள் குறித்து வைக்கவில்லை, அல்லது அதுபற்றிச் சமுதாயம் கவலை கொள்ளாததால் அக் குறிப்புகள் காப்பாற்றப்பட வில்லை என்ற முடிவுக்குத்தான் வர வேண்டியுளது.

அறிவுக்கும், அதன்வழிச் செல்லும் புலனடக்கத்திற்கும் உரிய இடத்தைப் பழந்தமிழ்ச் சமுதாயம் தராமையால்தான், களப்பிரர் போன்ற பிறநாட்டவர் இங்கு நுழைந்தவுடன் இவர்களை வெற்றிகொள்ள முடிந்தது. மொகஞ்சோதாரோ ஹாரப்பாவரை பரவி இருந்த இத் தமிழர்களின் செல்வாக்கை யும் இழந்ததும் இதன் காரணமாகவே இருக்கும் போலும்!

தமிழ்ச் சமுதாயத்தில் வாழ்வியல், அரசியல் என்ற இரண்டிலும் இருந்த இந்த அடிப்படையான குறைகளைக் கம்பநாடன் பெரிதும் சிந்தித்திருக்கின்றான். அந்தச் சிந்தனை யின் பயனாகத் தன் ஒப்பற்ற காப்பியத்தில் என்ன புதுவழி களைக் காட்டினான் என்பதைப் பின்னர்க் காணலாம்.

# 3. பக்தி இயக்கம்

## பக்தி இயக்க காலம்

*சங்க காலம், சிலம்பு மணிமேகலைக் காலம், களப்பிரர் இடையீட்டுக் காலம் என்பவை கழிந்தபிறகு, கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பக்தி இயக்கக் காலம் தோன்றுகிறது. களப்பிரர் இடையீட்டில் இருந்த 'மூன்று நூற்றாண்டுகளிலும் இத் தமிழர், உணர்ச்சி துளையமாட முடியவில்லை. இவர்கள் நாகரிகத்தை, பண்பாட்டை வாழ்க்கை முறையை ஏற்றுக் கொள்ளாதவர்கள் ஆட்சி செய்த காலம் ஆகலின், இத் தமிழர்களின் வாழ்க்கையில் பெரியதொரு மாற்றம் நிகழக் காரணம் ஏற்பட்டது. அதுவரை சுதந்திரமாகத் தன் வாழ்க்கையை வீட்டினுள்ளும் வெளியிலும் நடத்திவந்த தமிழ்ச் சமுதாயத்திற்குப் புதிய சோதனை ஏற்பட்டது. இந்தக் களப்பிரர் தமிழரும் அல்லர்; தமிழ் மொழிபால் வெறுப்பையும் காட்டியவர்கள்; இத் தமிழ்நாட்டில் தோன்றி வளர்ந்த பழஞ் சமயங்களாகிய சைவம் வைணவம் என்ற இரண்டையுமே ஏற்றுக் கொள்ளாத வர்கள். இன்னுங் கூறப்போனால், இத் தமிழர்கள் எவ்வெவ்வற்றைத் தம் வாழ்வில் விழுப்பொருள்கள்* (Values in life) *என்று கருதினார்களோ அவை அனைத் தையும் புறக்கணித்தவர்கள்.*

## அமைதியை உள்ளே நாடல்

*இத்தகைய கூட்டம் தமிழகம் முழுவதையும் கைப்பற்றி மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகள் ஆட்சி புரிந்தது என்றால், இத் தமிழர்கள் கதி என்னவாக இருந்திருக்கும் என்று கூறத் தேவை இல்லை. இந்த இடைக்காலத்தில்*

ஒரு தமிழ் இலக்கியங்கூடத் தோன்றவில்லை என்பதையும் அறிதல் வேண்டும். புறத்தில் இத்தகைய துன்பமும் குழப்பமும் உண்டாகும்பொழுது மனிதன் என்ன செய்வான்? புறத்தே காணமுடியாத அமைதியை, இன்பத்தை அகத்தே காண முற்படுவான்! தனிமனிதனுக்குரிய இந்த இயல்புதான் ஓர் இனத்துக்கும் பொருந்துவதாகும்.

தமிழர்கள் சேரன், சோழன், பாண்டியன் என்று பெயர் வைத்துக்கொண்டு தம்முள் போரிட்ட பொழுது வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வந்தன; ஆனால் தோற்றவனும் தமிழன்; வென்றவனும் தமிழன். எனவே தோற்றவனுடைய வாழ்க்கையில் புறத்தே ஏற்படும் இழப்பைத் தவிர வேறு நட்டம் ஒன்றும் இல்லை. அடுத்து, அவன் வெற்றி பெறும் வாய்ப்பும் விரைவில் ஏற்பட லாயிற்று. ஓயாத பெருந் துன்பத்தை அவன் அனுபவிக்கும் நிலை இதனால் ஏற்படவில்லை. இதன் எதிராகக் களப்பிரர் ஆட்சியில் அனைத்தும் தலைகீழாக மாறிவிட்டன. சேரர், சோழர், பாண்டியர் இவர்களின் கீழ் வாழ்ந்த குறுநில மன்னர்கள் ஆகிய அனைவரும் தனித்தோ, ஒன்றாகச் சேர்ந்தோகூடக் களப்பிரரை ஒன்றுஞ் செய்ய முடிவில்லை. எனவே, தமிழன் தன் னுடைய எதிர்காலம் எத்தகையதாக அமையும் என்று நினைக்கையிலேயே மனம் குழம்பினான். இந்நிலைதான் அவன் அகமுகமாக அமைதி காண வழிவகுக்கும் சூழ் நிலையை உருவாக்கிற்று. ஓர் இனம் முழுவதும் இந்தத் திசையில் போக முற்படும்பொழுது அதற்கேற்ற முறையில் அந்த இனத்தில் பெரியோர்கள் தோன்றுவர். எனவேதான் ஏழாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை, பன்னிரண்டு ஆழ்வார்களும், நான்கு நாயன்மார்களும், பற்பல அடியார்களும் வைணவத் தொண்டர்களும், ஆன்மிகம் வளர்க்கும் ஞானிகளும் இக்குறிப்பிட்ட காலத்தில் தோன்றலாயினர்.

## பக்தி வழி ஏன்?

அகமுகமாகக் கருத்தைச் செலுத்திய தமிழினத்தில் உபநிடதம் போன்ற ஞான நூல்களை ஆக்கும் ஞானிகள் தோன்றாமல், பக்தி மார்க்கத்தைப் பரப்பும் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றக் காரணம் யாது என்ற வினா எழுவது நியாயமானதே. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உணர்ச்சி வாழ்க்கை வாழ்ந்துவிட்ட இத் தமிழர்களைத் திடீரென்று புதுவழியில் செலுத்த முடியாது. எனவே, அவர்கள் பெரிதும் பழகிய உணர்ச்சியையே வழியாகக் கொண்டு பக்தி மார்க்கம் வளர்க்கும் வழியை ஆழ்வார்களும், நாயன்மார்களும் கடைப்பிடித்தனர். துன்பமுற்றவர்கட்குப் பக்தி வழி அமைதி தருவதுபோல் வேறு எந்த வழியும் பயன்படாது. புலனடக்கம் செய்து பழகாதவர்கட்குத் திடீரென்று புலனடக்க வழியைக் கூறினால் அவர்கள் துன்பம் மிகுதியாகுமே தவிர குறையாது. பொறி, புலன்களை நன்கு பயன்படுத்தி அவற்றின் வழி இன்பங் கண்டவர்களை மாற்ற வேண்டுமாயின் அந்தப் பொறி புலன்களை வைத்துக் கொண்டேதான், ஒரு வழி வகுக்க வேண்டும். அழகிய பொருளைக் கண்டு அனுபவித்துப் பழகியவர்கட்கு, முருகனும், திருமாலும் அழகின் வடிவம் என்ற நினைவை உண்டாக்கி, அவர்களின் கண்ணாகிய பொறியை ஆண்டவனின் வடிவழகில் ஈடுபடச் செய்தனர். இனிய இசை, ஆடல் முதலியவற்றில் ஈடுபட்டுப் பழகிய தமிழர்கள் மறுபடியும் அதே இசையில், ஆடல் பாடல்களில் மூழ்கினர். ஆனால் பக்திவழிக் காலத்தில் வளர்ந்த இசை நாடக வளர்ச்சியில் ஒரு முக்கியமான வேறுபாடும் இருந்தது.

## கலை யாருக்குச் சொந்தம்?

களப்பிரருக்கு முன்னர் வாழ்ந்த தமிழர்கள் பரத் தையரின் ஆடல், பாடல், இசைகளில் இன்பங் கண்டனர். கோவலன், மாதவியின் ஆடலில் மயங்கினதும்,

பாண்டியன் ஆடலில் மயங்கினதும் எடுத்துக்காட்டுகள். பரத்தையர் வீட்டில் தலைவன் இன்னிசை கேட்டு மகிழ்ந் தான் என்பதை ஓர் அகப்பாடல் மூலம் அறிகிறோம். 'பரத்தை வீட்டிற்குப் புறப்பட்டானாம் ஒரு தலைவன். புறப்படும் நேரத்தில் அவனுடைய இளம் மகன் அவன் கால்களைக் கட்டிக்கொண்டு தன்னைத் தூக்கிக்கொள்ள வேண்டும் என்றும், தந்தை தன்னுடனேயே இருக்க வேண்டும் என்றும் அடம் பிடித்தானாம். குழந்தையை ஏமாற்ற விரும்பாத அத்தந்தை முழவு முதலிய கருவி களுடன் பரத்தை வீட்டிலிருந்து இனிய இசை உடனே வா வா என்று இத் தலைவனை அழைப்பது போல் வெளிப்பட்டாலும், வீட்டை விட்டுப் போகவில்லை' என்ற பொருளில்,

மணிபுரை அவ்வாய் மார்பகம் சிவணப்
புல்லி, 'பெரும! செல் இனி அகத்து' எனக்
கொடுப்போற்கு ஒல்லான் கலுழ்தலின்
..............................................
இமிழ்கண் முழவின் இன்சீர் அவர்மனைப்
பயிர்வன போல வந்து இசைப்பவும், தவிரான்
..............................................
அழுங்கினன் அல்லனோ, அயர்ந்த தன் மணனே

(அகம்—66)

இந்த அளவு ஈடுபாடுடைய மக்களை முற்றிலும் அவ் வழியிலிருந்து மாற்ற இயலாது. எனவே இசையையும் நாட்டியத்தையும் கோயிலில் ஏற்படுத்தினர்.

## பொறி புல மடைமாற்றம்

பொறி, புல இன்பங்களில் அதிகம் ஈடுபடுபவர்களை மாற்ற வேண்டுமானால், புலனடக்கம் பற்றி அவர்களிடம் பேசிப் பயன் இல்லை. மனத்தத்துவம் அறிந்தவர்கள் இத்தகையவர்களைத் திருத்த ஒரே வழியைத்தான்

கையாளுவர். அதுவே அவர்கள் பொறி புலன்கள் தாமாகச் செல்லும் வழியிலேயே செல்லவிடாமல் தடுத்து, அதே நேரத்தில் அப்புலன்கள் வேறு வழியில் செல்லுமாறு மடைமாற்றம் (Transformation) செய்வதாகும். நாயன்மார்களும், ஆழ்வார்களும் இந்த மடைமாற்றப் பணியைத் தான் மேற்கொண்டனர்.

மடைமாற்றம் என்றால் என்ன? ஒரு திசையில் செல்லும் தண்ணீரை, வேறு திசைக்குத் திருப்பி விடுவதையே மடைமாற்றம் என்று கூறுகிறோம். காதுகள் இசையைக் கேட்டுத்தான் தீர வேண்டும் என்றால், நல்லது. பரத்தை வீடு சென்று கேட்பதைவிடக் கோயிலிற் சென்று கேட்க வழி செய்தனர். எனவேதான் தமிழகக் கோயில்கள் ஐந்து பொறிகட்கும் இன்பந் தருகின்ற கலைக்கூடங்களாக அமைந்தன என்பதை அறிதல் வேண்டும். இவ்வாறு கூறிய நம்முடைய பெரியவர்கள் உருவ வழிபாட்டை ஏற்பாடு செய்தனர். அந்த உருவத்தையும் அழகின் கொள்கலமாகச் செய்தனர்.

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ! என்செய்கேன் உலகத்தீரே

*(நாலாயிரம்—890)*

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே

*(திருமுறை—4—18—4)*

[மேற்குத் திக்கில் தலையை வைத்துக் கிழக்கில் திருவடிகளை நீட்டி, வடக்கில் முதுகைக் காட்டி தென் திசையிலுள்ள இலங்கையைப் பார்த்துக்கொண்டு கடல்

நிறமுள்ள என் தந்தையாம் இறைவன் ஆதிசேடன் உறங்குவதைக் கண்டு என் உடல் உருகுகிறது.

[வளைந்த புருவமும், கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயில் புன்சிரிப்பும், குளிர்ந்த சடையும், பவள நிற மேனியில் திருநீறும், அழகிய தூக்கிய திருவடியும் கண்டால் இந்த மானுடப் பிறவியைக் கூட, வேண்டும் என்று கூறுவேன்.]

என முறையே ஆழ்வாரும், திருநாவுக்கரசரும் பாடு கின்றனர்.

சிற்பக் கலையின் முடிமணியாக விளங்கும் இந்த வடிவங்கள் அழகின் உறைவிடமாக அமைக்கப் பெற்றதால் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாயின. நம்மூர்ப் பகுத்தறிவுவாதி, இந்தக் கலைக் கருவூலங்களை எடை போட்டுப் பார்க்கிறான். ஆனால் நம் சமய நம்பிக்கையை ஏற்றுக்கொள்ளாத மேலை நாட்டான் இந்த வடிவங்களை எடைக்கணக்கில் பார்ப்பதில்லை. அழகின் உறைவிடமாக இவற்றை அவன் பார்ப்பதால்தான், ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டுச் செய்யப்பெற்றுக் களிம்பு ஏறிப்போன சிவபுரம் நடராச வடிவத்திற்கு ஒரு கோடி ரூபாய் தந்து வாங்கிக் கொள்கிறான்!

இவ்வாறு ஆழ்வார்களும் நாயன்மார்களும் உருவ வழிபாட்டை உயர்த்திக் கூறினதால், அவர்களும் ஆன்ம முன்னேற்றமும் ஞானக் காட்சியும் இல்லாத நம்போன்ற மனிதர்களோ என்று நினைத்துவிட வேண்டா. தத்தவ அடிப்படையில் அறிவு வாதம் எத்துணைத் தூரம் செல்ல முடியும் என்பதையும் அவர்களே கூறியுள்ளனர்.

உளன் எனில் உளன் அவன், உருவம் இவ்வுருவுகள்
உளன் அலன் எனில், அவன் அருவம் இவ் அருவுகள்
உளன் என, இலன் என, அவை குணம் உடைமையில்,
உளன் இரு தகைமையொடு ஒழிவிலன் பரந்தே

(நாலாயிரம்—2090)

ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண்குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்
ஆறு ஆர்சுவை, ஏழோடு இசை எட்டுத்திசை தானாய்
வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே

*(திருமுறை—1—12—2)*

இத்தகைய மெய்ப்பொருளுணர்வுடைய இப்பெரு மக்கள் பின்னர் ஏன் உருவம் முதலியவற்றையும் கதைகளையும் பாடினார்கள் எனின், சாதாரண மனிதர்கள் மனத்தையும், பொறி புலன்களையும் மடைமாற்றம் செய்வதற்கேயாம் என்பதையும் அறிதல் வேண்டும். சிறு குழந்தைகட்கு மாம்பழம் என்று சொல்லிக் கணிதக் கூட்டல், கழித்தல் சொல்லித் தருகிறோம். அதே குழந்தை வளர்ந்து பெரியவனானவுடன் x, y வைத்துக் கணக்குச் சொல்லித் தருகிறோம். நம்மில் சாதாரண நிலையிலுள்ளவர்கட்குப் பல பாடல்கள் பாடினர். வளர்ந்த நிலையிலுள்ளவர்கட்கு அதிகம் கூறத் தேவை இல்லை. எனவே குறைவான பாடல்களைத் தத்துவ ரீதியில் பாடிச் சென்றனர். களப்பிரர் இடையீட்டால் தம் வாழ்வும், நாகரிகமும் சிதைந்து போனதால் மனம் வெதும்பி இருந்த தமிழர்கட்கு, நாயன்மார்களும், ஆழ்வார்களும் செய்த சேவை அளவிடற்பாலதன்று. புறத்தே அமைதியைக் காணமுடியாமல் தவித்தவர்கட்கு அகத்தே அமைதியைக் காண அவர்கள் வழிவகுத்தனர்!

## மொழி செய்த பணிகள்

இயற்கையைப் போற்றுதல், ஆடல் பாடல் முதலிய கலைகளைப் போற்றுதல், பெண்களுக்குச் சமுதாயத்தில் சம உரிமை வழங்கல் முதலிய பல அடிப்படை விழுப் பொருள்களையும் (Values in Life) பக்தி இயக்கத்தை வளர்த்த இப்பெரியார்கள் பெரிதும் போற்றி வளர்த்தனர். இவை அனைத்துக்கும் மூலகாரணமாய் இருந்தது எது?

தமிழர்தம் தனித்தன்மை பெற்ற நாகரிகத்தையும், பண்பாட்டையும் வளர்ப்பதற்குப் பேருதவி புரிந்தது எது? அந்த இனத்தாருடைய ஒப்பற்ற தமிழ் மொழியே ஆகும் என்றால் அதில் யாரும் மறுப்புக் கூற முடியாதன்றோ? தமிழர்கட்குத் தம் நாட்டின் மேலும், மொழியின் மேலும் இருந்த பற்று அளவிடற்கரியது. சங்க காலத்தில் இருந்த மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் வெளியே காட்டிக்கொள்ளத் தேவை இருக்கவில்லை. ஆள்வோனும் தமிழன்; அதிலும் புலவர் பாடும் புகழுடைய தமிழன்; ஆளப்படுவோனும் தமிழன். எனவே நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் வெளியே தெரியும்படிக் காட்டிக் கொள்ளவோ வளர்க்கவோ தேவை இருந்ததில்லை. அதனால் சங்கப் பாடல்களில் இவைபற்றிக் கூறும் பாடல்கள் இல்லை. சிலப்பதிகார காலத்திலும் இத்தகைய நிலை தோன்றவில்லை என்றாலும், ஒவ்வொருவர் மனத்திலும் அது நிறைந்திருந்து, தேவை ஏற்படும்பொழுது வெளிப்பட்டது. பாண்டியன் நெடுஞ்செழியனிடம் வழக்கு உரைக்கச் சென்ற கண்ணகியை அம் மன்னன் 'அம்மா! நீ யார்? நீர் ஒழுகுகின்ற கண்களுடன் என்முன் வந்த காரணம் யாது?' என்று கேட்கிறான். உடனே கண்ணகி விடை கூறத் தொடங்குகிறாள்:

தேரா மன்னா! செப்புவது உடையேன்
எள்அறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்உறு புன்கண் தீர்த்தோன்; அன்றியும்,
வாயில் கடைமணி நடுநா நடுங்க,
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்;
பெரும்பெயர்ப் புகார் என் பதியே...

*வழக்குரை காதை—50—56)*

[ஆராய்ச்சி இல்லாத மன்னா! சொல்லப் போவதைக் கேட்பாயாக. மிக்க சிறப்பினையுடைய தேவர்களும் வியப்படையும்படியாக ஒரு புறா பட்ட துயரத்தைத்

*தீர்த்தவன் (சிபியாகிய எங்கள் நாட்டுக்காரன்); அவனல்லாமல் மனை வாசலில் கட்டியிருந்த மணி ஒலித்ததையும், பசுமாடு ஒன்று கண்ணில் நிறைந்த நீருடன் நிற்பதையுங் கண்டு, தன் உள்ளம் கொதிக்கத் தன் பெறுதற்கரிய புதல்வனைத் தேர்க்காலில் கிடத்திக் கொன்றவனாகிய மனுநீதிச் சோழன்; இவ்விருவரால் பெயர் பெற்ற ஊராகிய புகாரே எம் ஊர்.]*

*என்று கூறுவதன் மூலம் தன்னுடைய நாட்டுப்பற்றையும் பேசுகிற போக்கில் தெரிவிக்கிறாள்.*

## மொழிப்பற்று வெளிப்படப் பேசினர்

*களப்பிரர் இடையீட்டிற்குப் பிறகு, நாட்டுப்பற்று, மொழிப்பற்று என்ற இரண்டையுமே வெளிப்படப் பேசவேண்டிய நிலை தோன்றிவிட்டது. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய திருஞான சம்பந்தர், தம்மைத் 'தமிழ் விரகன்' (338), 'முத்தமிழ் விரகன்', 'தமிழ்ஞானம் மிகுபந்தன்' (140), 'நற்றமிழ்க்கு இன்துணை ஞான சம்பந்தன்' (830), என்றும்— 'ஞாலம் மல்கு தமிழ்', 'ஞானத் தமிழ்' (1470), 'சங்கம் மலி செந்தமிழ்' (3602), 'தமிழோடு இசை ஆனவன்' என்பவற்றுடன்— இவை போன்ற கருத்துகளை நூற்று நாற்பது இடங்கட்குமேல் தம் தேவாரத்தில் வைத்துப் பாடியுள்ளார். திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் ஆகிய இருவருங்கூடத் தமிழ் என்று கூறும்போதே அதனைத் தெய்வத் தமிழ் என்றே கூறலாயினர். இனி ஆழ்வார்களை எடுத்துக் கொண்டால் அவர்கள் மொழிப் பற்றும் நாட்டுப்பற்றும் பரந்து கிடப்பதைக் காண முடியும்.*

வேத வாய்த் தொழிலாளர்கள் வாழ்வில்லி
புத்தூர்மன் விட்டு சித்தன் தன்
கோதை வாய்த் தமிழ்'

*(நாலாயிரம்—523)*

இன்னிசையில் மேவிச் சொல்லிய இன்தமிழ்

*( "707)*

குலசேகரன் சொல்செய்த சீரார்ந்த தமிழ் மாலை ( "740)

கங்கையில் புனிதமாய காவிரி நடுவு பாட்டுப்
பொங்கு நீர்பரந்து பாயும் பூம்பொழில் அரங்கம் ( "894)

கலியன் ஒலிசெய் தமிழ் மாலை ( "997)

பால்ஏய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ( "2136)

*இங்குக் காட்டப்பெற்ற உதாரணங்கள் ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்ப்பது போலவே யாகும். ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்தியுடன் கலந்து ஊட்டிய தமிழ்ப் பற்றும், நாட்டுப் பற்றும் இத் தமிழர்கள் வாழ்வில் பெரிய அளவுக்கு அமைதியைத் தந்ததுடன், அவர்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தவும் பயன்பட்டன.*

## புலனடக்கத் தேவை

*பக்தி வழியைப் போற்றிப் பரப்பும் பொழுதேகூட, இப்பெருமக்கள், மனிதர்கள் வாழ்க்கையில் ஒரு கட்டுப்பாடும், புலனடக்கமும், குறிக்கோளும் பெற வேண்டும் என்பதை வற்புறுத்தினர். எத்துணை உணர்ச்சி வாழ்க்கை வாழ்ந்தாலும் மேலே கூறப்பெற்ற மூன்றும் இன்றியமையாது வேண்டப்படுவன. மனிதனை விலங்கு வாழ்க்கையிலிருந்து வேறுபடுத்துபவை மேலே கூறப்பெற்ற மூன்றுந்தான். 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்ற முறையில் விலங்குகள் வாழ்கின்றன. பசி எடுத்தபொழுது உண்டு, இன வளர்ச்சி செய்து, சினம் வரும்பொழுது தம்முள் போரிட்டுக் கொள்கின்றன. உணர்ச்சி வாழ்க்கை வாழும் மனிதனும் இதிலிருந்து அதிகம் வேறுபட்டவனல்லன். முதுகெலும்பு படுக்கை வசத்திலிருந்து மேல்நோக்கிய வசத்தில் வளரத் தொடங்கிய நாளிலிருந்தே, மனிதனுக்குப் பகுத்து அறியும் அறிவு தரப்பெற்றுள்ளது. இதை மனிதன் என்று*

பயன்படுத்துகிறோனோ அன்றுதான் அவன் மனிதன் என்ற பெயருக்கு உரிமை உடையவனாகின்றான்.

பொறி புலன்களைச் சென்றவிடத்தால் எல்லாம் செல்லவிடாது, அவற்றை அடக்கி நன்றின்பால் உய்ப்பதே அறிவாகும். பொறி புலன்களை அடக்கி ஆள வேண்டியவன் பகுத்தறிவுடைய மனிதன். மனத்தின் துணைகொண்டு மனிதன் பொறிகளை அடக்கி வழிப்படுத்தித் தக்கவழியில் செலுத்த வேண்டும். மோட்டாரை ஓட்டுபவனிடம் திசை திருப்பி (Steering wheel) தரப் பெற்றுள்ளது. அதனை அவன் நன்கு பயன்படுத்தினால் விரும்பிய இடத்திற்குப் போய்ச் சேரலாம். திசை திருப்பியை நன்கு பயன்படுத்தவில்லை யாயின் சாலையிலுள்ள மரத்தில் மோதி உயிர் விடுவதைத் தவிர வேறு வழியே இல்லை. சாக்ரட்டீஸ், பிளேட்டோ போன்ற ஞானிகள் இருந்தும் கிரேக்க நாகரிகத்தை, சமுதாயத்தைக் காப்பாற்ற முடியாமற் போய்விட்டது. காரணம் கிரேக்க மக்கள் புலனடக்கம் என்பதைப் பின்பற்ற மறந்தனர்; மறுத்தனர். அதன் பயன் அந்த நாகரிகம் இன்று பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய்ப் போய்விட்டது. இத் தமிழகத்திலும் சங்க காலத்தில் ஏறத் தாழ அதே நிலைதான் இருந்து வந்தது. புலன் அடக்கம் என்பதைப் பற்றி யாரும் அதிகம் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. ஆயிரக்கணக்கான பாடல்கள் இருந்தும் புலனடக்கம் பற்றிப் பேசும் பாடல்களைக் காண முடிய வில்லை. 'கட்டமை ஒழுக்கத்துக் கண்ணமை' (புறத்—21) என்ற தொல்காப்பிய சூத்திர அடிக்கு உரை கண்ட நச்சினார்க்கினியர், 'கட்டுதலமைந்த ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சி' என்று பொருள் கூறி, அதற்கு விளக்கவுரையாக 'ஐம்பொறிகளை வென்று தடுத்தல்' என்றும் கூறுகிறார். தொல்காப்பியச் சூத்திரங்கட்கு உரை செய்யும் பொழுது சங்கப் பாடல்கள், பெயர் மறைந்து

போன (ஆசிரிய மாலை) நூல்கள் இவற்றிலிருந்து மேற்கோள் காட்டுதல்தான் மரபு. ஒவ்வொரு துறைக்கும் பல உதாரணங்கள் காட்டுவதும் உண்டு. ஆனால் புலனடக்கம் என்று பொருள் செய்துவிட்ட நச்சினார்க் கினியர் மேற்கோள் காட்டச் சங்கப் பாடல் ஒன்றும் பெற்றிலர். அதற்குப் பதிலாகக் குறள்களை மேற்கோளாகக் காட்டுகிறார். இவற்றை அடுத்து அகநானூறு 286ஆம் பாடலில் சில வரிகளைக் காட்டுகிறார். ஆனால் புலனடக் கத்துக்கும் அந்த வரிகட்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இதிலிருந்து ஒன்றைத் தெரிந்துகொள்ள முடிகிறது. சங்க காலத்தில் அறிவின் துணை கொண்டு புலனடக்கம் செய்வது என்பது பலரும் அறியாத, அல்லது அறிந்தும் கவலைப்படாத ஒன்றாக இருந்தது என்று ஊகிக்க முடிகிறது.

இந்தக் குறையைப் போக்கத் திருக்குறள் நேரிடை யாகவும் மறைமுகமாகவும் பலப்பல இடங்களில் புலனடக்கத்தைப் பற்றியும் பேசிற்று. சிலம்பும், மணிமேகலையும் தத்தம் சமய அடிப்படையில் நின்று புலனடக்கத்தின் இன்றியமையாமையைப் பேசின. பக்தி இலக்கிய காலத்தில் மறுபடியும் இது பேசப்படுகிறது.

திருக்குறள் புலனடக்கம் பற்றிப் பேசுவதற்கும் பக்தி இலக்கியம் அதுபற்றிப் பேசுவதற்கும் ஓரளவு வேறுபாடு உண்டு. திருக்குறள் சட்டத்தை அப்படியே பேசுவது. நீதி நூல்கள் கொள்வன, தவிர்வன இரண்டையும் அப்படி அப்படியே கூறும் இயல்புடையன. ஆனால் பக்தி இலக்கியம் மக்களுடன் உறவாடி அவர்களைத் தம்வழிக் கொண்டு செல்ல முனைவதால் சற்று இறங்கிவந்து பேசும்.

### புலனடக்கம் கடினமானது

புலனடக்கம் என்று எளிதிற் கூறிவிடலாமே தவிர, அதனைக் கடைப்பிடிப்பது என்பது மாபெருங் காரிய

மாகும். மனித முயற்சிகள் அனைத்துள்ளும் மிகக் கடினமானது புலனடக்கம் ஒன்றுதான். இதனை முற்றிலும் செய்து வெற்றி கண்டவர்கள், உலகம் தோன்றிய நாளிலிருந்து ஒரு சிலரே ஆவர். பன்னெடுங் காலம் ஒருமுகப்பட்ட சித்தத்துடன் தவம் இயற்றிய விசுவா மித்திரன் போன்றவர்கள், ஒரே நாளில் புலனடக்கம் இன்மையால் அதனை இழந்த வரலாற்றைக் கேள்விப்படுகிறோம். எனவே அது மிகமிகக் கடினமானது என்பதை அனைவரும் ஏற்றுக் கொள்வர். ஆனாலும் கடினம் என்ற காரணத்தால் அதனைப் பெற முயலாமல் இருப்பதும் அறிவுடைமை ஆகாது. ஒவ்வொரு மனிதனும் இம் முயற்சியை வாணாள் முழுதும் செய்துகொண்டே இருத்தல் வேண்டும். எந்த அளவிற்கு முயற்சியோ அந்த அளவிற்கு வெற்றி காண முடியும். தமிழர்கள் என்றுமே மறுபிறப்பையும் கூர்தல் அறத்தையும் (Evolution) நம்புகின்றவர்களாகலின் எடுத்த முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றால்கூட அடுத்த பிறப்பில் விட்ட இடத் திலிருந்து தொடங்கலாம் என்று நம்பினர். ஓர் இன மக்களுள், எவ்வளவுக் கெவ்வளவு அதிகமானவர்கள் இதனைக் கடைப்பிடிக்கின்றார்களோ அந்த அளவுக்கு அந்தச் சமுதாயம் அல்லது இனம் முன்னேறும்.

கிரேக்க, மெசபொட்டேமிய, சுமேரிய, எகிப்திய, உரோமானிய நாகரிகங்கள் ஓகோ என்று வளர்ந்தும், இன்று இருந்த இடம் தெரியாமல் போனதற்குரிய காரணங்களுள் முக்கியமான காரணம், அம் மக்களிடை இப் புலனடக்கம் இன்மைதான். புலனடக்கம் இல்லாத விடத்து வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள் எதுவும் இருத்தற்கில்லை. புலனடக்கமும், குறிக்கோளும் இல்லாத மக்கள் நிறைந்த இனம் எத்துணைப் பெரிய பேரரசை நிறுவி ஆட்சி செய்தாலும், அது மணலால் கட்டிய வீடாகவே இருக்கும்.

## குறள் கூறும் அடக்கம்

தமிழக மக்களிடை இருந்த இக் குறைபாட்டை அறிந்த வள்ளுவப் பேராசான் 'அடக்கம் உடைமை' என்று ஓர் அதிகாரமே வகுத்துள்ளார்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்து அடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து

(திருக்குறள்—126)

என்ற குறளில் இதனை விரித்துக் கூறுகிறார். புலனடக்கம் என்றால் ஏதோ மாத்திரைகளை விழுங்கிவிட்டு மனத்தை அடக்குதல் என்று இன்று பலரும் நினைக்கையில், அதன் உண்மைத் தன்மைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இந்நாட்டுச் சான்றோர் அற்புதமான உவமையின் மூலம் விளக்கந் தருகிறார். நான்கு கால்களும் ஒரு தலையும் ஆமைக்கு இன்றியமையாத உறுப்புகள் என்பதை யாரும் மறுக்க வியலாது. ஆமையின் வாழ்க்கை நல்லமுறையில் நடைபெற அதன் கால்களும் தலையும் இன்றியமையாதவை. ஆனால், அதே கால்கள் ஆமையை ஆபத்து நிறைந்த இடத்துக்கு அழைத்துச் செல்லக்கூடும். ஒருவேளை, ஆமையின் பகை எதிரே வந்துவிட்டால் இந்த உறுப்புகளை உள்ளே இழுத்துக் கொள்வதன்மூலம் கட்டைபோலக் கிடந்து அது தன்னைக் காத்துக்கொள்கிறது. வள்ளுவர் பயன் படுத்தும் உவமை ஆமை உறுப்புகளை உள்ளே இழுத்துக் கொள்ளும், அவை பயனற்றுப் போய்விடவில்லை. எப்பொழுது அவற்றைப் பயன்படுத்த வேண்டும் என்று ஆமை விரும்புகிறதோ அந்த வினாடியே இந்த உறுப்புகள் வெளிவந்து பயன்படும்.

## புலனடக்கத்திற்கு மனமே மூலகாரணம்

மனிதனிடம் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறிகள் உள்ளன. இவற்றை ஆட்டிப் படைப்பது

மனம். இந்த மனம் இந்தப் பொறிகளின் மூலம் தொழிற்பட்டு தேவையற்ற பிரச்சினைகளை விலை கொடுத்து வாங்குகிறது. ஒவ்வொரு பொறியும் நம் அறிவு ஆணையிடும் முறையில் தொழிற்பட்டால் அதுவே புலனடக்கம் எனப்படும். எத்துணைப் பெரியவர்களும், எத்தகைய வியத்தகு சக்தி பெற்றவர்களும், இது செய்ய முடியாமல் வழுக்கி விழுந்து விடுவதைக் காண்கிறோம்.

'சினம் இறக்கக் கற்றாலும் சித்திஎலாம் பெற்றாலும்
மனம் இறக்கக் கல்லார்க்கு வாய் ஏன் பராபரமே'

*(பராபரக்கண்ணி—169)*

என்பது தாயுமானவப் பெருந்தகையின் வாக்கு. அதாவது ஒருவன் சினத்தை அடக்கிப் பல்வேறு சித்திகளைப் பெற்றாலும் அவனுடைய மனம் அறிவின் ஆணைப்படி அடங்கி நிற்கவில்லை எனில், அவனை ஞானி என்றோ, சித்தன் என்றோ கூற முடியாது. சாதாரண வித்தை காட்டுபவனே ஆவான் அவன். சிறுசிறு சித்துகளைக் காட்டித் தாங்கள் அவதார புருடர்கள் என்று கூறிக் கொண்டு மக்களை ஏமாற்றிப் பிழைக்கின்றவர்கள் என்றும் உண்டு. எனவே மனிதன் முன்னேற்றம் பெற வேண்டுமானால், உறுதியாக அவனிடம் இருக்க வேண்டிய ஒன்று புலனடக்கம் என்பதைக் கண்டோம்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் இது எத்துணைக் கடுமையான காரியம் என்பதை அங்கங்கே கூறிப் போயினர். இந்தப் பொறி புலன்கள் அடங்க வேண்டு மாயின் அது இறைவன் அருளிருந்தால்தான் முடியும் என இவர்கள் கூறினர். ஒருவாறு, ஓரளவு புலனடக்கம் பெற்றுவிட்டால் மட்டும் போதாது என்கிறார் உலகப் பொதுமறை தந்த பெருமகனார்.

ஐஉணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
மெய்உணர்வு இல்லா தவர்க்கு

*(திருக்குறள்—354)*

*[மெய் உணர்தல் இல்லாமல் ஐந்து புலன்களையும் அடக்கிவிட்டதால் எப் பயனும் ஏற்படாது.]*

*வெறும் புலனடக்கம் செய்துவிடுவதால் எவ்விதப் பயனும் இல்லை. கல்லும், மரமும் எவ்விதப் பொறி உணர்வுகளும் இல்லாதவை. ஆனால் அவை மோட்சம் போவதில்லையே! அதேபோல ஐந்து பொறிகளை அடக்கிவிடுதல் எதிர்மறைப் பயன்தான் தரும். எனவேதான், மெய்யுணர்வு வேண்டும் என்கிறார் வள்ளுவர்.*

## புலன்கள் யாரையும் விடுவதில்லை

*இந்த அடிப்படையை நன்கு புரிந்துகொண்ட பக்தி இயக்கப் பெரியோர்கள், பொறி புலன்களை அடக்குதல் எவ்வளவு கடினமான காரியம் என்பதனை அங்கங்கே குறிப்பிட்டுச் சென்றுள்ளார்கள். குறிப்பிட்ட வயதும் பக்குவமும் வந்த நிலையில்தான், இந்தப் பொறிபுலன்கள் தம் தலைவனை ஆட்டிப் படைக்கும் என்று யாரும் கருதிவிட வேண்டா. திருஞானசம்பந்தரும், நம்மாழ்வாரும் மிகமிக இளம் பிராயத்திலேயே திருவருளைப் பெற்றுப் பாடத் தொடங்கியவர்கள். வயதோ மிகமிக இளம் பிள்ளைப் பருவம். இறைவனுடைய திருவருளை முழுவது மாகப் பெற்றவர்கள் இவர்கள் இருவரும். அப்படி இருந்தும், இந்தப் பொறிபுலன்கள் தமக்கு அடங்காமல் துன்புறுத்துகின்றன என்று பாடுகிறார்கள்.*

**தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே! அடியேன்**
**ஆயும் நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கிறதுன் உள்ளம்**
**ஆயமாய காயந் தன்னுள் ஐவர்நின்று ஒன்றால் ஒட்டார்**
**மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவலம் மேயவனே!**

*(திருமுறை 1—50—7)*

[வலிவலம் என்னும் பகுதியிலுள்ள சிவபெருமானே! எனக்குத் தாயும் தந்தையும் நீதானே! என் உள்ளம்

*நின்னிடம் முழுவதுமாக அன்பு செய்ய விரும்புகின்றது. ஆனால் இந்த மாய உடலினுள் ஐந்து பேர் (ஐம்பொறிகள்) இருந்துகொண்டு, என்னை எதிலும் நிலைக்கவிடாமல் அலைக்கழிக்கின்றனர். இது என்ன மாயமோ என்று அஞ்சுகிறேன்.]*

என்னை ஆளும் வன்கோ ஓர் ஐந்து இவை
பெய்து இராப்பகல் மோதுவித்திட்டு
உன்னைநான் அணுகாவகை செய்து போதி கண்டாய்.

வேதியா நிற்கும் ஐவரால் வினை
யேனை மேவித்து உன் திருவடி
சாதியா வகை நீ தடுத்து என்பெறுதி? அந்தோ!

விண்உளார் பெருமாற்கு அடிமை செய்
வாரையும் செறும் ஐம்புலன் இவை
மண்ணுள் என்னைப் பெற்றால் மற்று என் செயா?

...............ஓர் ஐவர் வன் கயவரை
என்று யான் வெல்கிற்பன்? உன் திருவருள் இல்லையேல்
*(நாலாயிரம்—27, 45, 46, 49, 50)*

*[என்னை அடிமைப்படுத்தும் இந்த ஐந்தையும் என்னுள் இருக்கவிட்டு, இரவுபகல் அவை ஒன்றுடன் ஒன்று மோதி, உன்னை நான் நெருங்கவிடாமல் செய்தனையே!*

*என்னைத் துன்புறுத்தும் ஐந்து பேரால் என்னை மோதுவித்து, உன் திருவடியை அடையாமல் செய்வதால், நீ என்ன பயனை அடையப் போகிறாய் ஐயா?*

*வைகுந்தத்தில் இருக்கும் பெருமானுக்குத் தொழும்பு பூண்டு தொண்டு செய்கின்றவர்களையே கூட இந்த ஐந்தும் துன்புறுத்தும் என்றால், கேவலம் இந்த மண்ணில் வாழும் என்னைக் கண்டால் என்னதான் செய்யமாட்டா? மிகவும் கொடியவர்களாகிய இந்த ஐவரையும், உன் திருவருள் உதவி இல்லாமல் நான் வெல்வது எவ்வாறு?]*

புலனடக்கம் பற்றிச் சமயப் பெரியோர்களும் நீதிநூல் இயற்றிய பெரியவர்களும் கூறியன. இந்த நாட்டைப் பொறுத்த மட்டில் பேருதவி புரிந்தன.

## குறிக்கோள் வேண்டும்

ஓர் இனமோ, தனிமனிதனோ வளர்ச்சி பெற்று முன்னேற வேண்டுமாயின், புலனடக்கத்தை அடுத்து இன்றியமையாது வேண்டப்படுவது வாழ்க்கையில் ஒரு குறிக்கோள். குறிக்கோள் இல்லாத வாழ்க்கை, விலங்கு வாழ்க்கையுடன் வைத்து எண்ணப்படும். தமிழகம் முழுதும் சுற்றிவந்து பழுத்த அனுபவம் உடையவராகிய நாவரசர் பெருமான், இந்த இனத்தின் குறைபாட்டை நன்கு அறிந்து கொண்டார். வாழ்க்கை வசதி ஏறஏற இன்ப வேட்டையில் மனிதன் செல்லத் தொடங்கிவிடுவான். ஏதேனும் ஒரு குறிக்கோள் (Aim in life) இருந்தால்தான் வாழ்வில் ஓர் இன்பத்தைக் காணமுடியும். எனவே அப் பெரியார் அந்தக் குறைபாடு இந்த இனத்தாரிடம் இருந்தது என்று நேரிடையாகக் கூறாமல், தன் மேல் அதை ஏற்றிக்கொண்டு.

குறிக்கோள் இலாது கெட்டேன்

என்று பாடிச் சென்றார்.

குறிக்கோள் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். குறிக்கோளில் உயர்ந்தது தாழ்ந்தது என்ற வேறுபாடு இல்லை. ஒவ்வொருவருக்கும் ஒரு குறிக்கோள் இருத்தல் வேண்டும். அதனை அடைய எடுக்கும் முயற்சியில்தான் அந்த மனிதன் இன்பத்தைக் காணமுடியும். வாழ்க் கையைப் பயனுடைய வாழ்க்கையாகவும் அதுவே அமைக்கும். உயர்ந்த குறிக்கோளுடன் வாழ்கின்றவர்கள், தமக்கென முயலாது பிறர் பொருட்டு வாழ்கின்ற பெரியவர்கள். விரைவல் அடைந்துவிடக்கூடிய குறிக்

கோளை வைத்துக்கொண்டு அதை அடைந்துவிடுதல் சாதாரண மக்களின் வாழ்க்கை. பெரியவர்கள் என்பவர்கள் எளிதில் அடைய முடியாத குறிக்கோளையே வைத்துக்கொள்வர். மிகச் சாதாரணமான குறிக்கோளை ஏற்று அதனை அடைந்துவிடுவதைக் காட்டிலும் எளிதில் அடையமுடியாத குறிக்கோளை ஏற்றுக்கொண்டு, அதை அடையச் செய்யும் முயற்சியே சிறந்தது என்பது நம்மவர் கொள்கை.

உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

(திருக்குறள்—596)

[மிக உயர்ந்த குறிக்கோளையே ஏற்றுக்கொள்க. அது அடைய முடியாததாக இருப்பினும் கவலை இல்லை. உயர்ந்த குறிக்கோளை ஏற்பதை விட்டுவிட வேண்டா.]

கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது

(திருக்குறள்—772)

[காட்டில் உள்ள முயலை வேட்டையாடிப் பிடித்து விடுவதைக் காட்டிலும், யானையைக் குறிவைத்து அம்பு எய்து, அது தப்பித்துவிட்டாலும் அந்த அம்பை வைத்துக் கொள்ளுதல் உயர்ந்தது.]

## தன்னலத் தியாகம்

உயர்ந்த குறிக்கோள் என்பது யாது? தன் உயர்வை அடிப்படையில் கொண்ட குறிக்கோள் எதுவாயினும் அது சாதாரணமானதேயாம். பிறர் துயர் துடைக்க வேண்டும் என்று கருதி மேற்கொள்ளும் குறிக்கோள் உயர்ந்ததாகும். இதனை மேற்கொள்ள வேண்டுமாயின் ஒருவன் புலனடக்கம் செய்தவனாக இருத்தல் வேண்டும். புலனடக்கம் செய்தவனிடம் தன்னலம் என்பது இராது.

தன்னலம் இல்லாமற் போகவே அன்புடைமை ஏற்படும். தன்னலமில்லாதவன் பிறரிடம் பகை, காழ்ப்பு, வெறுப்பு முதலியன கொள்ளமாட்டான். அனைத்து உயிர்களையும் உடன்பிறந்தவையாகப் பாவிக்கும் உயர்ந்த பண்பு ஏற்பட்டு விடும். அனைத்துயிர்களிடமும் அன்பு தோன்றவே, அவனிடம் அருள் நிரம்பத் தொடங்கிவிடுகிறது.

அன்புஇலார் எல்லாம் தமக்குஉரியர்–அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு

*(திருக்குறள்—72)*

*[அன்பில்லாதவர்கள் தன்னலப் பிண்டமாக இருப்பர். அன்புடையார் தம் எலும்புகளைக் கூடப் பிறர்க்கு உதவப் பயன்படுத்துவர்.]*

*எனவே ஒருவன், சாதாரண மனிதனாக இருக்கும் நிலைமையைக் கடந்து மகாத்மாவாக ஆக வேண்டுமானால், அருளுடையவனாக இருத்தல் வேண்டும். அதற்கு முதலில் அன்புடையவனாக ஆதல் வேண்டும். அன்புடையவனாக ஆதற்குத் தன்னலத்தைத் தியாகம் செய்ய வேண்டும். தன்னலத்தைத் துறப்பதற்குப் புலனடக்கம் தேவை. எனவே எல்லாவற்றிற்கும் புலனடக்கமே முதற்படி என்பதை எளிதில் அறியலாம். இது கருதித்தான் போலும் திருவள்ளுவர் இதனை மிகவும் வலியுறுத்திச் சென்றார். சால்புடைமை, பண்புடைமை என்பவற்றிற்கெல்லாம் புலனடக்கமே மூலகாரணம் என்பதை அறிய வேண்டும்.*

பண்பெனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல்

*(கலித்தொகை—133)*

*[உலகநடை அறிந்துகொண்டு அதற்கு ஏற்ப வாழ்வதே பண்புடைமை எனப்படும்.]*

பண்புடையார்க்குப் பட்டு உண்டு உலகம் அஃதுஇன்றேல்
மாண்புக்கு மாய்வது மன்

*(திருக்குறள்—996)*

[இந்த உலகம் ஏன் நிலை பெற்றுள்ளது என்றால் அதற்குக் காரணம் பண்புடையவர்களே. அவர்கள் இல்லையானால் இவ்வுலகம் மண்ணுடன் மண்ணாக அழிந்துவிடும்.]

என்று நம் முன்னோர் கூறிச் சென்றனர். 'உலகிடை மனிதனாகப் பிறந்தவன் உயர்ந்து தேவனாக மாற வேண்டும்' என்பதே மனிதனுடைய குறிக்கோளாக இருத்தல் வேண்டும். அதனையே திருக்குறளும் சமய இலக்கியங்களும் பெரிதும் வற்புறுத்துகின்றன. இந்தத் தனி மனித வளர்ச்சிக்கு மூலகாரணம் புலனடக்கம் என்பதை அறிந்தபிறகு, அடுத்த நிலையாக அன்புடைமைதான் பெரிதாக வேண்டப்பட வேண்டும். அன்புடைமை சங்க காலத்தில் அதிகம் பரவி இருந்திருந்தால் மும்மன்னர்களுள்ளும் இத்தனை போர்கள் நிகழ்ந்திரா. தமிழர்களாகிய தாங்கள் அனைவரும் ஓர் இனம் என்ற எண்ணம் பரவி இருந்திருந்தால், இந்நிலை வந்திராது. காதல் வாழ்க்கையில் இத்துணைத் தூரம் முன்னேறிய மக்கள் சாதாரணமாகச் சமுதாயத்தில் வாழும் சக மனிதர்களிடம் அதிகமான அன்பைச் செலுத்தாதது புதுமைதான்! சேரன், சோழன், பாண்டியன் என்பவர்களால் ஆளப்பெற்ற அந்தந்தப் பகுதியில் வாழ்ந்தவர்கள் அதுவே தம்முடைய நாடு என்றும், அந்த எல்லைக்கு அப்பாற்பட்ட பகுதி தம்மை ஒத்த தமிழர் வாழினும் பகைவருடைய நாடு என்றும் எண்ணும் எண்ணம் வலுவாகச் சமுதாயத்தாரிடம் ஏற்றப்பட்டுவிட்டது போலும்.

## குறள் வலியுறுத்திற்று

இதில் மற்றொரு புதுமையும் காணக் கிடக்கின்றது. புல்வர்கள், பாணர்கள், கூத்தர்கள், விறலியர் என்ற இக்கூட்டத்தார் பரிசினை நாடி ஒவ்வோர் அரசனிடமும் செல்லும் இயல்பினர். ஒரு நாட்டு எல்லை பற்றிய கவலை அவர்கட்கு இருந்ததாகவோ, அவர்களை யாரும்

தடுத்ததாகவோ எவ்விதச் செய்தியும் இல்லை. அப்படி இருந்தும், சாதாரண மக்களிடம் இந்த அன்புணர்வு அதிகம் இல்லாமற் போனது வியப்புத்தான்!

இந்தக் குறைபாட்டையும் வள்ளுவர் உணர்ந்தமையால்தான் 'அன்புடைமை' என்ற ஓர் அதிகாரத்தையே வகுக்கின்றார். அன்பைப் பற்றியும், அதனை உடையவர் எத்தகையவராக இருப்பர் என்பது பற்றியும், கூறிக் கொண்டே வரும் அப்பெருமகனார்,

என்பு இலதனை வெயில்போலக் காயுமே
அன்பு இலதனை அறம் *(திருக்குறள்—77)*

[எலும்பு இல்லாத புழுவை வெயில் எவ்வாறு துன்புறுத்துமோ அதுபோல அறக்கடவுள் அன்பற்றவர் களை வருத்தும்.]

என்று பேசுகிறார். இறுதியாக,

அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு
என்பு தோல் போர்த்த உடம்பு *(திருக்குறள்—80)*

[அன்பின் அடிப்படையில்தான் உயிர் நிலைத்து உள்ளது. அந்த அன்பில்லாதவர்கள் எலும்பும் தோலும் போர்த்திய உயிரற்ற சடலங்கள்]

என்ற அளவிற்குக் கடுமையாகப் பேசுகின்றார். உலகின் பிற மொழிகளில் (கிரேக்கம் போன்றவற்றில்) தோன்றிய நீதி நூல்கள் தகுவன—தகாதன, விரும்பத் தக்கன—தகாதன என்பவற்றைக் கூறுவதுடன் அமைந்துவிட்டன. ஆனால் வள்ளுவப் பேராசான் இந்த இனம் எப்படியாவது வாழ வேண்டும் என்ற முடிவுக்கு வந்தபிறகு இந்நூலை இயற்றினமையின், உயிர்நாடியான தேவைகளைப் பற்றிக் கூறும்பொழுது மிகவும் இடித்துக் கூறத் தொடங்குகிறார். மிக இன்றியமையாதது வேண்டமற்பாலதாகிய ஒரு பண்பு சமுதாய மக்களிடம் இல்லாமல் இருந்தால், நயத்திலும்—

பயத்திலும்— நகைச்சுவையுடனும்— எள்ளி நகையாடியும், இடித்தும் அந்தப் பண்பு இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் பழக்கம் வள்ளுவரிடம் காணப்படும் ஒன்றாகும். இந்த முறையில் உலகில் தோன்றிய பிற நீதி நூல்களிலும் குறள் ஓரளவு மாறுபட்டு நிற்கின்றது.

## அன்புடைமையும் அதன் மூலமும்

இவ்வாறு மேற்சொன்ன மக்களை இடித்துக் கூறின மையினால்தான் போலும், இந்தத் தமிழினமும் அதன் நாகரிகமும் இன்றும் நின்று நிலவுகின்றன! பிற நாகரிகங்களில் நீதிநூலார் இந்த முறையைக் கையாளாமையால்அந்த நாகரிகங்கள் இன்று இல்லாது ஒழிந்தன போலும்!

வள்ளுவரை அடுத்து வந்த சமய நூலார்களும் இறைவ னிடத்தில் அன்பு வேண்டும் என்று கூறினதுடன் அமையாது. எல்லா உயிர்களிடத்தும் அன்பு வேண்டும் என்றும் கூறினர். சமய நூலாகிய திருமந்திரம் இன்னும் ஒருபடி மேலே சென்று,

அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவம் ஆவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்து இருந்தாரே! *(திருமந்திரம்—270)*

கண்டேன் கழல் அது என் அன்பினுள் யானே
*(திருமந்திரம்—285)*

[அன்புதான் சிவம் என்பதை அறிந்தபின் அன்புடை யார் சிவமாகவே ஆகிவிடுவர்.

இறைவன் திருவடியைக் கண்டேன். எங்கே என்றால், என் அன்பினுள்ளேயே யான் கண்டுகொண்டேன்.]

அன்பிலார் சிந்தை அறம் அறியாரே *(திருமந்திரம்—627)*

[மனத்தில் அன்பில்லாதவர் அறத்தையும் அறிந்து கொள்ள முடியாது.]

என்று கூறுகிறார் திருமூலர். எனவே அன்பு ஒன்றே மனித வாழ்வின் அடித்தளம் என்பதை இத் தமிழர்கள் அன்றே கண்டுவிட்டனர். முதலில் புலனடக்கத்தை வலியுறுத்தி, இரண்டாவதாக அன்புடைமையை வலியுறுத்தினார்கள். மனிதன் பிறக்கும்பொழுது தன்னல வடிவினனாகவே பிறந்தாலும் அவனிடம் அன்பு தோன்றி வளர்வதற்கு இல்லறம், புதல்வரைப் பெறுதல் முதலியன துணை புரிகின்றன. விருந்தோம்பலை இத்தமிழர் அத்துணைத் தூரம் வலியுறுத்தியதற்குக் காரணம் அன்பை வளர்க்கவேயாம். இனி இந்த அன்பைக் குலைக்க முயலும் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் முதலியவற்றையும் போக்க வேண்டும் என்று கூறுகிறது அறநூல். ஆழ்ந்து நோக்கினால் மனிதன் அன்பை வளர்க்க வேண்டும் என்ற குறிக்கோளுக்குத் துணையாக இல்லறம் முதல் விருந்தோம்பல் வரை துணை புரிகின்றன. இக் குறிக்கோளை அடைய விடாமல் தடை செய்யும் அழுக்காறு முதலியவற்றைக் கவனமாக இருந்து தன்னிடம் வராமல் பாதுகாக்க வேண்டும். எதிர்மறை வழி, உடன்பாட்டு வழி என்ற இந்த இரண்டுமே மனிதனை அன்புடையவனாக, அடுத்து அருளுடையவனாக ஆக்கவே கூறப்பெற்றன. கொள்ளத்தக்க, இல்லறம் விருந்தோம்பல் முதலியவற்றை வளர்க்கவும், தள்ளத்தக்க, அழுக்காறு முதலியவற்றை விலக்கவும் ஒருவன் என்ன செய்யவேண்டும்? புலனடக்கம் ஒன்றேதான் இதற்கு வழியாகும்.

எனவே நீண்ட ஆராய்ச்சிக்குப் பிறகு கம்பநாடன் புலனடக்கம், அன்புடைமை, அருளுடைமை என்பவற்றை முற்றிலும் கைவரப்பெற்ற ஒரு தலைவனை உற்பத்தி செய்ய முடிவு செய்துகொண்டான். அந்த முடிவைத் தனக்கே உரிய முறையில் ஈடும் இணையும் இல்லாமல் கொண்டு செலுத்தினான். கம்பனின் இராம காதையை இப் புதிய கண்ணோட்டத்தில் காண்பதே நம் நோக்கமாகும்.

# 4. கம்பனின் அரிமா நோக்கு

கம்பநாடன் இத் தமிழகத்தில் தோன்றி, ஒப்பற்ற கல்விமானாகியபின், உலகம் போற்றும் ஓர் இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். ஒரு சிறந்த கவிஞன், தான் தோன்றிய காலத்தின் பிரதிபலிப்பாகவும் இருத்தல் வேண்டும். அதே நேரத்தில் அவன் தோன்றிய இனம், மொழி, நாகரிகம் என்பவற்றின் வளர்ச்சியை எடுத்துக் காட்டுபவனாகவும் இருத்தல் வேண்டும். தனக்கு முன்னர்த் தோன்றிய இலக்கியங்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்தவனாக ஆவதுடன், குருட்டுத்தனமாக ஒன்றைப் புகழவோ இகழவோ செய்யாமல், நடுநிலையுடன் நின்று, தன் இனத்தின் பண்பாட்டை அன்றுள்ள நிலைவரை சீர்தூக்கிப் பார்க்கிறான். அதிலுள்ள குறைவு நிறைவுகளை ஓரளவு கணிக்கின்றான். அந்த நாகரிகம் அடைந்துள்ள மாற்றங் களையும் தன் கவனத்துக்குக் கொண்டு வருகின்றான். இந்தமாற்றங்கள் ஏன் நிகழ்ந்தன என்ற ஆராய்ச்சியில் ஈடுபடுகிறான். எல்லா மாற்றங்களும் நன்மை பயக்கும் என்று கூறிவிட முடியாது. காலாந்தரத்தில் இயல்பாகவே ஏற்பட்ட மாற்றங்கள், வாழ்ந்த அனுபவத்தின் அடிப் படையில் மக்களாகப் பார்த்துத் தேவை எனக் கண்டு செய்துகொண்ட மாற்றங்கள், என மாற்றங்கள் பல வகைப்படும். எத்துணை முயன்றும் ஒரு சில தீமை பயக்கும் பழக்கவழக்கங்களை மாற்றிக்கொள்ள முடியாமலும் போயிருக்கலாம். இவை அனைத்தையும் அரிமா நோக்குடன் கண்டு தெளிகின்றான் கவிஞன்.

## கம்பன் கண்ட மாற்றங்கள்

இதன்பிறகு அவன், தான் ஆக்கப்போகும் நூலில், தான் கண்டு தெளிந்த உண்மைகட்கு வடிவு கொடுக்க முயல்கின்றான். சங்க காலத்திலிருந்த நிறைகளை ஏற்றுக்கொண்டும், அங்கிருந்த குறைகளை அகற்றும் முயற்சியில் ஈடுபட்டும் திருவள்ளுவப் பேராசான் நூல் வகுத்தான். அடுத்து வந்த பக்தி இயக்கக் காலத்தில் புலனடக்கம், அறிவின் துணைகொண்டு நன்மை எது என ஆய்தல், மனிதப் பிறப்பின் குறிக்கோள் யாது என்று ஆய்தல், உயிர்கள் அனைத்தும் இறைவன் உறையும் கோயில் என்று காண்டல்; அதன் பயனாக அனைத் துயிர்கட்கும் அன்பு செய்தல் என்பன போன்ற வளர்ச்சிகள் ஓரளவுக்குத் தோன்றியதையுங் கண்டான். உலகில் முழுவதும் நல்லது என்றோ முழுவதும் தீயது என்றோ எதுவும் இல்லை. எந்த நல்லதிலும் ஓரளவு தீமை கலந்திருக்கத்தான் செய்யும். அதேபோல எத்துணைத் தீயதிலும் ஓரளவு நன்மை கலந்திருக்கத்தான் செய்யும். இவற்றைச் சந்தித்து நன்மையை விடாமல் வளர்க்க வேண்டும் எனக் கருதும் அறிஞன், அத் தீமையை நன்மையிலிருந்து எவ்வளவு குறைக்க முடியுமோ, அந்த அளவுக்குக் குறைக்க முற்படுகிறான்.

## பக்தி இயக்கத்தில் குறை

கம்பன் தோன்றிய காலத்திற்கு முன்னர் இத் தமிழகம் இருந்த நிலை, பின்னர் களப்பிரர் இடையீட்டால் விளைந்த பயன்கள், பக்தி இயக்கக் காலம் தோன்றக் காரணம், பக்தி இயக்கத்தால் விளைந்த நன்மைகள் என்பவை பற்றிக் கண்டோம். நாம் இன்று காணுங் காட்சியைக் கம்பன் அன்றே கண்டிருக்க வேண்டும். பக்தி இயக்கம் பல நன்மைகளைச் செய்தும் ஓரளவு தீமையும் புரிந்துவிட்டது என்று கூறினோம் அல்லவா? அத் தீமை

யாது? கடவுட் கொள்கையும் பக்தியும், பரந்து விரிந்து வளர்வதற்குப் பதிலாகக் குறுகிய வட்டத்தில் வளரத் தொடங்கின. பரம்பொருள் ஒன்றுதான்; அது நாம ரூபம் கடந்தது, அனைத்துக்கும் மூலகாரணம் அதுவே, என்பவற்றை பலவிடங்களிலும் கூறின. நாயன்மார்களும் ஆழ்வார்களும், சைவம் வைணவம் என்ற வட்டத்தை வகுத்துக்கொண்டு, அவ் வட்டத்துள் நின்று வெளிவர மறுத்துவிட்டனர். தத்தம் சமயமே உயர்ந்தது என்றும், அச் சமயம் பரம்பொருளுக்கு எந்தப் பெயர் இட்டு அழைக்கிறதோ அதுதான் உண்மை என்றும், பிற சமயங்கள் அனைத்தும் தவறானவை என்றுங் கூறத் தலைப்பட்டனர். இத்துறையில் வைணவர்கள் கொஞ்சம் மிகுதியாகவே சென்றனர் என்று கூற வேண்டும்.

அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார் செப்பில்—வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை ஏத்தாதார்
ஈனவரே ஆதலால் இன்று (நாலாயிரம்—3489)

என்று பாடுகிறார் திருமழிசை ஆழ்வார். இதில் வியப்பு என்னவென்றால் இவர்கள் இம்மாதிரி பாடுகின்ற காலத்தில் சமணரும், பௌத்தரும் வலிகுன்றி இருந்தனர். சைவம் ஒன்று மட்டுமே வைணவத்துடன் போட்டியிடும் நிலையில் இருந்தது. அதனால்தான் சமணர் அறியாமையுடையவர்கள், பௌத்தர்கள் உண்மை காணாமல் ஏமாற்றுகின்றவர்கள் என்று கூறிய ஆழ்வார், சைவர்கள் கீழ்மக்கள் என்று கூறும் அளவுக்குச் சினம் கொள்கிறார். இறுதியாக மாதவனை ஏத்தாதவர் யாவராயினும் ஈனப் பிறப்புடையார் என்றும் முடிக்கின்றார்.

## சமயப் பொறை இன்மை

சமய இலக்கிய காலம் நன்மைகள் செய்ததுடன் மக்களை உன் சமயம், என் சமயம் என்று சிறுசிறு

வட்டங்களுள் நின்று சண்டை இட வைத்துத் தீமையையும் செய்தது. தமிழனைப் பொறுத்தமட்டில் சிறு எல்லையில் நின்றுகொண்டு அடுத்த எல்லையிலுள்ள தன் இனத் தவர்களுடன் போரிடுவது பழக்கமாகிவிட்டது. சங்க காலத்தில் சேரநாடு, சோணாடு, பாண்டிநாடு என்ற வட்டங்களுள் நின்று போரிட்டனர். களப்பிரரிடம் செம்மையாகத் தண்டனை பெற்றும் தமிழன் இந்தச் சிறுவட்டப் பிரிவினையிலிருந்து நீங்கினதாகத் தெரிய வில்லை. சங்க காலத்தில் புவியியல் ரீதியில், அரசியல் ரீதியில் பிரிவினை, பக்தி இலக்கிய காலத்தில் சமயம் என்ற சிறு வட்டத்தில் என்று பிரிவினையும் போராட்டமும் நிகழ்ந்தன. இவ்வாறு கூறுவதால் இந்தக் குறை ஏதோ தமிழர்களிடம் மட்டுமே காணப்பட்ட குறைபோலும் என்று கருதிவிட வேண்டா. உலகின் எந்தப் பகுதியை எடுத்துக் கொண்டாலும் இத்தகைய நிலை இருந்து வருவதை உலக வரலாறு அறிந்தவர்கள் அறிவார்கள். உலகம் முழுவதும் இவ்வாறுதான் இருக்கிறது என்றதனால் தீமை நன்மையாகிவிடாது. சங்ககால மக்களிடை சமயப்பொறை நிரம்ப இருந்தது. சைவர், வைணவர், சமணர் ஆகிய மூவரும் மிக்க பொறையுடன் வாழ்ந்தனர். ஒருவரை ஒருவர் உயர்ந்த சமயம், தாழ்ந்த சமயம் என்று குறை கூறும் நிலை இல்லை. ஆனால் அரசியல் பொறை அன்று அறவே இல்லை. சமய இலக்கிய காலத்தில் அரசியல் பொறை ஓரளவுக்கு இருந்தது. இந்த அரசியல் பொறை இத்தமிழர்க்கு வருவதற்கு மறைமுகமாக உதவி புரிந்தவர்கள் களப்பிரர்கள். களப்பிரர்களுடன் சேரன், சோழன், பாண்டியன் ஆகிய மூவருமே தோற்றுத் துன்புற்றனர். ஆதலின் இவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிடும் நிலை ஏற்படவில்லை. பொதுப்பகை காரணமாக ஒருவித ஒற்றுமையும் இருந்து வந்தது.

## புதிய இயக்கம்

பக்தி இயக்கத்தின் இறுதிப் பகுதியாகிய ஒன்பதாம் நூற்றாண்டில் சமயப் பொறை சீரழிந்தது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் அடுத்த சமயத்தைக் குறை கூறிக் கொண்டது போக, மற்றொரு புதிய கிளர்ச்சியும் தோன்றலாயிற்று. ஆழ்வார்களும், நாயன்மார்களும் இதுவரை அறிவுவாதத்திற்கு அதிக இடங் கொடாமல் பக்தியை வளர்த்தனர். இதனுடைய எதிர் ஒலியாக அறிவின் அடிப்படையில், சமயத்தை வளர்க்கும் நிலை தோன்றிற்று. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய ஆதிசங்கரர் நுணுக்கமான அறிவு வாதத்தைத் தொடங்கினார். அவர் இவ்வாறு தொடங்க வேண்டிய சூழ்நிலை அப்பொழுது இருந்தது. பெளத்தம், வைதிக சமயத்தை எதிர்த்துத் தோன்றியதாயினும், கடவுள் கொள்கையை ஏற்றுக்கொள்ளாவிடினும், அறிவு ஒன்றையே துணையாகக் கொண்டு, மிக நுண்மையான அறிவு வாதத்தை மேற்கொண்டு, தன் சமயத்தை நிலைபெறுத்த முயன்றது.

அறிவு வாதத்தை, அறிவு வாதத்தால்தான் சந்திக்க முடியுமே தவிர பக்தியைக் கொண்டு ஒன்றுஞ் செய்ய முடியாது. எனவே பெளத்தர்களின் மிக நுணுக்கமான அறிவு வாதத்தை எதிர்த்துப் போராட அவர்கள் போற்றும் அறிவு வாதத்தையே சங்கரரும் மேற்கொண்டார். உபநிடதங்கள், கீதை, பிரம்மசூத்திரம் என்பவற்றிற்கு விரிவுரை வகுக்கும் வழியில் ‘அத்வைதத்தை’ நிலைநாட்ட முயன்றார். அறிவில் மேலோங்கி நிற்பவர்கட்கு மட்டுமே இது பயன்படும். மேலும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் நிறுவிப்போன பக்தி மார்க்கத்தை அறவே ஒதுக்கிவிடுதல் இயலாததாக இருந்தது. எனவேதான் அத்வைதம் பேசிய சங்கரர், செளந்தர்யலகரி, சிவானந்தலகரி, தட்சிணாமூர்த்தி

அட்டகம், பஜகோவிந்தம் போன்ற பக்திப் பாடல்களையும் இயற்றினார்.

இந்த நிலையில் இராமானுஜர் தோன்றிச் சங்கரரின் அத்வைதக் கொள்கையை மறுத்து, அதே அறிவு வாதத்தின் துணைகொண்டு விசிட்டாத்வைதக் கொள்கையைப் பேசினார். சைவ, வைணவ மாறுபாடு 9ஆம் நூற்றாண்டில் தலைதூக்கி நின்றது என்பதற்கு ஐயமில்லை.

## குறுகிய சமயவட்டங் கடந்து

எனவே, தமிழ்ப் பண்பாட்டின் குறைகளை அகற்றி, ஒரு புதிய நெறியை வகுக்க விரும்பிய கம்பநாடன், இந்தச் சைவ வைணவப் போராட்டத்தில் இறங்க விரும்பவில்லை. இவை இரண்டையும் ஒருமைப்படுத்தி ஒரு புதிய இயக்கத்தை உருவாக்க விரும்பினான். சமய இலக்கியம் வளர்த்த பக்தி வழி ஆதிசங்கரர், இராமானுஜர் போன்றவர்கள் நிறுவிய அறிவு வாத வழி என்ற இரண்டையும் ஒன்றாக்கிப் புதுவழி காண முயன்றான் கம்பன். அதனால்தான் எல்லையற்ற அன்புடைய (பக்தியுடைய) குகனையும், அறிவின் முடிமணியான அனுமனையும் படைக்கிறான். அப்படியானால் திருமால் அவதாரம் என்று கூறப்படும் இராமகாதையை ஏன் மேற்கொள்ள வேண்டும் என்ற வினாத் தோன்றும் அல்லவா? திருமாலை அவன் புறக்கணிக்கவில்லை. ஆனால் இராமனாக அவதரித்தது இந்த மூவருக்கும் அப்பாற்பட்ட பரம்பொருள் என்பதுதான் அவன் கூற வந்தது. சமயம் நேரும்போதெல்லாம் இக்கருத்தை எவ்வளவு விரிவாகக் கூறமுடியுமோ அவ்வளவு விரிவாகப் பேசுகிறான். அதுபற்றிப் பின்னர்க் காணலாம். ஆனால் கம்பன், காப்பியம் படைக்கின்ற காலத்தில் இராமன் திருமாலின் அவதாரம் என்ற கொள்கை வலுப்பெற்று விட்டது. வான்மீகியின் தொடக்கம், இராமன் மனிதருள்

உயர்ந்தவன் என்ற பேச்சுடன் தொடங்குகிறது. இடையேதான் அவதாரப் பேச்சு வருகிறது. வான்மீகத்தில் இடைச் செருகல்கள் பற்றிக் கூறத் தேவை இல்லை. எனவே வான்மீகி காலத்தில் இல்லாத கருத்துப் பிற்காலத்தில் நுழைந்தது என்பதனை ஊகிக்க அதிக நேரம் ஆகாது. இத் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை ஆழ்வார்கள் கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபட்டதற்கு அடுத்தபடியாகத் தான் இராமவதாரத்தில் ஈடுபட்டனர். இராம காதையின் பல பகுதிகளில் ஈடுபட்டுத் தம் பாடல்களில் அப் பகுதியை உயர்த்திப் பாடிவிட்டனர். வான்மீகத்தில் சாதாரண வேடனாக உள்ள குகன், ஆழ்வார் பாடலில் இராமன் தம்பியாக ஆகிறான்.

## இக் கதையை ஏன் எடுக்க வேண்டும்?

இந்த நிலையில் இராம காதையைப் பாட எடுத்துக் கொண்ட கம்பன், திருமாலே இராமனாகப் பிறந்தான் என்பதை ஏற்றுக்கொண்டு பாடத் தொடங்குவது தவிர வேறு வழியே இல்லை. அவன் எவ்வெவற்றை எல்லாம் விழுப்பொருள்கள் (Values in Life) என்று கருதினானோ அவற்றை எல்லாம் பெய்து பாடக் கதை இடம் அளிப்பதுபோல் வேறு எந்தக் கதையும் இடம் தரவில்லை. பாரதம், பாகவதம் போன்ற கதைகள் அவன் கருத்தைக் கூறுவதற்கு ஏற்ற கொள்கலமாக இல்லை. இராம காதையைக்கூட வான்மீகத்திலிருந்து பல இடங்களில் மாற்றிவிடுகிறான். அவனுடைய குறிக்கோளுக்கு மாறாக மூலக்கதை இருப்பின் அதை அழகாக மாற்றுவதற்கு அவன் தயங்கவில்லை.

இராமன் திருமாலின் அவதாரம் என்ற கொள்கை கம்பன் பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகள் முன்தொட்டே தமிழ்நாட்டில் பரவி இருந்ததைச் சிலப்பதிகாரத்திலும்,

மணிமேகலையிலும், ஆசிரியமாலைத் தொகுப்பிலும் காண முடிகிறது. அடுத்து வந்த ஆழ்வார்கள் அதனை வலியுறுத்திச் சென்றனர். இந்த நிலையில் இக் கருத்துக்கு மாறான ஒரு கருத்தை எளிதில் கூறிவிட முடியாது என்றாலும் இரண்டே இடங்களில் மட்டும் இதனைக் கூறிவிட்டு, மற்றும் இருபதுக்கும் மேற்பட்ட இடங்களில் அவன் மூலப் பரம்பொருள் என்றே பேசுகிறான் கம்பன்.

மேலே கூறிய அடிப்படைகள் அனைத்தும் அவனுடைய மனத்திரையில் ஓடின காரணத்தால் கம்பன் தன் காவியத்தை அதற்கு முன்னர் யாரும் நினைத்தும் பார்த்திராத புதுமுறையில் அமைக்கின்றான்.

## பிற காப்பியங்களுடன் ஒப்பு

இந்த நிலையில் திறனாய்வு முறையில் சிலவற்றைச் சிந்திக்க வேண்டும். காப்பியம் என்று பெயர் சூட்டிவிட்ட ஒரே காரணத்துக்காக மேனாட்டுக் காப்பியங்களுடன் இதை ஒப்பிட்டுப் பார்ப்பது பொருத்தமாகப் படவில்லை. ஒரு சில பகுதிகளை, ஒப்புநோக்கி அனுபவிப்பதற்காகக் காணலாமே தவிர, அதற்கு மேலும் சென்று, ஒப்புநோக்கித் திறனாய்வு செய்வது பொருத்தமற்றதாகிவிடும்.

இந்த நாட்டில் தோன்றிய எந்த இலக்கியமும், அது காப்பியமாயினும் சரி, தனிப்பாடலாயினும் சரி, ஒரு குறிப்பிட்ட கொள்கையை, குறிக்கோளை, பயனை, வலியுறுத்தவே ஆக்கப் பெற்றது. இலக்கிய இன்பம் என்ற ஒன்றைப் பெறுவதற்காக எந்த ஓர் இலக்கியத்தையும் இவர்கள் படைக்கவில்லை.

> **பயனில் சொல் பாராட்டு வானை மகன் எனல்**
> **மக்கள் பதடி எனல்**
>
> *(திருக்குறள்—196)*

[பயனில்லாத சொற்களைப் பேசுபவனை மனிதன் என்று கூற வேண்டா. மனிதர்களுக்கிடையே வாழும் மனித உருவம் படைத்த பதர் (கருக்காய்) என்று கூறுக.]

என்பது, இந் நாட்டு அறநூல் விதி. பயனில்லாத சொல்லைப் பேசக்கூடாது எனில், பயன் விளைக்காத ஒரு பாடலையோ அன்றிக் காப்பியத்தையோ செய்வது இந்நாட்டு மரபன்று. இன்பம் அடைவதும் பயன்தானே என்றால், அந்த இன்பம் மூலமாக மானிட வாழ்க்கையில் ஒரு திருப்பம் அல்லது மாற்றம் ஏற்படவேண்டும் என்று இவர்கள் கருதினார்கள். இலக்கியம் இன்பம் தரக்கூடாது என்று இவர்கள் கூறவில்லை. ஆனால் ஒரு சில மணி நேரம் இருந்து மறையும் இன்பத்துக்காக, ஓர் இலக்கியம் தோன்றலாம் என்பதை இவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். இதற்கு அடிப்படையான ஒரு காரணம் உண்டு. பிறப்பினுள் உயர்ந்த மனிதப் பிறப்பை எடுத்தவன் இன்பம், துன்பம் என்ற இரண்டிலிருந்தும் விடுபட வேண்டும்; சமநோக்குப் பெற வேண்டும், என்பதே இவர்கள் கொள்கை.

இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்
துன்பம் உறுதல் இலன் (திருக்குறள்—626)

[இன்பத்தை விரும்பி நாடிச் செல்லாமலும் துன்பத்தை இயல்பு என்று ஏற்றுக்கொண்டும் வாழ்பவன், துன்பம் அடைதல் இல்லை.]

இதன் காரணமாக இன்பமூட்டும் இலக்கியம் என்ற எதனையும் இவர்கள் ஏற்கவில்லை. ஆகவே மேனாட்டுத் திறனாய்வின் அளவுகோலைக் கொண்டு கம்பன் போன்றவர்களை அளவிட முயல்வது சரியன்று.

## புதிய ஆராய்ச்சி

பாரகாவியம் இயற்றப்புகும் ஒருவன், அதற்கு முன் இருந்த காப்பியங்களையும், அவை இயற்றப்பட்ட

விதத்தையும் கண்டு, அவற்றை முன்மாதிரியாகக் கொள்வதில் தவறு இல்லை.

சிலப்பதிகாரம் பதிகம் என்ற பெயரில் இளங்கோ என்ன குறிக்கோளுடன் தம் காப்பியத்தை இயற்றினார் என்பதைக் கூற முற்படுகிறது.

> அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற்று ஆவதூஉம்
> உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும்
> ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
>
> (சிலம்பு, பதிகம், 55—57)

நிலைநாட்டவே சிலப்பதிகாரம் என்ற பெயரால் ஓர் பாட்டுடைச் செய்யுளை யாக்க முற்ட்டார் என்று கூறுகிறது. அடுத்து நூலில் என்ன என்ன காதைகள் இடம் பெறும் என்பதையும் அது கூறுகிறது.

அடுத்துத் தோன்றிய மணிமேகலையும், பதிகம் என்ற பெயரில் நூலின் உள்ளுறை எவை எவை என்பதை வரிசைப்படுத்திக் கூறுகிறது. பவத்திறம் அறுக எனப் பாவை நோற்ற காதை போல்வன நீதிகளை வரிசைப் படுத்திப் பேசத் தொடங்குகின்றன. சில்ப்பதிகாரமும், இறுதிக் காதையாகிய வரந்தரு காதையில், ஏறத்தாழ இருபது அடிகளில் நீதி புகட்டத் தொடங்கிவிடுகிறது.

காப்பியத்தை ஆக்கப் புகுமுன் உள்ளுறை எழுதிக் காட்டுவது அவ்வளவு பொருத்தமானதா என்பதும் சிந்திக்க வேண்டுவதேயாகும், ஒரு வேளை காப்பியத்தைப் பாடி முடித்த பிறகு, இக்காலத்தார் உள்ளுறை என்று முதலில் எழுதிக் காட்டுவதுபோல, அக் காலத்தில் செய்தும் இருக்கலாம். அவ்வாறு கொள்வதில் உள்ள இடையூறு என்ன என்றால் வாழ்த்தும் இப்பதிகத்தில்தான் இடம்பெறுகிறது. கடவுள் வாழ்த்தோ அன்றிச் சிலம்பைப் போல இயற்கை வாழ்த்தோ பாடாமல், ஒருவன் நூலைப்

பாடிவிட்டு வாழ்த்தையும் பதிகத்தையும் இறுதியில் பாடினான் என்பதும் பொருத்தமாக இல்லை.

அடுத்தபடியாக நூல் செய்கின்றவன், தான் கூறவந்த விழுப்பொருள்களைக் காப்பியத்துள் புதைபொருளாக வைத்தால்தான் அழகுடையது. முந்திரிக்கொட்டை போலத் துருத்திக்கொண்டு நிற்குமாறு, அவற்றை முன்னே கூறுவதும் அழகுடையதாகத் தெரியவில்லை.

கம்பனுக்கு முன்னோடியாக உள்ள இரண்டு காப்பியங்களிலும் பதிகங்கள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் கம்பநாடனுக்கு, இவ்வாறு பதிகம் என்ற பெயரில் நூலின் திரண்ட குறிக்கோளை முன்கூட்டிச் சொல்வதும், உள்ளுறையை வரிசைப்படுத்திக் கூறுவதும் ஏற்புடைய தாகப் படவில்லை. கம்பனுக்குப் பின்னர்த் தோன்றிய சிந்தாமணி 'பதிகம்' என்ற பெயரில் உள்ளுறை கூறுகிறது. எனவே கம்பனுக்கு முன்னேயும், பின்னேயும் உள்ள மரபைக் கம்பன் ஏற்கவில்லை. நெடும் பாடல்களையுடைய நூலுக்குரிய இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் 'தோல்' என்ற ஒன்றைக் குறிப்பிடுகிறது.

> இழும் என்மொழியால் விழுமியது நுவலினும்
> பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்
> தோல் என மொழிப—தொன் மொழிப்புலவர்
>
> *(தொல். செய்யுளியல். 230)*

[மெல்லென்ற சொல்லால் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் விழுப்பொருள் பயப்பச் செய்யினும், ஆசிரியப் பாவால் ஒரு கதை போல் தொடுக்கப்பட்டாலும் அவற்றைத் தோல் என்று புலவர் கூறுவர்.]

இவ்வாறு கூறுவதால் தொடர்நிலைச் செய்யுளையும் அவை விழுப்பொருள் பற்றியனவாக அமைய வேண்டும் என்பதனையும் இத் தமிழர் அன்றே கண்டு கூறியுள்ளனர் என்பதை அறியலாம். எத்துணை விழுப்பொருளைக்

கூறினாலும் நேரிடையாகச் சிலம்பைப்போல் கூறினால், அது நீதிநூல் போலாகிவிடும். எனவேதான் முன்னோர் சென்ற வழியைக் கம்பன் மேற்கொள்ளவில்லை.

## கம்பனின் கடவுள் வாழ்த்து

அவன் தன் காப்பியத்துள் கூற முயன்ற விழுப் பொருள்கள் பல. அவற்றுள் முதலாவது பரம்பொருளை ஒரு குறிப்பிட்ட சமயம் எனும் குறுகிய வட்டத்துள் அடைக்கக்கூடாது என்பதாகும். இதனால்தான் கடவுள் வாழ்த்துக் கூறவந்த அப் பெருமான் உலகம் உள்ளளவும் எந்தச் சமயத்தாரும் விரும்பி ஏற்றுக் கொள்ளக்கூடிய முறையில் தன் வாழ்த்தை அமைக்கின்றான். இதற்கு அவனுக்கு வழிகாட்டியாக அமைந்தவர் திருவள்ளுவர்.

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகிலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே!

(பாயிரம்—1)

இந்த நாட்டில் தோன்றிய பழம்பெரும் சமயங்களாகிய சைவம், வைணவம் இரண்டும் உலகம், உயிர், இறைவன் என்ற மூன்றும் என்றும் உள்ளவை என்ற நம்பிக்கை உடையவை. அதற்கேற்பப் புலவன், உலகங்கள் அனைத்தையும் இப்பொழுதுள்ள வடிவில் படைத்தலை யும், காத்தலையும், அழித்தலையும், என்றும் முடிவில்லாத விளையாட்டாக உடையவர் யாரோ, அவரே தலைவர். அன்னாருக்கு நாங்கள் அனைவரும் அடைக்கலமாவோம் என்று கூறுகிறான். 'உள்ளது போகாது இல்லது வாராது' என்ற கொள்கையைச் சற்காரிய வாதம் என்று கூறுவர். கம்பனும் இதனைப் பின்பற்றுபவன் என்பதைப் பின்னருங் காணலாம். எனவே படைத்தல் என்பதைச் சூக்குமமாக உள்ள நிலையிலிருந்து பருப்பொருளான நிலைக்கு மாற்ற

லையும், நீக்கலும் என்பதற்கு பருப்பொருள் நிலைமாறி சூக்கும நிலைக்குச் செலுத்துதலையும் பொருளாகக் கொள்ள வேண்டும். அதனால்தான் 'உள ஆக்கல்' என்று கவிஞன் கூறுகிறான். சோறு ஆக்கினான் என்றால் முன்னர் அரிசியாக இருந்த ஒன்றைச் சோறாக ஆக்கினான் என்றுதானே பொருள்.

## நீத்தார் பெருமை

இதனை அடுத்துள்ள பாடலும் நன்கு கவனிக்கப்படல் வேண்டும்.

சிற்குணத்தர் தெரிவு அரு நல்நிலை
எற்கு உணர்த்த அரிது! எண்ணிய மூன்றனுள்
முற்குணத் தவரே முதலோர்; அவர்
நற்குணக் கடல் ஆடுதல் நன்று அரோ

(பாயிரம்—2)

[சித் என்று கூறப்படும் அறிவைப் பெற்ற ஞானிகளும் அறிந்துகொள்ள முடியாத அந்த உயர்ந்த நிலையை என்னால் கூற இயலாது. ஆராய்ந்து மூன்று என்று கணக்கிடப்பட்ட குணங்களும் (சத்துவ குணம், இராஜச குணம், தாமச குணம்) முன்னர்க் கூறப்பெற்ற சத்துவகுணம் உடையவர்களே முதலாவதாக எண்ணத் தக்கவர்கள். அத்தகைய பெருமக்களுடைய நற்குணமாகிய சத்துவத்துடன் தொடர்பு கொண்டு திளைத்தல் நன்மை பயக்கும்.]

இப்பாடலின் பின் இரண்டு அடிகளையும் மாற்றி 'முற்குணத்தவனே முதலோன்' என்று பாடங் கொண்டு சத்துவகுணனாகிய திருமால் என்று வைணவப் பெருமக்கள் உரை கூறுகின்றனர். கம்பநாடன் மூவர்க்கும் மேம்பட்ட பரம்பொருளையே குறிக்கிறான் என்பதைப் பின்னர்க் காணலாம். சைவ வைணவப் போராட்டத்தை தவிர்க்க வேண்டும் என்ற கொள்கையை முதல் விழுப்

பொருளாகக் கொண்டவன் இவ்வாறு கூறமாட்டான் என்பது தெளிவு. மேலும் குறளை அடியொற்றிப் பாடுகின்றவன் ஆதலின், கடந்த பொருளுக்கு வாழ்த்துக் கூறியபின், குறள் நெறியில் சென்று குணம் என்னும் குன்றேறி நின்ற பெரியவர்களைப் பற்றிப் பேசுகிறான். மனிதன் முக்குண வயத்தன் ஆயினும், பெரியோர்கள் சத்துவ குணத்தை உடையவர்கள். அவர்களைப் பற்றிப் பேசுவதும் அவருடன் இணங்கி இருப்பதும் நன்மை பயக்கும் என்று நீத்தார் பெருமை பேசுகிறது. இப்பாடல், முதல் இரண்டு அடிகளில் குணங்கடந்த பொருளின் நிலையை ஞானிகளும் அறிந்து கூற முடியாது என்று கூறுபவன், பெரியாரைத் துணைக்கோடல் வேண்டும் என்ற கருத்தைப் பின் இரண்டு அடிகளில் குறிக்கிறான். இறப்ப உயர்ந்ததாகிய அப் பொருளை ஞானிகளும் அறிய முடியாது என்றால், நம் போன்றோர் அதுபற்றி அறிய முயல்வது இயலாத காரியம். அப்பொருளை அறியவே முடியாது எனில், அதனுடன் நெருங்கிப் பழகுதல் நடவாத காரியம். நெருங்கினால் ஒழிய மனிதன் பயன்பெற முடியாது. அப்படியானால் வேறு வழி யாது? அப் பொருளை ஓரளவு அறிந்துகொள்ளக் காரணமான சத்துவகுணம் உடைய பெரியோர்களின் தொடர்பு நன்மை பயக்கும் என்ற அருங் கருத்தைக் குறளைப் பின்பற்றிக் கம்பநாடன் பேசுகிறான்.

இனி மூன்றாவதாக உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலையும் காண்போம்.

> ஆதி அந்தம்; அரி; என யாவையும்
> ஓதினார், உலகு இல்லன, உள்ளன
> வேதம் என்பன—மெய்ந் நெறி நன்மையன்
> பாதம் அல்லது பற்று இலர்—பற்று இலார்

(பாயிரம்—3)

[அலகு என்ற அளவு இல்லாதனவும், என்றும் உள்ளனவுமாகிய வேதம் என்பனவற்றை ஆதியினும், அந்தத்திலும் 'அரி ஓம்' என்று கூறி ஓதினவர்கள், சத்தியப் பொருளாகவும், நலஞ் செய்பவனாகவும் உள்ள கடவுளது பாதங்களை அல்லது வேறு பொருளினிடத்துப் பற்று வைக்காமல், அத்திருவடிகளையே பற்றிக் கொள்வர்.]

இரண்டாவது பாடலில், சத்துவகுணமுடைய பெரியோரைப் பற்றி நிற்றல் வேண்டும் என்று கூறிய கவிஞன், கற்றவர் பற்றிப் பேசுகிறான். அளவில்லாதன வாகிய வேதங்களைப் பயில்கின்றவர்கள், அக் கல்வியின் பயனாக மெய்ந்நெறி ஆனவனும், நலஞ்செய்பவனுமாகிய இறைவனே பற்றுக்கோடு என்பதை அறிந்து அவனிடம் சரணம் புகுகின்றனர் என்று பேசுகிறான்.

முதற்பாடல் கடவுள் பற்றிக் கூறி, மனிதன் அவனிடம் சரணம் புகுவதே முறை என்பதனை வலியுறுத்திற்று. இரண்டாவது பாடல் இறைவனுக்கு அடுத்த நிலையில் உள்ள ஞானிகள், சித்தர்கள் என்பவர்களாகிய பெரியோர்கள் பற்றிக் கூறி, மானிட சமுதாயம் அவர்கள் பற்றி அறிவதும் சிந்திப்பதும் பயனுடைய செயலாகும் என்று கூறிற்று. மூன்றாவது பாடல் கல்வி ஒன்றின் மூலமாக அறிவைப் பெருக்கிக்கொள்ள முயலும் மனிதர்கள் பற்றிக் கூறி, அவர்கள் கல்வி உண்மையானதாக இருப்பின், மெய்ந்நெறி நன்மையனாகிய இறைவன் திருவடிப்பற்று உடையவர்களாக இருத்தல் வேண்டும் என்று கூறிற்று. இம் மூன்று பாடல்களும் மூன்று குறள்களை மனத்துட் கொண்டு பாடப் பெற்றவை என்பதை எளிதில் அறியலாம்.

**மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடு வாழ்வார்**

*(திருக்குறள்—3)*

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் *(திருக்குறள்—28)*

கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் *(திருக்குறள்—2)*

*என்ற குறள்களுடன் கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை என்ற இரண்டு அதிகாரங்களின் முழுக் கருத்தும் இம் மூன்று பாடல்களில் இடம் பெற்றிருப்பதை அறியலாம். இறைவன் பெருமை, அடியார் பெருமை, கற்றவர் கடமை, என்ற மூன்றையும் கடவுள் வாழ்த்து என்ற தலைப்பில் கூறிவிடுகிறான் கவிஞன். கடவுள் வாழ்த்துப் பகுதியில், வாழ்த்துடன் மனிதனுக்கும், கடவுளுக்கும் உள்ள தொடர்பைக் கூறி, மனிதன் கடமை என்ன என்பதையும் உணர்த்திய பெருமை கம்பனுக்கே உண்டு.*

## அவை அடக்கம்-வினா?

*இனி அடுத்து வருகின்ற பகுதி 'அவையடக்கம்' என்ற தலைப்பில் உள்ளது. அவை அடக்கம் என்பது சிலம்பிலோ, மேகலையிலோ காணப்படாத ஒன்று. 10ஆம் நூற்றாண்டில் தோன்றிய சீவக சிந்தாமணியில் இடம் பெறும் இப்பகுதி எப்பொழுது தமிழ் இலக்கியத்தில் புகுந்தது என்பதை அறிய முடியவில்லை. இன்று கம்பனது இராமாயணம் என்ற நூலில் காணப்பெறும் பாடல்கள் அனைத்தையும் அவனுடையவை என்று ஏற்பதற்கில்லை. ஆசிரியர் குழு ஒன்று இந்நூலின் மிகுதியான ஏடுகளில் காணப்படும் பாடல்களை மட்டும் எடுத்து நூலாக்கியுள்ளது. சென்னைக் கம்பன் கழகத்தார் வெளியிட்ட இப்பதிப்பில் அவையடக்கம் என்ற பகுதியில் 6 பாடல்கள் உள்ளன. இவற்றுள் இரண்டு பாடல்களில் வான்மீகி பற்றி விளக்கக் குறிப்பாகவும், ஒரு பாடலில் சற்றுக் குறிப்பாகவும் பேசப்படுகிறது.*

........................மாக்கதை செய்த
செய்தவன் சொல் நின்ற தேயத்தே *(பாயிரம்—5)*

பொய்இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே (பாயிரம்—6)

........................
தேவை பாடையின் இக்கதை செய்தவர்
மூவர் ஆனவர் தம்முளும் முந்திய
நாவினான் உரையின்படி நான்தமிழ்ப்
பாவினால் உணர்த்திய பண்பரோ (பாயிரம்—10)

*முதலிரண்டு பாடல்களைக் கொண்டு வான்மீகியைத் தான் கவிஞன் குறிக்கின்றான் என்பதை ஊகிக்க முடிகின்றது. 'சொல் நின்ற தேயம்' என்பதால், வான்மீகம் தவிர வேறு யார் இயற்றிய இராமாயணமும் நாடு முழுதும் பரவி இருக்கவில்லை. 'தெய்வ மாக்கவி' என்று கூறும் அடைமொழியும் நாரதரால் உந்தப்பெற்று வான்மீகி பாடினார் என்பதை வலியுறுத்தவும், அப்பெருமகனார் தவமுனிவர் என்பதை அறிவுறுத்தவும், பயன்படுத்தப் பெறுகின்றன. ஆனால் மூன்றாவது கவிதை சற்று ஐயத்தைத் தருகிறது. வான்மீகிக்கு நன்றி சொல்வது சரி. 5, 6ஆம் பாடல்கள் தொடர்ந்து வருதலின் ஒரே கருத்தை இருமுறை அழுத்தந் தருவதற்காகக் கவிஞன் பாடினான் என்று ஒரளவு அமைதியடையலாம். இடையில் தன்னடக்கம் தெரிவிக்கும் முறையில் 7, 8, 9 ஆகிய மூன்று பாடல்களைப் பாடிய பிறகு மறுபடியும் 'தேவ பாடையின் இக் கதை' என்று தொடங்குவது தலையாய கவிஞன் எவனும் செய்யக்கூடியதன்று. மேலும் 'நான்' என்ற சொல்லாட்சியும், இன்னார் என்று கூறாமல் 'மூவர்' என்று குறித்துச் செல்வதும் இது இடைச்செருகலோ என்று ஐயுற வைக்கின்றது. வான்மீகத்திலிருந்து பலவிடங்களினும் கம்பன் மாறிச் செல்வதனால் இவன் வான்மீகிக்குக் கடன்படவில்லை என்று யாரேனும் கூறிவிடுவார்களோ என்று அஞ்சிய பிற்காலப் புலவர் ஒருவர் இதனை இயற்றிச் சேர்த்திருக்கலாமோ என்று எண்ணத்*

தோன்றுகிறது. இப்பாடலைச் செய்த பெருமகனாரே மறுபடியும் வான்மீகியின் பெயர் வெளிப்படையாக இதில் அமையவில்லை என்று கருதினார் போலும்! மறுபடியும் ஆற்றுப் படலத்தை விட்டுவிட்டு அடுத்துள்ள நாட்டுப் படலத்தில் வான்மீகியின் பெயர் வெளிப்படையாகத் தெரியும்படி ஒரு பாடல் பாடியுள்ளார்.

**வாங்க அரும் பாதம் நான்கும்**
**வகுத்த வான்மீகி என்பான்**
**தீம்கவி செவிகள் ஆரத்**
**தேவரும் பருகச் செய்தான்**
**ஆங்கு அவன் புகழ்ந்த நா**
**அன்பு எனும் நறவம் மாந்தி**
**மூங்கையான் பேசல் உற்றான்**
**என்ன, என் மொழியல் உற்றேன்.**

*(நாட்டுப் படலம்—1)*

[அவன் அடிகளில் ஒன்றை மாற்றிவிட்டு வேறு பதிலாகப் பாடி வைக்க முடியாத நான்கு பாதங்களுடைய பாடல்களால், தேவரும் கேட்டு இன்பமடையச் செய்தான் வான்மீகி என்பான். அவன் புகழ்ந்த நாட்டை ஊமை பேசத் தொடங்கியது போல் நானும் பாடத் தொடங் கினேன்.]

இப்பாடலில் இரண்டு புதுமைகள் உள்ளன. இப்பாடலைப் பாடியவர் வான்மீகத்தில் பழக்கம் இல்லாதவர் போலும். தன் மூலத்தின் அளவுக்கும் அதிகமாகச் செருகு கவிதை களைப் பெற்றுள்ள வான்மீகத்தை 'வாங்கரும் பாதம்' என்பது விந்தையே. அதைவிடப் புதுமை ஒன்றையும் Dr. S. இராமகிருஷ்ணன் தம் 'கம்பனும் மில்டனும்' என்ற நூலின் 78ஆம் பக்க அடிக்குறிப்பில் "முனிவர் புகழ்ந்த நாட்டைத் தான் பாடுவதாகத் தோற்றுவாய்ச் செய்யும் கம்பன் 61 பாடல்களில் நாட்டுப் படலம் அமைக்க, முனிவரோ ஒரே ஒரு சுலோகத்தில் நாட்டைச் சொல்லி

விட்டு நகரத்தைச் சித்திரிக்கப் புகுவார்!" என்று கூறுகிறார். எனவே, இந்தப் பாடலை நமக்கு வழங்கிய பெரியாருக்கு வான்மீகி பற்றியோ அவன் பாடல்களைப் பற்றியோ ஒன்றும் அதிகம் தெரியாது என்பதை ஊகிக்கலாம். Dr. S. இராமகிருஷ்ணன் அவர்கள் அப்பாடல் கம்பனுடையது என நம்புவதால், கவிஞன் தன்னையும் அறியாமல் இந்த வினோதத்தைக் கூறுகிறான் என்கிறார்.

இதனை இவ்வளவு விரிவாக ஆராயக் காரணம் ஒன்று உண்டு. பழங்காலத்திலிருந்தே, கம்பனை, வெறும் பக்தி நூல் ஒன்றை (அதுவும் வைணவ நூலை) இயற்றியவனாகக் கருதினார்களே தவிர அவன் செய்த புரட்சியை அறிந்து கொள்ள முயன்றதாகத் தெரியவில்லை. அவனுடைய காலம் வரையில் தோன்றிய எந்தத் தமிழ் நூலும், பாடல்களும் செய்யாத சில புரட்சிகளை, அப்பெருமான் இராம காதையைக் கூறுமுகமாகவே சாதித்துவிடுகிறான். அவற்றுள் ஒரு சிலவற்றைச் சற்று விரிவாகக் காண்பதே இனி அடுத்துவரும் பகுதிகளின் நோக்கமாகும். வைணவ சமயத்தை வளர்க்கவோ, திருமால் பக்தியைப் பெருக்கவோ, அவன் காப்பியம் இயற்றவில்லை, ஆழ்வார்கள் அருளிச் செயல்கட்கு அப்பால் அவர்களை அடுத்த காலத்தில் தோன்றிய ஒரு கவிஞன் எத்துணைச் சிறந்தவனாயினும் அவர்களை மிஞ்சும் வகையில் ஒன்றும் செய்துவிட முடியாது. இதனை அவன் நன்கு அறிவான். எனவே, சமயப் பரப்புக்கு உதவல் என்பது அவன் கருத்தன்று.

தொடக்கத்திலிருந்தே இத் தமிழ்ச்சாதி விழித்தெழுந்து ஒரு சில கொள்கைகளை, குறிக்கோள்களை மேற்கொள்ள வேண்டும் என்பதே அவன் தலையாய நோக்கமாகும்.

# 5. கம்பன் கண்ட நாடு

முதலாவதாக நாடுபற்றி அவன் கொண்டிருந்த கருத்தைக் காணலாம். நாடு என்றால், மக்கள் பலர் கூடி வாழும் பரந்த நிலப்பரப்பு என்று கூறுவர். 'நாடு என்ப நாடா வளத்தன' என்று திருக்குறள் (739) கூறுகிறது. பல்வேறு வளங்களும் நிறைந்து இருக்கும் ஒரே காரணத்திற்காக ஒரு நாட்டை நல்ல நாடு என்று கூறிவிட முடியுமா? இன்று உலகப் பொருளாதாரத்தில் மிகவும் பெரும் பகுதியைத் தன்னிடத்தே வைத்துள்ள நாடுதான் அணு ஆயுதம் பற்றி நினைந்து நினைந்து, இரவு பகல் உறக்கம் இன்றித் தவிக்கின்றது. பொருளாதாரமோ விளைபொருளோ ஒரு நாட்டைச் சிறந்த நாடு என்று கூறக் காரணமாக இருந்ததுமில்லை; இருக்கப் போவதும் இல்லை. அதனால் இவ்வினாவை மிகப் பழைய காலத்திலேயே அனுபவம் மிக்க சான்றோர் (அவ்வையார்) ஒருவர் எழுப்பி அதற்கு விடையும் அவரே கூறுகிறார்.

> நாடு ஆகு ஒன்றோ! காடு ஆகு ஒன்றோ!
> அவல் ஆகு ஒன்றோ! மிசை ஆகு ஒன்றோ!
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை! வாழிய நிலனே *(புறம்—187)*

[ஏ நாடே! நீ நாடாக இருப்பினும், காடாக இருப்பினும், பள்ளமாக (அவல்) இருப்பினும் மேடாக (மிசை) இருப்பினும் கவலை இல்லை. எங்கே மக்கள் (ஆடவர்) நல்லவர்களாக இருக்கிறார்களோ அங்கேதான் நீ நல்ல நாடு என்று கூறப் பெறுகிறாய்.]

எனவே "கேவலம் பொருள் வளம், வெற்றிச் சிறப்பு முதலியவற்றைக் கொண்டு, ஒரு நாட்டைச் சிறப்புடையது என்று கூறாமல், மக்கள் எங்கே நல்லவர்களாக

இருக்கிறார்களோ அங்கேதான் நல்ல நாடு என்ற பெயரும் நிலைக்கும்" என்ற இந்த ஒளவையாரின் வாக்குக் கம்பனுக்கு ஒரு கற்பனையைத் தூண்டிற்று.

அவன் காலம் வரையில் தமிழகம் இருந்த நிலை முன்னர்க் கூறப்பெற்றதல்லவா? இந்நிலை மாறவேண்டும் என்று கம்பன் நினைக்கின்றான்; இந்தச் சங்கப் பாடல் அவன் சிந்தனையைத் தூண்டுகிறது. ஒரு சிறந்த நாட்டின் மக்கள் எவ்வாறு இருக்க வேண்டும்? நல்லவர்களாக இருத்தல் வேண்டும் என்ற விடையில் யாரும் வேறுபாடு கொள்ள மாட்டார்கள். ஆனால் நல்லவர்கள் என்ற சொல்லுக்குப் பொருள் யாது? தனித்தனியாக நற்குணங் களை அடுக்கி இவை அனைத்தையும் ஒருசேரப் பெற்றவர்கள் நல்லவர்கள் என்று கூறிவிடலாம். ஆனால், அதிலும் ஒரு தொல்லை தோன்றுகிறது. இந்த நற்குணங்கள் எவ்வாறு இவர்கள்பால் வந்தன. சமய சந்தர்ப்பத்திற் காகவோ, வேறு வழி இல்லாமலோ, அன்றி ஏதோ ஒருமுறை அத்தி பூத்தது போலவோ சில நற்குணங்களைச் சிலர் பெற்றுத் திகழ முடியும். ஆனால் அடித்தளம் இல்லாத அந் நற்குணங்கள் சூழ்நிலை மாறியதும் விடை பெற்றுச் சென்றுவிடும்.

## கம்பன் கூறும் புலனடக்கம்

நற்பண்புகள் தனிமனிதனிடமோ, அன்றி வேறு ஓர் இனத்திடமோ நிலைத்து நிற்க வேண்டுமாயின், அவனோ அல்லது அவர்களோ மனத்தை அடக்கிப் பழகியவர் களாய் புலனடக்கம் உடையவர்களாய் இருத்தல் வேண்டும். புலனடக்கம் ஒன்றுதான், மனிதனை மகாத்மாவாக மாற்றும் சக்தி வாய்ந்தது. இப்புலனடக்கத் தின் பெருமையை நம் காலத்து வாழ்ந்த மகாத்மா காந்தி விரிவாக எடுத்துப் பேசியதுடன் இதைக் கடைப்பிடிக்கவும் செய்தார். அவருடைய புலனடக்கம் காரணமாகத்தான்

அவருக்கு ஒரு பெரிய பேரரசையே எதிர்த்து வெல்லும் ஆற்றல் வந்தது.

> உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்
> வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து (திருக்குறள்—24)

[அறிவு என்னும் வலிய அங்குசத்தால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளாகிய யானைகளை எவன் அடக்கி, அவற்றிற்குரிய புலங்கள்மேல் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) செல்லாமல் காக்கின்றானோ அவன் எல்லா நிலங்களிலும் மேம்பட்ட நிலம் என்று கூறப்பெறும் வீட்டு நிலத்திற்கு (மோட்ச சாம்ராஜ்யத்திற்கு) ஒரு விதையாவான்.]

இதனுடன் வள்ளுவன் நிறுத்தினானல்லன். ஐந்து புலன்களையும் அடக்கியவர்களையும் ஒப்பிட்டு ஒரு குறள் கூறுகிறான்.

'ஐந்து புலன்கள் மேல் செல்லும் ஐந்து வகையான ஆசைகளையும் அடக்கினவனுடைய வலிமை எத்தகையது என்று அறிய வேண்டுமா? பெரிய வானத்தில் வாழும் தேவர்கள் தலைவனாகிய இந்திரனே சான்றாவான்' என்ற பொருளில்,

> ஐந்து அவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
> இந்திரனே சாலும் கரி (திருக்குறள்—75)

என்று கூறுகிறான். பெறுதற்கரிய இந்திர பதவியைப் பெற்றுங்கூடப் புலனடக்கம் இன்மையால் உடம்பெல்லாம் கண்ணாகப் பெறும் சாபத்தை அடைந்தானல்லவா? ஐந்து அவித்த கோதமன் சாபம் கொடுப்பதும் ஐந்தை அடக்காத இந்திரன் சாபத்திற்கு ஆளானதும் தக்க சான்று அல்லவா?

## கோசல மக்கள் தலையாய பண்பு

இவற்றை மனத்துட் கொண்ட கம்பநாடன், தான் கூறப்போகும் கோசல நாட்டைப் புலனடக்கமே குறிக்

கோளாகக் கொண்ட மக்களால் நிரப்புகிறான். காப்பியத் தலைவனையோ அன்றித் தலைவியையோ புலனடக்கத் திற்கோ, அல்லது உயர்ந்த பண்பிற்கோ, உறைவிடமாகக் கூறும் நூல்கள் கம்பனுக்கு முன்னும் உண்டு; பின்னும் உண்டு. ஆனால் ஒரு நாடு முழுவதும் புலனடக்கமுடைய மக்களால் நிரம்பி இருந்தது என்ற புதிய கருத்தை முதன்முதலில் காப்பியத்திற் புகுத்தியவன் கம்பனே ஆவான்.

ஆச லம்புரி ஐம்பொறி வாளியும்
காசு அலம்பு முலையவர் கண்எனும்
பூசல் அம்பும் நெறியின் புறம்செலாக்
கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்

(நாட்டுப் படலம்—7)

[குற்றத்தையும் துன்பத்தையும் செய்கின்ற ஐந்து பொறிகள் என்னும் அம்புகளும், மாலை அணிந்த பார்வையுடைய மகளிரின் காமப்போர் தொடுக்கின்ற கண் எனும் அம்பும், தீய வழியில் செல்லாத மக்கள் நிறைந்த கோசல நாட்டிலுள்ள ஆற்றின் பெருமையைக் கூறுவோம்.]

மக்கள் இனம் முழுவதும் ஆடவர், பெண்டிர் என்ற இரு பகுப்பினுள் அடங்கும். கோசல நாட்டிடை வாழும் அனைவருமே புலனடக்கத்தில் தலைசிறந்து நிற்கின்றனர் என்று பேசுகிறான் கவிஞன். அதினும் ஒரு நுணுக்கத்தைப் பெய்து பேசுகிறான். ஐம்பொறிகளாகிய அம்புகள் என்று கூறினவுடனேயே கண்ணாகிய பொறியும் அதனுள் அடங்கிவிடுமே? அவ்வாறு இருக்க, 'ஐம் பொறி வாளியும்' 'கண் எனும் பூசல் அம்பும்' என மறுபடியும் கண்ணை வேறு பிரித்துக் கூற வேண்டிய இன்றியமையாமை யாது? என்ற வினா நியாயமானதே. ஆழ்ந்து சிந்தித்தால், மற்ற நான்கு பொறிகளினும் (மெய், வாய், மூக்கு, செவி) கண் வேறுபட்டது என்பது விளங்கும். இந்த நான்கு பொறிகளும் அவை இருக்கும் இடத்திற்கு அவற்றின் புலன்களான ஊறு (மெய்), சுவை (வாய்), நாற்றம் (மூக்கு),

ஓசை (செவி) என்ற நான்கு புலன்களுக்கும் இடமான பொருள்கள் நெருங்கி வந்தால்தான் இந்தப் பொறிகள் அவற்றைப் பற்றிக்கொள்ளும். ஆனால் கண்ணாகிய பொறி மிக நீண்ட தூரத்தில் இருக்கும் பொருள்களையும் தானே சென்று பற்றிக்கொள்ளும். அதனாலேயே சிவஞான போதத்திற்கு மாபெரும் உரை வகுத்த மாதவச் சிவஞான சுவாமிகள், அந்த நான்கு பொறிகளையும், 'நின்று பற்றும் பொறி' என்றும் கண்ணை மாத்திரம் 'சென்று பற்றும் பொறி' என்றும் கூறினார். அதனால்தான் கவிஞர் பிரான் கண்ணை மட்டும் தனியே எடுத்து விதந்து 'கண் எனும் பூசல் அம்பும்' என்று கூறுகிறான்.

## மகளிர் கண்

இனிக் கண்ணை மட்டும் தனியே எடுத்து விதக்க வந்த கவிஞன் பொதுவாகக் 'கண்' என்று கூறாமல் 'காசு அலம்பு முலையவர் கண் எனும் பூசல் அம்பு' என்று ஏன் கூற வேண்டும்? அப்படியானால் ஆடவர் கண்கள் இத் தவறைச் செய்யாவா என்றால், அதிலும் ஒரு நுண்மையை வைத்துள்ளான் கவிஞன். மகளிர் கண்களைப் பற்றி வள்ளுவன் கூறியன ஆராயத்தக்கன.

> நோக்கினாள் நோக்கு எதிர்நோக்குதல் தாக்கு அணங்கு
> தானை கொண் டன்னது உடைத்து
>
> கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தால் பெண்தகை
> பேதைக்கு அமர்த்தன கண் (திருக்குறள்—1082, 1084)

[இத்தகைய நோக்கினை உடையவள், என் நோக்குக்கு எதிர்நோக்கம் செய்தல் இயல்பாகவே தாக்கி வருத்தும் அணங்கு ஒன்று படையையும் திரட்டிக்கொண்டு வந்தது போலாகும்.

பெண்தன்மை நிறைந்த இப்பேதைக்கு உளவாய கண்கள் தம்மைக் கண்டவர்களுடைய உயிரை உண்ணும் தோற்றத்துடன் அமர்ந்திருந்தன.]

இங்ஙனம் தம் கண்களால் போர் தொடங்கி, எத்தகைய வீரனையும், தன் வீரத்தை மறந்து, உறக்கத்தையும் மறந்து செயற்படாமல் செய்யும் இயல்பு மாதரார் கண்கட்கே உரியன ஆகலின், அவர்கள் கண்கள் நெறியின்புறம் செல்லமாட்டா என்று கூறுகிறான். புலனடக்கம் பயின்றவர்கள் மட்டுமே மேலும் மேலும் பல பயிற்சிகளை மேற்கொண்டு, இறுதியில் 'யான், எனது என்னும் செருக்கை அறுத்த' பிறகு வீடுபேற்றை அடைகின்றனர்.

## புலனடக்கம் உடையார் புகலிடம்

நாடு முழுவதும் புலனடக்கம் பயிலும் மக்கள் நிரம்பியுள்ளனர் என்று கூறுவதோடு புலவன் அமைதி அடைந்து விடவில்லை. நகரப் படலத்தில் அயோத்தியின் சிறப்பினைக் கூறவந்த கவிஞன் மறுபடியும் புலனடக்கத்தை வலியுறுத்துகிறான்:

தங்குபேர் அருளும், தருமமும், துணையாத்
தம்பகைப் புலன்கள் ஐந்தும் அவிக்கும்
பொங்கு மாதவமும், ஞானமும் புணர்ந்தோர்
'யாவர்க்கும் புகலிடமான
...........................இந்நகர்

(நகரப்படலம்—6)

இயல்பாகப் புலனடக்கம் செய்பவர் நிறைந்துள்ள நாட்டில் யாரேனும் ஒருவர் புறநடையாக மனத்துக்கண் மாசு அடையப் பெற்றால், அவர்களை அந்நகரமே ஒறுக்கும் என்ற பொருளில்,

......இதம் அலநினைவார்
மனத்தையும் எறியும் பொறி உள.... (நகரப்படலம்—12)

[மனத்துக்கண் தவறான நினைவு தோன்றினால் அவர்களையும் தண்டிக்கும் கருவி அங்குளது.]

## தசரதன் விருப்பம்

*புலனடக்கம் செய்வது எளிதன்று. ஆனால் ஒரு சிலர்க்கு திடீரென்று அவ்வெண்ணம் தோன்றலும், விடாப்பிடியாக அவர்கள் அதனைப் பற்றிக்கொண்டு, மேலே செல்லுதலும் உலக வாழ்க்கையில் நடைபெறக் கூடியன என்பதை நேரிலும் காண்கிறோம்; வரலாற்றிலும் படிக்கின்றோம். காதற்ற ஊசியையும் வறட்டித் துண் டையும் கண்ட மாத்திரத்தில், பெருஞ்செல்வத்தில் வாழ்ந்த திருவெண்காடர் ஒரே வினாடியில் அனைத்தையும் துறந்து விட்டுப் பட்டினத்துப் பிள்ளையாராக ஆன வரலாற் றையும் அறிவோம். இதேபோல அறுபதினாயிரம் மனைவி யரை மணந்து அத்துணைக் காலம் அரசோச்சிய தசரத னுக்குப் புலனடக்கத்தின்மேல் தணியாக் காதல் தோன்று வதைக் கம்பன் வலியுறுத்துகிறான்:*

*மகனுக்கு முடிசூட்ட முனைந்த தசரதன், மந்திரக் கிழவர்களை ஒருங்குகூட்டிப் பேசத் தொடங்குகிறான்.*

நம்குலக் குரவர்கள், நவையின் நீங்கினார்
வெங்குலப் புலன்கெட வீடு நண்ணினார்

கள்ளரின் கரைந்து உறை காமம் ஆதி ஆம்
உள்உறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனோ?

எஞ்சல் இல் மனம் எனும் இழுதை ஏறிய
அஞ்சு தேர் வெல்லும் ஈது அருமை ஆவதோ?

*(மந்திரப்படலம் 16, 17, 18)*

*[குற்றத்தின் நீங்கிய என் முன்னோர்கள் கொடிய புலன்களை அடக்கியதால் வீடு பெற்றனர். திருடனைப் போல ஒளிந்துநின்று துன்பஞ் செய்யும் காமம் முதலாய பகைஞருக்குப் பயந்து வாழ்வேனோ? மனம் என்று சொல்லப்படும் பேய் ஏறிச் செலுத்தும் ஐம்பொறிகளாகிய தேர்களை வெல்வது எனக்கு எளிமையானதேயாம்.]*

தசரதனே புலனடக்கம் பற்றி இத்துணை விரிவாகப் பேசுகிறான் எனில், கவிஞன் தன் குறிக்கோளை நிறை வேற்ற எல்லாப் பாத்திரங்களையும் பயன்படுத்துகின்றான் என்பதை அறிய முடிகிறது.

## கோசல மக்கள் புலனடக்கம்

நாட்டுமக்கள் புலனடக்கத்தில் பயில்கின்றார்கள் என்றால் அதன் பயனை எங்கெங்கெல்லாம் காட்ட முடியுமோ, அங்கெல்லாம் காட்டத் தவறவே இல்லை. புலனடக்கம் பயின்றவர்கட்கு அதன் பயனாகக் காமம், வெகுளி, மயக்கம், பற்றுள்ளம் (பேராசை) என்பவை இல்லாமல் போகும். கோசல நாட்டு மக்களைப் பற்றிப் பேசவரும் புலவன் இவற்றை நினைவில் கொண்டே பேசுகிறான். அவர்கள் மண், பெண், பொன் என்ற மூன்று ஆசைகளையும் பெரிதும் துறந்தவர்கள். எது தமக்கு உள்ளதோ அதை வைத்துக்கொண்டு மன அமைதியுடன் வாழ்கின்றனர் என்கிறான். இதை நேரிடையாகக் கூறாமல் மறைமுகமாகப் பேசுகிறான் கவிஞன்.

"நீரிடை உறங்கும் சங்கு;
நிழலிடை உறங்கும் மேதி
தாரிடை உறங்கும் வண்டு
தாமரை உறையும் செய்யாள்
(நாட்டுப்படலம்—6)

[நீரில் சங்கும், நிழலில் எருமையும், மக்கள் அணிந் துள்ள மாலையில் வண்டும், தாமரை மலரில் இலக்குமியும் உறங்குகின்றனர்.]

இப்பாடலிலிருந்து மக்கள் போதுமென்ற மனத்துடன் வாழ்கிறார்கள் என்று எவ்வாறு கூறுவது? ஆம்! கோசல எருமைகள்கூட உண்ட உணவு போதுமானது என்று கருதி நீரிடைப்படுத்து உழக்காமல் நிழலிடை உறங்குகிறதாம்.

சரி! மக்கள் அணிந்த மாலையில் வண்டு உறங்குகிறது என்று கூறினால் என்ன பொருள்? அன்றலர்ந்த மலர்களால் மாலை தொடுக்கப்பட்டிருந்தால் அம்மலர்களில் உள்ள தேனைக் கருதி வண்டுகள் மொய்க்கும். அது அவர்களுடைய முருகியல் சுவையை (Aesthetic Sense) குறிக்கும். வண்டுகள் மாலையில் கட்டியுள்ள பூவில் உறங்குகின்றன என்றால் என்ன பொருள்? பூக்களை அணிந்தவர்கள் இங்கும் அங்கும் ஓடியாடி அலைந்து கொண்டிருந்தால் அவர்கள் அணிந்துள்ள மாலையும் ஆடி அசைந்துகொண்டே இருக்கும். ஆடிக்கொண்டிருக்கும் பூவில் வண்டு உட்காராது. அதிலும் அது உறங்க வேண்டும் என்றால், மாலை அணிந்தவர்கள் ஓயாமல் ஓடியாடித் திரியாமல் அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்துள்ளனர் என்றுதானே பொருள். எப்பொழுது மனிதன் ஓடியாடித் திரிவான்? மேலும் மேலும் பலவிடங்கள் சென்று பொருளைச் சேகரிக்க வேண்டும் என்று நினைப்பவன் தானே அங்குமிங்கும் ஓடி ஆடித் திரிவான்? கோசல மக்கள் எவ்விதச் சலனமுமின்றி ஓரிடத்தில் அமைதியாக உள்ளனர் என்றால், பொருள் சேகரிக்க வேண்டும் என்ற பேராசை இல்லாமல் அமைதியாகப் போதுமென்ற மனத்துடன் வாழ்கிறார்கள் என்பதுதானே பொருள்! மக்கள் மேலும் மேலும் பொருள் சேகரிக்க வேண்டும் என்ற பேராசையால் தூண்டப் பெற்றால், பொருளுக்குத் தலைவியாகிய இலக்குமி அவர்களைத் திருப்திப்படுத்த வேண்டுமென்ற கடமை காரணமாக இங்கும் அங்கும் அலைய வேண்டி வரும். ஆனால் கோசல மக்கள் போதுமென்ற மனம் உடைமையின் திருமகளை விரும்பி அழைப்பார் யாரும் இலர். தன்னை யாரும் விரும்பி அழைக்கவில்லை என்பதால், இலக்குமியும் தன் உறைவிடமாகிய தாமரையில் உறங்குகிறாளாம். எனவே ஒரே அடியில் கோசல நாட்டு மக்களின் மன அமைதியைக்

கூறுமுகமாக அவர்கள் புலனடக்கத்தில் வல்லவர்கள் என்ற தன் முதல் கூற்றுக்கு அரண் செய்துவிடுகிறான் கவிஞன்.

புலனடக்கம் என்ற அடிப்படையில் காவியத்தைத் தொடங்கினமையின், அதை மறவாமல் அங்கங்கே வலி யுறுத்திச் செல்கிறான். கோசல நாட்டை ஒரு கற்பனை நாடாகவும், அந்தச் சமுதாய மக்களைக் குறிக்கோள் வாழ்க்கை வாழும் மக்களாகவும் கற்பிக்கின்றான். அவனுக்கு முன்னும் பின்னும் தோன்றிய நூல்கள் தமிழக நிலைக்களத்தில் எழுந்தவை. சீவக சிந்தாமணி ஏமாங்கதம் என்னும் நாடுபற்றிக் கூறுகிறது. அதனை இயற்றிய திருத்தக்கதேவரும் ஏமாங்கத நாட்டைத் தமிழ்நாட்டை வருணிப்பது போலத்தான் வருணிக்கின்றார். ஆனால் கம்பன் தமிழகத்தின் மேல் கொண்டிருந்த நாட்டுப் பற்று ஈடு இணையற்றது. ஆகலின்,

கோசலத்தைத் தமிழகத்தின் பிரதிபலிப்பாகவே படைக்கின்றான்.

## கவிஞன் தமிழ்ப்பற்று

இறையன்பைத் தவிரப் பிறிது ஒன்றுக்கும் இடங் கொடாத நாயன்மார்களும் ஆழ்வார்களுமே தம் தமிழ்ப் பற்றைப் பரக்கப் பேசியுள்ளனர் என்றால், கல்வியிற் பெரியனாகிய கம்பன் தமிழ்ப்பற்றுக் கொண்டிருத்தலை யும், அதனை வாய்ப்பு நேர்ந்தபொழுது வெளிப்படுத்தலை யும் புதுமை என்று நினைப்பதற்கில்லை.

நிழல்பொலி கணிச்சி மணிநெற்றி உமிழ் செங்கண்
தழல்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான்
நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்
என்றும் உளதென் தமிழ் இயம்பி இசை கொண்டான்

(அகத்தியப் படலம்—41, 36, 47)

*['ஒளிவிடுகின்ற மழுவையும், ஒளியுடைய நெற்றி யையும், சிவந்த கண்களையும், நெருப்புப் போன்று சிவந்த நிறத்தையும் உடைய சிவபெருமான் தந்த தமிழைத் தந்தவன்.'*

*'உலகம் முழுவதையும் தமிழால் அளந்த அகத்தியன்' 'சாவா, மூவாக் கன்னித் தமிழைப் பேசி அதனால் புகழ் பெற்றவன்.']*

*திருமால் உறையும் வேங்கட மலையைத் தென் மொழிக்கும், வட மொழிக்கும் வரம்பாம் என்பான்.*

வடசொற்கும் தென் சொற்கும் வரம்பாகி
........................வேங்கடம் *(நாடவிட்ட படலம்—25)*

*சுக்கிரீவன் பிராட்டியைத் தேடி தென் திசை செல்லும் படைகட்கு வழி கூறுவதாக உள்ள இடத்தில், தமிழ்ச்சங்கம் பற்றிப் பேசுகிறான்.*

தென் தமிழ் நாட்டு அகன் பொதியில் திருமுனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்
என்றும் அவன் உறைவிடமாம் ஆதலினால்
அம் மலையை இறைஞ்சி ஏகி...
*(நாடவிட்ட படலம்—31)*

*[வானரர்கள் செல்லும் வழியில் தமிழ்நாட்டில் உள்ள பொதிகை மலையைக் காண நேரும். சங்கம் வளர்த்த தமிழ் முனிவன் அகத்தியன் என்றும் உறையும் இடம் அது. ஆதலால் அம்மலையை வணங்கிச் செல்க.]*

## பல்வேறு வகை மக்கள்

*கவிஞன் கொண்ட தமிழ்க்காதல் தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியத்திலும் சென்று நிலைபெற்றது. எனவே தமிழகத்தில் சங்ககாலத்தில் வாழ்ந்த ஐவகை நில மக்களையும் கோசல நாட்டில் குடியேற்றுகிறான். கம்பன் வாழ்ந்த 9ஆம்*

நூற்றாண்டில் தமிழகத்தில் இந்த ஐவகை நிலப்பிரிவும் அதில் வாழும் மக்கள் பிரிவும் உறுதியாக இல்லை. அவ்வாறு இருந்தும் பழைய தமிழ் மரபை மனத்துட் கொண்டு இத்தமிழர் வாழ்வு முறையைக் கோசலத்தில் கவிஞன் குடி யேற்றியது எற்றுக்கு? நாட்டுப்படலத்தில் மூன்றாம் பாடல் முதல் 14ஆம் பாடல் வரை மருதநில மக்கள் வாழ்வு முறை விரிவாகப் பேசப்படுகிறது. 15, 16ஆம் பாடல்களில் அம்மக்கள் பொழுதுபோக்கு வகைபற்றிப் பேசும்பொழுது, அந்த மருத நிலத்தில் வாழ்ந்த கோசல மக்கள் அனைவரும் ஒரேபடித் தான மனவளர்ச்சி உடையவர் அல்லர்; அவருள்ளும் சாதாரண மக்களிலிருந்து மனவளர்ச்சி அடைந்தவர் வரை நான்கு வகையான மக்கள் இருந்தனர் என்கிறான்.

பொருந்திய மகளிரோடு
  வதுவையில் பொருந்துவாரும்
பருந்தொடு நிழல் சென்றன்ன
  இயல் இசைப் பயன் துய்ப்பாரும்
மருந்தினும் இனிய கேள்வி
  செவிஉற மாந்துவாரும்
விருந்தினர் முகம்கண்டு
  அன்ன விழாஅணி விரும்புவாரும்

(நாட்டுப்படலம்—16)

[தமக்குப் பொருத்தமான மகளிருடன் மணஞ் செய்துகொண்டு அதில் பொழுதுபோக்குபவர்— பருந்தைத் தொடரும் நிழலைப் போல இயலைத் தொடரும் இசையை அனுபவிப்பவர்— அமிழ்தத்தை விட உயர்ந்ததாகிய கேள்விச் செல்வத்தில் ஈடுபடுபவர்— விருந்தினர் முகத்தைக் கண்டு உணவு தந்து அத்னை விழா எனக் கருதி மகிழ்பவர்.]

இங்குக் கூறப்பெற்ற முறையை மேனோக்கு முறை (Climax) என்று கூறுதல் வேண்டும். புதுமணத்தில் ஈடுபடுபவர் சாதாரண மக்கள்; அவரினும் உயர்ந்து

மனவளர்ச்சி பெற்றவர் நுண்கலைகளுட் சிறந்த இயல் இசையில் ஈடுபடுகிறார்கள்; அவரினும் வளர்ச்சி பெற்ற வர்கள் உயிருக்கு உறுதி பயப்பதாகிய கேள்விச் செல்வத்தில் ஈடுபடுகின்றனர்.

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை (திருக்குறள்—411)

எனவே நன்கு மனவளர்ச்சி யடைந்தவர் கேள்விச் செல்வத்தில் மூழ்கியுள்ளனர். என்றாலும் இந்த மூன்றும் தனக்கு மகிழ்ச்சியும், இன்பமும், ஞானமும் தரும்பொழுது— போக்குகளேயாகும். எவ்வளவு படிப்படியாக உயர்ந் தவையாக இவை இருப்பினும் தன்னலத்தின் அடிப்படையில் நிற்பவைதாம். எனவே கவிஞன் நான்காவதாக ஒரு கூட்டத்தாரை அறிமுகப்படுத்துகிறான். அவர்கள் விருந் தினர்களை உபசரித்து அதில் இன்பங் காண்கின்றனர். மனிதனிடம் இயல்பாக அவன் பிறப்பிலிருந்தே தொடர்வது தன்னலம். அது ஓரளவு திருமணத்தில் விரிந்து, புதல்வரைப் பெறுதலில் இன்னுஞ் சற்று வளர்ந்து, அன்புடைமை அம்மனிதனுக்கு மலர்கின்றபொழுது விருந்து புரக்கின்ற நிலை ஏற்படுகிறது. எனவே, தன்னல அடிப்படையில் தோன்றும் இன்பத்தை வரிசைப்படுத்தி ஒன்றின் ஒன்று உயர்ந்ததாக உள்ளமையைக் கூறி, இறுதியாகத் தன்னலத் தியாகஞ் செய்பவர்களை நான்காவதாகக் கூறுகிறான் கவிஞன்.

## உழவர் வாழ்க்கை

அடுத்து உழவர்கள், 'வறியவர்க்கு உதவி, மிக்க, விருந்துண மனையின் உய்ப்பார்' (நாட்டு 20) என்று கூறும்பொழுது, வறியவர்க்கு ஈந்து என்று கூறாமல் உதவி என்று கவிஞன் கூறுவது ஆராயத்தக்கது. புலனடக்கத்தில் வளர்ந்து மன ஒருமைப்பாட்டைப் பெற்றவர்கள் பிறருக்கு ஈவதாக எதையும் கருதமாட்டார்கள். காரணம் ஈபவன் உயர்ந்தவன் என்றும்,

ஏற்பவன் தாழ்ந்தவன் என்றும் ஆகிவிடும். எனவே கோசலத்தில் உள்ள மக்கள் தாம் செய்வதை ஈகை என்று கருதாமல் உதவி என்று கருதினார்களாம். கோசலம் கடல் பகுதி இல்லாத உள்நாடு என்பதைக்கூட மறந்துவிட்டுத் துறைமுகத்தில் கப்பல்கள் நிற்பதைப் பேசுகிறான். காரணம் தமிழ்நாட்டில் கடல்வாணிகம் உண்டு. எனவே கோசலத்திலும் அதனை ஏற்றிப் பேசுகிறான். (நாட்டு-15). தெள்விளிச் சிறியாழ்ப்பாணர்; கொடிச்சியர் இடித்த கண்ணம் (குறிஞ்சி மக்கள்), எயினர்வாழ் சீறூர் (பாலை); மறிவிழி ஆயர்மாதர் (முல்லை), கோள் நெறி கற்றிலாத நுளைச்சியர் (நெய்தல்) என்ற வகையில் ஐவகை நிலத்தையும் கோசலத்தில் வைத்துக் காண்கிறான் கவிஞன். திணைமயக்கம் என்று இலக்கணம் கூறும் ஒரு பகுதியும் உண்டு. அதனையும் விடாமல் பேசுகிறான். தமிழர் வாழ்க்கை முறையையும் கோசலத்தில் ஏற்றிக் காண்கிறான். அவ்வாறு செய்ய ஏதேனும் காரணம் இருக்குமோ என்று சிந்தித்தால் இலைமறை காயாகக் கவிஞன் கருத்தை அறிய முடிகிறது.

## பரத்தையர் இல்லா மருதம்

ஆறு செல் படலத்தில், அங்கதன், அனுமன் முதலானவர்கள் பிராட்டியைத் தேடித் தென்திசை வருதலைக் கூறும் பகுதியில் அவர்கள் தமிழ்நாட்டில் புகுந்தனர் என்று கூற வருகிறான் கவிஞன்.

> வினையின் நீங்கிய பண்பினர் மேயினார்
> இனிய தென்தமிழ் நாடு சென்று எய்தினார்
>
> *(ஆறு செயல்படலம்—51)*

[வினைத் தொடர்புகளிலிருந்து நீங்கிய பண்பினை உடையவர்கள் பலரும் மேவி வாழ்கின்ற இனிய தென் தமிழ் நாட்டைச் சென்று அடைந்தனர். வினையின் நீங்கிய பண்பினர் என்பதற்கு வானரர் என்று பொருள் கூறுவாரும் உளர்.]

இவை அனைத்தையும் சங்க காலத் தமிழ் மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் வகையில் பாடிய கம்பநாடன், அன்றைத் தமிழர்களிடம் இருந்த குறைகளைக் கோசலத்தில் ஏற்றவில்லை என்பது கவனிக்கத்தக்கது. 14 பாடல்களில் மருத நிலத்தையும், அதில் வாழும் மக்கள் வாழ்க்கை முறையையும் வருணித்த கவிஞன், மருதத் திணைக்குரிய பரத்தையர் பற்றி ஒரு சொல்கூடச் சொல்லவில்லை என்பது வியப்புக்குரியது. புலனடக்க அடிப்படையில் காவியம் தொடங்கினவன் பரத்தையரைப் பற்றிப் பேசுதல் பொருந்தாக் கூற்றாகிவிடும். எனவே அதை அறவே ஒதுக்கிவிட்டான்.

புலனடக்கத்தில் தொடங்கியதால், அதன் விளைவு களையும் கூடவே பேசிச் செல்கிறான். மக்கள் எவ்வாறு பொழுது போக்குகின்றனர் என்பதை வைத்துத்தான் அவர்களுடைய மனவளர்ச்சியை எடை போட முடியும். கோசல நாட்டு மக்களின் பொழுதுபோக்கை அவன் கூறுகின்ற விதமே சிறப்பானதாக உளது.

ஊடல், கூடல், இன்இசை பாடவும், விறலியர்
பாடல் கேட்கவும். ஆடவும் பொழுது போம் சிலர்க்கு
யானை ஏறவும் குதிரைகள் பூட்டிய இரதம் ஏறவும்

வறுமையால் வாடியவர்கட்குப் பரிவுடன் வழங்கவும்
பொழுதுபோம் சிலர்க்கு

போர்க்கலை தெரிதலின் பொழுதுபோம் சிலர்க்கு
தேறல் மாந்தி, சூது உந்தலின் பொழுதுபோம் சிலர்க்கு

(நகரப்படலம்—66, 67, 69)

ஒரு நகரம் என்றால் பல்வேறு வகையான மக்களும் இருக்கத்தானே செய்வர். அவரவர் பொழுதுபோக்கும் முறையில் அவரவர் மனவளர்ச்சியை அறிய வழிவகுக்கும் கவிஞன் ‘பொருந்திய மகளிரோடு’ என்று முன்னர்க் காட்டப் பெற்ற பாடலில் மனநிலையில் உயர்ந்துள்ள

மக்களின் பொழுதுபோக்கை வருணித்தான். அதனை அடுத்துத் தாழ்நிலையிலுள்ள மக்கள் பற்றி நகரத்தில் பேசுகிறான். இவர் நால்வகையினர். முதல் வகை இசை நாட்டியம் என்பவற்றிலும், இரண்டாம் வகை போர்ப் பயிற்சியிலும், மூன்றாம் வகை சுகவாழ்வு வாழ்ந்துங்கூட வறுமையுடை யாரை மறவாமல் வழங்குகின்ற பண்பிலும் திளைக்கின்றனர். நான்காவது வகையினர் குடியிலும் சூதிலும் பொழுதைப் போக்குகின்றனர்.

## நாட்டு நகர மக்கள் வேறுபாடு

நாட்டு வருணனையில் மனவளர்ச்சி உடையவர்களின் பொழுதுபோக்கைக் கூறின கவிஞன், நகரமாந்தர் பொழுதுபோக்கைப் பேசும்பொழுது சூதாடுபவர்கள் சிலர் உண்டு என்று கூறுகிறான். இன்றுங்கூட கிராமியப் பகுதிகளில், சோம்பிப் பொழுதைக் கழிப்பவர்களையும் குதிரைப் பந்தயம் செல்பவர்களையும் காண முடியாது. செல்வர்கள் நிறைந்து வாழும் நகரங்களில் இத்தகைய மக்கள் வந்து கூடுவது தடுக்க முடியாத ஒன்றுபோலும்! இதை 9ஆம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞன் கூறுவது, அவனுடைய தீர்க்கதரிசனத்திற்கு எடுத்துக்காட்டாகும். இவ்வாறு கூறுவது சமுதாயத்தில் இத்தகையவர்களும் சிலர் உண்டு என்பதை அறிவிப்பதற்கே அன்றி வேறு காரணம் ஒன்றும் இல்லை.

அறநெறியைக் கடைப்பிடித்துப் பொறிபுலன்களை அடக்கி வாழ்தல் என்றால், காட்டுக்கு ஓடிக் கனசடை வளர்த்து, மனித சமுதாயத்தையே மறந்து வாழ்தல் என்பது பொருளன்று. இத்தமிழ் நாட்டார் அத்தகைய துறவை, வாழ்க்கை முறையை என்றுமே ஏற்றுக் கொண்டதில்லை. மேலே கூறப்பெற்ற இரண்டு பண்புகளையும் (கடைப் பிடித்தல், அடக்கி வாழ்தல்) மேற்கொண்டவர்கள் வெளித்தோற்றத்திற்கு எவ்வித மாறுபாட்டையும்

காட்டுவதில்லை. அனைவரையும் போலவே அவர்களும் உண்டு, உடுத்து, இல்லறம் நடத்தி, நன்மக்களைப் பெற்று, உலகிற்கு உபகாரமாக வாழ்கின்றனர். ஆகவே, கவிஞன் மக்களின் அன்றாட வாழ்வு பற்றிக் கூறும்போது வேறுபாடு ஒன்றையுங் காண முடிவதில்லை.

பந்தினை இளையவர் பயிலஇடம். மயில்ஊர்
கந்தனை அனையவர் கலைதெரி கழகம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்

(நாட்டுப்படலம்—48, 51)

[இளம் மகளிர் பந்தாடும் இடமும், முருகனை ஒத்த இளைஞர்கள் கலைக் கழகங்களில் ஈடுபட்டுத் தம் அறிவை வளர்க்கின்ற இடமும்,

'செவிக்குத் தேன்' என இருத்தலின் பலரும் விரும்பும் கவிதைகள் காப்பியங்களில் நிறைந்துள்ளன.]

## மகளிர் முன்னேற்றம்

எந்த ஓர் இனமும், அந்த இனத்தவர் வாழும் நாடும் முன்னேற்றம் அடைய வேண்டுமாயின், அந்த இனத்திலுள்ள அனைவரும் அதற்கு உதவியாக இருத்தல் வேண்டும். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகிய மூன்று பிரிவினரும் கூடுமானவரை ஒரே கொள்கையுடன் வாழ்ந்தால் ஒழிய முன்னேற்றம் கிடைப்பது கடினம். அதிலும் சிறப்பாக எந்த ஓர் இனத்திலும் ஏறத்தாழச் சரிபாதியாக உள்ள மகளிர் முன்னேற்றம் பெறவில்லையானால், அந்த இனம் வளர்ச்சி குன்றும். ஆண்கள் மட்டும் எத்துணை வளர்ச்சி அடைந்தாலும் அது ஒருபக்க வளர்ச்சியாக முடியுமே தவிர, முழுப் பகுதி வளர்ச்சியாக ஆக முடியாது. எத்தனை குறைகளிருந்திருப்பினும் சங்ககால மக்கள் வாழ்க்கையில் மகளிர் சமஉரிமை பெற்று வாழ்ந்தனர் என்பதை அவர்கள் இலக்கியம் மூலமே அறிய

முடிகிறது. கல்வி, அறிவு, பண்பாடு ஆகியவற்றில் அக்கால மகளிர் ஆண்கட்கு எவ்விதத்திலும் குறைந்து நிற்கவில்லை. அரசர்கட்கும் அறிவு கொளுத்திய மகளிரும், முரண்பட்ட இரு அரசரிடைச் சந்து செய்விக்கச் சென்று, அப்பணியில் வெற்றி பெற்ற மகளிரும் உண்டு. பழைய கிரேக்கம் முதலிய நாகரிகங்கள் இன்று இல்லாமல் போனதற்கும், இத் தமிழர் நாகரிகம் மட்டும் இன்றும் நின்று நிலைத்துத் தழைப்ப தற்கும், இது ஒரு முக்கிய காரணமாக இருந்திருக்க வேண்டும். மகளிரைப் போற்றி மதித்து உரிமை வழங்கிய வரலாறு, ஏனைய நாடுகளில் அதிகம் காணப்படவில்லை.

சங்க காலத்தை அடுத்த காலங்களிலும், இக்கொள் கைக்கு ஊறு ஏதும் விளையவில்லை. ஆனால் களப்பிரர் இடையீட்டுக் காலத்தில் இக்கொள்கைக்கு மாறான கொள்கை இடம் பெறலாயிற்று. மகளிர் வீடுபேறு அடையும் தகுதியுடையவர் அல்லர் என்றும், அவர்கள் பாவப்பிறவிகள் என்றும் கூறும் கொள்கை உடையவர்கள் களப்பிரர்.

## பக்தி இயக்கக் காலத்தில் மகளிர் நிலை

எனவே, அவர்களை அடுத்துத் தோன்றிய பக்தி இயக்கக் காலத்தில் மகளிர்க்கு உரிய முறையில் ஏற்றந் தந்தனர் நாயன்மார்களும் ஆழ்வார்களும். தாம் வழிபடும் கடவுளுக்கேகூடப் பெண் இயல்பு தந்து அந்தக் கடவுளே பெண் ஆண் வடிவாக உள்ளான் என்பதை வலியுறுத்திச் சென்றனர். ஆண்டாள், காரைக்காலம்மையார், திலக வதியார், மங்கையர்க்கரசியார் போன்ற அடியார்கள் ஏனைய ஆழ்வார்கள், நாயன்மார்களுடன் உடன்வைத்து எண்ணப் பெற்றனர். எனவே, தமிழரின் தனிப் பண்பாகிய மகளிர்க்கு மதிப்புத்தரும் இம் மரபு மறுபடியும் தமிழ கத்தில் தழைத்து ஓங்கிற்று.

## கம்பன் காட்டும் மகளிர்

*இதன் அருமைப்பாட்டை அறிந்த கம்பநாடன், இது வளரும் சமுதாயத்திற்கு இன்றியமையாதது என்பதை நினைந்து, கோசல சமுதாயத்தில் மகளிர் உரிமையை ஏற்றுகிறான்.*

பெருந் தடங்கண் பிறைநுதலார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும், அன்றி, விளைவன யாவையே?

*(நாட்டுப்படலம்—35)*

*[அகன்ற பெரிய கண்களையும், பிறை போன்ற நெற்றியையும் உடைய பெண்கட்குப் பொருத்தமான கல்வியும், செல்வமும் நிறைந்திருத்தலால், வறுமையால் வாடிவந்தார்க்கு ஈதலும், அன்றாடம் விருந்தினரை உபசரிப்பதும் அல்லாமல் நடைபெறும் செயல்கள் வேறு யாவை?]*

நெறிகடந்து பரந்தன நீத்தமே *(நாட்டுப்படலம்—41)*

*[தனக்கென்று அனுமதிக்கப் பெற்ற வழியை மீறிச் செல்வது வெள்ளம் மட்டுமே.]*

பொற்பின் நின்றன பொலிவு; பொய்இலா
நிற்பின் நின்றன நீதி; மாதரார்
அற்பின் நின்றன அறங்கள்; அன்னவர்
கற்பின் நின்றன, கால மாரியே! *(நாட்டுப்படலம்—59)*

*[நற்பண்புகளில் அழகு நின்றன; நியாயங்கள் பொய் கலவாத உண்மையில் நின்றன; அறங்கள் மகளிருடைய அன்பில் நின்றன; பருவ மழை அம்மகளிரின் கற்பில் நின்றன.]*

*கோசல மகளிரின் பண்பாட்டைக் கூறவந்த கவிஞன் இந்த மூன்று இடங்களில் அதுபற்றிய குறிப்பைத் தருகிறான்.*

அழகில் குறைவில்லாத மகளிர் என்பதைப் பெருதடங்கண் என்பதாலும், 'பிறைநுதல்' என்பதாலும் தெரிவித்துவிடுகிறான். 'பொருந்து கல்வியும் செல்வமும் பூத்தலால்' என்ற சொற்கள் நின்று ஆராயப்பட வேண்டியவை. எல்லாக் கல்வியும் எல்லாருக்கும் பொருந்தாது என்பதை இன்று வாழுகின்ற நாம் அறிவோம். வேதியல் (Chemistry) படித்துவிட்டு, ஆவணக் களரியில் (Sub Registrar Office) எழுத்தராகச் செல்பவர் எத்துணைப்பேர்! அவர் கல்விக்கும், தொழிலுக்கும் என்ன தொடர்பு? எனவே வீட்டிலிருந்து மனையறம் பேணுகின்ற மகளிர்க்கு எத்தகைய கல்வி வேண்டும்? அவர்கள் பண்பாட்டை வளர்க்கும் கல்விதானே தேவை? கணிதத்தில் உயர்பட்டப் படிப்புப் படித்துவிட்டு வீட்டில் அமர்ந் திருப்பவர்கட்கு அவர் பெற்ற கல்வியைப் பொருந்து கல்வி என்று கூற முடியுமா? எனவேதான் மனையறம் புரப்ப வர்கட்கு ஏற்ற பண்பாட்டை வளர்க்கும் கல்வி பெற்றனர் என்பதைப் 'பொருந்து கல்வி' என்கிறான் கவிஞன்!

பொருந்திய கல்வி பெற்றாலும் தம் மனத்தில் தோன்றும் உயர்ந்த எண்ணங்களைச் செயல்படுத்த வேண்டுமெனின் அதற்குரிய பொருள் செல்வம் வேண்டும். அது இல்லை யானால் ஊமையன் கண்ட கனவாக அவர்கள் எண்ணங்கள் தோன்றி மாய்ந்துவிடும். எனவே கல்வியுடன் செல்வத்தையும் சேர்த்தான் கவிஞன். செல்வத்தை வைத்து ஆள்பவன் வீட்டுத் தலைவனாக இருந்து, இவள் எதற்கெடுத்தாலும் அவன் கையை எதிர்பார்க்க வேண்டி வந்தால் எவ்வாறு அவள் தான் விரும்பியதைச் செய்ய முடியும்? எனவே அவளிடத் திலேயே செல்வம் இருந்ததென்று கவிஞன் கூறுகிறான். 'பொருளாதாரச் சுதந்திரம் மகளிர்க்கு வேண்டும்' என்று இன்றுதான் நம்மில் சிலர் உணர்ந்து அதனை வெளிப்படை யாகக் கூறுகின்றனர். ஆனால் நம் கவிஞன் தீர்க்கதரிசி ஆகலான் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே இதனைக் கூறிவிடுகிறான். அடுத்துள்ள சொல் 'நந்தலால்' என்பதாகும்.

ஒரு செடியின் சிறப்பை அழகை வெளிப்படுத்திக் காட்டுவது அதனுடைய மலர்களேயன்றோ? ஒரு சிலருக்கு ஒரு சில பொருத்தமில்லாமல் அமைந்துவிடும். ஆபரணங்களில்கூட எல்லாருக்கும் எல்லா ஆபரணங்களும் பொருந்தமாட்டா? அதுபோலக் கல்வியும் செல்வமும் கோசல மகளிர்க்குப் பொருந்தின. அப்பொருத்தம் யாருக்குப் பயன்பட்டது? செடியில் மலர் மலர்ந்தாலும் பிறர் அதனைப் பயன் படுத்துவர். அதுபோல இவர்களுடைய கல்வியும் செல்வமும் நாட்டிற்குப் பயன்பட்டன. மற்றொன்றையும் நந்தல் என்ற சொல்லால் பெற வைக்கின்றான். கல்வியும் ஆணவத்தைத் தரவல்லது; செல்வத்தைப் பற்றிக் கூறவே வேண்டா. இவை இரண்டும் ஒன்று சேர்ந்தால் அவர்களுடைய ஆணவம் அளவிறந்து சென்றுவிடுமே! பொருந்திய செல்வமாகவும், பொருந்திய கல்வியாகவும் அமைந்துவிட்டமையின், இவை அம் மகளிரை ஆணவம் கொள்ளச் செய்யவில்லை. இதிலிருந்து கோசல மகளிரைக் காக்கத்தான் 'பூத்தலால்' என்ற சொல்லைப் பெய்கிறான் கவிஞன்.

இனிப் பூத்த அக்கல்வியும் செல்வமும் என் பயனை விளைக்கின்றன? 'புளியேப்பக்காரனுக்குப் பசியேப்பம் தெரியாது' என்பது பழமொழி. செல்வம் கல்வி இரண்டும் உடையவர்கட்குப் பிறருடைய துயரமும் வருத்தமும் தெரிய முடியுமா? என்ற வினாத் தோன்றத்தானே செய்யும்? அதற்கு விடை கூறுபவன்போல, இக் கோசல மகளிர் பண்பாடுடையவர்கள் ஆகலின், 'வருந்தி வந்தவர்கள் தரமறிந்து ஈயும்' இயல்புடையர் என்று கூறுகிறான் கவிஞன். 'ஈதல் எளிது வரிசை அறிதலோ பெரிது' (121) என்பது புறப்பாடல். எனவே வருகின்றவர்கள் தரமறிந்து உபசரிக்க வேண்டுமல்லவா? வருந்தி வருபவர் கோசலத்தில் அருமையாக என்றோ ஒருநாள் வருவர். ஆனால் விருந்தினர் அன்றாடம் வருவர். அன்றாடம் வந்தாலும் சிறிதும் மனங்கோணாது விருந்தினரை

உபசரிக்கின்றார்களாம் அம்மகளிர். அதனைத் தான் வைகலும் (தினந்தோறும்) விருந்து ஓம்புகின்றனர் என்று கூறுகிறான் கவிஞன்.

இத்துணைக் கல்வியும் செல்வமும் உடைய மகளிர் மனங்கோணாமல், அகங்காரம் கொள்ளாமல், எவ்வாறு இதனைச் செய்ய முடிகிறது? அதற்கு விடையாகத்தான் தொடக்கத்திலிருந்தே புலனடக்கத்தைக் கூறி வருகிறான் கவிஞன். புலனடக்கம் உடையார்க்குத்தான் தன்னலம் கருதாமல் பிறரிடம் அன்பு செய்ய முடியும். அந்த அன்பை வளர்ப்பதற்கே அவர்களுடைய கல்வி பயன்படுகிறது. அன்பும் கல்வியும் சேர்ந்தவர்கள் கையில் பொருளும் கிடைத்தால் என்ன ஆகும்? அச் செல்வம் அனைவருக்கும் பயன்படும் என்ற கருத்தில்,

பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன் உடையான் கண் படின் (திருக்குறள்—216)

ஊருணி நீர் நிறைந்தற்றே உலகு அவாம்
பேர் அறிவாளன் திரு. (திருக்குறள்—215)

[பயன்தரும் கனிகளையுடைய மரம் உள்ளூரின் கண் பழுத்தது போலாகும், ஒப்புரவாகிய பண்பாடு உடையவனிடம் செல்வம் இருப்பின்.

உலகம் முழுவதையும் ஒன்றாகக் காணும் பரந்த அறிவினை உடையவனிடம் செல்வம் சேர்வது உள்ளூர்க் குளத்தில் நீர் நிறைவது போலாகும் என்கிறார் வள்ளுவர்.]

இத்தனை கருத்தையும் உள்ளடக்கிக் கொண்ட 'பொருந்து செல்வமும்' என்ற பாடலின் மூலம் ஓர் ஒப்பற்ற குறிக்கோள் சமுதாயத்தைக் கற்பித்துக் காட்டுகிறான் கவிஞன். சாதாரண மக்கள் என்றால் போலியாகவும் நற்பண்புகளைப் பெற்றவர்கள்போல் நடிக்கவும்

செய்யலாம் அல்லவா? இம்மகளிருடைய பண்பு ஆழமாக நிலைத்துள்ளதா, அன்றி ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் குறிப்பிட்ட தேவைக்காக மேற்கொள்ளப்பட்டதா என்று ஐயுறவும் இடம் உண்டு. மேலும் நற்பண்புகள் சாதாரண காலத்தில் காட்டப்படலாம். ஆனால், ஒரு சோதனை என்று வந்தவிடத்து, அது நிலைக்குமா என்றுங் காண்டல் வேண்டும். அதற்கும் விடை கூறுவான் போன்று, கவிஞன், 'நெறிகடந்து பரந்தன நீத்தமே' என்று கூறுகிறான். 'ஆற்றில் வெள்ளம் வந்தால்தான் கரையை உடைத்துக்கொண்டு வழியில்லாத வழியில் செல்லும்' என்றுங் கூறுவதால், இவர்கள் எத்தகைய சோதனையிலும் நிலை தவறார் என்பதையும் குறித்துவிடுகிறான்.

## ஏன் மகளிரிடமே பண்பாட்டைக் காட்ட வேண்டும்?

இத்தனை இடங்களிலும் மகளிரைப் பற்றியே கவிஞன் குறித்துச் செல்வதையும் கவனிக்க வேண்டும். நாட்டுப் படலத்தின் இறுதியில், 'மாதரார், கற்பின் நின்றன அறங்கள்' என்று கூறுவதன் மூலம், இக் கருத்தை வலியுறுத்துகின்றான். இதற்குச் சான்று வேண்டுமா? அடுத்த அடியில் அதனையும் கூறிவிடுகிறான். அன்னவர் கற்பினால்தான் பருவமழை தவறாமல் பெய்கின்றது என்று முடிக்கின்றான். 'ஏன் இத்தனை பண்பாடுகளையும் மகளிரிடமே ஏற்றிப் பேச வேண்டும்?' என்று சிந்திக்கும் பொழுதுதான், கம்பநாடனை உலகமகா கவிகளுள் தலைசிறந்தவன் என்று நினைக்கத் தோன்றுகிறது.

ஒரு சமுதாயத்தில் ஆடவர் எத்துணைச் சிறந்தவர் ஆயினும், அச் சமுதாயம் ஆவதும், அழிவதும் அதிலுள்ள மகளிரால்தான் என்பது வரலாறு கண்ட உண்மை. ஆண்கள் அறம் பற்றிக் கூறுவனவற்றை வீட்டிலிருந்து கடைப்பிடிப்பவர்கள் பெண்களே யாவர். எனவேதான்,

தான் கற்பிக்கும் கோசலம் என்ற கற்பனை நாட்டில் குறிக்கோள் தன்மை நிறைந்த மக்களாகக் குடியேற்றுகிறான் கவிஞன். மேலும் ஒரு சமுதாயத்தின் எதிர்காலம் அதில் வாழும் குழந்தைகளைப் பொறுத்தது ஆகும். அக் குழந்தைகளைப் பெற்று, பாலையும் பண்பாட்டையும் கொடுத்து வளர்ப்பவர் மகளிரே. எனவே, மகளிர் தவறினால் அச் சமுதாய அழிவை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. இத்தனை பண்பாடும், ஒழுக்கமும், அன்பும், அருளும் எங்கிருந்து தோன்றும்? இத்தனையும் தோன்றி வளரும் வயலாக அமைவது புலனடக்கம் என்ற ஒன்றுதான். எனவே 'ஐம்பொறி வாளியும், நெறியின்புறம் செலாக் கோசலம்' என்ற முகவுரைக்கு விரிவுரையாக, நாட்டை அமைத்துக் காட்டிவிட்டான்.

இத்தகைய மகளிரும், அவர்களால் வளர்க்கப்படும் குழந்தைகளும், அவர்களை மணந்து நல்லறம் நடத்தும் ஆண்களும், கோசலத்தில் நிறைந்திருந்தால் அந்த நாட்டில் என்னென்ன நடைபெறும் என்று வியக்கத் தோன்று கிறதா? இதோ உங்கட்கு விடை தருகிறான் கவிஞன். அந்தக் கற்பனை நாட்டில்,

கூற்றும் இல்லை, ஓர் குற்றம் இல்லாமையால்
சீற்றம் இல்லை, தம் சிந்தையின் செம்மையால்
ஆற்றல் நல் அறம் அல்லது இல்லாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே!

வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை, நேர்செறுநர் இன்மையால்
உண்மை இல்லை, பொய் உரை இலாமையால்
வெண்மை இல்லை, பல்கேள்வி மேவலால்;

*(நாட்டுப் படலம்—39, 53)*

*[கூற்றம்—தண்டனை; சீற்றம்—கோபம்; இழிதகவு—கீழ்மைக் குணம்; வண்மை—வள்ளல் தன்மை; திண்மை—வலிவு; செறுநர்—போரிடும் பகைவர்; பொய் என்ற ஒன்று*

*இன்மையின் உண்மை என்று தனியே விதந்து ஓத ஒன்றும் இல்லை; வெண்மை—அறியாமை.]*

*'இலது என்றலின் உளது' என்பது தருக்க வாசகம், பகை, போர் என்பன இன்மையால், இவர் வலிமை உடையவர் என்று கூற வழி இல்லை. பொய் என்ற ஒன்று இருந்தால்தான் அதன் மறுதலையாய உண்மை என்ற பெயரும் வரும். ஆக நாட்டையும் அதன் மக்களையும் அமைத்துக் காட்டிய பிறகு அரசனையும் அவன் வீட்டையும் கூறப் புகுகிறான் கவிஞன்.*

## தலைநகர் வாழ் செல்வர்கள்

*சாதாரணமாக அரசன் உறையும் நகருக்குக் காவலாய் அமைவது அந்நகரைச் சுற்றியுள்ள மதில்கள். மதிலைக் கூறப்புகும் கவிஞன், அது மிகமிக உயர்ந்துள்ளது என்று கூறுவதுதான் மரபு. இதன் கருத்து யாதெனில், இவ்வளவு உயரமான மதிலை யாரும் எளிதில் கடந்து வர முடியாது என்பதாம். மரபுபற்றி மதில் உயர்ந்தது என்றும், பலவகைப் போர்க் கருவிகளும் அதில் நிறைந்துள்ளன என்றும் கூறிவிட்டு, இறுதியாக ஒரு வரியில் வியப்புக்குரிய செய்தி ஒன்றைக் கவிஞன் கூறுகிறான். அயோத்தி நகர மதில்கள்,*

இரவிதன் குலமுதல் நிருபர்
சேணையும் கடந்து, திசையையும் கடந்து
திகிரியும். செம்தனிக் கோலும்
ஆணையும் காக்கும்; ஆயினும் நகருக்கு
அணி என இயற்றியது! அன்றே *(நகரப் படலம்-13)*

*[சூரிய குலவேந்தர்களான அயோத்தி மன்னர்களின் ஆக்ஞா சக்கரமும், செங்கோலும், ஆணையும் எல்லாத் திக்கையும், எல்லாத் தூரத்தையும் கடந்து அனைத்தையும் காக்கும். அப்படியானால் மதிலின் பணி என்னவென்றால், நகருக்கு அழகு செய்வதாம்.]*

*அயோத்தி நகரத்திலுள்ள மாளிகைகள் பற்றிப் பேச வருகிறான் கவிஞன்.*

வானுற நிவந்தன; வரம்புஇல் செல்வத்த
தான் உயர் புகழ் எனத் தயங்கு சோதிய
ஊனம்இல் அறநெறி உற்ற எண் இலாக்
கோன்நிகர் குடிகள்தம் கொள்கை சான்றன.

*(நகரப் படலம்—34)*

*[ஆகாயத்தை முட்டுவனவாய், எல்லையில்லாத செல்வத்தை உடையனவாய், தேடிச் செல்லாமல் தானே ஓங்கி வளரும் புகழ்போல், ஒளியுடையனவாய், குற்றம் இல்லாத அறநெறியில் பொருந்தி வாழும் எண்ணிலடங்கா அரசனை ஒத்த குடிமகள் வாழும் தன்மை நிறைந்தன.]*

*பொதுவாகச் செல்வம் நிறைந்தவிடத்தும், அதிகாரம் கூடிய இடத்தும், மக்கள் கெட்டுவிடுவார்கள் என்பது உலக நியதி.*

அறம் நிரம்பிய அருள்உடை அருந்தவர்க் கேனும்
பெறல்அரும் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்

*(மந்தரை சூழ்ச்சிப்படலம்—78)*

*[அறத்தைக் கடைப்பிடித்து அருள் நிறைந்தவராய் வாழும் அரிய தவசிகளாயினும், பெறுதற்கரிய செல்வம் வந்துவிட்டால் பிறகு புத்தி மாறிவிடும்.]*

*என்று கம்பனே பிறிதோர் இடத்தில் பேசுகிறான். 'எங்கே பொருள் அளவின்றிக் குவிகின்றதோ அங்கே மக்கள் அழுகத் தொடங்குகின்றனர்'* (Where Wealth accumulates men decay) *என்று கோல்ட்ஸ்மித் என்ற ஆங்கிலக் கவிஞன் பேசுவான். எனவேதான் அரசனை ஒத்த செல்வக் குடிகள் என்று கூறவந்த கவிஞன், மிகக் கவனமாக அடைமொழி தந்து, அச்செல்வரை வருணிக்கின்றான். ஊனம் இல்லாத அந்நெறியில் ஒழுகும் குடிகள் என்று பேசுகிற பொழுது, இத்தகையவர்கள் எந்த நிலையில் இருப்பினும், தம் தரம்*

குன்ற மாட்டார்கள் என்பதையும் விளங்க வைக்கிறான் பெருஞ் செல்வத்தில் மகிழாமலும், எல்லையற்ற வறுமையில் துவளாமலும் இருக்க முடியுமா? முடியும்? எப்பொழுது. அறநெறியைப் பொருந்தி வாழும்பொழுது இது இயலும் அறநெறியைப் பொருந்தி எந்த நிலையிலும் அதனின்றுப் வழுவாமல் வாழ்வது எவ்வாறு முடியும்? புலனடக்கப் உடையார், கீதை கூறும் 'சமதிருஷ்டி' உடையவர் ஆகலின் செல்வத்தில் மகிழ்வதுமில்லை; வறுமையில் வாடுவதும் இல்லை. ஆகவே, அயோத்தி மக்களை அறநெறி உற்றவர்கள் என்கிறான்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்
துன்பம் உறுதல் இலன் *(திருக்குறள்—628)*

[இன்பத்தை நாடிச் செல்லாமலும், துன்பத்தை உலகத்தின் இயல்பு என்று ஏற்றுக் கொண்டும் வாழ்பவன் துன்பம் அடைதல் இல்லை.}

பெண்களைப் பொறுத்தமட்டில் 'பொருந்து கல்வி' என்று கூறிய கவிஞன், ஆண்களையும் சேர்த்துக் கூற வரும் பொழுது,

கல்லாது நிற்பார் பிறர் இன்மையில், கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ!
*(நகரப் படலம்—74)*

[கற்றவர்கள் என்று விதந்து கூறுவது எப்பொழுது? கல்லாதவர் இருந்தால்தானே? எனவே கற்றாரும் கல்லாதவரும் அங்கு இல்லை. உடையவர்கள் என்று கூறுவது எப்பொழுது? இல்லாதவர்கள் என்று சிலர் இருந்தால்தானே? எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வத்தையும் பெற்றுத் திகழ்வதால் இல்லார் என்ற ஒரு கூட்டமோ, உடையார் என்ற ஒரு கூட்டமோ அங்கில்லை.]

எல்லாப் பெருஞ் செல்வம் என்று கவிஞன் என்ன பொருளில் கூறுகிறான்? பெருஞ் செல்வம் என்றாலே போதுமே; அவ்வாறு இருக்க 'எல்லா' என்ற அடைமொழி தேவையா? என்ற வினாவை எழுப்பினால்தான் கம்பன் வெளிப்படுவான். 'செவிச்செல்வம்', 'குழந்தைச் செல்வம்', 'கல்விச் செல்வம்', 'மனநிறைவுச் செல்வம்' எனச் செல்வம் பல வகைப்படும். ஆகலின் அனைத்தையும் உளப்படுத்தவே எல்லாப் பெருஞ்செல்வம் என்று கவிஞன் கூறுகிறான்.

## புலன்களோடு இசைந்த வாழ்வு

மனிதன்தான் பிறந்த நிலையிலிருந்து உயர்ந்து மகாத்மாவாக ஆகவேண்டும். அதுதான் மானுடப் பிறப்பின் குறிக்கோளாகும். இந்தக் குறிக்கோளை அடையக் காடுகள் சென்று, கனசடை வைத்து, கடுந்தவம் இயற்றி அதன் மூலம் இதனைப் பெறப் பலர் முயல்கின்றனர். உலகைப் படைத்த இறைவன், அவ்வாறுதான் மனிதன் வாழவேண்டும் என்று கருதியிருந்தால் நிச்சயமாக இந்த உலகை இவ்வாறு படைத்திருக்க மாட்டான். அனுபவிக்க வேண்டிய பொருள்களைப் படைத்த இறைவன்தான், அவற்றை அனுபவிப்பதற்கு வேண்டிய பொறி புலன்களையும் மனிதனுக்குப் படைத்துள்ளான். இப் பொருள்களை அனுபவியாமல் காட்டுக்கு ஓடினால் அது இவற்றைப் படைத்த இறைவனையே அவமதிப்பதாகும்! யாருக்கும் பயன்படாத பொருள்களைப் படைத்த ஆண்டவன் பைத்தியக்காரனாகத்தான் இருத்தல் வேண்டும். ஆனால் அவன் பைத்தியக்காரன் அல்லன் அது உண்மை என்றால், இவ்வுலகும் அதன் பொருள்களும் நாம் அனுபவிக்கவே படைக்கப்பட்டன. இப் பொருள்களையும் அவற்றை அனுபவிக்கும் பொறி புலன்களையும், இப்பொறி புலன்களை ஆட்டிப் படைக்கும் மனம் என்ற ஒன்றையும், இந்த மனத்தை எசமானனாக நின்று ஏவிப் பணிகொள்ளும் அறிவையும்

படைத்தவன் இறைவனே என்றால், அதன் உட்கருத்து என்னவாக இருக்கும்? தீயைப் பயன்படுத்தும் முறையும் அளவும், அறிந்து பயன்படுத்தினால் இனிய உணவைச் சமைக்க முடியும். ஆனால் முறையும் அளவும் தெரியாவிடின் தீ மூட்டியவனையே முடித்துவிடும். அதேபோலப் பொறிபுலன்களையும், அவை அனுபவிக்க வேண்டிய பொருள்களையும், அளவறிந்து அனுபவிக்கும் முறை தெரிந்து மனத்தைக் கட்டுப்படுத்தி அனுபவித்தால், இந்த வாழ்வும் முழுத்தன்மை பெற்றதாக இருக்கும்; அடுத்த உலகமும் உறுதியாகக் கிடைக்கும்.

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவு இல்லை
(திருமுறை 3—24—1

[இந்த உலகத்தில் நல்ல முறையில் எப்பொழுதும் வாழலாம். அதே நேரத்தில் அடுத்த உலகிலும் உறுதியாக இடம் உண்டு.]

என்று பாடுகிறார் **திருஞானசம்பந்தர்.**

இவ்வளவும் கூறிய பிறகு எவ்வாறு இதனைச் செய்ய முடியும்? இதற்கு வழி யாது? என்ற வினாவை எழுப்பினால் அதற்குக் கிடைக்கும் ஒரே விடை புலனடக்கம் என்ற ஒன்றுதான். எனவே அனைத்து வளர்ச்சிக்கும் மூல காரணமான புலனடக்கத்தை நிலைக்களனாகக் கொண்டு காப்பியம் அமைக்கத் தொடங்கிய கவிஞன், ஒரு கற்பனை நாட்டையும் மக்களையும் படைக்கிறான். புலனடக்கத்திற் சிறந்த அவர்கள் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி வாழ் கின்றனர். அத்தகைய நாட்டில் அத்தகைய மக்கட்கு அரசன் ஒருவன் இருக்கிறான். இனி அவ்வரசன் பற்றிப் பேசத் தொடங்குகிறான் கவிஞன்.

# 6. கம்பன் கண்ட மன்னன்

தான் கண்ட கற்பனை நாட்டில் வாழும் மக்கள் எத்தகையவர் என்பதனை விரிவாகக் கூறிவிட்ட பிறகு, அத்தகைய மக்களை ஆள்வதற்கு ஒரு மன்னனைப் படைக்க வேண்டும். இத்தகைய குறிக்கோள் வாழ்க்கை வாழும் மக்களை ஆளும் குறிக்கோள் மன்னனுக்கு, ஏற்ற அமைச்சர்கள் வேண்டும். எனவே மன்னன், அமைச்சர்கள் என்ற இருவரையும் படைக்கிறான் கவிஞன். 'எவ்வளவுக் கெவ்வளவு குறைந்த அளவு ஆட்சி நடைபெறகிறதோ அதுவே உயர்ந்ததும் நல்லதுமான ஆட்சி'[1] என்று இக்கால அரசியல் அறிஞர் கூறுவர். இக் கருத்தைக் கம்பநாடன் வேறு வகையில் கூறுகிறான். ஆள்பவன் தசரதன் என்ற தனிமனிதன் ஒருவன்தான். ஆனாலும் கோசல மக்கள் வாழ்வில் அவன் பங்கு பெறாத பகுதியே இல்லை எனலாம். இது எவ்வாறு முடிகிறது? மக்கள் அறநெறி நிற்கின்றனர். புலனடக்கம் மேற்கொண்டுள்ளனர். அரசன் அறநெறிக் காவலனாக இருக்கின்றான். அறுபதினாயிரம் மகளிரை மணந்தவனைப் புலனடக்கம் உடையவன் என்று கூறல் முடியுமா? ஒருவன் புற வாழ்வையும் கோலத்தையுங் கொண்டு அவனை எடைபோடுவது தவறாக முடியும். புலனடக்கம் இல்லாதவனாக ஒருவன் இருப்பின், அவனுக்குக் குருவாக வசிட்டன் இருத்தல் இயலாத காரியம். அதற்கும் மேலாக இராமன், பரதன் என்ற இருவர் அவன் மகனாகப் பிறக்கின்றனர்.

---

1. A Government which governs the least is the best government

தக்கார் தகவு இலர் என்பது அவர் அவர்
எச்சத்தாற் காணப் படும்

*(திருக்குறள்—114)*

[ஒருவர் நடுநிலைமை முதலிய பண்பாடுடையவர், இல்லாதவர் என்பது அவரவர் பெற்றுள்ள மக்களின் நன்மை தீமையால் அறியப்படும்.]

*நன்மக்கள் பெறுபவர்கள் சால்புடையவர்கள், என்பது தெளிவாகலின், இராமனையும் பரதனையும் பெற்றவன் சான்றோன் என்பது கூறத் தேவை இல்லை.*

## சாதாரணன் இங்கு அரசனாக முடியாது

*இரண்டாவதாகவும் ஒன்றை அறிய வேண்டும். இத் துணைப் பண்பாட்டில் நிரம்பியுள்ள மக்களுக்குத் தகுதியற்ற ஒருவன் அரசனாக ஆதல் இயலாது. ஒரோ வழி எதிர்பாராத காரணங்களால் தகுதி இல்லாத ஒருவன் மன்னனாகி விட்டாலும் நீண்ட நாட்கள் அம் மக்கள் அவனிடம் அடங்கி இரார். தசரதனோ அறுபதினாயிரம் ஆண்டுகள் அரசு புரிந்தான் என்று கூறப்படுகிறது. எனவே அவன் தக்கான் என்று கணிப்பதில் தவறு இல்லை.*

*அரசனைக் கவிஞன் அறிமுகப்படுத்தும் முறையே அழகாக அமைந்துள்ளது.*

அம்மாண் நகருக்கு அரசன், அரசர்க்கு அரசன்
இம்மாண் காதைக்கு ஓர் இறை ஆய இராமன் என்னும்
மொய்மாண் கழலோன்—தருநல் அற மூர்த்தி அன்னான்

*(அரசியல் படலம்—1)*

*[அந்த மாட்சிமைப்பட்ட நகருக்கு அரசனாவான், பல அரசர்கட்கும் அரசனாவான். இந்த மாட்சிமைப்பட்ட கதைக்குத் தலைவனாகிய இராமன் என்னும் வீரக்கழலை அணிந்தவனைப் பெற்றவன்; நல் அறத்தின் வடிவானவன்.]*

இராமனை அறத்தின் மூர்த்தி என்றும், அறத்தின் நாயகன் என்றும் பின்னர்க் கூறப்போகும் கவிஞன், இப்பொழுது வேண்டும் என்றே, இராமனுக்கு அந்த அடைமொழியைத் தராமல், அவன் தந்தையாகிய தசரதனுக்குத் தருகிறான். இவ்வாறு கூறுவதில் இரண்டு பொருள்கள் உள்ளன. இராமனைப் பெற்றதால் நல் அறமூர்த்தியானான் என்பது ஒரு பொருள்; நல்ல மூர்த்தியாதலால் இராமனைப் பெற்றான் என்பதும் ஒரு பொருள். வளர்ச்சி அடைந்துள்ள மனிதனுக்கு வேண்டப் படும் அடிப்படையான அறிவு, அருள், அறன், சாந்தம் என்பன அவன்பால் நிரம்பியிருந்தன என்று, அடுத்த பாடலில் கூறிவிட்டு, மேலே செல்கிறான் கவிஞன்.

## தனிமனிதன் வேறு: அரசன் வேறு

சாதாரண மனிதனுக்கும் அரசனுக்கும் சில அடிப் படையான வேறுபாடுகள் உண்டு. தனிமனிதன், தன் வளர்ச்சி, தன்னுடைய நலம், தன்னைச் சேர்ந்தவர்கள் நலம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு கொஞ்சங் கொஞ்சமாக வளர்ந்து, பரநலம் பேணுபவனாக ஆதல் வேண்டும். இவ்வாறு ஒரு தனிமனிதன் செய்தால் யாரும் அவனைத் தவறு கூற முன்வாரார். ஆனால், அதே மனிதன் அரசனாகப் பிறந்துவிட்டால், அவன் நிலையும் குறிக்கோளும், வாழ்வு முறையும் முற்றிலும் மாறுபட்டுவிடும். அரசனைப் பொறுத்தமட்டில் தான் என்பதற்கோ, தன்னலம் என்பதற்கோ, சிறிதும் இடம் இல்லை. தொடக்கத்திலிருந்தே அவன் பிறர்பொருட்டு வாழ்பவனாக அமைய வேண்டும். எனவே மக்களுக்காகவே வாழவேண்டிய கடப்பாடுடைய அம் மன்னன் மக்கள் நலத்திற்காகத் தன்னை எந்தப் பணிகளில் ஈடுபடுத்திக் கொள்கிறான் என்று காண்டல் வேண்டும். நாள் முழுவதும் அவனுடைய கவனம் குடிகளின் நலத்தைக் கவனிக்கவும், அவர்கட்கு வரும் தீமைகளிலிருந்து

அவர்களைக் காக்கவும் எப்பொழுதும் கவனமாக இருத்தல் வேண்டும். எனவே தசரதன் மன்னனாக இருந்து ஆற்றிய பணியைக் கூறுகிறான் கவிஞன்.

> தாய் ஒக்கும் அன்பில், தவம் ஒக்கும் நலம் பயப்பில்
> சேய்ஒக்கும், முன்நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால்
> நோய் ஒக்கும் என்னில் மருந்து ஒக்கும்; நுணங்கு கேள்வி
> ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும்—எவர்க்கும் அன்னான்
> (அரசியல் படலம்—4)

[எவர்க்கும் வேண்டியவர், வேண்டாதவர் என்ற வேறுபாடின்றி அன்பு செய்வதால் தாய் போன்றுள்ளான். தவம் போலப் பின்னர் நன்மை பயக்கின்றான். தவறான வழியில் செல்ல முற்படுவோரையும், எது நல்வழி என்று ஐயுற்று மயங்குவோரையும், இதுதான் நல்வழி என்று காட்டி, அவர்களை அவ்வழியில் செலுத்துவதனால் மகன் போல் உள்ளான். மக்கள் தவறு செய்யும்போது தண்டிப் பதால் நோய் போன்றுள்ளான். மறுபடி அவர்கள் தவறு செய்யாமல் அந்தத் தண்டனை அவர்களைத் திருத்தி நல்வழிப்படுத்தலின் மருந்தும் ஆகிறான். அவன் நூல்களை ஆராயும்பொழுது அறிவின் வடிவாகவே ஆகிவிடுகிறான்.]

## தாயும் நோயும்

அரசனும் ஒரு மனிதன்தானே? எனவே, அவனுக்கும் விருப்பு வெறுப்புகள் ஏற்படுமல்லவா? இவ் விருப்பு வெறுப்புகளால் வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு தோன்றிவிடுமே? நலஞ்செய்வதிலும், தண்டனை வழங்குவதிலும் விருப்பும் வெறுப்பும் இருந்தால் பெருந்தொல்லை வழங்கிவிடுமே! எனவேதான், தசரதன் நலஞ்செய்கிறான் என்று கூறும்பொழுது 'எவர்க்கும்' என்ற சொல்லை அமைப்பதன்மூலம், விருப்பு வெறுப்புகள் அரசப்பணிகளில் தலையிடுவதில்லை என்பதையும் அறிவிக்கிறான். தாயாக இருந்து அன்பு செய்யும் அவன்,

நோய் போலிருந்து தண்டனையும் வழங்குகிறான். இது யாருக்கு இயலும்? புலனடக்கம் செய்து, பற்று, அவா, விருப்பு, வெகுளி முதலிய குற்றங்களை மனத்திலிருந்து அறவே நீக்கியவர்கள்தான் சமதிருஷ்டியுடன் எதனையும் அணுக முடியும். தாயாக இருந்து அன்பு செய்தாலும், அரசனாக இருந்து தண்டித்தாலும், இரண்டின் அடிப் படையும் அன்புதான். தண்டிப்பவன் காழ்ப்புணர்ச்சி வெறுப்புணர்ச்சி முதலியவற்றால் தூண்டப்பட்டுத் தண்டித்தால் அது தவறு. ஆனால் யார், எவர் என்ற வேறுபாடு காணாமல் நடுநிலையில் நின்று, இதற்கு இது உரியது என்று கண்டு, மீண்டும் அத் தவறு நிகழாது இருக்க வேண்டித் தண்டிப்பது அன்பின் அடிப்படையில்தான், என்பதை அறிதல் வேண்டும். சண்டேச நாயனார் சிவ அபராதம் செய்த தந்தையின் காலைச் சேதித்தார். தந்தையின் மாட்டுக் கொண்ட அன்பின் காரணமாகவே, அவர் பெருந்தண்டனைக்கு உள்ளாகக் கூடாதே என்பதற் காகவே, தந்தையின் காலைச் சேதித்தார். நோய் உடல் முழுவதும் பரவி உயிரைப் போக்கிவிடக் கூடாதே என்ற அன்பினால்தான், மருத்துவர் புரை ஓடிப்போன காலை வெட்டி எடுத்துவிடுகின்றனர்.

இந்த முறையில், அரசு செய்பவன் ஒருவன் இருந்தால், அவனை இறைவன் என்று கூறுவதில் தவறு இல்லை.

## பரம்பொருள் விரும்பும் மன்னர்

குறிக்கோள் தன்மை பெற்ற ஓர் அரசனைக் கற்பிக்க வேண்டும் என்று கம்பன் கருதினான். மனிதன் புலனடக்கத்தால் அகங்கார மமகாரங்களை மாற்றித் தன்னைத்தான், அடக்கி ஆளும் நிலைமை பெறுவது சீரிய காரியந்தான். காட்டிடைச் சென்று கடுந்தவம் செய்து இதனைப் பெறுகின்றவர்கள் உண்டு. ஆனால் நாட்டிடை

இருந்துகொண்டு மக்களிடையே வாழும் ஒருவன், அதிலும் அதிகாரமும் செல்வமும் தன் கையில் வைத்திருக்கும் ஒருவன், இப் பண்பாட்டைப் பெற்றுவிட்டான் என்று கூறினால் அது அரிதினும் அரிதுதான். தசரதன் அரிதினும் அரிதான இச் செயலைச் செய்து குறிக்கோள் தன்மை பெற்ற மன்னனாக ஆயினான். அதன் பயனாகப் பரம்பொருள் மானிட வடிவு தாங்கி இம் மண்ணில் தோன்றுவதற்குக் கருவியாக இத்தகைய மன்னனை வரித்துக்கொண்டான் என்று கூறிவிடலாம்.

ஆனால் கம்பனுடைய நோக்கம் அதுவன்று. புலனடக்க அடிப்படையில் சமுதாயத்தை நிறுவிக் காட்டிய புலவன், மன்னனும் அவ்வாறே என்று காட்டினான்.

## மக்கள் பற்றிய கவலை உண்டா?

9ஆம் நூற்றாண்டுவரைத் தமிழக வரலாற்றில் காணப் பெற்ற அரசர்களைப் பற்றியும், அவர்கள் வாழ்வில் பெரும்பகுதி போரில் கழிந்ததையும் கம்பன் அறிந்தான். இந்த அரசர்கள் தம்முடைய அகங்காரத்தையும், அதற்கு இரை போடும் புகழையும் வளர்த்துக்கொள்ளவே போரிட்டனர். போரில் நூற்றுக்கணக்கானவர்கள் உயிர் இழந்தனர். போருக்குப் பின்னர் இறந்தவர்கட்குக் கல்நட்டு வழிபாடு முதலிய செய்யப் பெற்றாலும், 'இறந்தவனுடைய குடும்பம் என்ன ஆகும்?' என்ற வினா யார் மனத்திலும் தோன்றியதாகத் தெரியவில்லை. முகவரி இல்லாத அந்த இறந்த வீரர்களின் குடும்பங்கள் எவ்வளவு அல்லல் உற்றிருக்கும்? என்றோ ஒருநாள் நடைபெறும் போர் என்றாற்கூடக் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் அடிக்கடி நிகழ்ந்த இப்போர்கள் குடிகட்குப் பெருந் துன்பத்தை விளைத்திருக்கும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. இலக்கணம் கூறும் 'வெட்சி' முதலிய

திணைகளில் 'பாதீடு' என்பவை அக் குடும்பங்களின் நீண்டகாலப் பிரச்சினைக்கு முடிவு காணமாட்டா. பகைவர் நாட்டிலுள்ள பசுக்கூட்டங்களைப் போர் புரிந்தோ, மறைமுகமாகவோ கொள்ளையடித்துக் கொண்டுவந்து, கொள்ளையடித்த வீரர்கள் முதலா யினோர் பங்கிட்டுக் கொள்ளுதலையே தொல்காப்பியம் 'பாதீடு' என்று குறிக்கிறது. இதில் ஒரு தலைவனை இழந்த குடும்பம் தன் பங்குக்கு எத்தனை பசுக்களைப் பெற்றாலும், இறந்த தலைவனுக்கு ஈடாகுமா? இந்தப் பழம் தமிழ் மன்னர்கள் தம் குடிகளையும் அவர்கள் நலங்களையும் எவ்வாறு கருதினர்? எவ்வாறு பாதுகாத்தனர்? என்று அறிய வாய்ப்பே இல்லை. வரி வசூல் என்ற பெயரில் என்ன செய்தார்கள் என்று விரிவாக அறிய வாய்ப்பில்லை. ஆனால் கொடுங்கோல் மன்னர்கள் வரி என்ற பெயரில் கொள்ளையடித் துள்ளார்கள். புறம் முதலிய நூல்கள் இவ்வாறு தவறிழைத்த ஒரு சிலரைப் பற்றிக் கூறுகிறது.

சங்க காலத்தை அடுத்துவந்த காலத்திலும், களப்பிரர் இடையீட்டுக் காலத்திலும், தமிழ்க் குடிமக்கள் மகிழ்ச்சி யாக வாழ்ந்தார்கள் என்று கூற முடியாது. இப் பழந்தமிழ் மன்னர்கள் அமைச்சர்களை வைத்துக் கொண்டிருந்தார் கள் என்பதற்கு அருகிய குறிப்புகள் உள்ளன.

> அலவுற்றுக் குடிகூவ, ஆறு இன்றிப் பொருள் வெஃகி
> கொலை அஞ்சா வினைவரால் கோல் கோடியவன் நீழல்
> உலகுபோல் உலறிய
>
> (பாலைக்கலி—10)

[துயரந் தாங்காமல் குடிமக்கள் அலறவும், வகை தொகை இல்லாமல் பொருளின்மேல் ஆசைப்பட்டு வசூல் செய்தும், கொலைக்கு அஞ்சாத செயல்களால் செங்கோல், கொடுங்கோல் ஆனவனுடைய குடைக்கீழ் உள்ள உலகு உலர்ந்துபோம்.]

*புறநானூறு முழுவதிலும் குடிமக்கள் பழிதூற்றுவதற்கு அஞ்சுவதாகப் பேசும் அரசர் இருவர், இருவரும் பாண்டியர்களேயாவர்.*

மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே *(புறம்—71)*

*ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்ற மன்னன் வஞ்சினங் கூறும்பொழுது, 'பல மக்களையுங் காக்கும் பாண்டியர் குடியில் பிறவாமல் பிறருடைய வலிய நிலங்களைக் காவல் காக்கும் பிறப்பை அடைவேனாக' என்று பேசுகிறான். அடுத்துத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும் வஞ்சினம் கூறுகையில்,*

என் நிழல் வாழ்நர் செந்நிழல் காணாது
கொடியன் எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக *(புறம்—12)*

*[என் குடைக்கீழ் வாழும் மக்கள் வேறு சென்று அடையும் நிழல் இல்லாது எம் மன்னன் கொடியவன் என்று கூறிக் கண்ணீர் உகுத்துப் பழிதூற்றும் கொடுங் கோலனாக ஆவேனாக என்று பேசுகிறான்.]*

*நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பாடல்கள் போர்கள் பற்றிப் பேச, குடிமக்கள் துயரம்பற்றி இரண்டே இரண்டு குறிப்புக்கள்தான் உள்ளன. இதில் வியப்பு என்னவெனில், இந்த இரு பாடல்களும் போர் அடிப்படையில் பிறந் தனவே ஆகும். பல்லவர் காலத்திலும், கம்பன் காலம் வரையும் மக்களைப் பற்றிக் கவலைப்பட்ட மன்னர் குறைவுதான். எனவே கம்பநாடன், இதற்கு ஒரு வழி செய்ய முற்படுகிறான். நம் காலத்துக் கவிச்சக்கரவர்த்தி பாரதி பாடியதை அன்றே கம்பன் நினைந்தான் போலும்.*

நாட்டு மாந்தர் எல்லாம் தம்போர் நரர்கள் என்று கருதார்
ஆட்டு மந்தையாம் என்று உலகை அரசர் எண்ணிவிட்டார்

*(பாஞ்சாலி சபதம்—இரண்டாம் பாகம்—16—20)*

*ஏறத்தாழ இதே மனநிலைதான் அன்றைய அரசர்களிடமும் இருந்திருக்க வேண்டும். கள்ளும், ஊன் உணவும், பரத்தமையும் நிறைந்திருந்த காலம் அது. சாதாரண மக்களே இவற்றில் ஈடுபட்டனர் எனின், அதிகாரத்தில் உள்ளவர்களும், அரசர்களும் இவற்றில் மீதூர்ந்து சென்றிருப்பர் என்று கருதுவதில் தவறு இல்லை. இம் மூன்றிலும் ஈடுபட்டவர்களிடம் புலனடக்கம் என்ற ஒன்றை எதிர்பார்ப்பது முடியாத காரியம். புலனடக்கம் இல்லாத பொழுது ஆணவம், பகையுணர்ச்சி, அளவிறந்த தன்மான உணர்ச்சி, காழ்ப்புணர்ச்சி, சினம், அழுக்காறு என்பவை அவர்களிடம் குடிபுகுதல் எதிர்பார்க்கக் கூடியதேயாம். இவை புகுந்தவிகிதத்தில் அன்புடைமை, அருளுடைமை என்பவை எதிர்பார்க்கக் கூடியனவல்ல. எனவே, இத்தகைய மன்னர்கள் தம்மால் ஆளப்படும் மக்கள் பற்றிக் கவலைப்படாமல் தம் புகழ் வேட்டையிலேயே காலங் கழித்திருப்பர் என்றும் ஊகிக்கலாம்.*

*இதனை மனத்துட் கொண்ட கம்பநாடன் தான் கண்ட குறிக்கோள் சமுதாயத்தில் வைக்கப் போகும் அரசனைப் புதிய முறையில் அமைக்க விரும்புகிறான்.*

## மன்னன் பற்றிய கருத்து

*அரசர்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள் என்பதை இதுவரை கண்டோம். இனி அரசர்களைப் பற்றி இத் தமிழ் மக்கள் என்ன நினைத்தார்கள் என்பதையும் மக்களின் பிரதிநிதிகளாக உள்ள புலவர்கள் என்ன நினைத்துப் பாடினார்கள் என்பதையும் ஓரளவு காண்டல் நலம்.*

உடலாகிய மன்னவன்

எனவே, சங்க காலம் முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை பரவி இருந்த ஒரு கருத்தை மாற்றிக் கூற விரும்புகிறான் கம்பன். அரசன் என்ற நிறுவனத்தை மாற்ற இயலாது என்பதைக் கம்பன் அறிவான். ஆக, அந்த நிறுவனத்தையும் வைத்துக்கொண்டு, அதே நேரத்தில் அதனால் விளையும் கொடுமைகளையும் இல்லாமல் செய்ய வேண்டும் என்று நினைக்கிறான். இது இயலுமா இயலாதா என்ற பிரச்சினைக்கு இங்கு இடமே இல்லை. அவன் கண்ட கோசலம் என்ற கற்பனை நாட்டுக்கு (utopla) ஓர் அரசன் வேண்டும். ஏனைய அரசர்களைப் போல் அவன் இருந்தால் கம்பன் கண்ட நாட்டுக்கு அது ஏற்காது. ஆகவே, அரச நிறுவனத்தையும் வைத்துக் கொண்டு, அதே நேரத்தில் அதனால் விளையும் தீமைகளும் இல்லாமல் செய்துவிட முயல்கிறான். அவனுக்கு முன்னர் யாரும் கற்பனைகூடப் பண்ணாத ஒரு கருத்தைப் பேச முற்படுகிறான்.

அரசன் உயிர், குடிகள் உடல் என்று கூறுவதன் பொருள் யாது? உயிர் விரும்புவதைச் செய்வதுதானே உடம்பின் கடமை. உயிர் ஏவுதற் கருத்தா; உடல் இயற்றுதல் கருத்தா. இங்கு உடம்புக்கு என்று எவ்வித உரிமையோ, விருப்பைத் தெரிவிக்கும் உரிமையோ இல்லை. ‘திருவுடை மன்னர் திருமால்’ என்று கூறும்பொழுதும் இதே கருத்துத்தான் குறிக்கப்படுகிறது. கடவுள்தானே தலைவன், அவன் கட்டளைப்படிதானே உலகமும் உயிர்களும் இயங்குகின்றன. அவன் அழிக்கவும் ஆக்கவும் முற்படுகையில் இவ்வுயிர்களைக் கலந்துகொண்டா செய்கிறான்? இல்லையே! அதுபோல உடம்பை விட்டுவிட்டுப் போக வேண்டும் என்று உயிர் நினைத்துவிட்டால் உடம்பின் விருப்பம் யாது என்று கேட்பதில்லையே? எனவே,

மன்னனை உயிர் என்றும், திருமால் என்றும் கூறும் பொழுது, ஆக்கவும் அழிக்கவும் வல்லவன் என்பதும், யாருடைய ஆணைக்கும் அவன் காத்திருப்பதில்லை என்பதும் நன்கு விளங்கும். இந்த நிலையில் மக்கள் விருப்பத்தை அறிந்து அதன்படி நடக்கும் மன்னவன் ஒருவன் உண்டு என்றால், அது கற்பனையில்தான் நடைபெறும். நம்மால் வாக்குச் சீட்டுமூலம் தேர்ந் தெடுக்கப் பெற்றுச் சட்டமன்றம் செல்கிறவர்கட்குப் பதவியின் ஆயுளே நான்கு வருடந்தானே! மறுபடியும், நாமாகப் பார்த்து அவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினால்தானே அவர்கட்கு 'உறுப்பினர்' என்ற பட்டம் மறுபடியும் கிட்டும். முதலிலும், இரண்டாம் முறையும் நம்மிடம் வந்து நம்முடைய அன்பை, பரிவை நாட வேண்டியவர்கள், அந்த இடைப்பட்ட நான்கு ஆண்டுகளில் ஆடுகிற ஆட்டம் நாம் அறிந்ததுதானே! அதிலும் மக்களாட்சி என்ற பெயரில் யார் வேண்டு மானாலும் தேர்தலுக்கு நின்று வாக்குகள் பெற்றுப் பதவிக்கு வரலாம். இன்றைய ஆட்சிமுறை பண்டை நாள்போல எளிதானது அன்று. பல்வேறு சிக்கல்கள் நிறைந்த, இற்றை நாளைய ஆட்சியைக் கல்விப்பெருக்கம் இல்லாதவர்களும் நடத்தலாம் என்ற நிலை வந்துவிட்டது.

## மடங்கல் மொய்ம்பினான் உடம்பாயினான்

இவற்றை எல்லாம் மனத்துட் கொண்ட கம்பநாடன், தான் நிர்மாணித்த நாட்டின் தலைவன் 'ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்' (5) என்று கூறியதோடு அல்லாமல், ஒரு புதுக்கருத்தையும் வெளியிடுகிறான். நிறைந்த கல்வியும் ஆழ்ந்த அறிவும் உடைய மன்னனா கலின், தான் ஏதோ தெய்வப் பிறவி, இம்மக்களை எப்படி வேண்டுமானாலும், ஆளலாம் என்று நினையாமல், அம்மக்கள் நினைத்ததை நிறைவேற்றும் இயற்றுதற்

கருத்தாவாக இருந்தானாம். மக்களாட்சி என்ற பெயரில் இன்று என்ன கருத்தைப் பேசுகிறார்களோ அதே கருத்தை உவமை கூறுவதன்மூலம் கவிஞன் கூறிவிடுகிறான்.

வயிரவான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால்
செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிரெலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்.

(அரசியல் படலம்—10)

[ஒளி பொருந்திய அணிகள் பூண்டவனும் சிம்மம் போன்ற வலியுடையவனும் ஆகிய தசரதன், சரம் அசரம் ஆகிய அனைத்துயிர்களையும் தன் உயிரைப் போலவே விரும்பிக் காப்பாற்றுவதால், எல்லா உயிர்களும் தங்கி வாழ்கின்ற உடம்பாக இருந்தான்.]

தன்னாட்டில் வாழும் மக்கள் முதல், எந்த உயிராக இருப்பினும், அவை விரும்பும் விருப்பத்தை நிறைவேற்றும் உடம்பாக இருந்தான். இந்த உவமையைக் கூற வரும்பொழுது 'மடங்கல் மொய்ம்பினான்' என்று கூறுவதிலும் ஓர் ஆழ்ந்த கருத்துண்டு. தன்னுள் உறையும் உயிர் விரும்பியதை உடம்பு செய்ய வேண்டியது கடமை என்றாலும், செய்வதற்குரிய ஆற்றல் அந்த உடம்பில் இருக்க வேண்டுமே! அது இல்லா விடில், உயிர் எதனை விரும்பினாலும் உடம்பு அதனை நிறைவேற்ற வேண்டும் என்று விரும்பினாலும், அதனைச் செய்து முடிக்கும் திராணி இல்லை என்றால் என்ன பயன்? எனவேதான் கோசல மக்கள் எதனை விரும்பினாலும் அதனைச் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவன் தசரதன் என்பதை அறிவிக்கவே 'மடங்கல் மொய்ம்பினான்' என்று கூறுகிறான். 'வன்புலி மொய்ம்பினான்' என்று கூடக் கூறி இருக்கலாம். ஆனால் புலி தேவை இல்லாமலும் தன்னாற் றலைப் பயன்படுத்திப் பிற விலங்குகட்கு ஊறு செய்யும் இயல்பு உடையது. விலங்குகளின் அரசனாக உள்ள சிம்மம் அவ்வாறு ஒருநாளும் செய்யாது. மக்கள் தவறான ஒன்றைத்

தங்கள் மன்னன் செய்ய வேண்டும் என்று விரும்பினால் தசரதன் அதனைச் செய்ய ஒருநாளும் முற்படான். 'மடங்கல்' என்று கூறியதன் கருத்து இதுவேயாம்.

இந்த உவமையில் ஒரு பகுதியின் சிறப்பை அறிய முடிகிறது. மக்கள் உயிர் என்றும், மன்னன் உடம்பு என்றும் கூறிவிட்டமையின், உடம்பாகிய மன்னனிடத்து உயிர் களாகிய மக்கள் அன்பு பூண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. தன் உடம்பு, நோய் நொடி இல்லாமல் வலுவுடன் இருக்க வேண்டும் என்றுதானே எந்த உயிரும் விரும்பும்! எனவே, மக்கள் மன்னனிடம் கொண்ட ஈடுபாட்டை அறிய முடிகிறது. மன்னன் (உடம்பு), மக்களை (உயிர்) எவ்வாறு கருதினான்? எவ்வாறு நடத்தினான்? என்பதை அறிய வேண்டாவா? எனவே அதையும் அறிவிக்கும் முறையில் ஓர் உவமை கூறுகிறான் கவிஞன்.

வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கிறான்.
(அரசியல் படலம்—12)

என்று கூறுகிறான். வறிஞனாக உள்ள ஒருவனிடம் ஒரு செய் (நிலம்) மட்டும் உள்ளது. அவன் உயிர் வாழ்வது அந்தச் செய் அளவு நிலத்தின் விளைவை நம்பித்தான் என்றால், எத்துணைக் கவனத்துடனும், கவலையுடனும் அந்த வறிஞன் அந்தச் செய் அளவு நிலத்தைப் பாதுகாத்துப் பராமரிப்பான் என்பது நன்கு விளங்கும். அதே போலத்தான், தசரதன், இந்த வையகம் முழுவதையும் காத்து இனிது அரசு செய்கின்றானாம். ஒரு செய்நிலத்தை வறிஞன் ஓம்புகிறான் என்பதில் கருத்தாழம் உள்ளது. நிலம் எங்கிருக்கிறது என்ற விவரமே தெரியாமல் பிறரைக் கொண்டு பயிரிட்டு வருமானத்தை வாரி இறைக்கும் ஜமீந்தார் வேறு; காலை மாலை இரு வேளைகளிலும் நிலத்தைச் சுற்றிச்சுற்றி வந்து பார்த்து, ஒரு செடியில் நோய் வந்தாலும், அதைக் கவனித்து மருந்து அடித்துக் களை எடுப்பதில் கவனம்

செலுத்திப் பிள்ளை வளர்ப்பதுபோல் பயிரைப் பாது காப்பான் வறிஞன். இந்த ஒரு செய் தவிர வேறு நிலம் அவனிடம் இல்லையாகலின், அவனுடைய முழுக் கவனமும் இந்த நிலத்திலேயே பாய்ந்து நிற்கும் அல்லவா? அதே போலத் தசரதன் மக்களிடம் நேரிடையாய் பழகி, அவர்கள் குறைகளை நேரே கண்டு அவற்றைப் போக்கி விடுவதுடன், அவனுடைய கவனம் முழுவதும் மக்கள் நலத்திலேயே பாய்ந்து நின்றது என்பதையும், கவிஞன் இந்த உவமை மூலம் பெற வைக்கிறான்.

## அரசகுமரனும் குடிமக்களும்

அதிகாரம் ஆளை வீழ்த்திவிடும்; யதேச்சாதிகாரம் ஆளை முழுவதுமாக அழித்துவிடும் (Power corrupts and absolute power corrupts absolutely) என்றான் லார்ட் ஆக்டன் என்ற அரசியல்ஞானி. தசரதன் மக்களிடம் எவ்வாறு நடந்து கொண்டான் என்று கூறியிருந்தாலே அது சிறப்புடையதாகும். அதற்குப் பதிலாகத் தசரதன் நீண்ட காலம் குழந்தைச் செல்வம் இல்லாமல் இருந்து பெற்ற, அருமை மைந்தனாகிய இராமன் மக்களிடத்தில் எவ்வாறு பழகுகிறான் என்பதைக் கூறுகிறான் கவிஞன். கிழவனாகிய தசரதன் இவ்வாறு செய்தான் என்றால், வாழ்வில் பெற்ற அனுபவத்தால் கடைசிக் காலத்தில் இந்த உயர்ந்த பழக்கத்தை மேற்கொண்டான் போலும் என்று நாம் நினைக்கவும் கூடும் அல்லவா? எனவே நீண்டகாலம் கழித்துப் பிறந்தவனாய், பட்டத்துக்குரியவனாய், தந்தையின் அன்புக்கு முழுப் பாத்திரனாய், சகோதரர் களால் தெய்வம்போல் வைத்துப் போற்றப்படுபவனாய், செல்லமான அரசியின் செல்வ வளர்ப்பு மகனாய், வசிட்டனின் தலைமைச் சீடனாய், இளமை மிடுக்குடன் இருப்பவனாய் உள்ள இராமனை எடுத்துக் கொள்கிறான் கவிஞன்.

*இத்தகைய இளங்குமரன் மக்களிடம் எவ்வாறு பழகு கிறான்? அதிலும் மேட்டுக்குடி மக்களிடமோ, பெரிய வணிகர்களிடமோ, முனிவர்களிடமோ அல்ல; மிகச் சாதாரண, மிக எளிய மக்களிடம் எவ்வாறு பழகுகிறான்? என்பதை அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறான்.*

*இராமனை உள்ளிட்ட சோதரர் நால்வரும், வசிட்டன் இருப்பிடம் சென்று கல்வி கற்றுவிட்டு, மாலையில் அரண்மனை திரும்புகின்றனர். இந்நிலையில் அவர்கள் இரதத்தில் வருவதாகக் கம்பன் கூறவில்லை. நடந்தே வருகின்றனர். பிள்ளைகளைச் சுற்றிக் காவல் காத்துக் கொண்டு யாரும் படைவீரர்கள் வரவில்லை. இவற்றை எல்லாம் கவி வெளிப்படையாகக் கூறவில்லை. ஆனால் இத்தனை பொருளும் அமையுமாறு கவிதை அமைக்கின் றான். சாலையில் நடந்துவரும் முறையிலேயே மூத்தவ னாகிய இராமன் மக்களிடம் செலுத்தும் அன்பும் பக்தியும் தெரிகின்றது. எதிரே வருபவர்களை நிறுத்திச் சக்கர வர்த்தித் திருக்குமரன் அளவற்ற கருணையின் பிரதிபலிப்பு முகத்தில் படரப் புன்சிரிப்புடன் "என்ன பணி செய்கின் றீர்கள்? உங்கள் வாழ்க்கையிலோ, மேற்கொண்ட பணி களிலோ ஏதேனும் இடர் உளதா? தங்கள், இல்லத்தரசியும் அறிவு நிரம்பிய மைந்தர்களும் நலமாக உள்ளனரா?" என்று வினவுகின்றானாம்.*

எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா,
எதுவினை? இடர் இலை? இனிது நும்மனையும்?
மதிதரு குமரரும் வலியர் கொல்? எனவே.

*(திருவவதாரப் படலம்—132)*

*ஏழை எளிய மக்களிடம் மன்னனாக வரப்போகின்ற துடிப்புடைய இளைஞன் எவ்வாறு பழகுகிறான்? எவ்வாறு அவர்களை இழுத்து வைத்துப் பேசுகிறான்? என்பதை மட்டுங் கூறி இருப்பின், இது அரசியல்வாதியின் பேச்சுப்*

போலும் என்று நாம் நினைத்துவிடக் கூடாது என்பதற் காகவே, இராமனின் கருணை வெள்ளத்திலிருந்து வரு கின்ற பேச்சுக்கள் இவை எனக் கவிஞன் கூறுகிறான் போலும்! இக் காப்பிய நாயகன் பிற்காலத்தில் எவ்வாறு வாழப் போகிறான் என்பதை அறிவிக்கவும் இதை ஒரு முன்னுரையாகக் கவிஞன் பயன்படுத்துகிறான். அப்பாவி ஆகியவனும் அன்பின் வடிவானவனும் ஆகிய குகன், ஈந்தேகப் பிராணியாகிய சுக்ரீவன் ஆகிய இருவரையும், மனமார ஏற்றுக்கொண்டு தம்பியர் உரிமை வழங்கப் போகிறவன், அப் பண்பைத் திடீரென்று பெற்றுவிட வில்லை. அவனிடம் இயற்கையிலேயே அது அமைந் திருந்தது என்பதைக் காட்டவே இந்த நிகழ்ச்சியைக் கவிஞன் காட்டுகிறான்.

அகப்பற்று, புறப்பற்று (அகங்காரம், மமகாரம்) என்ற இரண்டையும், அறவே சுட்டெரித்துப் புலன்களை அடக்கியவன்தான். உலகிலுள்ள அனைத்து உயிர் களிடமும் அன்பு செலுத்த முடியும். தொடர்புடையார் மாட்டு மட்டும் செல்வதை அன்பு என்றும், யாவர் மாட்டும் செல்வதை அருள் (கருணை) என்றும் நம்மவர் பிரித்துக் கூறினர். அன்பு இருப்பதுபோல நடிக்கலாம்; பேசலாம். ஆனால், மனத்தில் உள்ளதைக் கண்ணாடிபோற் காட்டும் முகமும், கண்ணும், இது நடிப்பா, உண்மையா என்பதைக் காட்டிவிடும். இராமனிடம் இருந்தது கருணை (அருள்) என்று கூறிய கவிஞன், அது தூய்மையானதும் உண்மையானதும் ஆகும் என்பதை, 'முகமலர் ஒளிரா என்ற சொற்களின் மூலம் காட்டிவிடுகிறான். அரசனாக உள்ள தந்தையையும், அரசனாக வரப் போகிற மகனையும் கண்டோம். இனி அரசனாக உள்ளவனிடம் அமைச்சர் களாகப் பலர் இருந்தனர். அவர்களைக் கம்பன் எவ்வாறு காட்டுகிறான் என்பதையும் சற்றுக் காணலாம்.

## கம்பன் கண்ட அமைச்சர்கள்

*நல்ல குடியிற் பிறந்து, பல கலைகளையும் கற்றுத் தேர்ந்து, கேள்வி ஞானம் மிகுதியும் பெற்று, இவற்றின் பயனை அடைந்தவர்கள். இவர்களே வஞ்சம் அற்றவர்கள்; அறநெறியை நிலை நிறுத்துபவர்கள்.*

*நடப்பதைக் கொண்டு என்ன நடக்கும் என்பதை உணரும் ஆற்றல் பெற்றவர்கள். தீமை வினைவயத்தான் வரினும், அதுபற்றிக் கவலை கொள்ளாமல், அதனையும் மாற்றும் திறம் வாய்ந்தவர்கள். பரம்பரையாக நற்குடியில் தோன்றியவர்கள், அரிய அரசியல் நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர்கள். எல்லாவற்றையும்விட 'மானமே பெரிது' என எண்ணும் இயல்பினர் என்ற பொருளில்,*

குலம்முதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும் பயனும் எய்தினார்
நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலம்முதல் அறுத்து, அரும் தருமம் தாங்கினார்.

உற்றது கொண்டு, மேல்வந்து
உறுபொருள் உணரும் கோளார்
மற்றது வினையின் வந்தது
ஆயினும் மாற்றல் ஆற்றும்
பெற்றியர், பிறப்பின் மேன்மைப்
பெரியவர்; அரிய நூலும்
கற்றவர், மானம் நோக்கின்
கவரிமா அனைய நீரார் *(மந்திரப் படலம்—5, 6)*

*இத்துணைப் பண்புகள் இருந்தும் தம்முடைய முன்னேற்றம், வாழ்வு என்பதில் அதிகம் நாட்டம் உடையர் ஆயின், எப்படியாவது அரசனின் அன்பைப் பெற்றுத் தம் வாழ்வை வளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற தன்னலம் தோன்றிவிடும். அவ்வாறு தன்னலத்துக்கு இடம் தந்துவிட்டால், அரசனுக்கு அறிவுரை கூறுபவர்களாக இல்லாமல் 'ஆமாம் சாமிகளாக' ஆகிவிடுவர்.*

ஓட்டுப் போடும் கூட்டத்தார் என்பதால் அவர்கள் என்ன தீமை செய்யினும் அவற்றைக் கண்டுகொள்ளாமல் மறைமுகமாக அவர்கட்கு உதவும் இக்கால அரசியல் வாதியாகவே அவ்வமைச்சர்களும் ஆகிவிடுவர். கம்பன் தான் கண்ட நாட்டில் அமைச்சர்கள் அவ்வாறு இல்லை என்பதை நன்கு தெரிவிக்கிறான்.

தம்உயிர்க்கு இறுதி எண்ணார்;
தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி
விடாதுநின்று உரைக்கும் வீரர்;
செம்மையின் திறம்பல் செல்லாத்
தோற்றத்தார்; தெரியும் காலம்
மும்மையும் உணர வல்லார்;
ஒருமையே மொழியும் நீரார். *(மந்திரப் படலம்—8)*

[தங்கள் உயிருக்கு ஊறு விளையுமோ என்று அஞ்சு பவர் அல்லர். அரசன் சினந்தாலும் அச் சினத்தைத் தாங்கிக்கொண்டு நீதியை விடாமல் இடித்துச் சொல்லும் இயல்பினர். நேர்மையிலிருந்து சிறிதும் தவறாதவர்கள். முக்காலத்தையும் அறிபவர்கள். தாம் பலராயினும் பல்வேறு விதமான கருத்துக்களைக் கூறாமல் அனைவரும் ஒருவராகவே நின்று உறுதி கூறும் இயல்பினர்.]

இவர்கள் தலையாய அமைச்சர்கள் என்பதற்கு மூன்று இயல்புகளைக் கவிஞன் சிறப்பாகக் காட்டுகிறான். எதிலும் பற்றுள்ளவன் மானத்துடன் இருத்தல் முடியாது. பற்றுடைய பொருளை அடைய வேண்டும் என்று நினைத்தவுடன் அதற்காக எடுக்கும் நியாயமான, நியாயமற்ற முயற்சிகளில் மானம் காற்றில் பறந்துவிடும். எனவே, அமைச்சர்கள் மானம் பேணுபவர்கள் என்பதன் மூலம் எவ்வித ஆசையும் இல்லாதவர்கள் என்பதை வலியுறுத்துகிறான். அடுத்தது, நடுவுநிலை தவறாதவர்கள் என்பதாகும். பெரிய பதவியும் அதிகாரமும் வகிப்பவர்கள்,

நடுவுநிலைமை மேற்கொள்ளல் கடினம். எந்த நேரமும் பதவிச் சட்டையைக் கழற்றத் துணிந்தவர்களே நடுவு நிலைமை பிறழாது இருத்தல் கூடும். மூன்றாவதாக உள்ளது மிகப்பெரிய சாதனை. அறிவுடையவர்கள் இருவர் கூடினால் இரண்டு கருத்துகள் இருக்கும். பல அமைச்சர்கள் கூடிய இடத்தில், ஒவ்வொருவரும் தத்தம் கருத்தையே அரசன் கேட்க வேண்டும் என்று நினைத்தால் என்ன ஆகும்? அகங்காரம்தான் அவ்வாறு நினைப்பதற்குக் காரணம். அது இல்லாதபொழுது அனைவரும் ஒரே குரலில் பேசுவது என்பது எளிதாக நடைபெறக்கூடியதே. இதனால் இது வாழும் அரசு ஆயிற்று; இலங்கை வீழும் அரசாக ஆன காரணம் என்ன?

## புலனடக்கம் இல்லா நாடுகள் அன்றும் - இன்றும்

படைவன்மை, தவபலம், ஒப்புவமை இல்லா வீரர்களின் தொகுதி முதலிய அனைத்திலும் இலங்கை அயோத்தியைவிட ஒருபடி முன்னேதான் நின்றது. அப்படி இருந்தும் அது அழியக் காரணம் யாது? அதன் தலைவனான இராவணன் தவறு இழைத்தான்; அதனால் இலங்கை அழிந்தது என்று கூறுவது ஓரளவுதான் பொருந்தும். அப்படியானால் அந்த அழிவின் அடிப்படைக் காரணத்தைக் காண்டல் வேண்டும்.

ஊர்தேடு படலத்தில் அனுமன் இலங்கையின் மாட்சியை விவரிக்கின்றான்.

**பொன் கொண்டு இழைத்த?**
**மணியைக் கொடு பொதிந்த?**
**மின் கொண்டு அமைத்த?**
**வெயிலைக் கொடு சமைத்த?**
**என் கொண்டு இயற்றிய**
**எனத் தெளிகிலாத...**

தேவர் என்பவர் யாவரும் இத்திருநகர்க்கு இறைவற்கு
ஏவல் செய்பவர்..............
நரகம் ஒக்குமால் நல்நெடும் துறக்கம், இந்நகர்க்கு
பளிக்கு மாளிகைத் தலந்தொறும், இடந்தொறும் பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண் நறுஞ் சோலைகள் தோறும்
அளிக்கும் தேறல் உண்டு, ஆடுநர் பாடுநர் ஆகி
களிக்கின்றார் அலால் கவல்கிறார் ஒருவரைக் காணேன்

*(ஊர்தேடு படலம் — 1, 10, 14, 43)*

['பொன்னைக் கொண்டு செய்த மாளிகைகளா? மணிகளைக் கொண்டு பொதிக்கப்பெற்றனவா? மின்னலையும் வெயிலையும் மாளிகையாகச் சமைத்தார்களா?

'மாளிகைகள், வெளி இடங்கள், கற்பகச் சோலை எந்த இடமாயினுஞ் சரி, கள்ளை உண்டு களிக்கின்றவர்கள் தவிரக் கவலைப்படுபவர் எவரையும் நான் காணவில்லை.]

இவ்வாறு கூறுபவன் யார்? இலங்கையைச் சேர்ந்தவனல்லன். இராவணனுக்கு நண்பனும் அல்லன். அவன் முழுப் பகைவனாகியவனும், கல்வி, கேள்வி, அறிவு என்பவற்றில் தனக்கு நிகர் மூவுலகினும் இல்லை என்று இராமனாலேயே பாராட்டப் பெற்றவனுமாகிய அனுமன் தான் இவ்வாறு பேசுகிறான்.

இத்துணைச் சிறந்த நகரமும், அந்த நாகரிகமும் இரண்டு மனிதர்களாலும் குரங்குகளாலும் அழிந்தன. ஏன்? இராவணன் மட்டும் தவறுடையவன் எனின் அவன் மட்டும்தானே அழிய வேண்டும்? பின்னர் ஏன் இலங்கை முழுதும் அழிய வேண்டும்.? தொடக்கத்தில் கவிஞன் கூறினானே அதன் காரணமாகத்தான் இப் பேரழிவு ஏற்பட்டது.

ஐம்பொறி வாளியும் நெறியின் புறஞ் சொல்லாமையின் அயோத்தி வாழ்ந்தது, ஐம்பொறிகளும் தத்தம்

எல்லைமீறி ஆடத் தொடங்கின அரக்கர்கட்கு! வரபலம் படைபலம் வெற்றி எக்களிப்பு என்பவை தலைக்கேறி விட்டன. அதன் பயனாகப் புலனடக்கத்தைக் கைவிட்டனர்; வீழ்ந்தனர்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும் *(திருக்குறள்—448)*

*இடித்துச் சொல்லும் அமைச்சர் இல்லாத மன்னன் பிறர் வந்து கெடுக்காமல், தானே கெடுவான் என்கிறது உலகநீதி நூல். இலங்கை மன்னன் புலனடக்கத்தின் ஆற்றலைத் தவத்தின் மூலமாகவும் அதனால் பெற்ற வரபலத்தின் மூலமாகவும் நன்கு அறிந்தவன்தான். என்றாலும் என்ன? புலனடக்கத்தைக் கைவிட்டான்; அதன் பயனாகத் தவறான ஆசை வளர்ந்தது; ஆணவம் தலைக்கு ஏறிற்று. முடிவு அழிவு தவிர வேறு இல்லை. இராமன் இல்லாமலும், கெடும் நிலையை அடைந்து விட்டான் இராவணன். அவனுக்குச் சற்றும் சளைக்காதவர்கள் இலங்கை வாழ் மாந்தர் (அரக்கர்). எனவே அவர்கள் அழிவும் உறுதிப்படுத்தப் பட்டுவிட்டது.*

*புலனடக்கத்தை மேற்கொண்ட நாட்டையும், அதனைக் கைவிட்ட நாட்டையும், கவிஞன் உள்ளங்கை நெல்லிக்கனியெனக் காட்டுகிறான். வேறு எத்துணைச் செல்வமும் வரபலமும் இருந்து என்ன பயன்? அடக்கம் இல்லாதவன் கையில் சேரும் இந்தப் பலம் அவன் அழிவுக்கே துணைபுரியும். இன்று அணுகுண்டை வைத்திருப்பவர்கள் இரவுபகல் உறக்கமின்றி அஞ்சுகின்றனர். அடக்கமின்மையால் அமெரிக்கா போன்ற நாடுகள் பெற்றுள்ள செல்வமே அவர்கள் அவலத்துக்கும், துயரத்துக்கும் காரணமாக உள்ளது. பலருக்கும் பயன்பட வேண்டிய செல்வம், கோடிக்கணக்கான மக்களின் பட்டினியைப் போக்கி, அவர்கட்கு வாழ்வு அளிக்க*

வேண்டிய செல்வம், இன்று அணுகுண்டுகள், ஏவுகணை கள் செய்யப் பயன்படுவதைக் காண்கிறோம். அப்படிப் பட்ட குண்டுகளையும், கணைகளையும் வைத்திருக்கும் இந்த வல்லரசுகள் செல்வத்தை மட்டுமா இழந்தன? இல்லை. உறக்கம், மன அமைதி ஆகியவற்றையும் இழந்து விட்டன. என்னே புதுமை? செல்வம் இன்பத்தைத் தருவதற்குப் பதிலாக அமைதி இன்மையை ஏன் தந்தது? அந்தச் செல்வத்தைப் பயன்படுத்த வேண்டிய வழிமுறை தெரியாமல், பிறரை அடிமைப்படுத்த வேண்டும். தாங்கள் கண்ட ஆட்சி முறையையே உலகம் முழுவதும் செலா வணியாக வேண்டும் என்று எண்ணும் எண்ணம் ஏன் அவர்களிடை வந்தது? இந்தச் செல்வம் புலனடக்கம் இல்லாதவர்கள் கையில் கிடைத்தஉடன் அவர்கள் அகங் காரத்தை வளர்த்தது. பிறரை அடிமை கொள்ளத் தூண்டுவது, 'தான் சிறந்தவன்' என்ற அகங்காரத்தின் விளைவேயன்றோ! எனவே அகங்கார மமகாரம், அவை தோன்றக் காரணமான புலனடக்கம் இன்மை, என்பவை தான், வல்லரசுகளின் துயரத்துக்கு மூலகாரணம் என்பதை நன்கு அறிய முடிகிறது. இவர்கட்கும் இராவணன் போன்ற வர்கட்கும் பொதுத்தன்மை நிரம்ப உண்டு. செல்வம், அதிகாரக் குவிப்பு, அகங்காரம், மமகாரம், புலனடக்கம் இன்மை என்பவை பொதுத்தன்மைகள்.

ஒரு நாடு வாழ வேண்டுமானால், அந்த மக்கள் நாகரிகம் பண்பாடு என்பவை நிலைக்க வேண்டுமாயின், புலனடக்கமே அடிப்படைத் தேவை என்பதைக் காட்டுவதே கம்பனுடைய குறிக்கோள்.

# 7. கடவுள் மனிதனாகப் பிறந்தால்?

## சமயப் பொறை குறைவு

தமிழ் மொழியில் பெருங்காப்பியம் இயற்றிய கவிஞருள் கம்பன் ஒப்பற்று விளங்குகிறான் என்று காண்கிறோம். ஒப்பற்றவன் என்று கூறக் காரணம் உண்டு. ஏனைய கவிஞர்கள் காணாத காட்சிகள் பலவற்றைக் கண்டு, அன்றுவரை யாரும் நினைந்து பார்த்துக் கூறாத சிலபல கருத்துக்களின் அடிப்படையில் இவன் காப்பியம் அமைத்தான் என்பதே அக் காரணம். அப் புதிய காட்சிகளுள் இவன் கண்டு கூறிய கடவுட் கொள்கையும் ஒன்றாகும். இந் நாட்டில் தோன்றிய கவிஞர்கள் அனைவரும் கடவுட் கொள்கையை ஏற்றுக்கொண்டவர்கள் தாம் என்றாலும், தாம் வழிபடும் கடவுளுக்கு ஒரு பெயரும் வடிவமும் தந்து, அதுவே முழுமுதற் பொருள் என்று கூறினர். சமய இலக்கியம் படைத்த நாயன்மார்களும் ஆழ்வார்களுங்கூட இதற்கு விலக்கில்லை. பரம்பொருள் நாமரூபம் கடந்தது என்பதைச் சிற்சில இடங்களில் இவர்கள் கூறாமல் இல்லை. என்றாலும் நாமரூபம் படைத்துக்கொண்டு, அதுவே பரம்பொருள் என்றே கூறினர். அதனால் சமயப்பொறை இல்லாமல், சமய வேற்றுமையும், பூசலும் தோன்றி வளரலாயின.

## சமய ஒருமைப்பாட்டைக் காணல்

இந்த நிலையில், இந்நாட்டின் பழஞ் சமயங்களாகிய சைவம், வைணவம் என்ற இரண்டையும் இணைத்த ஒரு புதிய இணைப்புச் சமயத்தை ஏற்படுத்த முனைகிறான் கம்பநாடன். அடுத்தபடியாக இந்த இரண்டு சமயங்களுமே கடவுள் மானுட வடிவங்கொண்டு இந்த உலகிடை வந்து

அடியார்கட்கு அருள் செய்வான் என்பதை ஏற்றுக்கொள் கின்றன. ஆனால் அவ்வாறு மானுடனாக வரும்பொழுது, தான் யார் என்பதை அறியாமல் வந்து பணி புரியுமாறு செய்த புதுமை கம்பனுடையது. கடவுளை அடையப் பல வழிகளைக் கூறும் இந்த இரண்டு சமயங்களும் பக்தி மார்க்கத்தை இன்றியமையாததாய்க் கூறும். கம்பன் இதை ஏற்றுக்கொண்டு, ஞான மார்க்கத்துக்கும் இடந் தந்து தன் சமயத்தைப் படைக்கின்றான். உபநிடதம் கூறும் பிரம்மத்தை மூலப் பரம்பொருள் என்று குறிப்பிடுகிறான். விசிட்டாத் வைதத்தையும் சற்தாரிய வாதத்தையும் (உள்ளது போகாது இல்லது வாராது) இறைவன், உயிர்கள், உலகம் என்பவற்றின் உண்மைகளையும் ஏற்றுக்கொள்கிறான். இவற்றை அடிப்படையாகக் கொண்டு அவன் மேற்கொள்ளும் கடவுட் கொள்கை ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டியதாகும். இதன் விரிவை அடுத்த பகுதியில் காணலாம்.

“இராமனாகப் பிறந்தவன் திருமாலே” என்ற கொள்கை வான்மீகத்தில் முதலில் இல்லாமல் பிறகு சேர்க்கப்பட்டது என்பது இக்கால ஆராய்ச்சியாளர் கொள்கை. ஆனால் தமிழகத்தைப் பொறுத்தமட்டில் சிலப்பதிகாரக் காலத்தி லேயே இக்கொள்கை இருந்து வந்ததை அறிய முடிகிறது. எனவே, கம்பநாடன் ஆயிரம் ஆண்டுகளாக இந் நாட்டில் ஊறிப்போன இக் கொள்கையை மாற்ற இயலவில்லை. அதனைத் தேவையான இடங்களில் குறிப்பிட்டுச் செல்வதுடன் சரி. அவன் தன் சொந்தக் கருத்தாகப் பேசும் போதெல்லாம் நாமரூபமற்ற பரம்பொருளையே பேசுகிறான். இத்தகைய நாமரூபங் கடந்த பரம்பொருள், மானிடனாக வந்து, பிறந்து, தொழிற்பட்டது ' என்பதை எல்லாச் சமயத்தாரும் ஒரே சமயத்திலுள்ள அனைத்துப் பிரிவினரும் ஏற்பர் என்று கூற முடியாது. இத்தகைய ஓர் இக்கட்டான நிலையைக் கம்பன் தனக்கே உரிய முறையில் ஈடுகொடுத்து அதில் வெற்றியும் காண்கிறான்.

அவனுடைய கடவுள் வாழ்த்தைக் கண்டோம். உலகில் உள்ள சமயத்தவர் யாவரேயாயினும், கடவுட் பொருளை நம்பும் அனைவரும் ஏற்கக்கூடிய கடவுள் வாழ்த்தாகும் அது. அத்துணைச் சிறப்பு வாய்ந்ததும், அனைவருக்கும் பொதுவானதுமான வாழ்த்தைப் பாடிய பிறகு, அடுத்த பாடலில் நீத்தார் பெருமை பேசுகிறான். இவ்வுலகிடைப் பிறந்து, நம் போன்ற உடம்பைப் பெற்று, நம் போன்ற பொறி புலன்களைப் பெற்று, அதே நேரத்தில் அப்பொறிகளை அடக்கி அகங்கார மமகாரங்களைச் சுட்ட சான்றோர்கள் இறைவனுக்கு மிகவும் அண்மையில் இருப்பவர்களாதலின், 'சிற்குணத்தவர்' என்ற பாடலில் அவர்கள் பெருமை கூறி, அவருடைய குணங்களில் தோய்வது நமக்குத் தேவை என்பதையுங் கூறினான். மூன்றாவது பாடலில் கற்றதனாலய பயன் என்கொல், வால் அறிவன் நற்றாள் தொழார் எனின்?' (குறள்-2) என்ற குறளை உள்ளடக்கி, 'பாதம் அல்லது பற்றலர்—வேறு பற்றை நீக்கியவர்கள்' என்று முடித்தான்.

## கடவுள் உயிர்கள்மாட்டுக் கருணையுடையவன்

இதுவரை அவன் கூறியவற்றிலிருந்து கடவுட் பொருளின் இறப்ப உயர்ந்த தன்மையும், நாமரூபங் கடந்த தன்மையும், கல்வி முதலியவற்றாலும், வேதத்தாலும் எட்ட முடியாத தன்மையும் பேசப்பட்டன. இதனால் சாதாரண மனிதர்கட்கு ஒரு மலைப்புத் தட்டிவிடும். இத்துணை உயர்ந்த பொருள் நாம் இப்பிறவியில் காணவோ, அடையவோ கூடியதன்று என்ற தொய்வு மனப்பான்மை தோன்றிவிடும் அல்லவா? ஆகவே இறைப்பொருளின் இலக்கணங்களையும் இயல்பையும் விரித்துப் பேசுவதைக் குறைத்துக்கொண்டு இறைவன் அன்பே வடிவானவன் என்பதை வலியுறுத்தத் தொடங்குகிறான். சமயம் நேரும்பொழுது வைணவப் போராட்டக்காரர் தமக்குத் தக்க முறையில் விடையும் தருகிறான்.

## வேற்றுமையில் ஒற்றுமை

இறைவன் ஒருவனே என்பதையும், உலகிடைத் தோன்றி வளரும் பல்வேறு சமயங்களும் அவன் ஆணையின் வண்ணமே தோன்றின என்பதையும், அவன் அறிந்திருந்தான். அச்சமயங்கள் பல்வேறு காலகட்டங்களில் தோன்றியமையின், அவ்வக் காலகட்டத்துக்கு ஏற்ற முறையில் சில கொள்கைகளை வலியுறுத்தியும், சில வற்றைப் பேசாமல் விட்டும் வழிவகுத்துச் சென்றன. அன்றியும், வெவ்வேறு இடங்களில் தோன்றிய இப் பல்வேறு சமயங்களும் அந்த அந்த இன மக்களுக்கு வேண்டியவற்றை வகுத்துக் கூறின. இவை அனைத்தும் புறத்தில் காணப்படும் வேறுபாடுகளே தவிர, அகத்தில் வேறுபாடு ஒன்றும் இல்லை என்பதையும் அவன் நன்கு அறிந்திருந்தான். எல்லாச் சமயங்களும் பரம்பொருள் ஒன்றே என்பதையும், உயிர்கட்கும் அவனுக்கும் உள்ள தொடர்பையும், இந்த உலகம் பற்றிய அடிப்படையான கொள்கையையும், ஏறத்தாழப் பொதுவாகவே ஏற்றுக் கொண்டிருந்தன. எனவே இவ்வுண்மைகளை நன்கு அறிந்திருந்த கம்பநாடன், இவற்றிற்கு ஒரு வடிவு கொடுக்க எண்ணுகிறான். நேரிடையாகக் கூறுவதைக் காட்டிலும் உவமை மூலம் விளக்குவது எளிது என்பதை உணர்ந்த அவன் ஓர் உவமையைக் கையாள்கிறான்.

கல்லிடைப் பிறந்து போந்து
　　கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைக ளாலும்
　　இயம்ப அரும்பொருள் ஈது என்னத்
தொல்லையில் ஒன்றே யாகித்
　　துறைதொறும், பரந்த சூழ்ச்சிப்
பல்பெரும் சமயம் சொல்லும்
　　பொருளும் போல், பரந்தது அன்றே,

தாதுஉகு சோலை தோறும், சண்பகக் காடுதோறும்,
போது அவிழ் பொய்கை தோறும், புதுமணல் தடங்கள்தோறும்,
மாதவி வேலிப் பூக வனந்தொறும், வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிர் என உலாயது அன்றே.

*(ஆற்றுப்படலம்—19, 20)*

*[எல்லையற்ற முதல் நூல்களும் அறுதியிட்டுச் சொல்லுதற்கரிய, பொருள் (இறைவன்) ஒன்றே என்றாலும், பலவாகிய வேறுபட்ட சமயங்கள் வெவ்வேறு பெயர் களால் அதனைக் கூறுவது போல, மலையிலே பிறந்து, கடலிடைப் புகும் (சரயு) ஆறு, முதலில் ஒரு பெயரைப் பெற்றிருந்தாலும், தான் செல்லும் இடந்தோறும், வெவ்வேறு பெயர்களைப் பெற்றுத் திகழ்ந்தது.*

*மணம் பொருந்திய சோலை, செண்பகக்காடு, அரும்பு மலரும் குளம், மணல் திட்டுகள், மாதவிக் கொடிகளால் சூழப்பெற்ற கமுகத் தோட்டம், வயல்கள் ஆகிய அனைத்திலும் புகுந்து வெளிப்பட்டு, ஊர்வன, பறப்பன, நடப்பன முதலிய பல்வேறு பெயர்களைப் பெறும் ஒரே உயிர்போலச் சரயு பல பெயர்களைப் பெற்றது.]*

## இரு பாடல்களில் கொள்கை விளக்கம்

'கல்லிடை' என்ற பாடல் மிக ஆழமான பொருளைக் கொண்டு விளங்குகின்றது. கம்பநாடனுடைய கடவுட் கொள்கையை மிக நுணுக்கமாகவும் சுருக்கமாகவும் வெளியிட இப்பாடல் உதவுகிறது. இந்த உவமையைச் சற்று விரித்துக்கண்டால் பலவற்றை அறியலாம். கல்லிடை ஆறு பிறப்பதைக் கூறித் தொடங்கினாலும் அதன் முதல் நிலையாகிய கடலிடைப் பிறப்பதையும் மனத்துக் கொள்ள வேண்டும். கடல் என்பது அகல, நீள, ஆழங் காண முடியாததாய் உள்ள நீர்ப்பரப்பு அன்றோ! அதேபோல மூலப் பரம்பொருள் எல்லை அற்றதாய் உள்ளது. கடல்

நீருக்கு வடிவோ உருவோ இல்லாமல் தனக்கென ஒரு குறிப்பிட்ட குணம் இல்லாமல் இருப்பதுபோல் மூலப் பரம்பொருள் நாமரூபம் கடந்ததாய், குணம் இல்லாததாய், அளவிடற்கரியதாய் இருக்கக் காண்கிறோம். ஆனால் அதே கடல்நீர் ஆவியாகச் சென்று வானிடை உலாவி, விரும்பும் பொழுது மழை என்ற பெயருடன் எல்லாவிடங்களிலும் பொழிகிறது. மழையாகப் பொழிவது அதே நீர்தான். ஆனால் மழை நீராகப் பொழியும் பொழுது அதன் இயல்புகள் மாறிவிடுகின்றன— அதாவது தனக்கென இயல்பு ஒன்றும் இன்மையின், அவ்வவ் இடத்திற்கு ஏற்ற இயல்பை மேற்கொள்கின்றது. அதேபோலப் பரம் பொருளும் பிரபஞ்சம், உலகம் என்ற படைப்புகளில் பல்வேறு இயல்புகளைப் பெற்றுத் திகழ்கிறது.

அடுத்து, இதே ஆற்றுநீர், வயல், காடு, குளம், மதகு, சோலை முதலிய இடங்களில் புகுந்திருக்கும் பொழுது வயல், நீர், காட்டாற்று நீர், குளத்து நீர், மதகு நீர், சோலை நீர் எனப் பல்வேறு பெயர்களைப் பெறுகிறது என்றாலும், ஒரே ஆற்று நீர்தான் அது. அதேபோலப் பரம்பொருள் ஒன்றேயாயினும், ஒவ்வொரு சமயத்தாரும் வெவ்வேறு பெயர்களால் அந்த ஒரே பொருளை அழைக்கின்றனர். எனவே சமய வேறுபாடுகள் மனிதர்களாகச் செய்து கொண்டவை என்பதும், அச்சமயங்கள் வெவ்வேறு பெயர்களால் அழைத்தாலும், மூலப் பொருள் ஒன்றே என்பதும், பெறப்பட்டது. இந்த உண்மையால் பரம் பொருள் கட்புலனுக்கு வெளிப்பட்டு நின்று அண்ட பிண்ட சர அசரமாக விளங்கும் இயல்பு கூறப்பட்டது.

‘தாதுகு சோலை தோறும்’ என்ற அடுத்த பாடலில் பரம்பொருள் நுண்மையாக (சூக்குமமாக) யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்கும் நிலையைப் பேசுகிறான். பருப்பொருளாகக் காணப்பெறும் அனைத்தும் இறைவனே

என்ற அரிய கருத்தைப் 'பரந்த சூழ்ச்சி' என்ற சொற்களாலும், நுண்மையாக உள்ளவையும் இறைவனே என்பதை 'உயிர் என உலாயது' என்ற சொற்களாலும் கூறி, ஒரு மாபெருங் கருத்தை இரண்டு உவமைகள் மூலம் விளக்கிய பெருமை, கம்பநாடனுக்கே உரியது என்பதை அறிய முடிகின்றது. தனக்கென ஒரு குறிப்பிட்ட வடிவமோ, குணங்களோ இல்லாத நீரை உவமையாக எடுத்துக் கொண்டது அவன் நுண்மான் நுழைபுலத்துக்குச் சான்றாக உள்ளது என்றாலும், ரூபமற்ற பரம்பொருளுக்குப் புதுப்பொருளான நீரை உவமை கூறியதில் ஒரு சிறு குறை ஏற்படத்தான் செய்கின்றது. இலக்கண நூலார் 'ஒரு புடை ஒத்தவை உவமிக்கப்படும் பொருளாகலாம்' என்று கூறியுள்ளார்கள். ஆதலின் கம்பநாடனுடைய ஆற்றுநீர் உவமையில் எவ்விதத் தவறும் நேர்ந்துவிடவில்லை. எனவே, 'ஒரே பரம்பொருளுக்கு ஏன் இத்தனை பெயரிட்டு இத்தனைச் சமயத்தவர்கள் கூற வேண்டும்' என்ற இன்றியமையாத வினாவுக்கு விடைகூறும் அளவிற்கும் அதனைப் பயன்படுத்திக் கொண்டான் கவிஞன். இந்த உவமையால் நுண்ணியதாக அறியப்படும் கருத்து ஒன்றும் கிடைக்கிறது. ஒரே நீர், பருப்பொருளாகவும் (பனிக்கட்டி), நீர்ப்பொருளாகவும் (தண்ணீர்), நுண்பொருளாகவும் (ஆவி) மாறும் இயல்புடையதாகலின், பருப்பொருள் நிலை (பிரபஞ்சம்), நீர்ப்பொருள் நிலைமை (உயிர்கள்), நுண்பொருள் நிலை (கருத்துக்கும் எண்ணத்திற்கும் அடங்காத நிலை) என்ற மூன்று இயல்புகளையும் ஒரே பரம்பொருளுக்கு ஏற்றிக் காண முடிகிறது.

இரண்டாவது உவமையாலும் மற்றொரு கருத்தைப் பெற வைக்கின்றான். உடம்பு வகையால் எடுத்துக் கொண்டால் நீந்துவன, ஊர்வன, பறப்பன, திரிவன என்ற பல்வேறு உடம்புகளுடன் வெவ்வேறு பெயர்களைப் பெற்றிருப்பினும், அனைத்துள்ளும் உறைவது உயிர் ஒன்றே

*என்று கூறுவதால் இறைபொருளின் பரந்து நிற்கும் நிலையை (சர்வ வியாபகத் தன்மை) அறியுமாறு கூறுகிறான். இதைவிட அரிய கருத்து ஒன்றும் இந்த உவமையால் கிடைக்கின்றது. அற்பம் என்று நாம் நினைக்கும் புழுவிலும், மிக உயர்ந்தவன் என்று மார்தட்டிக் கொள்ளும் மனித உடம்பிலும், உள்ளே இருப்பது ஒரே உயிர் என்று கவிஞன் கூறுவதால், புழுவும் மனிதனும் ஒன்றே என்ற மிக உயர்ந்த தத்துவக் கருத்தையும் கூறியவாறு ஆயிற்று.*

## அனைத்தும் பரம்பொருளே

*இக்கருத்தை மேலும் வலியுறுத்துவான் வேண்டித் தன் கருத்தாக எங்கெங்கெல்லாம் பேசமுடியுமோ, அங்கங் கெல்லாம் பேசுகிறான். ஒவ்வொரு காண்டத்திலும் கடவுள் வாழ்த்தாக ஒவ்வொரு பாடலை அமைப்பதன் மூலம் கவிஞன் தன் கடவுட் கொள்கையைப் பேச வாய்ப்பு ஏற்படுத்திக்கொள்கிறான். பரம்பொருள் எங்கோ ஓர் இடத்தில் நம் அறிவுக்கு எட்டாத இடத்தில் இருக்கிறது என்று கருதுபவர்கள் நினைவை அகற்ற விரும்பி அங்கங்கே இக்கருத்தை வலியுறுத்துகிறான்.*

வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி
ஊனாகி, உயிராகி, உண்மையும் ஆய், இன்மையும் ஆய்
கோனாகி, யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாய்!..

*(திருவாசகம் — 15)*

ஞாலமே! விசும்பே! இவை வந்து போம்
காலமே உனை என்று கொல் காண்பதே? *( "47)*

திரியும் காற்றோடு, அகல்விசும்பு
திணிந்தமண் கிடந்த
எரியும் தீயோடு, இருசுடர்
தெய்வம் மற்றும், மற்றும் முற்றுமாய்...

*(நாலாயிரம்—2362)*

என்று மணிவாசகரும், நம்மாழ்வாரும் பாடிச் சென்றனர். இவ்வாறு கூறும் இருவரும் முறையே சிவன், திருமால் என்பவர்களே இவ்வாறு உள்ளனர் என்பர். இவ்வாறு முறையே தத்தம் சமயப்பிரிவின் சிறப்பைக் கூறவந்தவர் ஆகலின் அவ்வச் சமயம் இறைவனுக்கு இட்டுள்ள பெயரால் இதனைக் குறிப்பர்.

## எளிவந்த தன்மை

இந்த பிரிவினைகளைத் தகர்த்துச் சமரசம் காண முற்பட்ட கம்பநாடன், ஒரே பாடலில் இந்தத் தத்துவ பூர்வமான கருத்தைக் கூறுவதுடன், இறைவனின் எளிவந்த தன்மையையும் (சௌலப்பியம்) உடன் சேர்த்துக் கூறுகிறான். 'இறப்ப உயர்ந்த பொருள்' என்று கூறினால் எளியவராகிய மனிதர்கள் அப்பொருளுக்கும், தமக்கும், எவ்விதத் தொடர்பும் இல்லை என்று கருதி விட்டு விடுவார்களோ? என்று ஐயுற்ற கவிஞன், அதன் எளிவந்த தன்மையையும் சேர்த்தே பாடுகிறான்.

வான் நின்று இழிந்து, வரம்பு இகந்த
  மாபூதத்தின் வைப்பு எங்கும்
ஊனும் உயிரும், உணர்வும் போல்,
  உள்ளும் புறத்தும் உளன் என்ப—
கூனும், சிறிய கோத் தாயும்
  கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர்
  இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்

அயோத்தியா காண்டம்—வாழ்த்து)

[மேலே உள்ள பரம்பொருளே இறங்கிவந்து, ஐம் பூதங்களில் நிறைந்து, உடல், உயிர், உணர்வு என்பவற்றின் உள்ளும் புறமும் இருக்கிறது. அதே பொருள் கூனி, சிற்றன்னை என்பார். செய்த கொடுமையால் அரசு துறந்து, காடும் கடலும் கடந்து இமையோர் துயர் துடைத்தது.]

*ஏனைய நாட்டார் போல, இத் தமிழர், பரம்பொருளை இவ்வுலகத்துடன் எவ்விதத் தொடர்பும் இல்லாத ஓரிடத்தில் இருப்பதாகக் கூறுவதில்லை. கருணையே வடிவான பொருள் ஆகலின், யார் கடுந்துயரால் அவதியுற்றுத் தன்னைச் சரண் அடைகின்றார்களோ, அவர்கள் பொருட்டு இறங்கி வந்து துயர் துடைக்கும் பணியைச் செய்கிறது என்ற இதே கருத்தை மணிவாசகரும் கூறுதல் காணலாம்.*

கனவேயும் தேவர்கள் காண்பரிய கனை கழலோன்
நனவே எனைப் பிடித்து ஆட்கொண்டான்...!
தேவர்கோ அறியாத தேவதேவன் *(தெள்ளேணம் — 10)*

செழும் பொழில்கள் பயந்து, காத்து, அழிக்கு மற்றை
யாவர் கோன் என்னையும் வந்து ஆண்டு கொண்டான்
*(சதகம் — 30)*

## சமயப் பிரிவினை வேண்டா

*சமயப் பிரிவினையாளர் கூறும் பெயர்களைக் கூடு மானவரை கூறாமல், இறைத்தன்மையின் சிறப்பை வெளிப்படுத்துகிறான் கவிஞன் என்றாலும், அவன் காலத்தில் மலிந்திருந்த இந்தப் போராட்டத்தையும் அவன் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. எனவே அவனையும் மீறி ஓரிரு இடங்களில் இப் பிரிவினையாளரைச் சாட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. தென்திசை செல்லும் வானர வீரர்கட்கு (அனுமன் செல்லும் குழு), வழி கூறி வரும் சுக்ரீவன், அவர்கள் செல்லும் வழியில் 'அருந்ததி மலை' என்ற ஒன்று குறுக்கிடும்; அம்மலையினுள் நுழைந்து செல்லல் இயலாத காரியம் எனக் கூற வருபவன், ஓர் அற்புதமான உவமையைக் கையாள்கிறான்.*

அரன் அதிகன், உலகு அளந்த அரி அதிகன்
என்று உரைக்கும் அறிவு இலோர்க்குப்
பரகதி சென்று அடைவு அரிய பரிசேபோல்
புகல் அரிய பண்பிற்று ஆமால் *(நாடவிட்ட படலம்—24)*

அரன் அதிகன், உலகை ஓரடியால் அளந்த அரிதான் அதிகன் என்று பேசுபவர்களை அறிவில்லாதவர்கள் என்று கம்பன் கூறுகிறான். இத்தகைய அறிவிலிகள் மெய்ப் பொருள் யாது என்பதை அறிய முற்படமாட்டார்கள். எனவே இவர்கள் பரகதி சென்று அடைதலும் இயலாத காரியம் என்று பேசுகிறான். ஒரு கவிஞன் ஒரு பெரிய சாதனையை நிகழ்த்த முற்படும்போதுகூட, அவன் வாழும் காலச்சூழல் அவனை விட்டுவிடுவதில்லை. அந்தச் சூழலில் சிக்கிப் பலரும் மூழ்கிவிடுவர். கம்பன் போன்றோர் அந்தச் சூழலில் சிக்காமல் இருப்பதுடன், அதன் குறைவு நிறைவுகளை ஆராயும் ஆற்றலையும் பெறுகிறார்கள்.

## இறை இயல்பைக் கூறும் நூல்கள்

இறை இயல்பைக் கம்பன் அறிந்து விரிவாகக் கூறுதற்கு உதவியாக இருந்தவை ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடல்களேயாகும். இவற்றுடன் உபநிடதக் கருத்துகளும் பெரிதும் உதவியுள்ளன. வான்மீகத்தில் இல்லாத 'இரணியன் வதை' பற்றி ஒரு படலமே பாடியுள்ளான் கவிஞன். காப்பியப் போக்குக்கு இரணியன் வதைப்படலம் உதவுகிறதா என்று திறனாய்வாளன் நோக்கில் பார்க்கும்போது இல்லை என்றுதான் விடை கூற வேண்டியுள்ளது. இராவணன் மந்திராலோசனை அவையில், தன்னையும் மறந்து அவன் சினங் கொண்டுள்ள நிலையில் இவ்வளவு பெரிய வரலாற்றை 176 பாடல்களில் வீடணன் கூறவும், அதை அவன் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தான் என்று கூறுவதும் பொருத்தமாக இல்லை. வான்மீகத்தில் இது இல்லை. அன்றியும் கதைப் போக்கிற்கு இது தடையாக உள்ளது என்பதைக் கம்பனைப் போன்ற தலையாய கவிஞன் அறியவில்லை என்று கூறுவதும் சரி இல்லை என்றால், ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர வேண்டியுள்ளது.

இறை இயல்பை, உபநிடத அடிப்படையில் தன் காப்பியத்துள் எவ்வாறாவது நுழைத்துவிட விரும்புகிறான் கம்பநாடன். இறை இயல்பை, உபநிடத உதவி கொண்டு சொல்வதற்குப் பரம்பொருள் மனிதனாக வந்துள்ள இராமகாதை பொருந்துமாறு இல்லை. மேலும், இறைவன் தன்னைப்பற்றித் தானே பேசிக்கொள்வதும் (மில்டனின் காப்பியத்தில் வருவது போல) தமிழர் கண்ட காப்பிய அமைதிக்குப் பொருந்துமாறு இல்லை. கவிஞன் தானே அதனைப்பற்றிப் பேசக் காப்பிய இலக்கணம் இடந் தராது. அப்படியானால் காப்பியத்துள் வரும் ஏதாவது ஒரு பாத்திரத்தைக் கூற முடியும். இறை இயல்பு பேசும் பாத்திரம் அதற்குரிய தகுதி பெற்றிருத்தல் வேண்டும். அன்றியும் தகுதி பெற்ற பாத்திரம் பேசுவது மட்டும் போதாது. அதனைக் கேட்கின்ற பாத்திரமும் அதற்குரிய தகுதியைப் பெற்றதாய் இருத்தல் வேண்டும். இத்தனை இடையூறுகளின் நடுவே நிற்கும் கம்பநாடன் இதற்கு ஒரு வழி காணும் முகமாகவே 'இரணியன் வதைப்படலம்' அமைக்கின்றான். அது காப்பியத்துடன் பொருந்தி நிற்கவில்லை என்ற குறை பேசப்பட்டாலும், அதன் பொருட்டுக் கவிஞன் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. எப்படியும் தன் நோக்கம் நிறைவேற வேண்டும். காப்பியப் போக்கில், இராமனைப் பரம்பொருள் இறங்கி வந்ததாகச் சொல்ல வேண்டும். அப்படிக் கூற வரும்பொழுதே அதற்கேற்ற நிலைக்களம் பரம்பொருளின் இலக்கணம் பேச ஒரு பாத்திரம், அதனைக் கேட்க ஒரு பாத்திரம் ஆக அனைத்தும் அற்புதமாகப் படைக்கப்படுகின்றன.

## இறைவன் கருணையின் உறைவிடம்

இவற்றை விரிவாகக் காண்பதற்கு முன்னர், இறை இயல்பை அறியும் அறிவை, அவன் படிப்படியாக வளர்த்துக்கொண்டே செல்வதையும் காண்டல் வேண்டும்.

*இறைவனுக்கு உள்ளதாக நாம் கூறும் இயல்புகளுள் இன்றியமையாதது அவன் கருணையாகும். 'கருணைக் கடல்' என்று சான்றோர் இறைவனைக் கூறுவர். எனவே பரம்பொருளின் அவதாரமான தன் காப்பிய நாயகன், கருணையின் உறைவிடம் என்பதைக் காட்டிக்கொண்டே செல்கிறான். மிக மிகக் கீழே இருப்பவர்களிடமும் எவ்விதக் கைம்மாறும் கருதாமல் அருள் பாலிக்கின்றான்.*

*பயன் கருதாத, தூய்மையான அன்பை இராமன் சந்திக்க வேண்டும். அதனை அவன் முழுவதுமாக ஏற்றுக் கொண்டு தன்னை அந்த அன்பில் கரைத்துக்கொள்ள வேண்டும், இத்தகைய சூழ்நிலையைப் படைப்பதற்கு இடம் தேடிக்கொண்டிருந்த கவிஞனுக்கு, ஆழ்வாரின்,*

ஏழை, ஏதலன், கீழ்மகன் என்னாது
 இரங்கி மற்று அவற்கு இன்னருள் சுரந்து
மாழைமான்மட நோக்கி உன் தோழி
 உம்பி எம்பி என்று ஒழிந்திலை, உகந்து
தோழன் நீ எனக்கு இங்கு ஒழி! என்ற
 சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட
ஆழிவண்ணா! நின் அடியிணை அடைந்தேன்
 அணிபொழில் திரு அரங்கத்து அம்மானே!

*(நாலாயிரம்—1418)*

வாதமா மகன் மர்க்கடம் விலங்கு
 மற்றோர் சாதி என்று ஒழிந்திலை உகந்து
காதல் ஆதரம் கடலினுள் பெருகச்
 செய் தகவினுக்கு இல்லை கைம்மாறு... *( "1416)*

*என்ற பாடல்கள் கைகொடுத்து உதவின.*

*வான்மீகியின் குகன், கம்பனின் குகனிலிருந்து முற்றிலும் மாறுபட்டவன். வான்மீகியின் குகன் இராமனுக்கு முன்னரே அறிமுகமானவன். இராமன் நாடிழந்து வருவதை அறிந்தவன். இராமனைச் சந்தித்து,*

இருவரும் உரையாடியதை வான்மீகி கூறுவதைப் பார்த்தால், சாதாரண நண்பர்கள் இருவர் உரையாடிக் கொண்டிருப்பதைத்தான் நினைவூட்டும். வான்மீகியின்படி குகன் தூரத்தில் வருவதை அறிந்து இராம இலக்குவர்கள் எழுந்து நின்று அவனுக்கு மரியாதை செய்து உரையாடத் தொடங்குகின்றனர். *

## கம்பன் கண்ட குகன்

வான்மீகியின் இந்தக் குகனை 'ஏழை, ஏதலன், கீழ்மகன் என்னாது' என்று ஆழ்வார் பாடக் காரணமே இல்லை. தமிழகத்தில் குகனைப்பற்றிய வேறு வகையான வரலாறு இருந்திருக்குமோ என்றும் தோன்றுகிறது. வான்மீகி கூறும் குகனைவிட ஆழ்வார் கூறும் குகன் கம்பனுக்கு ஏற்ற பாத்திரமாக அமைகின்றான். வெளியில் காவலாக நிற்கும் இலக்குவன் குகனைப் பார்த்து 'நீ யார்?' என்று கேட்டவுடன், அவன்தான் இராமன் போலும் என்று நினைத்து, 'தேவா நின் கழல் சேவிக்க வந்தனன் நாவாய் வேட்டுவன் நாயடியேன்' (குகப் படலம்—11) என்று கூறுகிறான். அவனை வெளியில் நிற்க வைத்துவிட்டு உள்ளே சென்ற இலக்குவன், தமையனிடம் 'தாயினும் நல்லன் (12) வந்துள்ளான்' என்று கூறவும் அவன் அனுமதி பெற்றுக் குகனை உள்ளே அழைத்துச் செல்கிறான் இலக்குவன். இராமனை முதன் முறையாகக் கண்ட உடனேயே, 'நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன் யான்' (17) என்று கதறுகிறான் குகன். உடனே 'இவனிடம் அன்பு என்பது தனியே இல்லை; இவன் அன்பே வடிவானவன்' என்ற முடிவுக்கு வந்த இராகவன், 'தீராக் காதலன் ஆகுமன்றே' (18) என்று இலக்குவனுக்கும் பிராட்டிக்கும் அறிவிக்கின்றான்.

* அயோத்தியா காண்டம் — ஸர்க்கம் 50

வான்மீகத்தில் கங்கையைக் கடக்க நாவாய் உதவிய குகன், இராமனை ஓரிடத்தில் ஏற்றிவிட்டு விடைபெற்றுக் கொள்கிறான். ஆனால் கம்பன் கண்ட குகன் இராமனைப் பிராட்டியோடும், இலக்குவனோடும் ஓடத்தில் ஏற்றிவைத்துத் தானே ஓடத்தை ஒற்றை ஆளாகச் செலுத்துகிறான். இராமனை மூலப் பரம்பொருளாக வடிக்கும் கம்பன், முதன் முறையாக அவன் அன்பர்கட்கு அருள் செய்யும் நிலையை விளக்கவே வான்மீகத்தில் இல்லாத இந்நிகழ்ச்சியை இங்கே புகுத்துகிறான். ஓடம் செலுத்தும்போதே, குகன் தானும் இராமனுடன் உறைய வேண்டும் என்ற கருத்தை அறிவிக்கின்றான். முழு அன்பினில் விளைந்த அந்த வேண்டுதலை மறுக்கவும் முடியாமல் ஏற்றுக்கொள்ளவும் முடியாமல் இராகவன் நிலை தடுமாறித் தன்னையே குகனுக்குத் தந்துவிடும் அற்புதத்தைக் கம்பன் இதோ பேசுகிறான்,

அன்னவன் உரைகளோ, அமலனும் உரை நேர்வான்,
என் உயிர் அனையாய் நீ; இளவல் உன் இளையான், இந்
நன்னுதல் அவள் நின்கேள்; நளிர்கடல் நிலம் எல்லாம்
உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின்
..............................................................................
முன்பு உளெம் ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா,
அன்பு உள, இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்.

*(குகப்படலம்—42, 43)*

[அந்தக் குகன் (உடன் வருகிறேன் என்று கூறிய) உரையைக் கேட்டு, 'என் உயிர் அனையவன் நீ! இந்த இளையவன் உனக்கும் இளையோன். ஒளி பொருந்திய நெற்றியை உடைய இச் சீதை, நின் கொழுந்தியாவாள். குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகம் உன்னுடையது. உன் ஆணையின்படி நான் இதனை ஆள்கிறேன். முன்பு நால்வராகப் பிறந்தோம். முடிவில்லாத அன்பு என்பது நம்மைக் கட்டுதலால் இனி நாம் ஐந்து பேராக உள்ளோம்' என்று இராமன் கூறுவான்.]

இதற்கடுத்த பாடலில், 'யான் என உரியாய் நீ' (44) என்று குகனை இராகவன் பேசுகிறான். அதாவது 'நீயும் நானும் வேறல்லோம்' என்று கூறுகிறான்.

இராகவனை முதன் முறையாகக் கண்ட பொழுதே, குகன் தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவனிடம் இழந்துவிட்டான். இராகவன் அதனை உடனடியாக அறிந்து கொள்கிறான். இத்தகைய அன்பை எவ்வாறு கணக்கிடுவது? இத்தகைய அன்பர்களைப் பரம்பொருள் எவ்வாறு ஏற்றுக் கொள்கிறான் என்று அறிய வேண்டுமாயின் சேக்கிழாரே இதற்கு விடை கூறத் தகுந்தவர்.

குகன் வருவதற்கு முன்பு, இராமனை வரவேற்றுத் தம் இடையே வைத்துக்கொண்டு உரையாடி, மகிழ்கின்றனர். முனிவர்கள், அவர்களும் இராமனிடம் அன்பு பூண்டவர்கள்தாம். ஆனால் இராமனைப் பரம்பொருள் என்று அறிந்துகொண்டு, தங்கள் குறைதீர்க்க வந்துள்ளான் என்பதையும் நன்கு தெரிந்துகொண்டு, அவனிடம் காட்டும் அன்பாகும் அவர்கள் அன்பு. சுருங்கக் கூறினால் முனிவர்கள் அன்பு, 'அறவிலை வாணிகம்' ஆம். அன்பைச் செலுத்தி, வீடுபேற்றைப் பெற விரும்புகிறவர்கள் இம் முனிவர்கள். குகன் எந்த ஒன்றையும் எதிர்பார்க்கவில்லை. இராமன் பரம்பொருள் என்ற எண்ணமே அவனிடம் இல்லை. ஏனென்றால் பரம்பொருள் என்ற சொல்லுக்கே பொருள் அறியாதவன் அவன். காளத்தி வேடனாம் கண்ணப்பன், காளத்தி நாதனை இன்னான் என்று அறியாமற்கூட, முதன்முறை பார்த்தபோதே அவனிடம் தன்னை இழந்துவிட்டான்; கங்கை வேடனும் அவ்வாறே! இத்தகைய அன்பை இறைவன் ஒருவன்தான் அறிந்து கொள்ள முடியும். இவர்களிடம் அன்பு ஒரு பகுதியாக இருக்கவில்லை. இவர்களே அன்பின் வடிவாக ஆகிவிட்டனர். இது ஒரு முழுமாற்றம் (Transformation). கங்கை

வேடனும், காளத்தி வேடனும் முறையே இராகவனையும், குடுமித் தேவரையும் காண்பதற்கு முன்னர் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களேயாவர். அதாவது தற்போதம், இருவினைத் தொடர்பு, மும்மலக்கட்டு (ஆணவம், கன்மம், மாயை) என்பவற்றை உடையவர்கள்.

ஆனால் இராமனையும், காளத்தி நாதனையும் கண்டவுடன் இவர்களிடம் இருந்த மேலே குறிப்பிட்ட மூன்றும் அழிந்துவிட்டன. காளத்தி வேடனாம் கண்ணப்பரைப் பற்றிக் கூறவந்த சேக்கிழார், இந்த முழு மாற்றம் பற்றி அழகாகக் கூறுகிறார்.

தன்பரிசும், வினை இரண்டும், சாரும் மலம் மூன்றும் அற
அன்பு பிழம்பாய்த் திரிவார்..........

*(கண்ணப்பர்—புராணம்—154)*

இந்த நிலை குகனுக்கு முற்றிலும் பொருந்தும். கங்கை வேடன் இராமனைப் பார்த்தவுடன் கூறிய சொற்கள் யாவை?

................உன்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வனேன் யான்............ *(குகப்படலம்—17)*

என்பதாகும். 'தன் கண்ணைத் தோண்டி இருக்க வேண்டும். ஆனால் செய்ய முடியவில்லை' என்று வருந்துகிறான். இதன் எதிராகக் காளத்தி வேடன் உண்மையிலேயே கண்ணைத் தோண்டித் தான் அன்பு செய்யும் பொருளுக்கு அப்பி விட்டான்.

இறைவனை விரைவில் அடைய வேண்டுமாயின், தற்போதம் முதலியவற்றை இழந்து, அன்பே வடிவாய் ஆதல் வேண்டும். அவ்வாறு ஆகிவிட்டால் உடனடியாக வீடு கிடைக்கும். காளத்தி வேடன் ஆறு நாளில் வீடு பெற்றான். கங்கை வேடனாம் குகன் இராமனிடம் காட்டிய முழு அன்பால், இராமன் ஒரு பகல் நேரத்திற்குள் இவனை முழுவதுமாக ஆட்கொள்ளுகிறான். முதலில்

குகனைப் பார்த்தவுடன் இராமன் கூறிய சொற்கள் 'யாதினும் இனிய நண்ப! இருத்தி ஈண்டு எம்மோடு' (18) என்பதாகும். இவ்வாறு இராமன் கூறுவதற்குக் குகன் என்ன செய்தான்? அவன் இருந்த நிலையைக் கம்பன் இதோ கூறுகிறான்: 'இழிபுனல் பொழி கண்ணான், ஆவியும் உலைகின்றான், அடியிணை பிரிகல்லான்' (27), (கண்ணில் நீர் பொழிய, உயிர் போவதே போல் துயருற்று, இராமனை விட்டுப் பிரிய விரும்பாதவனாக இருந்தானாம்.)

இந்த நிலையைக் குகன் அடைந்துவிட்ட பிறகு, இராமனுக்கு வேறு வழியே இல்லை. அடுத்தபடியாகக் குகனை 'என் உயிர் அனையாய்!' என்றான். மேலும் தன் சோதரனையும், மனையாட்டியையும் குகனுக்குத் தம்பியாகவும், கொழுந்தியாகவும் ஆக்கினான். அடியவனாகிய குகன் ஆணையின்படியே இராமனாகிய தான் ஆட்சி புரிவதாகவும் கூறினான் (42). இது ஏதோ உபசார வழக்கன்று என்பதை நிரூபிக்க, அடுத்து இங்கே உள்ள தான், தம்பி, மனைவி என்பவர்களுடன் காட்டும் உறவுடன் நிறுத்தாமல், அயோத்தியில் உள்ளவர்களையும் உளப்படுத்தி,

> முன்பு உளம் ஒரு நால்வேம் முடிவு உளது என உன்னா
> அன்பு உள, இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம் (43)

என்று, முடிந்த நிலையில் தன்னையே அவனுக்கு ஈந்துவிடுகிறான்.

> அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்,
> அன்பே சிவம் ஆவது யாரும் அறிகிலார்.
> அன்பே சிவம் ஆவது யாரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்து இருப்பாரே.
>
> (திருமந்திரம்—270)

என்பது திருமந்திரம். குகனுடைய அன்பும், இராமனும் வேறுவேறு என்று நினைப்பது சரி இல்லை. குகனுடைய அன்பே இராமன் என்பதை அறிந்தபின், குகனும் இராமனும் ஒருவரே என்பதை அறிய வாய்ப்புண்டு. இதனை நன்கு அறிந்த நம் முன்னோர் 'குகப்பெருமாள்' என்று கூறினர். வீடண ஆழ்வான், பரதாழ்வான் என்று கூறியதன் அடிப்படை வீடணனும், பரதனும் தம்முடைய தனித்துவம் கெடாமல், இராமனிடம் முழு அன்பு செலுத்தினர் என்பதாகும். அத்துணை அன்பிலும், அவர்கள் தம் தனித்துவத்தை (Individuality) இழக்கவில்லை. அதனால் இராம ஈடுபாட்டில் ஆழ்கின்றவர்கள் என்ற கருத்தில் ஆழ்வார்கள் எனப் பெற்றனர். ஆனால் குகன் விஷயத்தில் தனித்துவம் என்ற ஒன்று இல்லை. உப்புப் பொம்மை கடலில் ஆழ்ந்தால் என்ன ஆகும்? அதனுடைய தனித்துவத்தை இழந்து, கடல் எது, உப்புப் பொம்மை எது, என்று பிரித்துக் காண முடியாதபடி ஒன்றாய்விடும். அதேபோலக் குகன் என்ற பக்தன், இராமன் என்ற கடலில் மூழ்கிக் கடலாகவே ஆகிவிட்டான். எனவே பெரிய பெருமாளுடன் சேர்ந்து அடையாளங் காண முடியாமற் போனபடியால். குக ஆழ்வான் என்று கூறாமல், குகப் பெருமாள் என்றே குறிப்பிட்டனர். இவ்வாறு ஆகின்ற குகன் போன்றவர்கள் புலனடக்கம் என்பதை மேற்கொண் டார்களா என்ற வினா நியாயமானதே! இவர்களைப் பொறுத்தமட்டில் பொறிபுலன்கள் அடக்க வேண்டிய நிலையில் இல்லை. சைவ சித்தாந்திகள் கூறுவதுபோல, இவர்களுடைய பொறிபுலன்கள், அந்தக் கரணங்கள் என்பவை, பசு கரணங்களாக (அதாவது மனிதர்களுக்குரிய வையாக) இல்லாமல், பதி கரணங்களாக ஆகிவிட்டன. இது புறநடை (exception) இவ்வாறு தம்மை மறந்து, அன்பே வடிவாக மாறித் தம்முடைய கருவி கரணங்களைக்கூட மடைமாற்றம் (Transformation) செய்துவிட்டவர்கள், தாம்

செய்யும் செயலுக்குத் தாமே பொறுப்பாக ஆவதில்லை. இவர்கள் செய்யும் செயல்கள் அனைத்தும் இறைவன் செயலே என்பதையும் அறிதல் வேண்டும். இத்தகையவர் கள்பற்றி அனுபவ ஞானியாகிய மணிவாசகர், 'சித்தம் சிவ மாக்கிச் செய்தனவே தவமாக்கும்' (தோணோக்கம்—6) என்று கூறுகிறார். இதே கருத்தைக் கீதையும் சிறிது மாற்றிப் பேசுகிறது:

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் கரஜ!
அஹம் த்வா ஸர்வ பாபேப்யேப மோக்ஷ யிஷ்யாமி மா சுச!!

(அத்தியாயம்—18—66)

[எல்லாத் தருமங்களையும் பற்று அறவிட்டு, ஒழித்துவிட்டு, என் ஒருவனையே சரணம் புகுவாய், நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன். வருந்தாதே.]

குகனுடைய இந்த முழுச் சரணாகதித் தத்துவத்தை இராமன் ஒருவன் மட்டுமே புரிந்துகொண்டு அவனை ஏற்றும் கொண்டான். இராமன் மூலப் பரம்பொருள் என்பதைக் கம்பநாடன் குறிப்பாக இங்கே உணர்த்துகிறான்.

## பிற மொழி இலக்கியங்களில் தெய்வங்கள்

உலகிடைப் பிற மொழிகளில் தோன்றிய எத்தனையோ காப்பியங்களில் தெய்வங்கள் மனித வடிவிலும், சுயவடிவிலும் இவ்வுலகிடை வந்து செயலாற்றிய நிகழ்ச்சிகள் பேசப் பெற்றுள்ளன. ஆனால் இவ்வாறு வந்த தெய்வங்கள் மனிதர்களுடைய சட்ட திட்டங்கட்குக் கட்டுப்பட்டு நடந்து கொள்ளாமல், தம் விருப்பம்போல் நடந்துகொண்டதாகவே அக் காப்பியங்கள் கூறும்; காரணம் அவை தெய்வங்கள்! அம்மொழி பேசுபவர்கள் தம் காப்பியங்களில் தெய்வங்கள் அவ்வாறு நடந்து கொள்வதைச் சரி என்றே ஏற்றுக்கொண்டனர். இந்த

நாட்டிலும் பாரதக் கதையில் கிருஷ்ணன் நடந்து கொள்வதைப் பார்க்கிறோம். மிகப் பழைய செவி வழிச் செய்திகளான கதைகளையே இந்த இதிகாசங்கள் பேசுவதால் யாரும் அதனை ஏற்றுக்கொள்ளத் தயங்குவதில்லை. இவை எல்லா நாடுகளிலும், எல்லா மொழிகளிலும், தோன்றிய பேரிலக்கியங்களில் காணப்பட்ட பொது இயல்புகளாம். வியத்தகு அற்புதங்கள் (miracles) என்பவை எல்லா நாட்டு மக்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்ட நிகழ்ச்சிகளாகும்.

## மனிதப் பிறப்பின் சிறப்பு

இந்த அடிப்படை, எல்லா மொழி இலக்கியங்கட்கும் பொது என்றாலும், கம்பனைப் பொறுத்தமட்டில் வேறு வகையில் அந்தக் கருத்துச் செயல்படுகிறது. அவனைப் பொறுத்தமட்டில், பரம்பொருளே இம் மண்ணிடைப் பிறந்து தொழிற் படுகிறான் என்ற பழைய கருத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு செயல்படுத்துகிறான். ஆனால் பரம்பொருளேகூட மனிதனாகப் பிறந்து இந்த உலகில் வாழத் தொடங்கினால், அவனும் மனிதர்கட்குரிய நெறிமுறைகளைக் கடைப்பிடித்து வாழ்வதுடன், குறிக் கோள் தன்மை பெற்ற மனிதனாகவும் வாழ வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறான். நால்வகைப் பிறப்பினுள் மனிதப் பிறப்பே ஆக உயர்ந்தது என்ற எண்ணம் உடையவன் கம்பன். ஆழ்வார்களும், நாயன்மார்களும் மனிதர்களாகப் பிறந்து, இறைவனை நேரே கண்டு, அவனிடம் அடைக்கலமான வரலாறுகளை அறிந்ததுடன், அவர்கள் பாடல்களிலும் ஈடுபடுபவனாகலின், மனிதப் பிறப்பின் சிறப்பை நன்கு அறிந்துகொள்கிறான். எனவே இறைவன் கீழிறங்கிப் பிறக்க விரும்பினால், அவனும் அவனுடைய படைப்புகளுள் தலைசிறந்து விளங்கும் மனித உடம்பையே விரும்பி மேற்கொள்வான் என்ற

அசைக்க முடியாத நம்பிக்கை கம்பனுக்கு இருந்தது என நினைக்க வேண்டியுளது. கம்பன் தான் கொண்ட இக் கருத்தைச் சுக்ரீவன் கூற்றாகப் பேசவைக்கின்றான். இராமனை முதன்முறையாகச் சந்திக்கும் சுக்ரீவன் மனத்தில் நினைப்பதாகப் பாடல் அமைந்துள்ளது.

தேறினன்—அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம் தேவர் அன்றே
மாறி, இப் பிறப்பில் வந்தார் மானுடர் ஆகி மன்னோ;
ஆறுகொள், சடிலத்தானும், அயனும், என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம் வென்றது அன்றே!

(நட்புக்கோள் படலம்—19)

[தேவர்கள் அனைவர்க்கும் தேவனான பரம் பொருளே, வடிவு மாறி மனிதனாக இங்குற்றான். சிவபிரான் நான்முகன் என்ற தொடக்கத்துத் தேவர்கள் தொகுதியை எல்லாம் மானுடம் வென்றுவிட்டது. (இவன் மானுடனாக வந்தமையால்).]

மாபெருஞ் செயல்கள் இவ்வுலகிடை நிகழ்ந்த பொழுதெல்லாம், இறைவன் மானுட வடிவுடன் வந்து செயற்கருஞ் செயல்களைச் செய்ததாகவே நம் நாட்டுப் பழங்கதைகள் பேசுகின்றன. இப் பழங்கருத்துக்குப் புதுமுடிவு கொடுப்பதற்காகவே கம்பநாடன் 'வேறு உள குழுவை எல்லாம் மானுடம் வென்றது' என்று பேசுகின்றான்.

## பரம்பொருளும் சட்டங்கட்கு உட்படும்

பரம்பொருளே கூட மானுட உடல் தாங்கி வந்தால், மனிதனுக்குரிய சட்டதிட்டங்கட்கு உட்பட்டு நடப்பதே சிறந்தது என்று கம்பன் முடிவு செய்தான் என்று முன்னரே கூறப் பெற்றதல்லவா? அதனைச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும். மனிதனாகப் பிறந்தவன் கல்வி கேள்விகளிற் சிறந்தவனாக இருத்தல் வேண்டும். இக் கல்வியின் பயனாகப் புலனடக்கத்தை மேற்கொள்பவனாக

இருத்தல் வேண்டும். இது கைவந்துவிட்டால், விருப்பு வெறுப்புகட்கு இடங்கொடாத 'சம திருஷ்டி' உடையவனாக ஆதல் முடியும். இதனை அடுத்து ஆசை அறுப்பவனாக ஆதல் முடியும். இத்தகையவன் இல்லறத்தை மேற்கொண்டால், ஒரு மனைவியுடன் இல்லறம் என்னும் நல்லறம் நடத்துபவனாக ஆவான். இதன் விளைவாக அன்புடைமை, அருளுடைமை, அறன் உடைமை ஆகிய பண்புகள் அவனிடம் நிறைந்து காணப்பெறும். இவற்றின் பயனாக, அவன், 'தனக்கென வாழாப் பிறர்க்குரியவனாக' ஆதல் உறுதி.

## கம்பன் படைத்த இராமன்

இந்த அடிப்படையை மனத்துள் வைத்துக்கொண்டே கம்பநாடன் காப்பிய நாயகனாகிய இராமனைப் படைக்கின்றான். 'திருமால் வந்து தோன்றினான்' என்ற செய்தியைக் கம்பன் கூறினாலும், அவனுடைய இராமாயணத்தில் வரும் இராமன், அவனே படைத்துக் கொண்டவனாவன். கம்பன் கண்ட இராமன், வான்மீகி கண்ட இராமனினும் வேறுபட்டவன். ஆழ்வார்கள் கண்ட அவதார இராமனினும் வேறுபட்டவன். அவதாரக் கருத்தை மறுக்காமல், ஏற்றுக் கொண்டாலும், தான் கூறும் காப்பிய நாயகன் தன் படைப்பாகவே இருத்தல் வேண்டும் என்ற கொள்கையில் கவிஞன் ஊன்றி நிற்கின்றான். இக் கவிஞன் படைத்த இராமன் மனிதர்களுக்குள் ஈடு இணையற்றவனாக விளங்குகிறான், காப்பியத்தில் வரும் பல பாத்திரங்கள், இந்திரன், விராதன், வாலி, சரபங்கன், கருடன் முதலிய பலரும் அவனை அவதாரம் என்று கூறும்பொழுதுகூட அதனை ஏற்றுக் கொள்ளாமல், தான் என்ற நினைவுடனேயே கம்பராமன் உலா வருகின்றான். மனிதர்கள் இவ்வுலகிடைப் பிறந்துவிட்டால் அடைய வேண்டிய துயரங்கள், இராமனையும் பற்றுகின்றன.

ஒருவன் நற்குடியில் பிறந்தாலும், அவனை வளர்த்துக் கல்வி கற்பித்து நல்லியல்புகள் அவனிடம் வளருமாறு செய்வது வளர்ப்பவர் கடமை. அறுபதினாயிரம் மனைவியரைப் பெற்று வாழ்ந்தும் கடைசிக் காலத்தில் நான்கு மக்களைப் பெற்றான் தசரதன். எனவே, இம்மக்கள் எப்படி இருப்பார்களோ என்று பெண்ணைக் கொடுக்க விரும்பும் ஒரு தந்தை ஐயுற்றால், அதில் தவறு இல்லை அல்லவா? எனவே இராமனும் அவன் சகோதரர்களும் எத்தகைய பண்புடையவர்கள் என்பதை விசுவாமித்திர முனியே கூறுகிறான். அதுவும் ஜானகியின் தந்தையாகிய ஜனகனிடம் பின்வருமாறு பேசுகிறான்:

திறையோடும் அரசு இறைஞ்சும்
  செறிகழற்கால் தசரதன் ஆம்
பொறையோடும் தொடர்மனத்தான்
  புதல்வர் எனும் பெயரே காண்!—
உறையோடும் நெடுவேலாய்!
  உபநயன விதி முடித்து,
மறை ஓதுவித்து, இவரை
  வளர்த்தானும் வசிட்டன் காண்.

[அரசர்கள் திறையோடு வந்து வணங்கும் கழல் அணிந்த தசரதன் என்ற பொறை நிரம்பிய மன்னனின் புதல்வர்கள் என்பது பெயரளவில்தான். நீண்ட வேலை உடைய ஜனகனே! உபநயனம் செய்து மறைகளை ஓதுமாறு செய்து, இவர்களை வளர்த்து ஆளாக்கினவன் வசிட்ட முனிவனே ஆம்.]

அதிலும் இவ்விராமன் எத்தகையவன் தெரியுமா? உலகில் உள்ள தீவினைகள் செய்த தீவினையின் பயனாலும் ‘முடிவில்லாத வேதங்கள் கூறும் அறம் என்பது செய்த அறத்தாலும், கடகம் அணிந்த நீண்ட கையை யுடைய எழுத முடியாத அழகினை உடைய, கருங்கடல்

போன்ற நிறமுடைய இவனைக் கோசலை என்பவள் பெற்றாள்' என்ற பொருளில்,

விரிந்திடு தீவினை செய்த
வெவ்விய தீவினையாலும்,
அருங்கடை இல்மறை அறைந்த
அறம் செய்த அறத்தாலும்,
இருங்கடகக் கரதலத்து
இவ் எழுதஅரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்
கோசலை என்பாள் பயந்தாள்

*(குலமுறை கிளத்துப் படலம்—20)*

*என்றும் முனிவனே பேசுவதால், இராமனின் பண்பு நலங்களைக் கூறியவாறு ஆயிற்று.*

## இராமனின் புலனடக்கம்

*சீதையை மணம் புணர்ந்த அன்று, இராகவன், இந்த இப்பிறவியில் வேறு ஒரு பெண்ணை மனத்தினாலும் தீண்டேன் என்று வாக்குறுதி அளித்ததாக, அப்பிராட்டியே அனுமனிடம் பேசுகிறாள்:*

வந்து எனைக் கரம் பற்றிய வைகல்வாய்,
"இந்த இப்பிறவிக்கு இருமாதரைச்
சிந்தையாலும் தொடேன்" என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

*(சூடாமணிப் படலம்—34)*

*இராமனுடைய புலனடக்கம் எத்தகையது என்பதைக் கம்பநாடன் காட்டிவிட்டான். இனி அவனுடைய விருப்பு, வெறுப்பு அற்ற நிலையைக் (சம திருஷ்டி) கவிஞன் கூறும் இடம் அறிந்து மகிழ்தற்குரியது. ஒருவன் எத்துணைச் சிறந்த பண்புடையவனாயினும், அவனுடன் கூடவே இருந்து பழகும் மனைவி முதலியவர்களிடம் நற்பெயர் எடுத்தல் மிகமிகக் கடினம். அதனால்தான் கவிஞன் இராமன்*

மனையாட்டி ஆகிய பிராட்டியைக் கொண்டே இராம னுடைய பண்பாடுகளை விளங்க வைக்கின்றான். இராவணன் சிறையிலிருந்து, அலமந்த, பிராட்டி கணவனின் முகமண்டலத்தைத் தன் மனத்திரையில் கொண்டு வருகிறாள். ஒரு மனிதன் தனக்கு உரியதாகிய ஒன்றைப் பிறர் எடுத்துக் கொண்டார்கள் என்று அறியும்போது துயர் உறுதல், சினங்கொள்ளல் இயல்புதான். ஆனால், இத்தகைய நிலையிலும் ஒருவன் நடுநிலை தவறாமல் இருப்பின், அவன் புலன்களை வென்றவனே ஆவான். 'பகைவர்கள் இல்லாமல் போன இந்தப் பெரிய நாடு உன் தம்பியதாகும்' என்று கைகேயி கூறியபொழுது இராமனின் முகம் மூன்று மடங்கு பொலிந்ததை இப்பொழுது பிராட்டி நினைந்து வருந்தினாள். 'இந்த அரசச் செல்வத்தை ஏற்றுக் கொள்வாயாக' என்ற பொழுதும், 'உடனேயே இச்செல்வத்தைத் துறந்து வனம் செல்வாயாக' என்ற பொழுதும், 'சித்திரத்தில் மலர்ந்துள்ள தாமரை கூம்பலும், விரிதலும் இல்லாமல் இருப்பதுபோல, ஒரே நிலையில் இருந்த அவன் முகத்தினை நினைந்து பார்க்கிறாள்' என்ற பொருளில்,

தெவ் மடங்கிய சேண் நிலம்—கேகயர்
தம்மடந்தை—உன் தம்பியது ஆம் என
மும்மடங்கு பொலிந்த முகத்தினன்
வெம் மடங்கலை உன்னி, வெதும்புவாள்.

மெய்த் திருப்பதம் மேவு என்ற போதினும்,
இத்திருத் துறந்து ஏகு என்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்.

(காட்சிப்படலம்—19, 20)

உணர்ச்சிகட்கு அதிகம் இடம் தராமல், பணி செய்கின்றவனே புலனடக்கம் உடையவனாவான். முதற் போரில் தோற்று, இலங்கை மீண்ட இராவணன் மாலிய வானிடத்தில் இராமன் போர்புரியும் சிறப்பைப்

பலபடியாக எடுத்துக் கூறுகிறான். தன்னுடன் கடும் போர் புரியும்போது இராமன் முகத்தில் கோபத்தின் சாயல் கூடத் தெரியவில்லை என்று கூறுகிறான். "ஆயிரக்கணக் கான அரக்கர்களின் ஆவியைப் பறித்தபோதும், அவமா னத்தைத் தாங்கிக்கொண்டு நான் திரும்பி வருமாறு செய்தபோதும், அவனுடைய முகம், அக் காலத்தில் கூனியின் முதுகில் வில்லுண்டை அடிக்கும்போது எப்படி இருந்திருக்குமோ அதேபோல இருந்ததே தவிர, கோபத்தின் சாயல் ஒரு சிறிதும் இல்லை" என்ற பொருளில்,

> எறித்த போர் அரக்கர் ஆவி
> எண்இலா வெள்ளம் எஞ்சப்
> பறித்தபோது, என்னை அந்தப்
> பரிபவம் முதுகில் பற்றப்
> பொறித்தபோது, அன்னான் அந்தக்
> கூனிகூன் போக உண்டை
> தெறித்தபோது ஒத்தது அன்றி,
> சினம் உண்மை தெரிந்தது இல்லை

(கும்பகர்ண வதைப்படலம்—17)

புலனடக்கத்தால் சினத்தை ஒழித்தவர்கட்கு மன்னிக்கும் பண்பு தானே வந்துவிடும். பழிதீர்த்துக் கொள்ளும் காழ்ப்புணர்ச்சி இராது. எனவேதான் முதற்போரில் யாவற்றையும் இழந்து தனியனாய் நின்ற இராவணனைக் கொல்லாது,

> ஆள்ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
> பூளை ஆயின கண்டனை! இன்று போய்ப் போர்க்கு
> நாளை வா என நல்கினன்.....

(முதல் போர்புரி படலம்—255)

இத்தனை பண்புகளையும், தான் படைத்த இராமனுக்கு ஏற்றிவிடுகிறான் கவிஞன். இவ்வாறு எல்லாவிதங்களிலும் மனித நிலைக்கு மிகவும் மேம்பட்ட இயல்பை ஏற்றிவிட்டால் ஒருவேளை அவன் மானுடனே அல்லன் என்ற நினைவு

வந்துவிடக் கூடாதே என்பதற்காகப் போலும், இராமன் சராசரி மனிதனாக நடந்துகொள்ளும் இடங்கள் மூன்றையும் ஏற்படுத்தியுள்ளான்.

## மனைவியின் கண்ணீர்

பொன்மானைப் பிடித்துத் தரவேண்டும் என்று சீதை கேட்டவுடன், உலகத்தில் எங்குமே பொன்மான் என்பது இல்லாத ஒன்று என்றும், இது அரக்கர் சூழ்ச்சியே என்றும் இளவல் கூறுகிறான். இது கேட்ட சீதையின் முகம் வாடுவதைக் கண்ட இராமன், பொன்மான் இருப்பது இயற்கையில் நிகழக்கூடிய ஒன்றுதான் என்று தருக்கம் பேசுகிறான். இந்த நிலையில் பொன்மானைத் தான் சென்று பிடித்துத் தருவதாக இலக்குவன் கூறுகிறான். அதைக் கேட்ட பிராட்டி,

> ......................................................
> வாயிடை, மழலை இன்சொல் கிளியினின் குழறி, மாழ்கி
> நாயக! நீயே பற்றி நல்கலை போலும்! என்னா
> சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப் போனாள்.
>
> (மாரீசன் வதைப்படலம்—67)

[வாயிலிருந்து வெளிப்படும் மழலைச் சொல் சினத்தால் குழற, நொந்து, 'நாயக! நீயே இம்மானைப் பிடித்துத் தரக் கூடாதா?' என்று கேட்டு, உடனே கண்ணீர் சிந்திக் கோபித்து உள்ளே சென்றுவிட்டாள்.]

இவ்வாறு மனைவியின் கண்ணீருக்கு அஞ்சித் தம்பியின் அறவுரையைக் கூட ஏற்காமல் மானைப் பிடிக்கத் தானே புறப்படும் இராமன் சராசரி மனிதனையே நினைவூட்டுகிறான்.

## வனத்தில் பெண்ணைத் தனியே விட்டது

சடாயுவை முன்பின் பார்த்திராத இராம இலக்குவர்கள் சீதையுடன், அவனை அறிமுகஞ் செய்துகொண்ட

பிறகு அவனுடைய பாதுகாவலில் இருப்பது நலம் என்று பஞ்சவடியில் தங்கினார்கள். அங்கேதான் இராவணன் சூழ்ச்சியால் பிராட்டி பிரிக்கப்பட்டாள். அவளைத் தேடி வந்துகொண்டிருக்கும் சோதரர்கள், வழியில் வீணைக் கொடி ஒடிந்து கிடப்பதைக் கண்டு, இராவணனுடைய கொடியை ஒடிக்கக்கூடியவன் சடாயுவே என்றறிந்து, மேலும் செல்கையில், 'தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயு'வைக் கண்டனர். அவன் இறக்குந்தறுவாயில் இருப்பதைக் கண்ட இராமன், எல்லையற்ற சினத்துடன், 'இவ்வளவு கொடுமை நிகழ இடந் தந்த இவ்வுலகுதனையே அழிப்பேன்' என்று பேசுகிறான். இதனைக் கேட்ட சடாயு. தான், இராமனுக்குப் பெரிய தந்தை என்ற உறவு முறையைப் பயன்படுத்தி, இராமனுடைய குற்றத்தை எடுத்துக்காட்டி இடித்து, அறவுரை கூறுகிறான். கொடி போன்ற பிராட்டி வனத்தில் தனியே இருக்கும்படி விட்டு விட்டு, மானைப் பிடிக்கப் போகிறோம் என்று கூறிக்கொண்டு அதன்பின்னே சென்று உங்கள் குலம் முழுவதற்கும் பழியைத் தேடிக்கொண்டீர்கள். அம்புடன் வில்லை ஏந்திய பிள்ளைகளே! ஆராய்ந்து பார்த்தால், இக்காரியத்தில் பிழை செய்தவர்கள் நீங்களே தவிர, உலகம் உங்கள்பால் என்ன பிழையைச் செய்தது? ஒன்றும் இல்லையே? என்ற பொருளில்,

வம்பு இழை கொங்கை வஞ்சி
வனத்திடைத் தமியள் வைக,
கொம்பு இழைமானின் பின்போய்
குலப்பழி தேடிக் கொண்டீர்;

அம்புஇழை விரிவில் செங்கை
ஐயன்மீர்! ஆயுங்காலை,
உம்பிழை என்ப தல்லால்
உலகம் செய் பிழையும் உண்டோ?

*(சடாயு உயிர் நீத்த படலம்—124)*

என்று பாடுவதன் மூலம், இராமனுடைய சராசரி மனித மனநிலையை உறுதிப்படுத்துகிறான். மனிதன் என்று பிறந்துவிட்டால், முக்குண வயப்பட்டுத்தான் ஆக வேண்டும். சாதாரண மனிதனுக்குப் பெரும்பகுதி நேரம் தாமச குணமும், ஒரு சில வினாடிகள் சத்துவ குணமும் மேலோங்கி நிற்கும். இராமனைப் போலப் புலனடக்கமும், நடுநிலைமையும் உடையவனுக்கு பெரும்பகுதி நேரம் சத்துவ குணமும், ஏதோ ஒருசில வினாடிகள் தாமச குணமும் நிறைந்து நிற்கும். அவன் எத்துணை உயர்ந்தவனாயினும், இக் குணக் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட முடியாது. எனவேதான் இரண்டொரு நிகழ்ச்சிகளின் மூலம், இராமனும் தாமசகுண வசத்தனாக ஒரு சில வினாடிகள் இருந்தான் என்பதைக் கவிஞன் நிலை நாட்டுகிறான்.

## தலைவன் அருள் நிறைந்தவன்

புலனடக்கத்தின் பயனாக, நிறைந்த அன்பும், யாவரிடமும் பரந்து பாயும் அருளும் நிறைந்தவனாக இராமன் இருந்தான் என்பதையும் காட்டுகிறான். அன்புக்கும், அருளுக்கும் ஒரு வேறுபாடு காணமுடியும். அது யாரிடம் செல்கிறதோ அவன் அறிந்து தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அன்பு எதிர்பார்க்கும். அது அறிந்து ஏற்றுக்கொள்ளப்படாத பொழுது மனத்துயரம் உண்டாவது இயல்பே. கடைசிவரை அது ஏற்றுக்கொள்ளப் படவில்லையானால் நாளடைவில் அந்த அன்பு செய்யப்படுபவர்கள் நேரில் இல்லாதபோது அந்த அன்பு வலிமையை இழக்கிறது. ஓயாது பழக வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை; உணர்ச்சி ஒன்றே நட்பை வளர்க்கும் என்ற கருத்தை,

> புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும். *(திருக்குறள்—785)*

என்ற குறளில் வள்ளுவர் பேசுவது குறிக்கோள் தன்மை உடைய அன்பைப் பற்றியாகும். கைம்மாறு கருதாத அன்பு யாவரிடமும் இருப்பது அன்று. ஆனால், இந்தக் கைம்மாறு கருதாத அன்பின் முதிர்ந்த நிலைதான் அருள் எனப்படும். இதனையே வள்ளுவர் 'அருள் என்னும் அன்புஈன் குழவி' (குறள் 757) என்று கூறுகிறார்.

இந்த அருளுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. அது எந்தக் கைம்மாறும் எதிர்பார்ப்பதில்லை. எந்தத் தடையையும் பொருட்படுத்துவதில்லை. யாரிடம் அது பாய்கின்றதோ அவர்கள் அதனை அறியவேண்டும் என்றோ, அறிந்து நன்றி பாராட்ட வேண்டும் என்றோ, அருள் எதிர்பார்ப்பதில்லை. இதனால்தான் அருளுடையவர்கள் நல்லவர்—தீயவர் நன்றி உடையவர்—இல்லாதவர், என்ற வேறுபாடு பாராட்டாமல், யாவருக்கும் தம் அருளை வாரி வாரி வழங்குகின்றனர். இராமன் அருள் நிறைந்தவன் என்பதற்குப் பல்வேறு நிகழ்ச்சிகளை அமைத்துக் காட்டுகிறான் கவிஞன்.

தேவியைப் பிரிந்து, திகைத்து, மனம் நொந்து தள்ளாடி வரும் நிலையில், சோதரர்கள் சபரியைக் காணுகின்றனர். அவள் கூறிய வழியின்படிதான் சுக்ரீவனைத் தேடிவரு கின்றனர். அனுமனைக் கண்டபிறகு சுக்ரீவனைக் காண்பது எளிதாகிறது. தாங்கள் எதிர்பார்த்து வந்தவன், வழியிலேயே கிடைத்தமையின் ஓரளவு மனம் அமைதி பெற்று ஆர்வத்துடன் வருகின்றனர். சுக்ரீவன் துணையை நாடித்தான் தேவியைத் தேடி முற்பட வேண்டும் என்ற நுணுக்கத்தை, தன் இழிபிறப்பை இராமனால் போக்கிக் கொண்ட கவந்தன்தான் கூறினான். அவனே சபரியைச் சந்தித்து அவள்மூலம் சுக்ரீவன் இருக்கும் இடத்திற்கு வழியறிந்து செல்லுமாறும் கூறினான்.

எனவே, சுக்ரீவனைக் கண்டவுடன் தன் துயரத்தின் பாரம் பாதி குறையும் என்று எதிர்பார்த்து வருகிறான்

இராகவன். சுக்ரீவனைக் கண்டவுடன் அவன் கூறிய வார்த்தைகள் கல்லையும் கனிவிக்கும். 'குற்றமற்ற தவத்தினை உடைய சபரி, இம்மலையில் வந்து நீ தங்கி இருக்கும் நிலையைக் கூறினாள். நாங்கள் அடைந்துள்ள நீக்கமுடியாத பெருந் துயரத்தை உன் உதவிகொண்டு கடக்கலாம் என்று இங்கு வந்துள்ளோம். ஐயனே! நின் உதவி தேவை' என்ற கருத்தில் இராகவன் பேசுகிறான்.

மைஅறு தவத்தின் வந்த சவரி, இம்மலையில் நீ வந்து
எய்தினை இருந்த தன்மை, இயம்பினள்; யாங்கள் உற்ற
கைஅறு துயரம், நின்னால் கடப்பது கருதி வந்தேம்;
ஐய! நின்–தீரும் என்ன, அரிக்குலத்து அரசன் சொல்வான்.

(நட்புக்கோள் படலம்—24)

இந்தச் சொற்களையும், இதில் பொதிந்துள்ள எல்லை யற்ற துயரத்தையும் யார் கேட்டிருந்தாலும், உடனே 'தங்கட்கு என்ன வேண்டும்? நான் எதனையும் செய்யத் தயாராக உள்ளேன்' என்றுதானே விடை கூறி இருப்பர். ஆனால், இந்தச் சுக்ரீவன் உடனே என்ன விடை கூறினான்? இராமன் கூறிய எந்தச் சொல்லும் அவன் காதில் நுழையவில்லை. இராமன் அடைந்துள்ள துயரத்தை அவன் முகமே காட்டுகிறது. அதிலும் இராமன் இப்பொழுது சுக்ரீவனுடைய விருந்தினன், விருந்தாக வந்தவன், 'கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தேன்' என்று அழுகிறான். என்றாலும் விருந்தினன் முகமோ, அன்றி வார்த்தைகளோ சுக்ரீவனை அசைக்க வில்லை. தன்னலத்தின் மொத்த வடிவாக உள்ளான் சுக்ரீவன். அதற்குப் "பதிலாக வலுவுடைய தன் கைகளால் அடித்து, என் அண்ணன், என் பிறந்தவனாகிய என்னை உலகம் முழுதும் நான் எங்கு சென்றாலும் துரத்தி வந்தமையால், இக் குன்றில் அடைக்கலம் புகுந்தேன். என் உயிரை விடுவதற்குத் துணிவில்லை. எனவே உன்னைச் சரண் அடைகின்றேன். என்னை எப்படியாவது காக்க

*வேண்டியது உன் கடமையாகும்" என்று ஒப்பாரி வைக்கத் தொடங்கிவிட்டான் சுக்ரீவன்.*

முரண் உடைத் தடக்கை ஒச்சி
முன்னவன் பின்வந்தேனை,
இருள் நிலைப் புறத்தின் காறும்
உலகு எங்கும் தொடர, இக்குன்று
அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்;
ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன்;
சரண் உனைப் புகுந்தேன்; என்னைத்
தாங்குதல் தருமம் என்றான்.

*(நட்புக்கோள் படலம்—25)*

*இவ்வாறு சுக்ரீவன் பேசியதை, இராமனை அல்லாத பிறர் எவர் கேட்டிருப்பினும், "சீ! நீயும் ஒரு மனிதனா? போயும் போயும், உன்னை நாடி வந்தேனே!" என்று கூறிவிட்டுச் சென்றிருப்பர். இதில் வேடிக்கை ஒன்றும் உளது. வந்திருப்பவர்கள் மானுட வடிவினரேனும், உண்மையில் அவர்கள் யார் என்பதைக் கல்விக்கடலாகிய மாருதியே கூறியுள்ளான். மேலும், இந்தச் சுக்ரீவனே இராமனைக் கண்டவுடன் 'அமரர்க்கு எல்லாம் தேவராம் தேவர் அன்றே, மாறி இப்பிறப்பில் வந்தார்' (19) என்று கூறியுள்ளான். அப்படி இருக்க, அத்தேவர்க்கெல்லாம் தேவனே, இப்பொழுது கேவலம் குரங்காகிய தன்னை நோக்கி, 'யாங்கள் உற்ற கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தோம்; ஐய நின்—தீரும்' (25) என்று பேசுகிறான். சாதாரண அறிவுடையவன்கூட, 'ஐயா! தங்கள் துயரம் என்ன? என்னால் முடிந்ததைச் செய்கிறேன்' என்று உபசாரத்திற்காவது கூறிவிட்டுப் பிறகு தன் ஒப்பாரியை வைத்திருக்கலாமே! ஆனால் பண்பாடு என்பதையே அறியாத சுக்ரீவன், தன்னலம் என்பதன் மொத்த வடிவமானான். வெந்து, நொந்து வந்து, கேவலம் ஒரு குரங்கிடம் பேசுகிறோமே என்ற நினைவுகூட இல்லாமல்,*

*ஒரு மாவீரன், 'கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தோம்' என்று பேசும்பொழுது, பேசப்பட்டவன் இவ்வாறு விடை கூறுகிறான். தன்னலத்தின் மொத்த வடிவத்தின் எதிரே, பண்பின் உறைவிடமானவனும், புலன்களை வென்றவனும், காழ்ப்புணர்ச்சி என்றால் என்ன என்று கூடத் தெரியாதவனுமான இராகவன் நிற்கிறான். சுக்ரீவன் இவ்வாறு பேசியவுடன், அப்பெருந் தகை தன் துயரத்தை மறந்தான்; எதிரே இருப்பவன் துயரத்தை மட்டுமே அறிந்தான். அவன் 'சரணம்' என்று கூறிய சொற்கள் அவன் காதுகளில் விழுந்தவுடன், சரணம் அடைந்தவன் யார்? அவன் தகுதியுடையவனா? என்ற வினாக்களைக் கேட்கவே இல்லை. ஒரு கணங்கூடத் தாமதிக்காமல் இராமன் பேசுகிறான்:*

மற்று இனி உரைப்பது என்னே?
வானிடை, மண்ணில் நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்;
உன்கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என்
இன்உயிர்த் துணைவன் என்றான்.

*(நட்புக் கோள் படலம்—27)*

*'சுக்ரீவன் என் முன்னவன். என்னைத் தண்டித்தான்' என்று மட்டுந்தான் கூறினானே தவிர, தண்டித்தவன் யார்? ஏன் தண்டித்தான்? குற்றம் யார் பேரில், என்ற ஒன்றையும் கூறவில்லை. வழக்கின் ஒரு பகுதி சுக்ரீவனுடையது. மறுபகுதிக்காரன் யார் என்றுகூடத் தெரியாத நிலையில், இராமன் இவ்வாறு முன்பின் ஆராயாமல் வாக்குத் தரலாமா? என்ன கருத்தில் இவ்வாறு கூறுகிறான் இராமன். உணர்ச்சி வசப்பட்டுத்தான் இவ்வாறு பேசுகிறான் என்பதை மறுக்க இயலாது என்றாலும், இந்த*

உணர்ச்சி வேகம் தன்னலத்திலோ அன்றித் தன்னலப் பாதிப்பிலோ பிறந்தது அன்று. எதிரே உள்ளவன், ஒரு சாதாரண மனிதனுக்கு இயற்கையாக உள்ள தன் மானத்தை விட்டுவிட்டு, இப்படிப் பரிதாபமாகப் பேசுகிறான் என்பதை, இராமன் ஒரு வினாடியில் புரிந்து கொள்கிறான். உயிரின்மேல் எல்லையில்லாத பற்று வைத்திருக்கும் ஒருவன்தான், இவ்வாறு பேச முடியும். அவன் பேச்சிலேயே கூட 'ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன்' என்றும் கூறிவிட்டான். எனவே இராமன், தன் எதிரே பெரிதும் இரக்கத்துக்குரிய ஒரு பரிதாபமானவனைப் பார்க்கிறான். விருந்தினரை எவ்வாறு உபசரிக்க வேண்டும், என்பதைக்கூட மறந்துவிட்டு, வந்தவர்கள் எத்துணைத் துயரத்தில் ஆழ்ந்துள்ளனர் என்பதையும் மறந்துவிட்டு, தன் காரியமே பெரிது என்று நினைந்து பேசும், உயிருக்கு அஞ்சிய ஒரு தன்னலப் பிண்டத்தைக் காணும் இராமன், தன்னை மறந்து, தன் கவலையை மறந்து, எதிரே நிற்பவன் துயரத்தை எவ்விதமாகவேனும் மாற்றிவிட வேண்டும் என்று துடிப்பதில், அவனுடைய அருள் உள்ளத்தைக் காண முடிகிறது. சுக்ரீவன் செயல் வேறு எவர்க்குமே வெறுப்பையும், இகழ்ச்சியையும் உண்டாக்கும் செயலாகும். ஆனால் ஒரு கடுகளவுகூட வெறுப்போ, அலட்சியமோ, கொள்ளாமல் அவன் துயர் துடைக்க வேண்டும், என்ற முடிவுக்கு வந்துவிடுகிறான் இராமன்.

இந்த நிகழ்ச்சியில் இராமன் தன் நடுநிலைமையைத் துறந்துவிட்டுத்தான் பேசுகிறான் என்பதை அறிய முடிகிறது. இல்லாவிட்டால் அடுத்தவன் வழக்கு யாது என்று அறிந்தபிறகே முடிவு கூற வேண்டும் என்ற சாதாரணச் சட்டத்தை மறந்துவிட்டு, 'அடைக்கலம்' என்று ஒருவன் கூறியவுடன் அடைக்கலமாக ஏற்க முன்வருவானா? தன்பால் அடைக்கலம் என்று வந்தவன் தவறே இழைத்திருப்பினும், அவனைக் காக்க வேண்டியது கடமை

என்ற உயர்ந்த அறத்தின் அடிப்படையில், முன்பின் ஆராயாமல் இராமன் இவனை ஏற்றுக்கொண்டான் என்று கூறினால் அதனால் தவறில்லை. இராமன் சுக்ரீவனை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டதில் எவ்விதத் தவறும் கூற முடியாது.

ஆனால் அடைக்கலம் தருவதுடன் நிறுத்திக் கொள்ளாமல் பலபடிகள் மேலே சென்றுவிடுகிறான் இராமன். தன்னைத் தன் முன்னவனிடமிருந்து காக்க வேண்டும் என்றுதான் சுக்ரீவன் கூறினானே தவிர, வேறு எதையும் கேட்கவும் இல்லை; வேண்டவும் இல்லை. அவ்வாறு இருக்க, இராகவன் தானாகவே முன்வந்து ‘ஆகாயத்தில், பூமியில் உன்னைக் கோபித்துப் பகைமை பூண்டார், என்னிடமும் பூண்டதாகவே கருதுவேன்; தீயவர்களாக இருப்பினும் உனக்கு வேண்டியவர்கள் எனக்கும் வேண்டியவர்களே’ என்ற முறையில் பேசுவது புதுமை ஆகவே உளது. நடுநிலைமை மறந்து இராகவன் இவ்வாறு பேசக் காரணம் யாது என்று சிந்திக்க வேண்டும். அவனுடைய இரக்க குணம், அருளுடன் சேர்ந்தவுடன் அவன் மனத்தை முற்றிலும் கரைத்துவிட்டது. அதிலும் எதிரே நிற்பவன் ‘அடைக்கலம். உயிருக்கு அஞ்சுகிறேன்’ என்றவுடன், முழுவதுமாக இராகவன் மனங்கரைந்து விடுகிறான். எனவே, அவனுடைய அருளுக்கு, எதிரில் நிற்பவன் தகுதியானவனா என்ற வினாத் தோன்ற இடமே இல்லை. அருளுடையவர்கள் செயலைச் சாதாரணப் பகுத்தறிவு கொண்டு ஆராய முற்படுவது சரியன்று. பாரி முல்லைக் கொடிக்குத் தேரை ஈந்தது பகுத்தறிவு அற்ற செயல்தான். ஆனால் அறிவை இழந்து, அருளால் நிறைந்து, ஒன்றைச் செய்தமையால் உலகம் போற்றும் வள்ளலா னான். இராமன் செய்கையும் அவ்வாறே. எனவே இதனை அறிவின் துணைகொண்டு ஆய்வது சரியன்று.

*காப்பியப் போக்கில் இராகவன் அருள் மிகுதியாலும், இரக்கத்தாலும் கூறிவிட்ட இச் சொற்களை நினைந்து மனம் வருந்தினானோ என்று ஊகிக்கவும் இடம் உண்டு. முற்றிலுமாக சுக்ரீவனை நம்பி வாலியைக் கொன்றாகி விட்டது. உயிர் விடுமுன் வாலி கூறிய வாதங்களால் கலங்கிய இராகவன், தான் செய்தது சரியா என்று ஐயப்பட்டு விடுகிறான். எனவேதான், வாலியின் மைந்தனாகிய அங்கத னிடம் தன் உடைவாளைத் தந்து, தரும் செயல் நிகழ்கின்ற அதே நேரத்தில் 'நீ இது பொறுத்தி' (வாலிவதை—159) என்று இராமன் கூறுவது இவ்வாறு நினைக்கத் தூண்டுகிறது.*

*கார்காலம் முடிந்தவுடன் சேனைகளுடன் வருகிறேன் என்று வாக்களித்துச் சென்ற சுக்ரீவன், பெருங் குடிமகனாக மாறி, அனைத்தையும் மறந்து இன்பக் கடலில் மூழ்கி விட்டான். உரிய காலம் வந்தும் சுக்ரீவன் வரவில்லை என்பதை அறிந்த இராகவன் பெருஞ்சினம் கொள்கிறான். தம்பி இலக்குவனை, நோக்கி 'எல்லையில்லாத செல்வத்தைப் பெற்றதால் செய்யப் பெற்ற உதவியின் அளவை மறந்தான். தன் மதிப்பை இழந்துவிட்டான்; அறத்தை மறந்தான். நம்மிடம் அன்பு இல்லை எனினும் சரி, நம் வீரத்தைக்கூட அறியவில்லையா இவன்? இன்பத்தில் மயங்கிவிட்டான்.*

*நன்றி கொன்று, நட்பின் வேரை அறுத்து, சத்தியத்தைச் சிதைத்து தன் சொற்களைக்கூட மறந்து பொய்த்தவனைக் கொல்லுதல் குற்றமன்று. நீ சென்று அவன் மனநிலை என்ன என்று கண்டுவா!'*

*'அரக்கரை அழித்து, இவ்வுலகில் அறத்தை நிலை நாட்ட எடுத்த வில்லாகிய கோதண்டமும் உள்ளது; யானும் இருக்கிறேன் என்று சொல்' என்ற கருத்தில்,*

**பெறல் அரும் திருப்பெற்று, உதவிப் பெருந்**
**திறம் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்**

அறம் மறந்தனன்; அன்பு கிடக்க, நம்
மறம் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான்.

நன்றி கொன்று, அரு நட்பினை நார் அறுத்து,
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்
கொன்று நீக்குதல் குற்றத்தின் தங்குமோ?
சென்று மற்றவன் சிந்தையைத் தேர்குவாய்.

............................................
இம்பர் நல்லறம் செய்ய எடுத்த வில்
கொம்பும் உண்டு; அருங்கூற்றமும் உண்டு; உங்கள்
அம்பும் உண்டு என்று சொல்லு, நம் ஆணையே!

*(கிட்கிந்தைப் படலம்—2, 3, 4)*

*இச் சொற்களையும் இன்னும் இவற்றை அடுத்து நான்கு பாடல்களில் கூறப்பெற்ற கொடுஞ் சொற்களையும் பேசியவன் இராமன்! யாரைப் பற்றி இவ்வாறு கூறுகிறான்? சுக்ரீவனைப் பற்றித் தம்பியாகிய இலக்குவனிடம் இராமன் பேசிய சொற்களே இவை. இராமன் பண்பாட்டின் உறைவிடமாயிற்றே! அவன் வாயிலிருந்து இத்தகைய சுடுசொற்கள் வரலாமா? வரமுடியுமா? என்று சிந்திப்பதில் தவறு இல்லை. எல்லையற்ற சினத்தை இராமன் காட்டி இவ்வளவு பேசினமையால்தான், சுக்ரீவனைப் பொறுத்த மட்டில் தான் நடந்துகொண்ட விதமும், கொடுத்த வாக்கும் சரி இல்லையோ என்ற ஐயம் இராமனின் அடிமனத்தில் இருந்திருக்க வேண்டும் என்று நினைக்க இடம் உண்டு. இந்தச் சுடு சொற்களின் பின்னே உள்ள சினத்திற்குப் பாதிக் காரணம் சுக்ரீவனுடைய நன்றி மறந்த வாழ்க்கை. எஞ்சிய பாதி இராமன் தன் மேலேயே கொண்ட கோபமாகும். இராமன் தன்மேல் ஏன் சினங் கொள்ள வேண்டும் என்ற வினா நியாயமானதே. அறிவுடைய ஒருவன் தன் அறிவுக்கு ஒவ்வாத செயலை உணர்ச்சி வசப்பட்டுச் செய்துவிட்டால், அந்தச் செயலின் விளைவு, அவன் அறிவு எதிர்பார்க்கும் முறையில்*

அமையாமல், எதிர்மறையாக அமைந்துவிட்டால், அந்த அறிவாளன் தன் மேலேயே சினங்கொள்வான். தம்பியின் எதிரே தன்னுடைய இந்தக் குறைபாட்டை (சுக்ரீவனைத் தவறாக எடைபோட்டுத் தன் அருளுக்குப் பாத்திரமாக அமைத்துக்கொண்டது) வெளிக்காட்டாமல், சுக்ரீவன் மேல் சினங்கொண்டதாகக் காட்டிக்கொண்டு பேசுகிறான் இராமன். உண்மையில் இராமன் சினங்கொண்டது சுக்ரீவன்பேரில் அன்று. அதை எவ்வாறு தெரிந்து கொள்கிறோம்?

சுக்ரீவன் இராமனிடம் வந்து,

> செறிமலர்ச் சேவடி முடியின் தீண்டினான்.
>
> (கிட்கிந்தைப் படலம்—126)

உடனே இராமன் தன் சினத்தை மறந்து அவனை எடுத்துத் தழுவிக்கொண்டான். சுக்ரீவன் தன் பிழையை நினைந்து பெரிதும் வருந்தினான்.

> திருந்திழை திறத்தினால், தெளிந்த சிந்தை நீ,
> வருந்தினை இருக்க, யான் வாழ்வின் வைகினேன். ( "131)

என்று கூறினவுடன், இராகவன்,

> பரதன் நீ! இனையன பகரற் பாலையோ? ( "133)

என்கின்றான்.

தன் பிழையை நினைந்து வருந்தினான் சுக்ரீவன் என்றவுடன் அவனைப் பார்த்து 'நீயும் பரதனும் எனக்கு ஒன்றுதானே! அப்படி இருக்க நீ வருந்தலாமா?' என்று பேசுகிறான் அயோத்தி வேந்தன். தொடக்கத்தில் அவன் கொண்டிருந்த சினம் சுக்ரீவன்மேல் சென்றது உண்மை யானால், இப்பொழுது 'பரதனைப் போலும் நீ' என்று பேசி இருத்தல் முடியாது. எனவேதான், இராமன் கொண்ட சினம் தன் மேலேயே தவிர சுக்ரீவன்மேல் அன்று என்று ஊகிக்க முடிகிறது. சுக்ரீவன் அன்பில்

ஐயங்கொள்ளவில்லை இராமன். ஆனால், புலனடக்கம் இல்லாத ஒருவனிடம் அருள் பாலிப்பது தவிரச் சினங்கொண்டு பயனில்லை என்பதை நன்கு அறிந்தவன் இராமன். இந் நிகழ்ச்சி இராமனின் அருளுடைமைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். புலனடக்கத்தில் தலை நின்றவர்களின் சினம், தண்ணீரில் அம்பு எய்தால் ஏற்படுகின்ற பிளவுபோல் உடனே மாறிவிடும் என்று சொல்லப்பட்டுள்ளமைக்கும் சிறந்த உதாரணமாகும். இராமனைச் சித்திரிக்கும் முறையில் புலனடக்கம் பயின்றவன் எத்தகைய பண்பாடுகளின் உறைவிடமாக இருப்பான் என்பதைப் பல்வேறு நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பதன் மூலம் வைத்துக் காட்டுகிறான் கவிஞன்.

## தலைவனின் தரும சங்கடம்

தரும சங்கடம் என்ற ஒன்றைப் பற்றிப் பலரும் பேசுகிறார்கள். ஆனால் அதன் உண்மையான பொருளை அறிந்தவர் சிலரேயாவர். ஒரு சூழ்நிலையில் இரண்டு செயல்கள் முன்னிற்கும். இரண்டும் அறச் செயல்களாகவே இருக்கும். அவற்றுள் ஏதாவது ஒன்றைச் செய்தே தீரவேண்டிய இன்றியமையாமை ஏற்படும். ஆனால் இரண்டுமே உயர்ந்தவையாக இருக்கும். ஏதாவது ஒன்றை மேற்கொண்டு செய்தால், மற்றொன்றை விட்டுவிட்ட, அல்லது ஒதுக்கிவிட்ட தவறு ஏற்படும். பலரும் வாழ்க்கையில் இத்தகைய சூழ்நிலையைச் சந்திக்காமல் இருக்க முடியாது. இத்தகைய சூழ்நிலை உருவானால் என்ன செய்வது? எதை ஏற்றுக்கொண்டு எதனைக் கைவிடுவது? என்பது எளிதில் முடிவு செய்ய முடியாது. அவனவன் தரம், தகுதி, பண்பாடு, சூழ்நிலை என்பனவற்றைப் பொறுத்தே இது முடிவு செய்யப்பட வேண்டும். தரும சங்கடமான நிலையில் குறிப்பிட்ட ஒருவன் ஒன்றைச் செய்தான் என்றால், பின்னே வருபவனுக்கு அது மேல்வரிச் சட்டமாக ஆகிவிடாது.

முன்னவன் செய்தான் என்பதால் பின்னவன் அதனைச் செய்யலாம் என்று கூறல் முடியாது. அவனவனுக்கு ஏற்ற முறையில் முடிவு செய்யப்பட வேண்டியது இது. உதாரணத்திற்கு ஒன்றைக் காணலாம்.

இராமனையும் இலக்குவனையும் அழைத்துக்கொண்டு வேள்வி செய்ய வருகிறான் விசுவாமித்திரன். அரக்கர்களை அழித்து, வேள்வி தடைபடாமல் நடைபெறுவதற்கு உதவத்தான் தசரத புத்திரர்கள் வருகின்றனர். குறிக்கோளும் அரக்கர்களை அழிப்பதுதான். ஆனால், முதன்முதலில் எதிர்ப்படுபவள் தாடகை. இவள் அரக்கிதான். ஒப்பந்த முறையில் அரக்கர்களை அழிப்பது கடமை என்றுதான் இராமன் வருகிறான். ஆனால் பெண்ணைக் கொல்ல அவன் பண்பாடு இடந்தரவில்லை. விசுவாமித்திரன் அவளைக் கொல்ல வேண்டும் என்று விரும்புகிறான். அறநூல் விதியைக் கடைப்பிடிப்பதனால் பெண்ணைக் கொல்லக் கூடாது. அரக்கியே எனினும் பெண் பெண்தானே! எனவே, இராமன் தருமசங்கடமான சிக்கலில் அகப்பட்டுக் கொள்கிறான். விசுவாமித்திரன் இப்பொழுது இராமனுக்குத் தந்தையாகவும், குருவாகவும், அறநெறி கூறுபவனாகவும் இருக்கின்றான். இராமன் இளையவன், அவனை வழிநடத்திச் செல்ல வேண்டிய கடமையை விசுவாமித்திரன் ஏற்றுக்கொண் டுள்ளான். விசுவாமித்திரனிடம் இராமன் தானாக வந்து சேரவில்லை. வசிட்டன், தசரதன் என்ற இருவருமே சோதரர் களை விசுவாமித்திரனிடம் ஒப்படைத்துள்ளனர். இவர்களை முனிவனிடம் அனுப்பும்பொழுது, தசரதன் கூறிய சொற்கள்,

..........................................
முந்தை நான்மறை முனிக்குக் காட்டி, நல்
தந்தை நீ தனித் தாயும் நீ, இவர்க்கு
எந்தை! தந்தனன், இயைந்த செய்க

(கையடைப்படலம்—81)

என்பவையாகும்.

'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்று ஏற்றுக்கொண்டு அதன்படியே வாழ்க்கையை நடத்தப் போகிறான் இராமன். இப்பொழுதே அதே தந்தை, முனிவனிடம் 'இனி இவனுக்குத் தந்தையும் தாயும் நீயே ஆவாய். நின்பால் இவர்களைத் தந்துவிட்டேன்' என்று கூறியதுடன், 'இயைந்த செய்க' என்றும் கூறிவிட்டான். இயைந்த என்றால் 'பொருத்தமானவற்றைச் செய்க' என்பது பொருளாகும். எனவே இளைஞர்கட்கு எது பொருத்தம், எது பொருத்தம் இல்லை என்பதை முடிவு செய்யும் பொறுப்பு இதுவரை தந்தையிடம் இருந்தது. இப்பொழுது முனிவனிடம் மாறிவிட்டது. எனவே, தந்தையும் தாயுமாகி நிற்கின்றான் விசுவாமித்திரன். அம்மட்டோ! இவர்கட்கு எது பொருத்தமான செயல் என்பதை முடிவு செய்பவனாகவும் உள்ளான் முனிவன். இம்முடிவைச் செய்யும் உரிமை பெற்ற அந்த முனிவனும் சாதாரணமானவன் அல்லனே! வசிட்டனால் 'பிரம்ம ரிஷி' என்று அழைக்கப்படுபவன்! நான்முகன் தொழிலுடன் போட்டி யிட்டுத் திரிசங்குவிற்காக ஓர் உலகத்தையே படைக்கும் ஆற்றல் பெற்றவன்! இத்தனை எண்ணங்களும் இராமன் மனத்தில் தோன்றியதால், தருமசங்கடமான நிலையில் அவன் ஏற்கும் முடிவில் தவறு கூற இயலவில்லை.

இத்துணைப் போராட்டத்தையும் கவிஞன் தனக்கே உரிய முறையில் பேசுகிறான்.

அண்ணல் முனிவற்கு அதுகருத்து எனினும், ஆவி
உண் என, வடிக்கணை தொடுக்கிலன்; உயிர்க்கே
துண் எனும் வினைத் தொழில் தொடங்கி உள்ளேனும்
பெண் என மனத்திடை பெருந்தகை நினைந்தான்

*(தாடகை வதைப்படலம்—36)*

[இவளைக் கொல்ல வேண்டும் என்பதே முனிவன் கருத்து என்பதை இராமன் அறியினும், உயிரைக் குடிப்பாய் என்று முனி கூறினும், அம்பு தொடுக்கவில்லை.

உயிருக்கு ஊறு விளைக்கும் செயலை அவள் தொடங்கினாலும், இவள் பெண் ஆயிற்றே என்று பெருந்தகை நினைத்துச் சும்மா இருந்துவிட்டான்.]

மாறுபட்ட கருத்துடையவர்களாய் முனிவனும் இராமனும் நிற்கின்றனர். மாறுபட்ட கருத்துக் கொண்ட இருவரும் சாதாரண மனிதர்கள் அல்லர் என்ற கருத்தை, இருவருக்கும் தருகின்ற அடைமொழியின் மூலம் கவிஞன் வெளிப்படுத்துகிறான். ஒருவன் 'அண்ணல் முனிவன்; மற்றவன் 'பெருந்தகை'. இராமன் வாயினால் தன் மனக்கருத்தை வெளியிடவில்லை எனினும், முனிவன், குறிப்பால் இராமன் மனநிலை அறிந்துகொண்டான்.

## முனிவன் சினம் எங்கே?

முன்னர், தசரதன் இராமனை அனுப்ப விரும்பாமல், அதே நேரத்தில் கடமையைத் தட்டிக் கழிக்காமல், 'நானே வருகிறேன்' என்று கூறியவுடன், விசுவாமித்திரன் கொண்ட சினம் மூவுலகையும் ஆட்டிவிட்டது. தன் கருத்துக்கு மாறாக யாரேனும் நடந்து கொண்டால், மாபெரும் சினத்தை அடைகிறான் முனிவன் என்பதை அறிகிறோம். ஆனால் அதே முனிவன், இப்பொழுது இராமனிடம் நடந்துகொள்ளும் விதமே முற்றிலும் அவன் இயல்புக்கு மாறுபட்டதாக உள்ளது. எட்டுப் பாடல்களில் கோசிக முனி இராமனுக்குச் சமாதானம் கூற முற்படுவது வியப்பைத் தருகிறது. தந்தையாகிய தசரதன் மறுப்பைக் கண்டு பெருஞ் சினங்கொண்ட முனிவன், மகன் மறுப்பைக் கண்டு ஏன் சினங்கொள்ளவில்லை? மைந்தன் தந்தையைப்போல் இராமன் என்பதை முனிவன் நன்கு அறிந்து வைத்துள்ளான். புலனடக்கத்தால் மைந்தன் முனிவனுடன் ஒப்பவைத்து எண்ணத் தகுந்த சிறப்பைப் பெற்றுள்ளான். எனவே, அவனுடைய மறுப்பைக் கண்டு சினந்து பயனில்லை. முனிவன் சினத்தைக் கண்டு அஞ்சி

நடுங்குபவன் தசரதன். ஆனால் மைந்தனோ அவன் சினந்திருந்தால் ஒரு புன்சிரிப்புடன் அதனை ஒதுக்கி யிருப்பான். எனவேதான் முனி சினக்கவில்லை! புலனடக்கமும் நடுநிலையும் உடைய ஸ்திதப் பிரக்ஞ னாகிய இராமனிடம் தருக்க முறையில் அறிவுக்கு ஏற்ப அமைதி கூறவேண்டுமே தவிர, வேறு எந்த வழியிலும் அவனைக் கட்டுப்படுத்த முடியாது என்பதை உணர்ந்த முனிவன், தன் வாழ்நாளில் யாரிடமும் காட்டாத பொறுமையை மேற்கொண்டு, எட்டுப் பாடல்களில் தருக்க அடிப்படையில் சமாதானம் கூறுகிறான்.

............................ஐய!—
பின்னும் தாழ்குழல் பேதைமைப் பெண் இவள்
என்னும் தன்மை, எளிமையின் பாலதே!

*(தாடகை வதைப் படலம்—43)*

[கொல்வதையே தொழிலாகவுடைய இவளை, நீண்ட கூந்தலையும், பேதைமையையும் இயல்பாகப் பெற்ற, பெண் என்று கருதுவது அறிவுடைமையாகாது.]

## முனிவன் வாதம்

இவ்வாறு கூறிக்கொண்டே வருகையில், முனிவன் இராமன் முகத்தைக் கவனித்துக்கொண்டே வருகிறான் என்று ஊகிக்க வேண்டியுளது. இந்த வினாடிவரை இராமன் முடிவில் மாற்றம் தெரியவில்லை. தான் அவளால் துன்பமுற்ற பிரதிவாதி என்பதால், தன் சொற்களை இராமன் முற்றிலுமாக நம்பவில்லை போலும் என்று கருதிய முனி, இறுதியாக 'ஐயனே! முடிவில்லாத அறத்தை நன்கு ஆய்ந்துதான் இவ்வாறு கூறினேன். இவள்மேல் கொண்ட கோபத்தாலோ, காழ்ப்புணர்ச்சி யாலோ நான் இதனைக் கூறவில்லை. நீ வாளா இருப்பது சரியில்லை. இவளை உடனே கொல்வாயாக' என்ற பொருளில்,

ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன்; இவள்
சீறி நின்று இது செப்புகின்றேன் அலேன்;
ஆறி நின்றது அற்ற அன்று; அரக்கியைக்
கோறி என்று, எதிர் அந்தணன் கூறினான்.

*(தாடகை வதைப்படலம்—44)*

'ஒருதலைப்பட்சமாக நின்று தான் இந்த முடிவுக்கு வரவில்லை; விருப்பு வெறுப்புக்கு இங்கு இடம் இல்லை' என்று கூற வந்த கோசிகன், 'முடிவில்லாத அறத்தை ஆய்ந்துதான் இவ்வாறு கூறுகிறேன்' என்று கூறியது, இராமனுடைய சிந்தனையைத் தூண்டிற்று. அறம் யாது என்பதை நூல்கள் மூலம் அவன் நனகு அறிந்துள்ளான். ஆனால் அந்த நூல்களில் தன்னைப்போல் பயிற்சி பெற்றவனும், தேவை ஏற்பட்டால் அறச் சட்டங்களையே இயற்றக்கூடிய பேராற்றல் பெற்றவனுமாகிய கோசிகமுனி, 'நல்அறம் பார்த்துத்தான் இவ்வாறு கூறுகிறேன்' என்று வேறு கூறிவிட்டான். மேலும், தான் உணர்ச்சிவசப்பட்டோ, தன்னலத்தாலோ இவ்வாறு முடிவு செய்யவில்லை என்றும் முனிவன் கூறியபிறகு, இராமன் என்ன செய்ய முடியும்? இந்த நிலையில் இராமன் எத்துணைப் பெரிய தரும சங்கடத்தில் அகப்பட்டுள்ளான் என்பதை நினைந்து பார்த்தல் வேண்டும். எழுத்தில் வடிக்கப்பெற்றுள்ள சட்டம் பெண்ணைக் கொல்லுதல் கூடாது என்று கூறுவது உண்மைதான். அச் சட்டத்தின் எழுத்து முறையை மதிக்க வேண்டும என்று நினைக்கிறான் இராகவன். உச்ச நீதிமன்றத்தில் அமர்ந்திருக்கும் நடுவர், சட்டச் சொற்களுக்குப் பொருளை வரையறை செய்து நீதி வழங்குவது போல், இப்பொழுது கோசிக முனியாகிய நீதிபதி சட்டச் சொல்லுக்கும் பொருள் காண்கிறான். 'பெண்' என்ற காரணத்தால்தானே இராமன் அம்பு செலுத்தாமல் தாழ்கிறான். அப்படியானால் பெண் என்று ஒருவரை வகைப்படுத்துவது கேவலம். அவருடைய உடல் அமைப்பை

*மட்டும் வைத்துக் கொண்டா? பெண்மை உடையவளே பெண்! பெண்மை இயல்பு இல்லாத, பெண் உடம்பு மட்டும் பெற்ற ஒருவரை உடம்பால் மட்டும் மதிக்க வேண்டுமானால் பெண் என்று கூறலாம். ஆனால் பெண்ணுக்குரிய மரியாதையைத் தருதல் அறிவுடைமையாகாது. தாய்மைக் குணம் இல்லாத ஒருத்தி எவ்வாறு பெண் எனப்படுவாள்? எனவேதான், கோசிகன், தாடகை பெண் அல்லள் என்பதைக் குறிக்கப் பின்கண்ட காரணங்களை வரிசைப்படுத்துகிறான்.*

தீது என்று உள்ளவை யாவையும் செய்பவள்.
*(தாடகை வதைப்படலம்—3)*

வாண்மையே பெற்ற வன்திறல் ஆடவர்
தோண்மையே இவள் பேர் சொலத் தோற்கும் *( "39)*

........................பெரியோ ரொடும்
மறம் கொடு. இத்தரை மன்னுயிர் மாய்த்து, நின்ற
அறம் கொடுத்தவள் *(41)*

...............................இவளைப்போல்
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது ஓர்
கூற்றம் உண்டு கொல்?...................... *( "42)*

*இத்துணையும் கூறிய பிறகுதான், 'இவள் சீறி நின்று இது செப்பவில்லை. ஈறுஇல் நல்லறம் பார்த்துத்தான் இசைத்தேன்' என்று முடித்தான் முனிவன். எனவே, பெண் என்ற சொல்லுக்கு இயல்பாக எதிர்பார்க்கப்படும் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை இவள்மாட்டு இல்லாதவை; அன்றியும் தாய்மைக்கு ஒவ்வாத கொலைத் தொழில் மேற்கொண்டவள், இவள் பெண் அல்லள் என்பதற்கு இத்துணை சான்றுகள் உண்டு. இதன் எதிராகப் பெண் என்பதற்கு வடிவம் ஒன்று மட்டுமே சான்று. எனவே இவளைக் கொல்லுதல்தான் முறை என்று முனிவனாகிய நீதிபதி முடிவு வழங்கினான்.*

## இராமன் செய்த முடிவு

இவ்வாறு அவன் கூறியபிறகு இராமன் என்ன செய்ய முடியும்? இத்தனை வாதங்களையும் இராமன் ஏற்றுக் கொண்டதாகவோ, மனம் மாறியதாகவோ தெரியவில்லை. அப்படியானால் 'உன் வாதத்தை நான் ஏற்கவில்லை. இவள் பெண் என்பதை ஏற்றுக்கொண்டு கொல்லாமல் விட்டுவிடுகிறேன்' என்று கூறி விட்டுவிடலாம். அவ்வாறு செய்தால் தந்தையாகவும், தாயாகவும், வழிப்படுத்து வோனாகவும் இருக்கும் முனிவனின் ஆணையை மீறிய குற்றம் ஏற்படும். இந்த நிலையில் இராமன் ஒரு நல்ல முடிவுக்கு வருகிறான். புலனடக்கம் பயின்று அகங்கார மமகாரங்களை முழுவதுமாக ஒழித்த ஒருவன்தான் இதனைச் செய்ய முடியும்; இராமன் அதனைச் செய்கிறான்.

கோசிகன் வாதத்தை ஏற்றுக்கொள்ளவும் இல்லை. அதன் பயனாக மனம் மாறிவிடவும் இல்லை. அதே நேரத்தில் முனிவன் கட்டளையை மீறவும் விரும்பவில்லை. அது எவ்வாறு முடியும்? இராமனே இவ்விரண்டையும் விளக்கமாகக் கூறுகிறான்.

"முனிவர் பெருமானே! அறத்தின் மாறுபட்ட ஒரு சூழ்நிலை வந்தாலும், அதை நான் செய்ய வேண்டும் என்று நீ பணித்தால் உன் ஆணையை வேதம் என்று கொண்டு அதனைச் செய்து முடிப்பதுதான் அறம் செயும் வழியாகும்" என்ற பொருளில்,

ஐயன் அங்கு அதுகேட்டு, அறன் அல்லவும்
எய்தினால், 'அது செய்க' என்று ஏவினால்,
மெய்ய! நின் உரை வேதம் எனக் கொடு
செய்கை அன்றோ! அறம் செயும் ஆறு என்றான் ("45)

உச்ச நீதிமன்றத்தில், நடுவர் ஒரு சட்டத்திற்குப் புதிய விளக்கம் தந்து அதன்படி தீர்ப்புக் கூறினால், அது வாதி, பிரதிவாதி என்ற இருவரையும் கட்டுப்படுத்தும் என்பதில்

ஐயமில்லை. ஆனால், இரு சாராரும் அத்தீர்ப்பை முழுமனத்துடன் ஏற்க வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. அதற்குக் கீழ்படிதல் வேறு; அதனை ஏற்றுக்கொள்ளுதல் வேறு. விசுவாமித்திரன் தீர்ப்புக்கு இராகவன் கீழ்ப்படிந்தான்; ஆனால் அதனை அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. தான் நியாயம் என்று கண்டதைக்கூடச் சமுதாய நலம் கருதி விட்டுக்கொடுத்தல் பண்புடையார் செய்யும் செயலாகும். இதனையே இராகவனாகிய பெருந்தகை செய்தான். தருமசங்கடத்தில் இராமன் மேற்கொண்ட முடிவும், அதனால் வரும் பயன்களின் நன்மை, தீமை ஆகிய இரண்டும், முனிவனைச் சேர்ந்துவிடுகின்றன. தன்னின் மேம்பட்ட அதிகாரி, தான் சரி என்று நினையாத ஒன்றைச் செய்க என்று ஏவினால், தன் மறுப்பை அறிவித்துவிட்டு, மேலும் அவர் வற்புறுத்தி னால், செய்வதே முறை. அதேநேரத்தில், 'எய்தினால், நீ ஏவினால்' என்ற இரண்டு 'ஆல்' விகுதிகளின் மூலம், முனிவனுக்கு உரிய மதிப்பைத் தருகிறான் சக்கரவர்த்தித் திருக்குமாரன். அத்தகைய சூழ்நிலை வராது; வந்தாலும் தவறு செய்யுமாறு நீ விடமாட்டாய் என்ற குறிப்புப் பொருளைத் தருவதற்காகவே இரண்டு 'ஆல்' விகுதிகள் இடம்பெற்றுள்ளன. தருமசங்கடம் என்பது நம் போன்ற சராசரி மக்களுக்கு மட்டுந்தான் வரும் என்று எண்ண வேண்டா. கடவுளே மனிதனாகப் பிறந்தால் அவனையும் அது விடாது என்பதை அறிவிக்கவே, இத்தகைய ஒரு நிகழ்ச்சியைப் படைத்துக் காட்டுகிறான் கம்பன். வான்மீகியில் தாடகைவதம் இராமனின் உண்மை நிலையைக் காட்டும் முறையில் இல்லை. விசுவாமித்திரன் சொன்னவுடன் இராம இலக்குவர்கள் தாடகையின் கைகால் முதலிய உறுப்புகளை ஒவ்வொன்றாக அறிகின்றார்கள். அவ்வாறு செய்வதால் தாடகையின் வன்மையை அறிவிக்க முடிந்ததே தவிர, அவளைக் கொல்லச் சோதரர்கள் இருவரும் பல அம்பு

களைச் செலவழித்ததாகச் சொல்லும் வான்மீகக் கதை, தான் படைக்கும் இராமனுக்குப் பொருந்தாது எனக் கவிஞன் எண்ணுகிறான். எனவே, ஒரே அம்பால் அவளை நமனுலகு அனுப்புகிறான் கம்பன்.

## மனிதனாக வந்தால்?

கடவுள் மனிதனாக வந்தால், மனிதர்கட்குரிய புலனடக்கம் முதலியவற்றில் தலைசிறந்து நிற்க வேண்டும். அதுவே ஏனையவர்கள் அவனைப் பின்பற்றுவதற்குரிய வழி என்று நினைத்த கம்பன், இவ்வாறு தாடகை வதத்தைப் படைத்துக் காட்டுகிறான். கடவுள் மனிதனாக வந்து செயற்கு அரிய செயல்களைச் செய்வது மட்டும் போதாது. மனிதர்களுக்குள்ள இன்ப-துன்பம், மகிழ்ச்சி-துயரம் ஆகிய அனைத்திலும் இவ்வுலகச் சட்டங்கட்கு ஏற்ப ஈடுபட வேண்டும். அப்படி ஈடுபடும்போது அவனுடைய புலனடக்கம் காரணமாக அவன் நடந்துகொள்ளும் முறையால் உலகத்தார்க்கு முன்மாதிரியாகவும், எடுத்துக் காட்டாகவும், அம்மனிதன் ஆகிறான். இவ்வாறு தலைவனைப் படைப்பதே கவிஞன் நோக்கம். அந்த நோக்கத்தில் கவிஞன் முழு வெற்றி பெற்றுவிடுகிறான்.

மனிதனாக வந்த பரம்பொருள், இந்த மனித உலகச் சட்டதிட்டங்கட்குக் கட்டுப்பட்டு, பழி முதலியன வராமல் தன் செயல்களை நடத்திச் செல்லுமாறு கதையைக் கூறுகிறான் கம்பன் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டைக் காணலாம். பிராட்டியைத் தேடி வருகின்ற சோதரர்கள் கவந்தனிடம் அகப்பட்டுப் பிறகு அவனைக் கொன்ற நிலையில் அவன் தேவ வடிவம் பெற்ற இராமனை நோக்கிக் கூறுகிறான். "குற்றமற்ற சிவனது ஆண்மை பற்றிக் கூற வேண்டுமா? தாமரைத் தவிசில் உறையும் நான்முகன் படைத்த அத்தனையையும் ஒருவனாகவே நின்று சங்காரம் செய்யும் ஒருவனான அச்சிவனே, வன்மை பொருந்திய

பூதகணங்களுடன் உறைவது உண்மையல்லவா? (எனவே, நீ எத்துணை ஆற்றல் பெற்றிருப்பினும், துணைவலி தேட வேண்டும்) என்ற கருத்தில்,

பழிப்பு அறு நிலைமை ஆண்மை
பகர்வது ஏன்? பதும பீடத்து
உழிப்பெரும் தகைமை சான்ற
அந்தணன் உயிர்த்த எல்லாம்
அழிப்பதற்கு ஒருவன் ஆன
அண்ணலும், அறிதிர் அன்றே
ஒழிப்பருந் திறல் பல்பூத
கணத்தொடும் உறையும் உண்மை?

(கவந்தன் படலம்—53)

என்று கூறிவிட்டு, மேலே இராமன் என்ன செய்ய வேண்டும் என்று கூறுகிறான்.

ஆயது செய்கை என்பது
அறத்தை நெறியின் எண்ணி
தீயவர்ச் சேர்க்கி லாது
செவ்வியோர் சேர்த்து, செய்தல்;
தாயினும் உயிர்க்கு நல்கும்
சவரியைத் தலைப்பட்டு அன்னான்
ஏயது ஓர் நெறியின் எய்தி,
இரலையின் குன்றம் ஏறி,
கதிரவன் சிறுவன் ஆன
கனக வாள்நிறத்தி னானை
எதிர் எதிர் தழுவி, நட்பின்
இனிது அமர்ந்து, அவனின், ஈண்ட,
வெதிர் பொரும் தோளினாளை
நாடுதல் விழுமிது என்றான்.
..............................................

(கவந்தன் படலம் — 54, 55)

[செய்ய வேண்டிய செயல் என்ன என்பதை அற அடிப்படையில் ஆராய்ந்து, தீயவர்களைத் துணைக் கொள்ளாமல், நேர்மையானவர்களைத் துணைக்கொண்டு

செல்வதே சரி. சவரி என்பவளைக் கண்டு அவளிடம் வழி கேட்டு, இரலைக்குன்றம் அடைந்து, சூரியன் மகனான வெண்ணிறமுடைய சுக்ரீவனைக் கண்டு, தழுவிக்கொண்டு, நட்புப் பூண்டு அவனிடம் சிலநாள் தங்கி அவன் உதவியுடன் மூங்கில் போன்ற தோளை யுடைய பிராட்டியைத் தேடலே சிறந்ததாம்.]

கவந்தன் தனக்கு நற்கதி அளித்த இராமனிடம் நன்றி பாராட்டிக் கூறிய அறிவுரையாகும் இவை. இதில் ஒரு வியப்பு என்னை எனில், வயிற்றில் வாயை உடைய பயங்கரமான அந்தக் கவந்தன் என்ற கொடியோன், தன் சுயவடிவம் (கந்தர்வன்) பெற்ற பின்னர்க் கூறிய இந்த அறிவுரையை சக்ரவர்த்தித் திருமகன் ஓர் எழுத்தும் விடாமல் பின்பற்றினான். 'ஏன் இவ்வாறு கூறினான்? இவன் யார் நமக்கு புத்தி கூறுவதற்கு?' என்றெல்லாம் அப்பெருமான் நினைக்கவே இல்லை.

> எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு *(திருக்குறள்—423)*

என்ற அறநூல் விதிப்படி, கவந்தன் அறவுரையை அப்படியே பின்பற்றுகிறான் இராமன். அறவுரை கூறும் கவந்தன், ஒரு நுணுக்கத்தையும் கூறுகிறான். துணை இல்லாமல் யாரும் அரிய காரியங்களைச் செய்ய முடியாது. ஆனால் அதற்காகத் தீயவர்களின் உதவியை நாடி வினை முடித்துக்கொள்வேன் என்று நினைப்பது தவறு. இவ்வாறு கவந்தன் இரலைக் குன்றத்தில் வாழும் சுக்ரீவனை அடைந்து தழுவி, நட்புக் கொண்டு, அவனிடம் தங்கித் தேவியைப் பின்னர்த் தேடும் வேலையை மேற்கொள்ளு மாறு கூறினான்.

## வழியும் பயனும்

அண்ணனுக்கு அஞ்சி ஒளிந்து வாழும் சுக்ரீவனைத் துணையாகச் சேர்த்துக் கொள்ளுமாறு கூறியது

விந்தையல்லவா? இதற்குப் பதிலாக வாலிபால் நட்புக் கொண்டால் போர் இல்லாமலே சீதையை மீட்டிருக்கலாமே! அப்படி இருக்கக் கவந்தன் ஏன் சுக்ரீவனை நாடச் சொல்கிறான். இராமன் பரம்பொருளாயினும், மனிதனாக வந்து மனிதர்கட்குரிய தொல்லைகளை அனுபவிக்கின்றான் என்றாலும், அறம் திறம்புதல் ஆகாதே! இராமன், தன் மனைவியை யார் திருடிச் சென்றானோ அவனைத் தண்டிக்கப் போகிறான். பிறன்மனை நயந்த குற்றத்துக்காக ஒருவனைத் தண்டிக்கப்போகும் மனிதன், தம்பியின் மனைவியை வைத்துக்கொண்டிருக்கும் வாலியின் துணையை எப்படி நாட முடியும்? வாலியிடம் இராமன் சென்றிருந்தாலும், அவனிடம் முன்பின் தெரியாமல் நட்புக் கொண்டிருந்தாலும், உண்மை தெரிந்தபிறகு அவன் உதவி எத்துணைச் சிறந்ததாக இருப்பினும் உறுதியாக வாலியின் உதவியை நாடமாட்டான். எப்படியாவது தன் காரியத்தை முடித்துக்கொள்ள வேண்டும் என்ற அற்பத்தனமான எண்ணம் உடையவன் அல்லனே! காரியம் வெற்றி பெறுவதானால் சரி! எந்த வழியை மேற்கொண்டால் என்ன? என்று கருதுபவன் அல்லனே இராமன்! பயனைப் போலவே வழியும் தூய்மையானதாக இருத்தல் வேண்டும் என்று கருதுபவன் ஆயிற்றே! எனவேதான், வலி குன்றியவனாயினும் நேர்மை உடையவனைத் துணைக்கோடல் வேண்டும் என்ற கருத்தில், சுக்கிரீவனிடம் போகுமாறு கவந்தன் பணிக்கிறான்.

வாலியும் இராவணனும் நண்பர்கள். ஒருவருக்கொருவர் துணை வர வேண்டிய கடப்பாடு உடையவர்கள். எனவே, இராவணனைக் கொல்வதற்கு முன்னர் வாலியைக் கொல்வதற்காகவே இவ்வாறு கூறினான் என்று பேசும் வான்மீகியின் கொள்கையையும், அது அவதார நோக்கம் நிறைவேற இன்றியமையாதது வேண்டப்படுவது என்றெல்லாம் எழும் வாதங்களையும் கம்பன் சட்டை செய்யவில்லை.

கம்பனைப் பொறுத்தவரை, அவனுடைய தலைவன் தவறான வழியை மேற்கொண்டு எத்துணைச் சிறந்த பயனையும் அடைய விரும்பமாட்டான். பிறன் மனையைக் கவர்ந்து சென்ற தவறுக்காக ஒருவனைத் தண்டிக்கச் செல்பவன் யாரைத் துணையாக அழைப்பது? அதே குற்றத்தைச் செய்துகொண்டிருக்கும் மற்றொருவனையா துணைக்கழைப்பது? பண்புடைய எந்த மனிதனும் இதனைச் செய்ய விரும்பமாட்டான். கடவுளே மனிதனாக வந்து அறத்தின் மூர்த்தியாக நின்று செயல்படும்போது, இத்தகைய தவற்றை ஒருநாளும் செய்யவேமாட்டான். இதுவே வாலியை விட்டுச் சுக்ரீவனை நட்பு கொண்டதன் உட்கருத்தாகும்.

## ஒரு கல்லில் பல மாங்காய்

இனி, இத்துணைக் கடுமையான சோதனையாக அமையாமல் சுமாரான சோதனையான ஒரு தருமசங்கட நிலையையும் கவிஞன் படைத்துக் காட்டுகிறான். போர் அனைத்தும் முடிந்து பிராட்டியை அழைத்துக்கொண்டு அயோத்திக்கு புறப்பட வேண்டிய நேரத்தில், பிராட்டியைச் சினந்து தீப்புகச் செய்கிறான் கருணை வள்ளல். தீப்புகுந்து மீண்டவளை ஏற்றுக்கொள்ளுதலே முறை என்று நான்முகன், சிவன் முதலானவர்கள் கூறிவிட்ட பிறகு, தசரதனை இவ்வுலகிடை அனுப்பி, அவன்மூலம் இராமனைத் தேற்ற முடிவு செய்து, தேவர்கள் தசரதனை இங்கு அனுப்புகின்றனர். பூமியில் வந்த தசரதனை இராகவன் வீழ்ந்து வணங்கினான். வணங்கிய மைந்தனை எடுத்து மார்புறப் புல்லிய தசரதன், "மகனே அன்று கேகயன் மகள் (கைகேயி) கொண்ட இரண்டு வரங்கள் என்னும் கூர்மையான வேலாயுதங்கள் இன்றுவரை என் மார்பின் உள்ளேயே தங்கிவிட்டன. என்னைக் கொன்றபிறகும், அவை என்னை விட்டு நீங்கவில்லை. இன்று உன்னைத் தழுவும்பொழுது, உன் மார்பு என்னும் காந்தம்

என் மார்பில் பட்டதால், அந்த இரும்பு வேலாயுதங்கள் இப்பொழுது பறிக்கப்பட்டுவிட்டன" என்று பேசுகிறான்.

அன்று கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில்வேல்
இன்று காறும் என் இதயத்தினிடை நின்றது; என்னைக்
கொன்று நீங்கலது, இப்பொழுது அகன்றது, உன் குலப்பூண்
மன்றல் ஆகம்ஆம் காந்தமா மணி இன்று வாங்க.
*(மீட்சிப்படலம்—117)*

திருமணம் நடந்து பல ஆண்டுகள் கழித்தும், பரதன் என்ற மகனைப் பெற்றும், பின்னர் ஏதோ ஒரு காரணத்தால் உயிருடன் இருக்கும்பொழுதே தசரதன் தன் மனைவியாகிய கைகேயியை, "இவள் என் மனைவியும் அல்லள்; இவள் மகன் பரதனையும் மகன் என்று உன்னேன்" என்று ஒதுக்கிவிட்டான். கைகேயி வரம் என்ற பெயரில் செய்த கொடுமையை அவனால் மறக்க இயலாது. மந்திரக் கிழவர்களிடம் அவன் கூறியது போல, அரசைத் துறந்து சென்று, புலன்களை அடக்கித் தவம் செய்யும் வாய்ப்பும் அவனுக்குக் கிட்டவில்லை. எனவே, மனத்துள் இருந்த வெறுப்பு, சினம், காழ்ப்புணர்ச்சி என்ற குறைகளுடனேயே தசரதன் இறக்க நேரிட்டுவிட்டது. இறுதியாக அவன் மனத்தில் இருந்த உணர்ச்சிகள் அவனை முன்னேற்றக் கூடியவை அல்ல. ஒருவன் இறக்கும்பொழுது, இறுதியாக அவன் மனத்தில் நிறைந்திருக்கும் எண்ணங்களே, அவனுடைய அடுத்த பிறப்பிற்கோ, விடுதலைக்கோ வழிவகுக்கும் என்பது இந்நாட்டவர் நம்பிக்கை. இந்த் அடிப்படையில் பார்த்தால் தசரதன் இராமனைப் பெற்றுங்கூட, முழு விடுதலை பெற வாய்ப்பு இல்லை. எனவே அவன் மனத்தினுள் உறையும் கொடிய உணர்வுகள் அகல வேண்டும். இதனைக் கருதிக் கவிஞன் இந்த நிகழ்ச்சியைப் பயன்படுத்திக்கொள்கிறான். அதே நேரத்தில் இராமனுடைய மனத்தில் இக் கொடிய

உணர்ச்சிகள் எதுவும் மருந்துக்குக்கூட இல்லை என்பதையும் காட்ட வேண்டும்.

இவை இரண்டு பயன்களும் ஒருபுறம் இருக்க, தருமசங்கடமான ஒரு நிலையில் புலனடக்கமும், கற்றறிவும் உடைய ஒருவன் எவ்வாறு நடந்துகொள்கிறான் என்பதையும் காட்ட வேண்டும். இத்தனைப் பயன்களையும் ஒரே நிகழ்ச்சியில் கவிஞன் வைத்துக் காட்டுகிறான். மகனைத் தழுவி மகிழ்ந்து, மருகிக்கு அமைதி கூறிய தசரதன், மகனிடம், "நீ வேண்டிய வரத்தைக் கேள்" என்று பணிக்கிறான். இராமன் மறுத்தும் விடாமல், "ஏதாவது உனக்கு விருப்பமானதைக் கேள்" என்கிறான். இப்பொழுது தந்தையின் விருப்பப்படியே மைந்தன் வரம் கேட்கிறான். "தீயவள் என்று நீ துறந்துவிட்ட என் தெய்வமும், அவன் மகனும், எனக்குத் தாயும் தம்பியும் ஆகும் வரம் தருக" எனக் கேட்டான். அப்படி அவன் கேட்டவுடன், உலக உயிர்கள் அனைத்தும், அருள் உள்ளம் உடைய இராமனின் பண்பை நினைந்து, அவனை வாழ்த்தினவாம்.

ஆயினும் உனக்கு அமைந்தது உரைஎன, அழகன்
தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும், தம்பியும், ஆம் வரம் தருக! எனத் தாழ்ந்தான்.
வாய்திறந்து எழுந்து ஆர்த்தன, உயிர் எலாம் வழுத்தி.

(மீட்சிப்படலம்—128)

கம்பநாடன் தன் கவிதைத்திறம் முழுவதையும் இந்த ஒரு பாடலில் வைத்துக் காட்டுகிறான். ஸ்திதப் பிரக்ஞனான இராமனுக்குக் கைகேயியின்பால் எவ்வித வெறுப்போ, பகையோ, சினமோ இல்லை. எனவே, அவள் தாய் என்பதையும், தன்னை அன்புடன் வளர்த்தவள் என்பதையும் மறக்கவில்லை. அதேநேரத்தில், தந்தை அவளை ஒதுக்கியதை ஏற்கவும் கூடவில்லை. 'விதியின் பயனே பயன். இதற்கு என்னை மனம் நோவது?' என்று தம்பி இலக்குவனுக்கு இராமன் கூறியது, உண்மையில் அவன் மனப்பூர்வமாக

நம்பிய நம்பிக்கையில் விளைந்த சொற்கள். 'தீதும் நன்றும் பிறர் தர வாரா! நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன!' (புறம்—192) என்ற பழம் பாடலை உள்ளவாறு அறிந்து அதன்படி நடக்கிறவன் இராமன். என்றாலும் என்ன? தந்தை கைகேயியைத் துறந்துவிட்ட பிறகு, அவளைத் தாய் என்று, அந்தத் தந்தையின் எதிரிலேயே கூறுவது தசரதனை அவமானப்படுத்துவது போலாகும். தந்தை சொல்லைக் காக்கும் தனயனான இராமன், ஒருநாளும் இதனைச் செய்ய உடன்படான். தந்தை, இறந்தபின்னரும், விடாமல் கொண்டிருக்கும் காழ்ப்புணர்ச்சி தவறானது என்பதால், அவன் மனத்தை மாற்றவும் வேண்டும். எவ்வாறு இதனைச் செய்வது?

மிக அற்புதமான வழி ஒன்றை இராகவன் கையாள்கிறான். கைகேயியை மனைவி என்று கூற விரும்பாத தசரதன், அவள் பெயரைக் கூறவும் பிடிக்காமல், 'கேகயன் மகள்' என்று கூறிவிட்டான். இராமன் இப்பொழுது அவளை எவ்வாறு கூறுவது? 'தாய்' என்ற சொல்லைத் தவிர வேறு எந்தச் சொல்லைக் கூறினாலும், அது தாய்க்குச் செய்த பெருங் குற்றமாகும். அந்தச் சொல்லைப் பயன்படுத்தினால், தந்தைக்கு அவமானம் செய்ததாக அமையும். அதே நேரத்தில் இதை விட்டுவிடவும் முடியாது. எனவே ஞானியான இராகவன், 'தீயள் என்று நான் அவளை ஒருக்காலும் நினைத்ததில்லை' என்ற குறிப்பையும் உள்ளடக்கி, 'தீயள் என்று கருதி நீ துறந்த என் தெய்வம்' என்று கூறுகிறான். தாய் என்று—தான் தசரதன் எதிரே கூறக்கூடாதே தவிர, தெய்வம் என்று கூறினால் யார்தான் அதற்கு மறுப்புக் கூற முடியும்? அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று கூறுவது பொருத்தமே! அன்றி, வேறு யாராக இருப்பினும் ஒருவரைத் தெய்வம் என்று கூறுவதில் தவறு இல்லை. அடுத்துப் பரதனைக் குறிக்க வேண்டிய இடத்தில்

'தெய்வத்தின் மகன்' என்று கூறுவதிலும் தவறு இல்லை. 'என் தெய்வமும் மகனும்— தாயும் தம்பியும் ஆம் வரம் தருக' எனக் கேட்டது அற்புதம்! நீ மறுபடி மனைவியாக ஏற்றுக்கொள் என்று கூறி இருக்கலாம். அவ்வாறு கூறினால் தசரதன் மனநிலையை அறியாது கூறிய சூழ்நிலை ஏற்படும். அதற்குப் பதிலாக, அவள் என் தாயாகவும், அவன் என் தம்பியாகவும் ஆக வேண்டும் என்று கேட்பது, மிக அற்புதமான ஒன்றாகும்.

வரம் என்று கேட்டுவிட்டமையின், தசரதன் அதனை மீறவும் வழி இல்லை. நடுநிலையுடன் நிற்கும் இராமன், உலகம் வெறுக்கும் ஒரு பெருமாட்டி உண்மையில் தவறு செய்யவில்லை என்று கருதினால், அவளை மீட்டுத் தாயாக ஆக்கிக் கொண்டான். வேதமே அனைய பரதனைத் தம்பியாக ஆக்கிக்கொண்டான். இவை இரண்டையும் விட உயர்வானது தன்னைப் பெற்றெடுத்த தந்தை தீய உணர்வுகளின் காரணமாக அடைய முடியாத வீடுபேற்றை, அவனுக்கு வழங்க முற்படுகிறான் தனயன். தசரதன் மனமாசைக் கழுவினால் ஒழிய இது நடைபெறாது. நேரிடையாக அவன் குற்றத்தை எடுத்துக்கூறித் திருத்தும் உரிமை தனயனுக்கு இல்லை. எனவே, இந்த அற்புதமான வழியைக் கையாள்வதன் மூலம் முதலாவது தசரதனுக்கு நலஞ்செய்து, அடுத்துத் தாயையும் தம்பியையும் தனக்கே உரிய முறையில் இராமன் நடந்துகொள்கிறான்.

## கம்பன் வெற்றி

கடவுளை மனிதனாகப் பிறக்கவைத்துக் காப்பியஞ் செய்தவர்கள் பலர் இருப்புனும், கம்பன் அவர்கள் இடையே ஈடும் எடுப்பும் இல்லாமல், தனக்கு நிகர் தானே ஆக நிற்கின்றான். மனிதனாகப் பிறந்த பரம்பொருள் இறுதிவரை மனிதனாகவே நடந்து கொள்கிறது. யார் யாரோ, தன்னைப் பற்றி ஏதேதோ கூறினாலும், அவற்றால் நிலை மாறாமல்

நடந்துகொள்ளும் இராமனைப் படைத்தான். 'வேறு உள குழுவை எல்லாம் மானுடம் வெல்ல' வேண்டுமானால், அந்த மானுடம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை, அற்புதமாகக் கவிஞன் எடுத்துக் காட்டுகிறான். புலனடக்கம் ஒன்றுதான் மனிதனைத் தேவனாக ஆக்கும். எனவே, அத்துறையில் தலை நின்றவனாக உள்ளான் மனிதனாக வந்த கடவுள்! புலனடக்கம் பெற்றவனுடைய தன்னலமின்மை, பிறர் நலம் பேணல், அன்புடைமை, அருள் உடைமை முதலிய நற்பண்புகள் அனைத்தும், அந்த அடக்கத்தின் பின் தாமே வந்துவிடுகின்றன.

பரம்பொருளை மனிதனாக்கிய கம்பன், அந்த மனிதனை அறத்தின் மூர்த்தியாய், அருள் நிறைந்தவனாய், பிறர்நலம் பேணுபவனாய்ப் படைத்ததுடன், சாதாரண மனிதனுக்குரிய பண்புகளுடன் மிளிருமாறு செய்தது ஒப்பற்ற படைப்பாகும்.

உலகின் பல்வேறு மொழிகளுள் தோன்றியுள்ள பல்வேறு காப்பியங்களை ஒப்புநோக்கிப் பார்த்தால் சரி இல்லை என இந்நாளில் திறனாய்வாளர் சிலர் கருதுகின்றனர் என்றாலும், இவர்களிடையே காணப்படும் ஒருமைப் பாட்டை ஆய்வதில் தவறு இல்லை. ஹோமரில் தொடங்கி மில்டன் வரை, தோன்றிய கிரேக்க, இலத்தீன், இத்தாலிய, ஆங்கில மொழிக் காப்பியங்கள் ஆகிய அனைத்தையும் ஒப்பிட்டால், கம்பன் செய்துள்ள சாதனைக்கு இணை வேறு காணல் இயலாது.

கடவுளை இந்த உலகில் நடமாடவிட்ட காப்பியக் கவிஞர் யாரும், அம் முயற்சியில் வெற்றி பெறவில்லை. இவர்கள் வெற்றி பெறாமல் போனது ஒருபுறம் இருக்க, இவர்கள் முயற்சியில் கடவுள் காயப்படுத்தப்பட்டுவிடுகிறார்.

இத்தகைய சூழ்நிலையில், எந்தக் காப்பியமும் அடைய முடியாத வெற்றியைக் கம்பநாடன் பெற்றுவிடுகிறான் என்பதைக் காண முடிகிறது.

# 8. கம்பன் கண்ட பரம்பொருள்

## மும்மூர்த்திகள் கொள்கை

தன் காப்பியத் தலைவனாகிய இராமனைப் பரம் பொருளாகவே கம்பன் கருதிப் படைத்துள்ளான் என்று கூறப்பெற்றதைச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும். அவன் காலத்தில், தமிழகம் முழுவதும் பரவி இருந்த சைவ வைணவப் போராட்டங்களைக் கண்டு எள்ளி நகை யாடினான் அவன். மும்மூர்த்திகள் கொள்கை இந்நாட்டில் வேரூன்றிவிட்ட ஒன்றாகும். இந்த மும்மூர்த்திகளுள், படைத்தல் தொழிலைச் செய்பவன் நான்முகன் என்றும், காத்தல் தொழிலைச் செய்பவன் திருமால் என்றும், அழித்தல் தொழிலைச் செய்பவன் உருத்திரன் என்றும் கூறி வந்தனர். நான்முகனை நம்பித் தனியே வழிபடு பவர்கள் எவரும் இல்லாமற் போகவே, போராட்டம் சைவ வைணவர்களுக்குள் மிகுந்து நின்றது.

இத்தகைய சூழ்நிலையில், வான்மீகத்தில் பல மாறுதல்களைச் செய்தாலும், திருமாலே இராமனாகப் பிறந்தான் என்ற நம்பிக்கை வலுவாகப் பரவவிட்ட காரணத்தால், இராமன் பிறப்பைப் பற்றிக் கூறும்போது, திருமால் இராமனாகத் தோன்றினான் என்று கூறி விட்டான். ஆனால் தான் திருமால் என்று குறிப்பிடுவது, இந்த மும்மூர்த்திகளுள் ஒருவரையன்று என்பதையும், சமயம் நேரும்போதெல்லாம் விளக்கிக் கொண்டே செல்கிறான்.

## மூவர்க்கும் முதல்வன்

*திரு அவதாரப் படலத்தின் 103ஆம் பாடலில், இராமன் கோசலை வயிற்றில் பிறந்தான் என்று கூறும்பொழுது, 'ஒரு பகல் உலகு எலாம் உதரத்துள் பொதிந்து, அருமறைக்கு உணர்வு அரும் அவனை, அஞ்சனக் கருமுகில் காட்டும் சோதியை' (103) என்று பாடிய கவிஞன், அதே படலத்தின் இறுதிப் பாடலாகிய 134ஆம் பாடலில், 'முப்பரம் பொருளுக்கும் முதல்வன் முந்துறும்' (134) என்று பேசுகிறான். கவந்தன் தன் சுய உருவைப் பெற்றவுடன்,*

மூன்று கவடாய் முளைத்து எழுந்த மூலமோ?
*(கவந்தன் படலம்—40)*

*என்று பேசுகிறான். இராவணனிடம் தன் கணவன் யார் என்பதைக் கூறவந்த பிராட்டி,*

செங்கண்மால், நான்முகன், சிவன் என்றே கொலாம்
எங்கள் நாயகனையும் நினைத்தது—ஏழை நீ!

*என்கிறாள்.* *(காட்சிப் படலம்—126)*

*முதல்நாள் போரில் இராமனிடம் தோற்று, இலங்கை மீண்ட இராவணன், மாலியவான் என்ற தன் பாட்டனிடம் இராமனுடைய அழகு, வீரம், குணநலம் என்பவை பற்றிப் பேசுகிறான். 'பேய்களோடு இடுகாட்டில் நடமாடும் சிவபெருமானின் எட்டுத் தோள்கள், இந்திரனின் இரண்டு தோள்கள், இவ்வண்டத்தை வயிற்றில் அடக்கிய திருமாலின் ஆயிரந் தோளும் சேர்ந்து பணிபுரிந்தாலும் இராமனின் விரல் ஒன்றுக்கு ஆற்றமாட்டா' என்ற பொருளில்,*

பேய்இருங் கணங்களோடு சுடுகளத்து உறையும்பெற்றி
ஏயவன் தோள்கள் எட்டும், இந்திரன் இரண்டு தோளும்,
மாயிரு ஞாலம் முற்றும் வயிற்றிடை வைத்த மாயன்
ஆயிரம் தோளும், அன்னான் விரல் ஒன்றின் ஆற்றல் ஆற்றா.
*(கும்பகர்ணன் வதைப்படலம்—24)*

*என்று பேசுகிறான். அடுத்து இக்கருத்துக்கு முடிமணி வைப்பதுபோல, இராவணனே ஒரு கருத்தைக் கூறுகிறான்,*

வாசவன், மாயன், மற்றை
  மலருளோன், மழுவாள் அங்கை
ஈசன் என்று இனைய தன்மை
  இளிவரும் இவரால் அன்றி?
நாசம்வந் துற்ற போதும்,
  நல்லது ஓர் பகையைப் பெற்றேன்,

*(கும்பகர்ணன் வதைப்படலம்—31)*

*[இந்திரன், திருமால், நான்முகன், சிவபெருமான் என்ற இளிவந்த இயல்புடைய இவர்களால் அல்லாமல், நல்ல சிறந்த பகைவனால் என் நாசம் வந்து சேர்ந்தது.]*

*எனவே, 'ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்து அறிவு அமைந்தவனும், பகைவனும் ஆகிய இராவணன், இராமன் மூவரும் அல்லாத ஒருவன் என்ற கருத்தைப் பேசுமாறு செய்கிறான் கவிஞன். முதன்முறையாக இராமனைச் சந்தித்த இராவணன் மனத்தில் தோன்றிய எண்ணம். இராமன் மூவரினும் மேம்பட்ட பரம்பொருள் என்பது, இதே இராவணன், கடைசி முறையாக இராமனைக் காணும் பொழுதும் இதே கருத்தைத் தெரிவிக்கின்றான்.*

சிவனோ! அல்லன்; நான்முகன் அல்லன்; திருமாலாம்
அவனோ! அல்லன்; மெய்வரம் எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின், செய்து முடிக்கும் தரன் அல்லன்,
இவனோதான் அவ்வேத முதற் காரணன்? என்றான்.

*(இராவணன் வதைப்படலம்—124)*

*காப்பியத்தின் தொடக்கத்தில், அவதாரப் படலத்தில் 'முப்பரம் பொருளுக்கும் முதல்வன்' இராமன் என்று தொடங்கிய கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன், காப்பியத்தின் இறுதியில் இராவணன் இறக்கப் போகும் முன், அவன் கூற்றாகவே 'இவனோ தான் அவ்வேத முதற்காரணன்'*

என்று பேச வைக்கின்றான். உலகம் போற்றும் ஓர் ஒப்பற்ற காப்பியத்தைப் படைக்கப் புகுந்த கவிஞன், இந்நாடு, முழுமைக்கும் தன் காப்பியம் பயன்பட வேண்டும் என்றுதானே எண்ணி இருப்பான்? அப்படியானால் அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய சமரச நிலையில் தானே கடவுளைப் பற்றிக் கூறி இருப்பான்? ஒரு குறிப் பிட்ட சமயத்துக்கு மட்டும் உரியதாகக் கவிஞன் இந்நூலை ஆக்கி இருக்க முடியாது. கடவுள் தத்துவம் பற்றி அவன் காலத்திற்கு முன்பே பற்பல சான்றோர்கள் நிரம்பக் கூறிச் சென்றுள்ளார்கள்.

## கவிஞன் குறிக்கோள்

தமிழ்ச் சமுதாயத்தில் இருந்த சிறப்புகள், குறைபாடுகள் என்ற இரண்டையும் அலசிப் பார்த்து, அந்தச் சிறப்புக்களை எல்லாம் தான் கண்ட கோசல மக்ககள் சமுதாயத்திற்கு ஏற்றினான். தமிழ்ச் சமதாயத்தில் கண்ட குறைபாடுகளைக் கோசல சமுதாயத்தில் இல்லாதவாறு செய்தான். இத்தகைய ஒரு குறிக்கோள் தன்மை பெற்ற சமுதாயத்தைப் படைத்துக் காட்டுவதன் மூலம், தான் பிறந்த தமிழ்நாட்டை உய்விக்க விரும்பினான். அவன் காலம் வரை தமிழ் மக்களிடம் அருகிக் காணப்பெற்ற புலனடக்கம் என்ற ஒன்றுக்கு, மிகப்பெரிய சிறப்புத் தந்து, காப்பியத்தில் வரும் தலைவன், தலைவி, இரண்டாவது தலைவன் முதலானவர்களைப் புலனடக்கம் செய்த சான்றோர்களாகப் படைத்துக் காட்டினான். அப் புலனடக்கம் இல்லாத சமுதாயம், இலங்கையைப் போல, அது எத்துணைச் சிறப்புடனும் அதிகார வெறியுடனும் செல்வச் செருக்குடனும் வாழ்ந் தாலும், அழிவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்பதையும் விரிவாக எடுத்துக் காட்டினான். எனவே, தனிமனித முன்னேற்றம், சமுதாய முன்னேற்றம் என்ற இரண்டுமே புலனடக்கத்தால் வருமே தவிர, வேறு குறுக்கு

வழியிலோ அன்றிப் பிற செல்வம் அதிகாரம் முதலியவற்றின் வளர்ச்சியிலோ வராது என்பதை எடுத்துக் காட்டினான். இத்தகைய ஓர் ஒப்பற்ற சமுதாயம் படைத்துக் காட்டின பிறகு ஆன்மிக வளர்ச்சி பற்றியும் பேச முடிவு செய்தான்.

## வள்ளுவன் அடிச்சுவட்டில்

அவன் முடிவுக்கு உதவி செய்யும் வகையில், அவன் எடுத்துக்கொண்ட கதையும் அமைந்தது. அவனுடைய காலத்தில் 'பக்தி' என்ற பெயரில் சமயப் பூசல்கள் நிறைந்திருந்தன. பரம்பொருள் என்றால் ஒன்றாகத்தானே இருக்க முடியும்? பெயரும் வடிவும் இல்லாத பரம் பொருளுக்கு, அவரவர் விரும்பிய பெயரைக் கொடுத்துவிட்டு ஏன் சண்டையிட்டுக் கொள்ள வேண்டும். இவ்வாறு நினைத்த கவிஞன், கொஞ்சங் கொஞ்சமாகக் கடவுள் கொள்கையையும் பரப்ப முடிவு செய்தான். அவன் கதை யின் நாயகன் திருமால் அவதாரம் என்ற கொள்கை வலுப்பெற்றிருந்த அந்த நாளிலேயே கூட, அதனை மென்மையாக மறுத்துப் பரம்பொருளே இவ்வாறு வந்தது என்ற கொள்கையை வளர்த்தான். காப்பியத்தின் முதற் செய்யுளாகிய கடவுள் வாழ்த்துப் பாடலையே சமரச நோக்குடனும், அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையிலும் அமைத்தான். இந்த அளவிற்கு அவன் துணிவு கொண்டு புது வழி வகுக்க அவனுக்கு முன்னோடியாக இருந்தவர் வள்ளுவப் பேராசான். அப் பெருமகன் தான் பெயர் கூறாமல் பரம்பொருள் இலக்கணத்தை முதன்முதலில் வகுத்துக் காட்டினார். அடுத்தபடியாகப் புலனடக்கத்தால் மகாத்மாக்களாகிய சான்றோர்களைப் பற்றியும் கூறிய பெருமை அப் பெருமகனார்க்கே உரியது. அதை அப்படியே அடியொற்றிக் கம்பநாடன் இரண்டாவது பாடலில் 'சிற்குணத்தார்' என்று தொடங்கிப் பெரியோர் பெருமையைக் கூறினான். இந்த நிலைக்களத்தை அமைத்துக்கொண்டபின்,

தத்துவ அடிப்படையில் பரம்பொருள் பற்றிய இலக் கணத்தைக் கூற முடிவு செய்தான். அதனை உள்ளவாறு தெரிந்துகொள்ள வேண்டுமானால், நாமரூபம் கற்பிக்கப்பட்ட மும்மூர்த்திகளில் யார் பெரியவர் என்ற பைத்தியக்காரத்தன மான ஆராய்ச்சி மயக்கிலிருந்து விடுபட வேண்டும். அவ்வாறு பேசும் மனிதர்களை அறிவிலிகள் என்று ஏசுகிறான் கவிஞன்.

## காப்பிய இலக்கணம்

இனி அவன் கண்ட கடவுள் கொள்கையைப் பற்றிச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும். ஒரு காப்பியப் புலவன் இரண்டு முறைகளில் தன் கருத்துக்கு வடிவு கொடுக்க முடியும். முதலாவது, தானே வெளிப்பட்டுத் தன் கொள்கையைப் பேசுவது; இரண்டாவது, காப்பியத்தில் தோன்றும் பாத்திரங்களின் மூலம் தன் கருத்தை வெளிப்படுத்துவது. இவற்றுள் முதல்வகை அத்துணைச் சிறப்புடையதன்று. காப்பிய ஓட்டத்தைத் தடை செய்யும் வகையில் இடைப் பிறவரலாகக் கவிஞன் பேசுவது அத்துணைச் சிறப்புடையதன்று. மாபெருங் கவிஞனாகவும் காப்பியப் புலவனாகவும் உள்ள கம்பநாடன், இதனை அறியாமல் இருப்பானா? எனவே, தன் கருத்தை வெளியிட ஒரு புது உத்தியைக் கையாள்கிறான். ஒவ்வொரு காண்டத்தின் முதலிலும், கடவுள் வாழ்த்து என்ற முறையில் ஒரு பாடலைப் பெய்கிறான். அவற்றில் அவன் கருத்தைப் பேசப் பொருத்தம் அமைந்துவிடுகிறது. காப்பியத்தினுள் உவமை வரும் இடங்களில் கவிஞன் தன் கருத்தை வெளியிடும் முறையில் உவமை அமைப்பது, அவனுடைய நுண்மான் நுழைபுலத்தைப் பொறுத்தது.

## புதியதைப் புகுத்தல் ஏன்?

தன் காப்பியத்தின் உயிர்நாடியான பகுதி, கடவுட் கொள்கையை நிலைநாட்டுவதாகும் என்பதை அவன்

மறக்கவில்லை. அதே நேரத்தில் முந்திரிக்கொட்டை போல் இக் கருத்து வெளிப்படையாக அமையவும் கூடாது. எனவே, கவிஞன் மூல நூலாகிய வான்மீகத்தில் இல்லாத ஒரு பகுதியைத் தக்க இடத்தில் புகுத்துகிறான். அப் பகுதி அமைந்துள்ள இடத்தையும், அப்பகுதியின் சிறப்பையும் அறிந்த எவரும் அதனை விட்டுவிட விழையமாட்டார்கள். அப்பகுதி முழுவதும் கவிஞனின் கடவுட் கொள்கையை நிறுவப் பயன்படுகிறது. அப் பகுதியின் கதைப்போக்கு இவ்வாறு கவிஞன் தன் கருத்தை வெளியிட மிகவும் உதவியாக அமைந்துவிட்டது. அதுவரை நாயன்மார்களும், ஆழ்வார்களும் கூறிவந்த பக்தி மார்க்கத்துடன், சங்கரர், இராமானுஜர் போன்ற அறிவுவாதிகளின் வாதங்களும் இடம்பெற, ஓர் வாய்ப்பான அமைப்புத் தேவைப்பட்ட தனால்தான், வான்மீகி நினையாத இப் புதுப் பகுதியைக் கவிஞன் புகுத்துகிறான். அந்த அரிய பகுதிதான் **'இரணியன் வதைப்படலம்'** என்ற பகுதியாகும்

## அனுமன் ஒரு கருவி

இந்தப் பகுதியிலும், காப்பியத்தின் உள்ளேயும், பாத்திரங்களின் மூலமாகக் கவிஞனின் கடவுட் கொள்கை பேசப்பெறுகிறது. இரணியனின் வரலாற்றுப் பகுதியில் அவன் மைந்தனாகிய பிரகலாதன் கம்பனின் திருவாய்க் கேள்வியாகப் பயன்படுகிறான். காப்பியத்துள் கல்விக்கடல் என்று காப்பிய நாயகனாலேயே புகழப்பட்ட **மாருதி** திருவாய்க் கேள்வியாகப் பயன்படுகிறான். இந்த இருவரை மட்டும் ஏன் கவிஞன் பயன்படுத்த வேண்டும்? அவன் கூறவந்த தத்துவம் சாதாரண அறிவுடையோரால் புரிந்து கொள்ளக்கூடியது அன்று. எனவே, மாபெரும் அறிஞர் களாகிய இருவரைத் தேர்ந்து எடுத்துப் பேசுமாறு செய்கிறான். எத்துணை அறிவுக்கூர்மை உடையவராயினும், வெறும் கல்வியால் மட்டும் இந்த ஞானத்தைப் பெற்றுவிட முடியாது. கல்வி, அறிவு என்பவற்றுடன் புலனடக்கமும் முழுவதுமாகப்

பெற்றவர்களே பரஞானத்தைப் பெற முடியும். அத்தகைய தகுதியுடையவனாக அனுமனைப் படைக்கிறான். உண்மை ஒளியைக் காண்பதற்குக் கல்வி, கேள்வி என்பவற்றுடன் புலனடக்கமும் தேவை என்பதை அறிவிக்கவே அனுமன் படைக்கப்படுகிறான். வான்மீகியின் அனுமனிலும் கம்பனுடைய அனுமன் இத்துறையில் மாறுபட்டு நிற்கின் றான். அப்படியானால் பிரகலாதன் குழந்தையாயிற்றே? நாம் எதிர்பார்க்கும் கல்வியும் கேள்வியும் அவனுடைய வயதுக்குள் பெறுவது இயலாத காரியமாயிற்றே? இன்னுங் கூறப்போனால், அவனுக்கு எழுத்து அறிவிக்கத் தொடங்கியவுடனேயே பூசல் தோன்றிவிட்டதே? அப்படி இருக்க, அனுமனுடன் பிரகலாதனை எவ்வாறு சேர்த்துப் பேசுவது? இந்த வினாவிற்குப் பிறநாட்டார் கூறும் விடை வேறு விதமாக இருக்கலாம். ஆனால், இந் நாட்டவர் மிகப் பழங்காலத்திலேயே இதற்கு விடை கூறிச் சென்றனர். உயிர், சங்கிலித் தொடர்போல் பல்வேறு பிறப்புகள் எடுக்கின்றது. பல பிறவிகளில் முழு வளர்ச்சி பெற்றவர்கள் தம் இறுதிப் பிறவியில் முன் பல பிறவிகளில் அறிந்தவற்றை இளமை யிலேயே ஓதாது உணர்ந்துவிடுகின்றனர். 'ஒருமைக்கண் தான் கற்ற கல்வி, ஒருவற்கு எழுமையும் எமாப்பு உடைத்து' (குறள் 398) என்பது பொதுமறை. இளமையிலேயே ஓதாது உணர்தல் என்பதை இந்நாட்டவர் நன்கு அறிந்திருந்தனர். இதனை மெய்ப்பிப்பதற்காகப் போலும் நம்மாழ்வாரும், ஞானசம்பந்தரும் மூன்று வயதிலேயே பாடத் தொடங்கினர். ஓதாது உணர்ந்த பெருமக்கள் என்று அவர்கள் அழைக்கப்பெற்றனர். எனவே முறையாகக் கல்வி என்பவற்றின் வழிச் செல்லாமல் இவற்றின் பயனைப் பெற்ற பிரகலாதன் மூலமாகக் கம்பன் பேசுவதில் தவறு ஒன்றும் இல்லை. நிறைந்த கல்வியின் பயனாகவும், உண்மைப் பொருளை உணரலாம்; ஓதாது இறையருளாலும் உணரலாம் என்பதைக் காட்டவே, முறையே அனுமனும், பிரகலாதனும் உதாரணங்கள் ஆயினர்.

## இரு பாத்திரங்கள்

இந்த இரு பாத்திரங்களும் கவிஞன் சொல்லவந்த நுட்பமான கருத்தைப் பேச முற்றிலும் தகுதி வாய்ந்தவையே. இதன்மேலும் ஒரு சிக்கல் ஏற்படுகிறது. ஒருவன் ஒன்றைப் பேசுகிறான் என்றால், அதைக் கேட்பதற்கு என ஒருவன் இருத்தல் வேண்டும் அல்லவா? ஒருவன் பேசுவதைக் கேட்க மனிதர்கட்கா பஞ்சம் என்று நினைக்கத் தோன்றுகிறதா? சாதாரணமான பேச்சுப் பேசினால், அதனை யார் வேண்டுமானாலும் கேட்கலாம். ஆனால் கடவுள் தத்துவத்தை அனுமன், பிரகலாதன் போன்ற மேன்மக்கள் பேசத் தொடங்கினால், அதனைக் கேட்பது யார்? கேட்பவர்களும் அதனைப் புரிந்துகொள்ளக்கூடிய கல்வி, கேள்வி முதலியவற்றைப் பெற்றிருக்க வேண்டுமே? அத்தகையவர்கள் இல்லாதவிடத்தில், இதுபற்றிப் பேசினால் ஒரு பயனும் ஏற்படாதே.

> அங்கணத்துள் உக்க அமிழ்து அற்றால் தம்கணத்தர்
> அல்லார்முன் கோட்டி கொளல் *(திருக்குறள்—720)*

*[தம் அறிவு முதலியவற்றிற்கு ஏற்ற கூட்டத்தார் அல்லாதவர்களிடம் சென்று, உயர்ந்த கருத்துக்களைக் கூறும் சொற்களைச் சொல்லாலே சொன்னால் அச் சொற்கள் பயன் அற்றுச் சாக்கடையில் கொட்டிய அமிழ்து போல வீணாகிவிடும்.]*

என்று குறள் கூறுவதைக் கவிஞன் மறக்கவே இல்லை. எனவே, இந்த இருவரும், யாரிடம் இந்த உயர்ந்த தத்துவத்தைப் பேசுகிறார்கள் என்பதில் கவனமாக இருக்கிறான். பிரகலாதன் தன் தந்தையாகிய இரணிய னிடம்தான் இவ் வாதங்களைப் பேசுகிறான். இரணியன் கல்வி, கேள்வி பற்றி ஐயுறுவார் யாரும் இலர். எனவே, அது பொருத்தமாகிறது. அடுத்துச் சுக்ரீவன் போன்ற ஞான

சூனியங்களுடன் வாழும் மாருதி, தான் அறிந்த இக் கொள்கையை யாரிடம் பேச முடியும்? கிட்கிந்தையில் இராமனை அறிந்துகொண்ட மாருதி சுந்தரகாண்டம் முடியுந் தறுவாயில்தான் கடவுள் கொள்கையைப் பேச வாய்ப்பைப் பெறுகிறான். ஆம் 'ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்து அறிவு அமைந்தவனாகிய' இராவணனிடம்தான், இதுபற்றிப் பேசுமாறு செய்கிறான் கவிஞன்.

இராவணன், அனுமன் உரையாடலில் காப்பியப் போக்கிற்கு உதவி செய்யும் பகுதி மிகமிகக் குறைவுதான். இரணியன் வதைக்கும், காப்பியப் போக்கிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. எனினும், இவை இரண்டையும் கவிஞன் படைத்ததன் நோக்கம், அந்நாளில் இருந்த சமயப் பிரிவினைக் குழப்பத்தை மாற்றித் தான் கண்ட கடவுள் கொள்கையை நிறுவுவதற்கேயாம்.

## உயர்வும் எளிவருதலும்

இனி, கவிஞன் தன் கருத்தாகக் கூறிய கடவுள் வாழ்த்துப் பகுதிகளையும், வருணனைப் பகுதியில் வரும் சில பகுதிகளையும் காண்பது பயனுடையதாகும். அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தில் பாதிப் பாடல் இறை இலக்கணத்தையும், பின் பாதிப் பாடல் அந்த இறைவனின் எளிவந்த தன்மையையும் (ஸௌலப்பியம்) எடுத்துக் கூறுகிறது.

வான் நின்று இழிந்து வரம்பு இகந்த
    மாபூதத்தின் வைப்பு எங்கும்
ஊனும், உயிரும், உணர்வும்போல்
    உள்ளும் புறத்தும் உளன் என்ப—
கூனும் சிறிய கோத்தாயும்
    கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர்
    இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்.

(அயோத்தியா காண்டம்—வாழ்த்து)

*[வாக்கு, மனம் கடந்து நிற்கும் தன் இயல்பான நிலையிலிருந்து கீழே இறங்கி, ஐம்பொரும் பூதங்களின் பல்வேறு பரிணாமமாக இருக்கின்ற அனைத்துப் பொருள்களிலும், ஊனாகவும், உயிராகவும், உணர்வாகவும் அனைத்திலும் உள்ளும் புறத்தும் இருப்பவனே, கூனியும், சிறிய தாயும் செய்த கொடுமையால் செங்கோல் துறந்து, காடு, கடல் கடந்து இமையோர் இடுக்கணைத் தீர்த்த மன்னனாவான்.]*

## முரணுடைச் சொல்

கடவுள் என்ற சொல்லே முரண்பட்ட இரு சொற்களால் ஆயது—கடந்து நிற்றல் என்றபிறகு, உள்ளே இருப்பது என்று கூறுவது, மனத்தில் வாங்கிக் கொள்ள முடியாத கருத்தாகும். நம்முள்ளேயும், கடந்தும் நிற்கும் காற்று முதலியவற்றை நினைவில் கொண்டால் ஒருவாறு புரிய முடியும். அனைத்தையுங் கடந்து நிற்பது மட்டும் இதனுடைய இலக்கணம் அன்று. கடந்து நிற்கும் அதேநேரத்தில், உள்ளும் இருப்பது அதுவே. வேறு வகையாகக் கூற வேண்டுமாயின், இந்தப் பொருளைப் பொறுத்தமட்டில் கடந்தது என்பதும், உள்ளிருப்பது என்பதும் பொருளற்ற சொற்களாகும். அளவும் வடிவும் உடைய ஒன்றுதான், கடத்தலும் இருத்தலும் ஆகிய வினைக்குக் கர்த்தாவாக இருக்க முடியும். அளவு, வடிவு இல்லாத ஒன்று, உள்ளும், வெளியும், எக்கடி எங்கும் நீக்கம் அற நிறைந்து, போக்குவரவு இல்லாமல் இருக்கிறதோ, அதேபோன்றது இப்பொருள் என்று கொள்ள வேண்டும். இடம்பெயர்ந்து செல்லாத சூரியனைக் கிழக்கே தோன்றி, மேற்கே மறைந்தான் என்று கூறும் மரபுபோலத்தான், வான் நின்று இழிந்தான் என்று கூறுவது. அவன் ஓரிடத்தில் இருந்து பிறிதோர் இடத்தில் இல்லாமல் போனால்தானே, அங்கிருந்து இங்கு வந்தான் என்று கூறுவது பொருந்தும். வருதல், போதல், செய்தல் என்ற தொழில்களைச் செய்யும்

வினைமுதல் எங்கும், எப்பொழுதும் ஓயாது தொழிற்பட்டுக் கொண்டே இருக்குமானால், வந்தது, போயிற்று, செய்தது என்ற சொற்களுக்குப் பொருள் இல்லை. 'வந்தாய் போலே வாராதாய், வாராதாய் போல் வருவானே' (நாலாயிரம்—2741) என்று ஆழ்வார் குறிப்பது இதுபோன்ற ஒரு நிலையையே யாகும்.

## எளிவந்தது

ஊன், உயிர், உணர்வு என்பவற்றை நாம் அறிவோம். உடம்பு கட்புலனாவது; உயிர் இருப்பதை அறியலாம்; உணர்வு என்பது 'நான்' என்ற தற்போதத்தை உண்டாக்குவது. ஊனில் (உடம்பில்), உயிர், உணர்வு என்பவை எங்கே உள்ளன என்று கூறல் இயலாது. அகத்தும் புறத்தும் இவை மூன்றும் நிறைந்து நிற்றல் போல், அவனும் பூதங்களின் பரிணாமமான பொருள்களில் உள்ளான்.

இறப்ப உயர்ந்ததாய இப்பொருள், உயிர்களின் துயர் துடைக்கவே இழிந்தது; கொடுமையை ஏற்றுக்கொண்டது; கோல் துறந்தது; கானும் கடலும் கடந்தது. ஏன்? பிறர் துயர் துடைக்கவே அன்றோ! எனவே இப்பொருள், உயிர்கள் மாட்டுக் கொண்டுள்ள அருளின் ஆழத்தை அறிய முடிகிறது. பரம்பொருள்கூட இழிந்து இடர்தீர்க்க வரும்பொழுது பிறர் செய்யும் கொடுமையைத் தான் தாங்கிக்கொள்ள நேரிட்டது என்றால், நம்மைப் போன்றோர் பிறர்க்கு உபகாரம் செய்ய முற்பட்டால், பல துன்பங்களையும் ஏற்றுத்தான் செயல்பட வேண்டிவரும் என்ற அறவுரை குறிப்பெச்சம் (Sauggestion).

## பூதங்களில் உறைபவன்

ஐம்பெரும் பூதம் எனும் எல்லாப் பொருள்களிலும், உயிர்களிலும், உள்ளும் புறமுமாய்க் கலந்து நிற்கின்றான் எனில், ஒரு வினாத் தோன்றும். இப்பொருள்கள் தத்தம் இயல்பில் மாறுபட்டவை. ஒன்று சூடு; மற்றொன்று அதன்

எதிராகக் குளிர்ச்சியுடையது. ஒன்று திண்மையான பருப்பொருள்; மற்றொன்று மென்மையான நீர்ப்பொருள்; பிறிதொன்று நுண்மையான வாயுப்பொருள். ஒன்றுக் கொன்று முற்றிலும் முரண்பட்டு நிற்கும் இப் பொருள் களினுள்ளும், புறத்தும், ஒருவன் நின்றான் என்றால், அவனும் இந்த மாறுபாடுகளுக்கு உள்ளாகிவிடுவானோ என்ற ஐயம் நியாயமானதே! அந்த ஐயத்தைப் போக்கு கிறான், **ஆரண்ய காண்டம், கடவுள் வாழ்த்துப் பாடலில்,**

பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா
ஆதிநாதர்; அவர்நம் அறிவினுக்கு அறிவு அரோ!

[நிமிர்பேத உருவம் - மேலும் மேலும் வளர்கின்றதும், ஒன்றுக்கொன்று மாறுபட்டதுமான உடம்புகள்; பேதியாது தான்மட்டும் வேறுபடாமல் -இருந்துகொண்டே; பிறழ்கிலா - ஊடுருவி வேறுபடாமல் நிற்பவரே; ஆதிநாதர் - மூலப் பரம்பொருள்; அவர்...அரோ - அவரே நம் அறிவினால் ஆராய்ந்து காணவேண்டிய அறிவு வடிவானவர்.]

மாறுபட்ட உடம்புகள் தோறும், அம் மாறுபாட்டுக்கு ஏற்பத் தவறாமல் அவற்றுள் உறைபவன்; ஆனாலும், அவன் மட்டும் மாறுபடாதவன் என்ற இக்கருத்தைத் திருவாசகமும்,

பூதங்கள் தோறும் நின்றாய் எனில் அல்லால்
போக்கிலன், வரவுஇலன், எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டு அறியோம் உனைக்கண்டு அறிவாரை

(திருப்பள்ளி எழுச்சி — 5)

என்று பேசிச் செல்கிறது.

## அனைத்துமாய் இருப்பது இதுவே

இவை அனைத்தாலும், கம்பன் ஒரு கருத்தை வலியுறுத்த விரும்புகிறான். பரம்பொருள் என்பது வாக்கு, மன, லயம் கடந்ததாயினும் எங்கோ உள்ளது என்று

*நினைப்பது தவறு; அது எங்கும், எப்பொழுதும், நீக்கம் அற நிறைந்து நிற்பது என்பதைத்தான் கூற வருகிறான். இதே கருத்தைப் பிரகலாதன் கூற்றாகப் பின்னரும் பேசுகிறான்:*

உலகு தந்தானும், பல்வேறு
  உயிர்கள் தந்தானும் உள் உற்று
உலைவு இலா உயிர்கள் தோறும்
  அங்கு அங்கே உறைகின்றானும்
மலரினில் வெறியும், எள்ளில் எண்ணெயும்...

*(இரணியன் வதைப்படலம் — 120)*

என்கணால் காண்டற்கு எங்கணும் உளன்காண்
...................................................................
நின் கணால் நோக்கிக் காண்டற்கு எளியனோ?

*(இரணியன் வதைப்படலம் — 121)*

தோன்றலும் இடையும் ஈறும்
தொடங்கிய பொருள்கட்கு எல்லாம்
சான்று அவன்.............................. (" – 122)

*[உலகைப் படைத்தவனும் (பருப்பொருள்கட்குக் குறியீடு), உயிர்களைப் படைத்தவனும் (நுண்பொருள் கட்குக் குறியீடு), என்றும் உள்ளதாகிய உயிர்கள்தோறும் உயிருக்குயிராய் உள்ளே உறைபவனும் ஆன அவன், மலருள் வாசனையும், எள்ளுள் எண்ணெயும் போல உள்ளான். என்னால் அவனைக் காண முடியும் - உன்னால் காண முடியாது.*

*உலகிலுள்ள பொருள்கட்கு எல்லாம் தோற்றம், வாழ்வு, முடிவு என்பன உண்டு! இவை நடைபெற அவற்றுக்கெல்லாம் சான்றாக நிற்பவன்.]*

*மலரில் மணம் மலர்ந்து வெளிப்படுமுன் எங்கே இருந்தது? அதே போலத்தான், இப்பொருள்களின் உட்கலந்தே இறைவன் இருக்கிறான். பிரகலாதன், "நான்*

*என் கண்ணால் அவனைக் காண முடிகிறது; கற் வல்லவனாகிய நீ உன் கண்ணால் பார்க்க முடியாது என்று கூறுவது மிகமிக ஆழமான பொருளை உடையது புலனடக்கத்தில் தொடங்கி, அகங்கார, மமகாரங்களை முற்றிலும் சுட்டெரித்த பிறகுதான், அருள் நோக்கம் கிட்டு அந்த நிலையை அடைந்துவிட்டவன் பிரகலாதன், எனவே அவன் 'நான் அவனைக் காணுகிறேன்' என்று உறுதியாக கூறுகிறான். 'கண்ணால் யானும் கண்டேன் காண் (அண்டப் பகுதி-58) என்றும், 'கழல் இணைகள் கண்டே கண்கள் களிகூற' (குழைத்த பத்து-9) என்றும் மாணிக்கவாசக திருவாசகத்தில் கூறுகிறார். இங்ஙனம் கண்டுவிட்ட பிற*

சாணினும் உளன்; ஓர் தன்மை
  அணுவினைச் சதகூறு இட்ட
கோணினும் உளன்; மாமேருக்
  குன்றினும் உளன்; இந்நின்ற
தூணினும் உளன்; நீ சொன்ன
  சொல்லினும் உளன்.

*(இரணியன் வதைப்படலம்—1*

*என்று அடித்துக் கூறும் உறுதி பிறக்கின்றது.*

*இனி, இறை இலக்கணத்தைத் தத்துவ வழியாய் பேசத் தொடங்குகிறான் பிரகலாதன்:*

தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை
தன்னுளே நின்று, தான் அவற்றுள் தங்குவான்;
பின்இலன், முன்இலன், ஒருவன் பேர்கிலன்;

மூவகை உலகம் ஆய், குணங்கள் மூன்றும் ஆய்
யாவையும் எவரும் ஆய், எண்கில் வேறுபட்டு
ஒவல் இல் ஒரு நிலை ஒருவன்............

காலமும் கருவியும் இடனும் ஆய், கடைப்
பால் அமை பயனுமாய், பயன் துய்ப்பானும் ஆய்

சீலமும், அவைதரும் திருவும் ஆய், உளன்
ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்

(" 59,63.74)

*[எல்லா உலகங்களையும் தன்னுள்ளிருந்தே படைத்து அவற்றினுள் வாழும் உயிர்களாய்ப் பல வடிவெடுத்து நிற்பதுடன், அவற்றினுள் எள்ளில் எண்ணெய் போல் தங்குபவன், முன்னும் பின்னும் இல்லாதவன், இத்தனை செய்தும் தன் நிலை மாறுபடாதவன் ஆகிய, அப் பரம் பொருளின் பழைய நிலை இது என்று ஒருவரால் துணிந்து சொல்லக் கூடியதோ?*

*மேல், நடு, கீழ் எனும் மூவகைப்பட்ட உலகங்களின் வடிவாகியும், சத்துவம், ராஜசம், தாமசம் எனும் முக்குணங்களாகியும், அஃறிணை (யாவை) உயர்திணை (எவருமாய்) என்ற இரண்டாகியும், எண்ணிக்கை கடந்த பல்வேறு வேறுபாடுகளை அடைந்தும், நீங்குதல் இல்லாத தனித்த நிலைமை உடையவன்.*

*பெரிய ஆலமரமும், அதன் தன்மை முழுவதையும் தன்னுள் அடக்கிய விதையும் போன்று வெளிப்பட்ட நிலை, அடங்கிய சூக்கும நிலை, இரண்டையும் உடைய பரம்பொருள், ஒரு தொழில் நடைபெறுகின்ற காலம், செய்வதற்குரிய கருவி, அதனால் பயன்விளையும் அப்பயனை அனுபவிக்கும் உயிர், நற்பண்புகள், அவற்றால் விளையும் பயன் என்று அனைத்துமாய் உள்ளான்.]*

*இம்மூன்று பாடல்களையும் ஊன்றிப் பார்த்தால், கவிஞன் கடவுட் கொள்கை ஓரளவு விளங்கும். இவற்றின் படி, பரம்பொருளே அனைத்துமாய் இருக்கும் நிலை விளக்கப்படுகிறது. இத்தனை படைப்பு, காப்பு, அழிப்பு ஆகிய அனைத்தையும் அவன் பகுதியாக உள்ள பிரபஞ்சத்தை ஒட்டிச் செய்கிறான். படைப்பவனும், படைக்கப்படு பொருளுமாய் உள்ளவனும் அவனே!*

தலைவனாக இருந்து உயிர்கட்கு அனுபவப்பொருளை வழங்குகிறான். உயிர்களாக இருந்து அவற்றை அனுபவிப்பவனும் அவனே! காலத் தத்துவமாக இருப்பவன் அவனே! அத்தத்துவத்தில் விளைந்து மறையும் பிரபஞ்சமாக இருப்பவனும் அவனே! மேலே மூன்றாவது பாடலில் கவிஞன் கூறிய கருத்தைத் திருவாசகம் "ஞாலமே! விசும்பே! இவை வந்துபோம் காலமே! உனை என்று கொல் காண்பதே?" (சதகம்—43) என்று கூறுகிறது.

## இரட்டைகள் அவனே!

இந்த விளக்கத்தினால் ஒரு வினா பிறப்பது நியாயமே. அனைத்தையும் படைத்தவன் அவனே என்றால், அவன் படைத்த பிரபஞ்சத்தில் எத்தனை இன்னல்கள்! எத்தனை கொடுமைகள்! இவையெல்லாம் யாருடைய படைப்பு? படைத்தவனையே இல்லையென்று கூறும் இரணியன் போன்றோரின் ஆணவம் யாருடைய படைப்பு? பிற நாடுகளில் தோன்றிய சமயங்கள் குற்றம், கொடுமை, தீமை என்பன இறைவனால் படைக்கப்பட்டவை என்று கூறினால், அவனுடைய கருணைத் திறம் கெட்டுவிடும் என்று அஞ்சித் தீமை என்பது இறைவனுக்கு அப்பாற்பட்டு இயங்குவது என்று கூறலாயின. ஆனால், இத்தமிழ் நாட்டார் அனைத்தும் இறைவனே என்று கூறிவிட்டமையின், நன்மை—தீமை; உறவு—பகை; ஒளி—இருள், என்ற அனைத்தும் அவனே எனக் கூறினர். வாலியின் கூற்றாக இக்கருத்தைக் கம்பநாடன் பேசுகிறான்.

**மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ**
**பாவம் நீ! தருமம் நீ! பகை நீ; உறவும் நீ**

*(வாலி வதைப்படலம்—129)*

**தேறும் வகை நீ! திகைப்பும் நீ**
**தீமை நன்மை முழுதும் நீ**

*(திருவாசகம்—குழைத்த பத்து—5)*

இதே கருத்தைத் திருஞானசம்பந்தர்,

குற்றம் நீ! குணங்கள் நீ! கூடல் ஆல வாயினாய்!

*(திருமுறை 3—52—3)*

என்று பாடுகிறார். குற்றம்—குணம், பகை—நட்பு என்ற முரண்பட்டவை (இரட்டைகள்) அனைத்தும் அவனே என்று கூறிவிட்டமையின், இராவணனையும், இரணியனையும் மறக்கருணை காட்டித் தண்டித்துத் தன்னிடம் சேர்த்துக் கொள்கிறான் இறைவன்.

## இராமன் மூவரும் அல்லன்

இறைத்தத்துவம் பற்றி இன்னுஞ் சில நுண்மையான கருத்துக்களையும் பேச விழையும் கம்பன், அதற்கென்று ஒரு களம் அமைத்துக் கொள்கிறான். பிராட்டியைத் தேடிச் சென்ற அனுமன், இந்திரசித்தனால் பிடிபட்டு, இராவணன் எதிரே செல்ல வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. தன் எதிரில் இருக்கும் அனுமனை நோக்கி இராவணன், 'நீ யார்? இங்கு வந்த காரணம் என்ன?' (பிணிவீட்டு படலம்—73) என்று வினவுகிறான். அத்துடன் நிறுத்தாமல், இராவணன் தன் கல்வி அறிவைப் பயன் படுத்தி ஒன்று கூறுகிறான். தன் வரபலமும் இலங்கையின் காப்பும் நன்கு அறிந்த இராவணன்,

நேமியோ? குலிசியோ? நெடுங் கணிச்சியோ
தாமரைக் கிழவனோ? தறுகண் பல்தலைப்
பூமி தாங்கு ஒருவனோ?.........................

*(பிணிவீட்டு படலம்—70)*

[நேமி—சக்கரப்படையுடைய திருமால்; குலிசி—வச்சிராயுதமுடைய இந்திரன்; கணிச்சி—மழுப்படை தாங்கும் சிவன்; தாமரைக் கிழவன்—நான்முகன்; பூமி தாங்கு ஒருவன்—ஆதிசேடன்.]

என்று கேட்கிறான். அவன் கருத்துப்படி, இலங்கையில் தன் அனுமதி இன்றி நுழையக் கூடியவர்கள் இவர்களே! எனவே, 'நீ யார்' என்ற வினா நியாயமானதே!

இந்த வினாக்களைக் கேட்ட அனுமன்,

சொல்லிய அனைவரும் அல்லேன்; சொன்ன அப்
புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்............ ( "—74)

[நீ கூறிய பட்டியலில் உள்ள யாரும் அல்லன் நான். அந்த அற்பமான சக்தியுடையவர்கள் மாட்டு ஏவல் செய்யவும் இல்லை என்றான்.]

இவ்வாறு கூறிய அனுமன், 'செங்கண் ஓர் வில்லிதன் தூதன் யான்' (74) என்று தொடங்கி, அவன் யார் என்று இராவணன் வினா எழுப்பவிடாமல், இவனே விடை கூற) முற்படுகிறான்:

தேவரும் பிறரும் அல்லன்;
திசைக்களிறு அல்லன்; திக்கின்
காவலர் அல்லன்; ஈசன்
கைலைஅம் கிரியும் அல்லன்
மூவரும் அல்லன்; மற்றை
முனிவரும் அல்லன்............... ( "—77)

[திசைக் களிறு—பூமியைத் தாங்கும் எட்டு யானைகள்; திக்கின் காவலர்—எட்டுத் திக்குப் பாலகர்கள்; ஈசன்—சிவன்; மூவர்—மும்மூர்த்திகள்.]

## வேதம் 'நேதி' என்றது ஏன்?

இதுவரைக் காட்டிய பல்வேறு பாடல்களிலிருந்து மும்மூர்த்திகளுள் ஒருவராய திருமாலை, இராமனாக வந்தவன் அல்லன் என்று கம்பன் திட்டவட்டமாகக் கூறுதலை அறிய முடியும். பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் என்ற மூவரும் தேவருள் முதல் தேவராவரே அன்றி, மூலப்

பரம்பொருள் அல்லர் என்பதைத்தான் கவிஞன் அடிக்கடி நினைவூட்டுகிறான். ஆனால், இப்பாடலில் இவன் அல்லன்; அவன் அல்லன் என்று எதிர்மறை முகத்தால் மட்டுங்கூறுவது சிறப்புடையதன்று; உடன்பாட்டு முகமாக ஒன்றை நிறுவ வேண்டும். சொல்லும் கற்பனையும் கடந்து நிற்கும் பொருளை எவ்வாறு சொற்களால் உடன்பாட்டு முறையில் விளக்க முடியும்? மூலப் பரம்பொருள் இதுவா? இதுவா? ஆம்! இதுவும் இதுவும், எல்லாம் அதுவே என்ற கூறிவிடலாம். இதன் எதிராக வினாவைச் சற்று மாற்றி இது பரம்பொருளா? என்றால் என்ன விடை கூறுவது? இந்த வினா ஆபத்தான வினாவாகும். 'ஆம்' என்று விடை கூறினால் பெருந்தவறு நேர்ந்துவிடும். இது பரம்பொருளா? என்ற வினாவிற்கு 'ஆம்' என்று கூறினால் இது தவிரப் பிறவெல்லாம் பரம் பொருள் அல்ல என்றாகி விடுமே! இது கருதியே வேதம் 'நேதி' (இதுவல்ல) என்றே விடைகூறிச் சென்றது. வேதமே உடன்பாட்டு முறையால் அதனை விளக்க முடியாமல் 'நேதி' என்ற சொல்லால் கூறப் புகுந்தது என்றால், ஏனையோர் என்ன செய்ய முடியும்?

## உடன்பாட்டு முகத்தால் கூற முடியுமா?

கம்பநாடன் உடன்பாட்டு முகத்தால் அதனை விளக்க முடியுமா என்ற முயற்சியில் ஈடுபடுகிறான். இதில் ஒரு வேடிக்கையும் செய்கின்றான். இராவணன், சிவன் முதல், தேவர்கள், திசைக்களிறுகள், மும்மூர்த்திகள் ஆகிய அனைவரையும் நேரே கண்டுள்ளான். அவர்கள் அனைவருடனும் போரிட்டோ, பகைத்தோ வாழ்ந்துள்ளான். ஆனால் தசரதன் மகனாம் தாசரதியை மட்டும் தான் அவன் கண்டதில்லை. இராவணன் மட்டுமே கண்டிருப்பவர்கள் மேலே கூறிய கூட்டத்தார். ஏனையோர் யாரும் இவர்களை நேரே காணும் சக்தி இல்லாதவர்கள். பிறர் யாருங் கண்டிராத மும்மூர்த்திகள் முதலாயினோரை

இராவணன் கண்டுள்ளான். உலகத்தில் அவன் காலத்தில் வாழ்ந்தவர்கள் அனைவரும் கண்டிருக்கும் இராமனை மட்டுமே அவன் கண்டதில்லை. எனவே, அனுமன், இராவணன் கண்டிருக்கக் கூடிய தேவர், திசைக்களிறு, திக்பாலகர்கள், சிவன், மும்மூர்த்திகள் ஆகிய யாரும் அல்லன் என்று கூறிவிட்டு,

எல்லைப் பூவலயத்தை ஆண்ட
புரவலன் புதல்வன் போலாம்

*(பிணி வீட்டு படலம்—77)*

என்று கூறி மேலே செல்கிறான்.

இதற்குமேல், ஆயிரமறைப் பொருள் உணர்ந்து அறிவு அமைந்தவனாய, இராவணன், புரிந்துகொள்ளும் முறையில், இறை இலக்கணத்தை உடன்பாட்டு முகத்தால் விளக்க முற்படுகிறான் அனுமன்.

போதமும், பொருந்து கேள்விப்
புரையறு பயனும், பொய்தீர்
மாதவம் சார்ந்த தீரா
வரங்களும், மற்றும், முற்றும்
யாது அவன் நினைந்தான்,
அன்ன பயத்தன, ஏது வேண்டின்
வேதமும் அறனும் சொல்லும்;
மெய் அறமூர்த்தி, வில்லோன் *( "—78)*

[ஞான விசாரணை, பொருத்தமான கேள்வி ஞானம், உண்மையான தவத்தின் விளைவு ஆகியவற்றின் பயன் என்பவை உண்டல்லவா; அப்பயன் யாதாக இருக்கும் என்று நினைக்க வேண்டா. மெய் அறத்தின் வடிவானவனும், இப்போதைக்கு வில்லைத் தாங்கி வந்தவனும், ஆகிய இவன். என்ன நினைக்கின்றானோ, அதுவேதான் பயனாக விளையும். இதற்குச் சான்று வேண்டும் என்று கேட்கிறாயா? நீ கற்ற வேதமும், நீ மறந்துவிட்ட அறனுமே சான்று.]

உலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் ஞான விசாரணை, கேள்வி ஞானம், மாதவம் என்பவற்றை ஏன் மேற்கொள்கின்றன? அவற்றின் முடிவில் சத்திய, நித்தியப் பொருளைக் காணவேண்டும் என்ற பயன் கருதித்தானே இவை மேற்கொள்ளப்படுகின்றன? எனவே ஞானம், கேள்வி, தவம் என்பவற்றின் முடிவான பயன் சத்ய தரிசனந்தான். அந்தத் தரிசனம் கைகூடுவதும், கூடாமற் போவதும், மெய் அறமூர்த்தி ஆகிய பரம்பொருளைப் பொறுத்ததாகும். அவன் என்ன என்ன நினைக்கிறானோ அதே பயனை அவை பெறும். எனவே, பரஞானத்தின் பயனாகவும், கேள்வி ஞானத்தின் பயனாகவும், தவத்தின் பயனாகவும் உள்ளான் ஒருவன் என்று கூறுவதன் மூலம், அவனே பரம்பொருள் என்பதை நிலைநாட்டுகிறான் கவிஞன். இவ்வாறு அவன் கூறும் இடங்களில் எல்லாம் மும்மூர்த்திகளின் வேறுபட்டவனாகவே அம் மூலப்பொருளைக் குறிப்பிடுகிறான். இதற்குத் தக்க காரணமும் உண்டு. மேலே கூறிய இறை இலக்கணத்தை ஓரளவு அறிந்துகொண்ட பிறகு, படைத்தலை மட்டும் செய்பவனையோ, காத்தலை மட்டுஞ் செய்பவனையோ, அழித்தலை மட்டுஞ் செய்பவனையோ எவ்வாறு மூலம் என்று கூற முடியும்? எனவே சைவ, வைணவப் போராட்டத்தைக் கடந்தவனாகவே கவிஞன் காட்சி நல்குகிறான்.

ஒரு சில இடங்களில் திருமால் செய்த செயல்களை, இராமன் அவதாரத்திற்கு முற்பட்ட நிலையில் செய்ததாகவும் கூறுகிறான். சைவர்களைப் பொறுத்த மட்டில் ருத்திரன், சதாசிவன், மகேஸ்வரன், என்றெல்லாம், செய்யுஞ் செயல் குறித்துப் பெயரிட்டதுபோல், வைணவர்கள் வெவ்வேறு பெயர்களை இடாமல், எல்லாவற்றையும் நாராயணன் என்றே கூறிவிட்டமையின், மும்மூர்த்திகளில் ஒருவராக உள்ள திருமால் என்ற பெயரையே கடந்து நிற்கும் பொருளுக்கும் பெயராகக் கவிஞன் பயன்படுத்துகிறான்

*என்றே நினைய வேண்டியுளது. மேலே குறிக்கப்பட்ட பாடலை அடுத்து வரும் பாடலில், கஜேந்திர மோட்சம் பற்றி அனுமன் பேசுகிறான்.*

காரணம் கேட்டி ஆயின்,
   கடைஇலா மறையின் கண்ணும்
ஆரணம் காட்ட மாட்டா,
   அறிவினுக்கு அறிவும் அன்னோன்
போர் அணங்கு இடங்கர் கவ்வ,
   பொதுநின்று 'முதலே' என்ற
வாரணம் காக்க வந்தான்
   அமரரைக் காக்க வந்தான்.

*(பிணி வீட்டு படலம்—78)*

*[என்ன காரணம் என்று கேட்பாயாகில், முடிவில்லாத வேதமும், உபநிடதங்களும் சுட்டிக்காட்ட முடியாதவனாய், எது என்று ஆய்ந்து சொல்லும் அறிவைக் கொண்டு செலுத்தும் அறிவாகவும் உள்ளவன் அவன். போரிடவல்ல முதலை, காலைக் கவ்வியவுடன், இன்னான் என்று பெயரிட்டுக் கூறாமல் அனைத்துப் பொருளுக்கும் மூலகாரணமாக உள்ள முதற்பொருளை 'முதலே' என்று அந்த யானை அழைக்கவும், அதனைக் காக்க அன்று வந்தவன் இன்று அமரரைக் காக்க வந்தான்.]*

*இப்பாடலில் கம்பன் தன் கருத்தை நுண்மையாகப் பெய்கின்றான். இப்பாடல் அனுமனால், இராவணன் முன்னிலையில் கூறப்பெற்ற ஒன்றாகும். இதே அனுமன் சில பாடல்களின் முன்னர் (74ஆம் பாடலில்) மும்மூர்த்திகளையும், 'புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்' என்று பேசுகிறான். அங்ஙனம் கூறிய அதே அனுமன், சில பாடல்களின் பின்னர் 'திருமாலே' என்று யானை அழைத்தது என்று கூறுவதில் உள்ள இடர்ப்பாட்டை நன்கு அறியலாம். எனவேதான் 'பொது நின்று' என்ற*

சொல்லைக் கம்பன் காரணத்துடன் பெய்கிறான். அடுத்து 'முதலே' என்று அழைத்தது என்றும் கூறுகிறான்.

இனி அடுத்துவரும் பாடல், இந்த உலகம் உள்ள அளவு நின்று நிலைபெற்றுக் கம்பனுக்குப் பெருமை சேர்க்கக்கூடிய பாடலாகும். 'ஒரு நாம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாத பரம்பொருளுக்கு ஆயிரம் திருநாமம்' (திருவாசகம்—தெள்ளேணம்—1) பாடியுள்ளனர் நம் முன்னோர் என்றாலும், எல்லை ஒன்றில்லாத அப் பொருளுக்குக் கம்பன் ஒரு பெயர் தருகிறான். அப் பெயரைக் காரணப் பெயராகவும் அமைக்கிறான்.

## பாரதியைக் கவர்ந்த பாடல்

இந்த ஒரே பாடலில், நம் காலத்தே வாழ்ந்த கவிச் சக்கரவர்த்தி பாரதி ஈடுபட்டதுபோல், கம்பன் இராமகாதையை இயற்றிய நாளிலிருந்து வேறு யாரும் ஈடுபட்டார்களா என்பது ஐயத்துக்குரியதே! இராம காதையை வான்மீகத்திலும் கற்றவன் பாரதி. எனவே கதையில் ஈடுபட்டான் என்று கூறுவது அத்துணைப் பொருத்தமாகப் படவில்லை. மேலும், கிருஷ்ணாவ தாரத்தில் பாரதி ஈடுபாடு கொண்டதுபோல இராமவ தாரத்தில் ஈடுபாடு கொண்டான் என்றும் கூற முடியாது என்றாலும், 'கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று போற்றக் காரணம் எதுவாக இருக்கும்? என்று சிந்திப்பதில் தவறு இல்லை. 'கம்பநாடன் கவிதையில் போல் கற்றோர்க்கு இதயம் களியாதே' என்று, பிற்காலக் கவிஞர் ஒருவர் பாடியது போலக் கவிதை அழகில் மற்றொரு கவிஞன் ஈடுபட்டான் என்று கூறலாம். ஆனால் அதுவன்று பாரதி ஈடுபட்ட பகுதி. இதனைப் பாரதியே மற்றோர் இடத்தில் கூறுகிறான். இத்தமிழர்களின் துரதிர்ஷ்டம் அந்தப் பாடல் முன்னும் பின்னும் அகப்படாமல் 'பெருங்கதை' கிடைத்தது போலக் கிடைத்துள்ளது என்றாலும், **கவி**

*அரசன் பாரதி* இத்தமிழ்ப் பண்பாட்டின் ஆணிவேரை உறுதியாகக் கண்டு கூறும் பகுதி நல்ல வேளையாக அழியாமல் கிடைத்துவிட்டது. **'தமிழ்ச் சாதி'** என்ற தலைப்பில் இக்காலத்தவர் இப்பாடலை வெளியிட்டுள்ளனர். 1937இல் 'இருதலைக் கொள்ளியின் இடையே' என்ற தலைப்பில், முதலும் கடையும் இல்லாமல், இது அச்சிடப் பெற்றுள்ளது.

சிலப்பதிகாரச் செய்யுளைக் கருதியும்,
திருக்குறள் உறுதியும் தெளிவும், பொருளின்
ஆழமும், விரிவும், அழகும் கருதியும்
எல்லை ஒன்று இன்மை எனும் பொருள் அதனை
கம்பன் குறிகளால் காட்டிட முயலும்,
முயற்சியைக் கருதியும், முன்பு நான் தமிழச்
சாதியை அமரத் தன்மை வாய்ந்தது என்று
உறுதிக் கொண்டிருந்தேன்! ஒரு பதினாயிரம்
சனிவாய்ப்பட்டும் தமிழச் சாதிதான்
உள் உடைவு இன்றி உழைத்திடு நெறிகளைக்
கண்டு எனது உள்ளம் கலங்கிடாது இருந்தேன்

*(தமிழச் சாதி—20—31)*

*சிலப்பதிகாரத்தின் உள்ளுறை பொருளைக் கவிஞன் நினைத்தான். திருக்குறள் மனிதனுக்குக் கூறும் அறிவுரைகளில் உள்ள உறுதி, தெளிவு, கூறும் கருத்துக்களில் ஆழம், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இயல்பு, கவிதை அழகு என்பவற்றை உளங்கொண்டான். எல்லையில்லா இயல்புடைய இறைப்பொருளைக் கம்பன் குறியீடுகளைப் பயன்படுத்தி விளக்க முயன்ற முயற்சியைக் கருதினான். இம்மூன்று நூல்களைப் படைக்கும் ஆற்றலுடைய ஒரு சமுதாயத்தை, அதன் பண்பாட்டை, யாரும் அழிக்க முடியாது. அது அமரத்துவம் வாய்ந்தது என்று இருந்தான். தமிழக வரலாற்றைப் படித்த அவன், பதினாயிரம் சனியன்கள் இத்தமிழச் சாதியை அதுவரை பிடித்தாலும்கூட, அந்த இனம், உள்ளம் உடைந்து,*

விடாமல், மேலும் மேலும் உழைத்து, முன்னேறும் இயல்பைக் கண்டு மனங்கலங்காமல் இருந்தானாம்.

## சிலம்பை ஏன் கூறினான்?

இந்த மூன்று நூல்களைக் கவிஞன் தேர்ந்தெடுக்கக் காரணம் யாதாக இருக்கும்? வெறும் கவிதை அழகில் ஏமாறும் தரமுடையவனல்லவன் இக்கவிஞன். எனவே, வேறு ஏதோ ஒரு காரணம் பற்றியே இம்மூன்றையும் அவன் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும் என்று கருதுவதில் தவறு இல்லை. முதலாவது பெண்களைப் பற்றி அவன் மிக உயர்ந்த எண்ணங் கொண்டிருந்தான். உலகம் இயங்கும் ஆற்றலுக்கு மூலகாரணமாக உள்ள ஆற்றலை, அவன் அன்னை பராசக்தி என்றே கருதினான். அடுத்துக் கொடுங்கோன்மையைச் சாட வேண்டும் என்று உறுதி பூண்டிருந்தான். இவை இரண்டையும் ஒரு சேர உரைப்பது சிலம்பு. முன்பின் தெரியாத ஊரில் ஒரே துணையாக இருந்த, கணவனையும் இழந்த, இளமங்கை ஒருத்தி, ஒற்றையாகவே சென்று ஒரு பெரிய அரசனிடம் வழக்காடி, அவன் கொடுங்கோன்மையை அறிவுறுத்தினாள் என்றால், சிலம்பில் கவிஞன் ஈடுபட்டதில் புதுமை இல்லை.

## திருக்குறள் ஏன் எடுத்தான்?

அறத்தைப் பற்றியே மானிட வாழ்வு நடைபெற வேண்டும் என்ற உறுதிகொண்டவன் கவிஞன். மனிதனின் நிற, இன, வேற்றுமைகள் எவ்வாறு இருப்பினும், அறம் மானிட சாதி முழுவதுக்கும் பொது என்பதை நம்பினவன் கவிஞன். எனவே, தமிழ் இனத்துக்கு மட்டும் அல்லாமல், உலகம் முழுவதற்கும் நீதி கூறிய பெருமை குறளுக்கு உண்டு. அதனால்தான், 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று பாடினான். பெரும்பான்மையான நீதிநூல்கள், தாம் தோன்றிய

சமுதாயத்துக்கு மட்டுமே பயன்படும் முறையில் தோன்றின. மேலும் பல நீதிநூல்கள் காலத்தைக் கடந்து நிற்கும் ஆற்றல் பெறவில்லை. ஆனால், திருக்குறள் காலங்கடந்து நிற்கும் பேராற்றல் படைத்தது. தோன்றிய காலத்தில் எவ்வாறு முற்றிலும் பயன்பட்டதோ அவ்வாறே இன்றும், முழுவதும் பயன்படும் நிலையில் உள்ள ஒப்பற்ற நீதி நூல். எனவே அதன் அழுத்தம், ஆழம், விரிவு முதலியவற்றைப் பற்றிக் கூறினான்.

## கம்பனைக் கூற காரணம்

இவை இரண்டு நூல்களும் தோன்றிய சமுதாயம் ஒப்பு உயர்வு, அற்ற பெருமை உடையதாய் இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயம் இல்லை. ஆனாலும், அந்தச் சமுதாயம் முழுத்தன்மை பெற்றதாக இருக்க முடியாது. பகுத்தறிவு படைத்த மனிதன் 'தான் யார்? ஏன் இந்த உலகிடைத் தோன்றினோம்? இவ்வாழ்வின் குறிக்கோள் என்ன? இந்த அண்ட பேரண்டங்களும், ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டு நடைபெறுகிறது என்றால் இதன் மூலகாரணம் யாதாக இருக்க முடியும்?' என்பவை முதலான ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கடவுட் பொருளை ஓரளவு அறிந்து, பேரளவு உணர்ந்து, வாழ்க்கையை நடத்தினால்தான் அது முழுவாழ்வு என்று கருதப்படும். எனவேதான் கம்பன் எல்லையில்லாத பொருளைக் குறிகளால் காட்டிட முயன்றதை இக்கவிஞன் ஆராய்கிறான்.

உலகம் முழுவதும் ஏற்றுக்கொள்ளக் கூடிய அறம், நீதி கூறுவது குறள். இந்த அறவாழ்வை மேற்கொண்டு வாழ்ந்து, அச்சம் என்பதை அறவே விட்டொழித்து, நாட்டைத் திருத்த முயன்ற பெண் வரலாறு கூறுவது சிலம்பு. பெண்ணாகப் பிறந்து ஒரே பிறப்பில் தெய்வத் தன்மையை அடைந்தாள் ஒருத்தி. இனி இவை இரண்டும் உள்ள இடத்தில் தான் இறைப் பொருள் பற்றிய உணர்வும்,

அறிவும் ஏற்படும். எனவே அந்த இறைப்பொருள் பற்றிக் குறியீடுகளால் பேசியவன் கம்பன். இம்மூவரையையும் பற்றிப் பாரதி கூற, இவையே காரணங்களாகும் என்று நினைய வேண்டி உள்ளது.

இறைப்பொருளைச் சொற்களால் கூற முடிந்துவிட்டால் அது கடவுளாகாது. வாக்கு, மனம், கடந்த அதை யாரும் முற்றிலுங் கூறிவிட முடியாது. எனவேதான் கவிஞன் **காட்டிட முயலும் முயற்சி** என்று பேசுகிறான்.

கவியரசன், பாரதி, தான் ஈடுபட்ட மூன்று நூல்களையும் குறிப்பிட்டு, இத்தகைய நூல் செய்யும் திறனுடைய சமுதாயத்தை யாரும் எக்காலத்தும் அழிக்க முடியாது என்று தான் நம்பி இருந்ததாகப் பேசுகிறான். தமிழக வரலாற்றை நன்கு அறிந்திருந்த கவிஞன் "பதினாயிரம் சனியன்கள் பிடித்தாலும் கவலை இல்லை! இத்தமிழச் சாதி உள்ளந் தளராமல் இருந்து வந்துள்ளது என்று நினைத்து மகிழ்ந்திருந்தேன். ஆனால் இன்றைய நிலையைக் காணும்போது இத்தமிழச் சாதி என்ன ஆகுமோ என்று ஐயுறுகின்றேன்" என்று பாடும் பகுதி அது. அதில் இளங்கோ கவிதை என்று வாளா கூறிவிட்டுத் திருக்குறளைக் குறிப்பிடும்போது அதன் உறுதி, தெளிவு, பொருள் ஆழம் என்ற மூன்றையுங் குறிப்பிடுகிறான். அடுத்துக் கம்பனைக் குறிப்பிட வருகையில் எல்லையில்லாத பரம்பொருளை எவ்வாறு எடுத்து விளக்க முடியும்? என்றாலும், இன்றுவரை கவிஞர்கள் அப்பொருளை எவ்வாறாவது சொல் கொண்டு விளக்க வேண்டும் என்ற முயற்சிக்கு அளவே இல்லை. எண்களை நேரே எழுதி உயர் கணிதம் போட இயலாமையினால் குறியீடுகளைப் (Symbols) பயன்படுத்துகின்றனர் அல்லவா? அக்கணித நூலாரும் எல்லையில்லாத ஒன்றை (infinity) எவ்வாறு குறிக்கின்றனர்? மாட்டுக் கொம்புகள்

இரண்டைப் படுக்கப் போட்டது போல ஒரு குறியீட்டை (அடையாளம்—Symbol) எழுதி, அது எண்ணிலி அல்லது எல்லை இன்மையைக் குறிப்பதாகக் கணித நூலார் ஏற்றுக் கொள்கிறார்கள் அல்லவா?

## அவனே முதற் காரணன்!

அதேபோல, எல்லையில்லாத பரம்பொருளையும், அதன், செயல்களையும், அதற்கும் நமக்கும் இடையே உள்ள தொடர்பையும் எவ்வாறு குறிப்பது? சில குறியீடுகளை வைத்துக்கொண்டு எல்லையற்ற பொருளைப் பற்றிக் கூற முற்படுகிறான், கம்பன் என்று கண்டான் பாரதி. இராமகாதையில் வரும் பாத்திரங்கள் அனைத்தும் இறைப் பொருளின் குறியீடுகள் என்று காணுகின்றான் பாரதி. இராமன் அனைத்துமாக, எங்கும் நிறைந்தவனாக, என்றும் உள்ளவனாக, அனைத்திற்கும் காரணனாக இருக்கும் பரம்பொருளின் குறியீடு என்றால், இராவணன் யார்? அனைத்திலும் இருக்கும் பரம்பொருள் அவனிடம் இல்லையா? இல்லை என்று கூறுவது பரம்பொருளுக்கே இழுக்காகும். எங்கும் நிறைந்த பொருள் எப்படி தனி ஒருவனிடம் இல்லாமல் போய்விடும்? அன்றியும் அவன்தானே 'இவனேதான் அவ்வேத முதற் காரணன்?' என்று பேசுகிறான்? எனவே அவனிடமும் பரம்பொருள் இருக்கத்தான் செய்கிறான். ஆனால் இராவணனிடம் நிறைந்திருந்த அகங்காரம் என்னும் களிம்பு, அவனுள் இருக்கும் பரம்பொருளை அவனும் அறியாமல் செய்து விட்டது. இந்த அகங்காரந்தான் இராமனை இன்னான் என்று அறிந்துங் கூட, அவனிடம் பணிய மறுத்துவிட்டது. 'யாரேனும்தான் ஆகுக! யான் என் தனி ஆண்மை பேரேன்' என்று பேசுமாறு செய்கிறது. இராமன் முதல் இராவணன் வரை, குகன் முதல் வீடணன் வரை அனைவரிடத்தும் பரம்பொருள் நிறைந்துதான் உள்ளான். அவரவர்

*புலனடக்கம், அகங்கார மமகார மாய்வு என்பவற்றிற்கேற்ப உள்ளே இருப்பது வெளிப்படுகிறது. இத்தனை பாத்திரங்களும் குறியீடுகளாக நின்று, அந்த எல்லை இல்லாத பொருளின் பல்வேறு நிலைகளைக் காட்டுகின்றன. எல்லாவற்றிற்கும் அவன் முதற்காரணனாக உள்ளான். முதல் காரணம் என்பது அதுவே காரியமாக மாறுவது. துணைக் காரணம் என்பது முதல் காரணம் காரியமாக மாறும்வரை (மண்சட்டியாக மாறும் வரை) உதவியாக நிற்பது. 'குடத்திற்கு மண்தான் முதற்காரணம். தண்டம், சக்கரம் முதலியன துணைக்காரணம். இராவணன் 'இவன் வேத முதற்காரணன்' என்று சொல்வதன் பொருள் ஆழம், ஆய்ந்து அறிதற்குரியது. அதுவே அதுவாதல். மண்ணே சட்டியாக மாறுதல், முதுற்காரணம். எனவே, இராமன் பரம்பொருளே என்று பேசுகிறான். இவ்வளவு பெரிய காப்பியத்தின் உள்ளுறை பொருளாக அமைவது பரம்பொருளின் விளையாட்டே என்பதை உணர வைக்கிறான் கவிஞன். இக்கருத்தைச் சற்று விரிவாக நூலுள் பல இடங்களில் குறிப்பிட்டுக் காட்டுகிறான்.*

ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள் தொறும் உறைந்தால், அவை உன்னைப் பொறுக்குமோ?
*(விராதன் வதைப் படலம்—47)*

*[குளிர்ந்த கடலில் மட்டும் அல்லாமல் ஒன்றுக்கு ஒன்று அடிப்படையில் மாறுபட்டுள்ள பஞ்ச பூதங்களிலும் நீயே உறைவதால், அவை உன்னை எவ்வாறு தாங்குகின்றன ?]*

காண்பார்க்கும், காணப்படு பொருட்கும், கண் ஆகி
பூண்பாய் போல் நிற்றியால், யாது ஒன்றும் பூணாதாய்!
*(கவந்தன் வதைப் படலம்—42)*

*[காண்பான், காணப்படுபொருள் என்ற இரண்டையும் தொடர்புபடுத்தும் கண்ணாக நிற்பாய்; அனைத்தையும்*

*அணிபவன் போல் காணப்பட்டாலும் யாது ஒன்றிலும் தோயாது நிற்பாய்.]*

> தோய்ந்தும், பொருள் அனைத்தும் தோயாது நின்ற
> தொல்சுடரே !..........................
> ..........................வேதம் நெறிமுறையின் தேடி
> ஆய்ந்த உணர்வின் உணர்வே!

*(சரபங்கப் படலம்—27)*

*[எல்லாப் பொருள்களாகவும் நின்றும், அவை ஒன்றிலும் தோய்தல் இல்லாமல் இருப்பவனே! வேதம் தனக்கென வழிவகுத்துக் கொண்டு அவ்வழியே ஆய்ந்து சென்று கண்ட, அறிவிற்குள் அறிவாக உள்ளவனே!]*

> மேவாதவர் இல்லை, மேவினவர் இல்லை;
> வெளியோடு இருள் இல்லை, மேல் கீழும் இல்லை;
> மூவாதமை இல்லை, மூத்தமையும் இல்லை;
> முதல் இடையொடு ஈறு இல்லை; முன்னொடு பின் இல்லை.
> தேவா! இங்கு இவ்வோ நின்தொன்று நிலை........

*(சரபங்கப் படலம்—28)*

*[பகை என்பதில்லை, நண்பர் என்பதில்லை, ஒளியும் இல்லை, இருளும் இல்லை, மேலும் இல்லை, கீழும் இல்லை, இளமையும் இல்லை, முதுமையும் இல்லை, முதல், நடு இறுதி என்ற ஒன்றும் இல்லை, முன்பின் என்ற எதுவும் இல்லை. தேவனே! உன் பழமையான நிலை இதுவல்லவோ?]*

> ஒன்று ஆகி, மூலத்து உருவம் பல ஆகி,
> உணர்வும் உயிரும் பிறிது ஆகி, ஊழி
> சென்று ஆசறும் காலத்து, அந்நிலையது ஆகித்
> திறத்து உலகம்தான் ஆகி, செஞ்செவே
> நன்று ஆய ஞானத் தனிக் கொழுந்தே!

*(சரபங்கப் படலம்—29)*

*[ஒன்றாக இருந்த நீ, பல உடல்களைக் கொண்டு விரிந்து, அறிவு, உயிர் என்று வேறாகி, ஊழி முடியும்*

*காலத்தில் அனைத்தையும் உன்னுள் அடக்கி, மறுபடி விரிந்து பல்வேறு உலகமாக மலர்ந்து நிற்கும் பரஞானத்தின் முடிமணியே.]*

## ஒப்பற்ற ஒரு பாடல்

*இறுதியாக ஒரு பாடலைப் பார்த்தல் வேண்டும். பரம்பொருளுக்கு எத்தனையோ பெயர்கள் இருந்தும், கவிஞன் 'காரணன்' என்ற பெயரை மட்டும் குறிப்பாகப் பயன்படுத்துகிறான் என்று கண்டோம். முதற்காரணனாய் அமைந்ததை முன்னர்க் கூறினான். அனைத்துக் கலையையும் சிக்கறத் தெளிந்ததுடன் அல்லாமல், தன் புலனடக்கத்தால் ஏனையோர் யாரும் எய்த முடியாத உயர்ந்த நிலையை அடைந்த அனுமன் இதோ பேசுகிறான்:*

மூலமும் நடுவும் ஈறும் இல்லது, ஓர் மும்மைத்துஆய
காலமும், கணக்கும், நீத்த காரணன், கைவில்ஏந்தி
சூலமும், திகிரி சங்கும், கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும், மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்.

*(பிணிவீட்டு படலம்—80)*

*எந்த ஒன்றுக்கும் ஒரு தோற்றமும், ஓர் இருப்பும் ஒரு மறைவும் உண்டு. யுகாந்த காலமாக உள்ளது என்று நாம் கூறும் இந்தச் சூரிய மண்டலமும், இச்சூரிய மண்டலம் போன்று ஆயிரக்கணக்கில் உள்ள சூரிய மண்டலங்களும், விண்வெளியில் உள்ள உடுக்கள் மண்டலமும், என்றோ ஒருநாள் தோன்றியவை; இன்று உள்ளவை; என்றோ ஒருநாள் அழியப் போகின்றவை. அழிதல் என்றால், இல்லாமற்போதல் என்று பொருள் இல்லை. இன்றுள்ள நிலை மாறி வேறு நிலையை அடைவதையே அழிவு என்று கூறுகிறோம். தண்ணீர் பனிக்கட்டியாகி, மறுபடியும் தண்ணீராக மாறி, அடுத்து ஆவியாகச் சென்று மறுபடியும் தண்ணீராக மாறுவது போல்தான் இந்த அண்டங்களின் உற்பத்தி, ஸ்திதி (இருத்தல்), நாசம் (அழிவு) எனப்படுபவை.*

இந்த முதல் நிலை, இடைநிலை, கடைநிலைக்கு உட்படாத ஒருபொருள் இங்கும் இல்லை; எங்கும் இல்லை. ஆனால், இந்த மூன்று நிலையும் இல்லாத ஒன்று உண்டா? உண்டு! அது யாது? அதுவே பரம்பொருள் எனப்படும். அதற்குத் தொடக்கமும் இல்லை; இருக்கிறது எனப்படும் நடுவும் இல்லை; இல்லாது ஒழிந்தது எனக் கூறும் ஈற்று நிலையும் இல்லை. இருக்கும் ஒரு பொருளை 'இருக்கிறது என்று கூறும் நடுநிலையும் இல்லை' என்று கூறுவது பொருத்தமா என்ற வினா எழும். முன்பு இல்லாதிருந்து ஒரு காலத்தில் மறுபடியும் இல்லையாக ஒழிந்து, இடைக்காலத்தில் மட்டும் இருப்பதைத்தான் இருக்கிறது என்ற நடுவே உள்ள நிலை என்று கூறுகிறோம். எனவே மூலம், நடு, ஈறு, இல்லாதது பரம்பொருள் என்று கூறுவது முற்றிலும் பொருத்தமே. எதிர்மறை முகத்தான் (By Negation) ஒன்றை நிறுவ முற்படுவது நியாயம் ஆகாது என்னும் வாதத்தையும் உளங்கொண்டே கவிஞன் பேசுகிறான்; 'மூலமும் நடுவும் ஈறும் இல்லாதாகிய காரணன்' என்பதால் காரணனாக உள்ள பொருளுக்குத் தரப்பட்ட இலக்கணமாகும் இது.

## காலமும் கணக்கு நீத்தது

இனி அடுத்துவரும் பகுதி 'ஓர் மும்மைத்து ஆய காலமும் கணக்கும் நீத்த' என்பதாகும். உலகத்தின் பழைய சமயங்கள் அனைத்துமே காலம் என்பதை அறிந்து, அதனைப் பகுதிகளாகப் பிரித்துள்ளன. பெரும்பான்மையானவர்கள் இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் எனக் காலத்தை மூன்றாகப் பிரித்துக் கூறுவர். பௌத்த சமயத்தார் நிகழ் காலம் என்ற ஒன்றை ஏற்றுக்கொள்வதில்லை. அவர்கள் கணக்குப்படி 'இந்த வினாடி' என்று கூறும்பொழுது, அந்த விநாடி காலாவதி ஆகி இறந்த காலத்துடன் சேர்ந்துவிடுகிறது. விநாடி என்று சொல்லத் தொடங்கி 'வி' என்றவுடன் அது இறந்ததாகவும், 'நாடி' என்பது எதிர்காலமாகவும் இருக்க,

அடுத்த எழுத்து வரும்பொழுது அதுவும் இறந்தகாலமாகி விடுகிறது. எனவே நிகழ்காலம் என்ற ஒன்று இல்லை என்பது அவர்கள் வாதம். நம்மவர்கள் காலக் கணக்கை மூன்றாகவே பகுத்து ஏற்றுக்கொண்டனர்.

கம்பநாடன், இக்காலத் தத்துவம் பற்றி மிக நன்றாக அறிந்துள்ளான் என்று கருதுவதில் தவறு இல்லை. முதல், இடை, இறுதி என்று எவ்வாறு பகுக்கிறோம்? காலம் என்று கூறப்பெறும் அளவுகோலால் அளந்துதானே ஒன்றின் முதல், இடை, இறுதி நிலைகள் என்று கூறுகிறோம். இந்த மூன்றும் இல்லாத ஒரு பொருள் என்றால், அது காலத் தத்துவத்தில் எங்கேயும் அடங்காது என்று சொல்லத் தேவை இல்லை. ஆதி என்றும், அந்தம் என்றும் கூறுவதே காலத்தை வைத்துத்தான் என்றால், ஆதி அந்தம் இல்லாத ஒரு பொருள் உறுதியாக இக்காலத் தத்துவத்தினுள் அடங்காது என்பது எளிதில் விளங்கும். காலத்தைக் கடந்த ஒன்று எந்தக் கணக்கிலும் அடங்காத ஒன்றாகும் என்று கூறவும் வேண்டுமோ? அதைத்தான் கவிஞன், ஓர் மும்மைத்தாய காலமும், அதனை அளவு கோலாக வைத்துச் செய்யப்படும் கணக்கும் நீத்தவன் என்று கூறுவது சிந்திக்கற்பாலது. 'மூலமும் நடுவும் ஈறும் இல்லாத **காரணன்**' என்று கூறும் கவிஞன், காலத் தத்துவத்தைப் பற்றிப் பேசும்போது மட்டும், 'ஓர்... கணக்கும் இல்லவன்' என்று கூறாமல், 'நீத்தவன்' என்று கூறுகிறான்.

இது மிகவும் ஆழமான பொருளுடையதாகும். அண்ட பிண்ட, சராசரம் அனைத்தும் என்றோ ஒரு காலத்தில் தோன்றி இருந்து என்றோ ஒருநாள் அழியும் இயல்புடையன. அழிதல் என்பது இன்றுள்ள நிலை மாறி வேறு நிலையை அடைதலாகும். அதாவது, இவை இன்றுள்ள வடிவில் இல்லாதிருந்த காலமும் உண்டு; இனி இல்லாமல் போகும் காலமும் உண்டு. எனவே, தோற்றம் முதலியன உடைய இவற்றைக் குறிக்கும்பொழுது மட்டும்

*இவற்றைக் கடந்தவன் என்பதும், 'உள்' என்பதால் அந்தர்யாமியாய் இவற்றின் உள்ளே உள்ளான் என்பதும் இந்நாட்டவர் கண்ட கொள்கை.*

திடவி சும்பு, எரி, வளி, நீர் நிலம் இவை மிசை
படர் பொருள் முழுவதுமாய் அவை அவைதொறும்
உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்துளான்
*(நாலாயிரம்—2088)*

*என்பது நம்மாழ்வார் அருளிப்பாடு. எனவே, கம்பநாடன் 'காலம் நீத்தவன்' என்று கூறுவது முற்றிலும் பொருத்தமே. இறைவனை 'காலாதீதன்' (காலங்கடந்தவன்) என்று கூறுவதும் மரபு. இதில் 'கணக்கும் நீத்த' என்பதும் சிந்திக்கவேண்டிய ஒன்றாகும். அவன் ஒருவனைத் தவிர எண்ணுதற்கு இரண்டாவதாக ஒன்று இருந்தால்தானே, இரண்டு மூன்று என்று கணக்கிட வேண்டிய தொல்லை நேரும். 'ஏகம் சத்' என்று வேதம் கூறுவதை இந்நாட்டவரும் கூறியுள்ளனர்.*

ஒன்று நீ அல்லை; அன்றி ஒன்று இல்லை
*(திருவாசகம்—கோயில்—7)*

*எந்த ஒன்றையும் எடுத்துக்கொண்டு 'நீ இதுவா' என்றால் இது அல்ல (ஒன்று நீ அல்லை) என்றுதான் கூறவேண்டியுளது. ஆனால் உனையன்றி இரண்டாவதாக எண்ணக்கூடிய பொருள் எதுவும் இல்லை (அன்றி ஒன்று இல்லை). எனவே கணக்கிடுவதற்கு எதுவும் இல்லை. கணக்கை நீத்த (கடந்த) காரணன் என்று கவிஞன் பேசுவது, எத்துணைப் பொருத்தம் உடையது என்பதை அறிய வியப்பாக இருக்கிறது!*

## ஒரே சொல்லால் குறித்தல்

*இனி உடன்பாட்டு முகமாகப் பரம்பொருளை ஒரு சொல்கொண்டு குறிக்கத் தொடங்குகிறான் கவிஞன். எந்த ஒரு சொல்லைச் சொல்வதன்மூலம் அனைத்தையும்*

கடந்தும் அனைத்தினுள்ளும் இருந்தும், அனைத்தையும் தோற்றுவித்தும் அனைத்தையும் காத்தும் அழித்தும் நிற்கும் அப்பொருளை ஏறத்தாழ முழுவதுமாகக் குறிப்பிட முடியுமோ, அந்த ஒரு சொல்லைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துகிறான், அனைத்தும் தோன்றுதற்கும், இருத்தற்கும், அழிதற்கும் காரணமாக அவன் ஒருவனே இருத்தலின், கவிஞன் 'காரணன்' என்ற ஒரு சொல்லைப் பயன்படுத்துகிறான். காரணன் என்று பொதுஉறக் கூறிவிட்டமையின் முதற் காரணமாகவும், துணைக் காரணமாகவும், நிமித்த காரணமாகவும் அவன் ஒருவனே உள்ளான் என்பது விளங்கும்.

## மூவரும் ஒருவனானவன் இராமன்

இவ்வளவு தருக்க ரீதியாகப் பேசிவிட்ட பிறகு, மும்மூர்த்திகள் என்று பேசி அதனையே பெரிது என ஏற்றுக்கொண்டுள்ள அவன் காலச் சமுதாயத்தையும் திருப்திப்படுத்த வேண்டிய கடமை இருத்தலின், சிவபெருமானும் (சூலம்), திருமாலும் (திகிரி சங்கு), நான்முகனும் (கரகம்) தமக்கு உரிய இடமாகிய ஆல் இலையையும் (திருமால்), மலரையும், (நான்முகன்), கயிலை மலையையும் (சிவன்) விட்டு, மூவரும் ஒரு வடிவு கொண்டு இராமன் என்ற பெயருடன் அயோத்தி வந்தார்கள். அப்படியானால், இத்துணைப் பெரியதும் சொற்பதம் கடந்ததுமான பரம்பொருள் ஏன் அயோத்தி வர வேண்டும்? என்ற வினாவை எதிர்பார்த்து விடை கூறுகிறான் அடுத்த பாடலில்,

அறம் தலைநிறுத்தி, வேதம்
　　அருள் சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து, உலகம் பூணச்
　　செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்து உக நூறி, தக்கோர்
　　இடர் துடைத்து ஏக, ஈண்டு

பிறந்தனன் தன் பொற்பாதம்
ஏத்துவார் பிறப்பு அறுப்பான்

*(பிணிவீட்டு படலம்—81)*

*[அறத்தை நிலைநாட்டி, வேதம் மக்கள்மேல் கொண்ட அருளால் கூறிவைத்த, நீதியின் உட்பொருளை, இவ்வுலகம் அறிந்து மேற்கொள்ள அவர்களைச் செந்நெறியில் செலுத்தி, அதே நேரத்தில் தீயோரை அழித்துத் தக்கவர்களைக் காத்து உதவவே இங்கு மனிதனாய்ப் பிறந்தான். எவன் தெரியுமா? தன்னிடம் சரணம் புகுகின்றவர்கள் துயரத்தை மட்டுமல்லாமல் அவர்கள் பிறப்பையே போக்குபவன்.]*

பரித்ராணய ஸாதூனாம் வினாசாய சதுஷ்க்ருதாம்
தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே

*(பகவத் கீதை—4—8)*

*என்று கீதையில் கண்ணன் கூறுகின்ற பாடலின் விரிவுரை ஆகும் கம்பனின் மேலே காட்டிய பாடல். அறத்தை நிலைநாட்டுதல் என்றாலே, மக்கள் நீதி தெரிந்து நடப்பது என்பதுதானே பொருள்! அப்படி இருக்க இரண்டையும் கவிஞன் ஏன் தனித்தனியாகக் கூறவேண்டும்? அவன் வந்த காலத்தில் அவன் ஆற்றலை நேரே காணுவதால் அறவழி நடக்கும் மக்கள், நாளடைவில் வழுக்கி விழ ஏதுவாகலாம் அல்லவா? எனவேதான் இரண்டாம் முறையாக, விரிவாக 'நீதித் திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தி' என்று கூறுகிறான். நீதித் திறத்தைத் தெரிந்து கொள்ளுதல் வேறு; அதனை ஏற்று வாழ்க்கையில் கடைப்பிடித்தல் வேறு. இராவணன் அனைத்து நீதிகளையும் பழுதறக் கற்றவன்தான்; ஆனாலும், அவன் வாழ்க்கை எவ்வாறு சென்றது? நீதியை எடுத்துச் சொன்ன வீடணன், கும்பகருணன் என்பவர்கள் பேச்சு அவன் செவியில் ஏறவில்லை அல்லவா? அதனால்தான் தெரிந்து என்று*

கூறிய கவிஞன், 'பூண்டு செந்நெறியில் செல்ல உதவினான்' இராமன் என்று பேசுகிறான்.

## தண்டித்தலும் கருணையே

உலகில் மக்கள் வடிவில் பிறந்து விட்டவர்களில், மரங்களின் இயல்புடையவர்கள், விலங்கு இயல்புடைய வர்கள், மனம் போனபடி வாழும் சில ஜன்மங்கள் என்ற முறையில் பல படித்தரம் உண்டு அல்லவா? 'ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக் கறக்கணும்; பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக் கறக்கணும்' என்பது இந்நாட்டுப் பழமொழி. எனவே, ஒரு சிலருக்கு உபதேசம் செய்தால் போதாது. வள்ளுவப் பேராசான் இத்தகைய மக்களை நன்கு எடைபோட்டு 'அச்சமே கீழ்களது ஆசாரம்' (திருக்குறள்—1075) என்று பேசுகிறார் அல்லவா? அம்மட்டோடு நிறுத்தாமல், சொன்னவுடன் கேட்டுப் பயன்படுவர் சான்றோர்; கீழ்மக்களைக் கொன்றால் தான் அவர்களைத் திருத்த முடியும் என்ற கருத்தில்.

சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்

(திருக்குறள்—1078)

என்றும் பேசுகிறாரல்லவா? எனவே அறத்தை நிலைநாட்டி நீதித்திறம் தெரியுமாறு செய்து, செந்நெறி பூணச் செய்தும் பயன்படாது போகையில். எதற்கும் கட்டுப்படாத கீழ்மக்களை அழித்துவிடுகின்றான் என்ற கருத்தையும் 'இறந்து உக நூறி' என்ற சொற்களால் பேசுகிறான். அடுத்துத் 'தக்கோர் துயர் துடைத்து' என்று பேசுகிறான். பரம்பொருளின் அருளை மறக்கருணை என்றும் அறக்கருணை என்றும் பிரித்துக் கூறுவர். இறந்து உகநூறுதல், மறக்கருணையின் பாற்படும். தக்கோர் துயர் துடைத்தல், அறக்கருணையிற்பாற்படும். இவை

அனைத்தையும் தானே முன்னின்று செய்வதற்காகவே அவன் இங்கு வந்து பிறந்துள்ளான் என்கிறான்.

"இத்துணை ஆற்றல் பொருந்திய பரம்பொருள் இச்சா சக்தியாலேயே இதனைச் செய்ய முடியாதா? ஏன் பிறப்பெடுத்து வர வேண்டும்" என்று வினவப்படலாம். அவன் ஆற்றலால் இவற்றைச் செய்ய முடியினும், மக்கள் இதனால் முழுப்பயனை அடைய வேண்டும் என்றால் மக்களுடன் நேரிடைத் தொடர்பு கொள்ள வேண்டும். "ஆறு நிரம்பத் தண்ணீர் இருப்பினும் நாம் நம் சக்தி அளவாகத்தானே அதனைப் பயன்படுத்த முடியும்? இறைவனின் கருணை கடல்போல் இருப்பினும் நான் என் கொள்கலத்தின் அளவுதானே அதில் முகந்துகொண்டு வரமுடிகிறது' (கீதாஞ்சலி—1) என்று தாகூரும் கூறுகிறார். எனவே அவன் மானுடச் சட்டை தாங்கி வருவது உயிர்கள் மாட்டுக் கொண்ட கருணையினாலேயே ஆகும். அப்படிக் கருணையினால் வருகிறவன் ஏன் ஒரு சிலரைக் கொல்ல வேண்டும்? ஏன் ஒரு சிலரைக் காக்க வேண்டும்? தண்டிப்பதும், கொல்வதும் இறைவன் அவர்கள் மாட்டுக் கொண்ட மறக்கருணையினால்தான். மருத்துவர் பெரிய அறுவை மருத்துவம் செய்யும்பொழுது கொல்ல வேண்டும் என்று கருதியா மருத்துவம் செய்கிறார். ஆனால் அவர் அறுத்துத் தள்ளுவது இன்பம் தருகின்ற செயலா? இல்லையே? செயல் அளவில் பெருந் துன்பத்தைத் தந்தாலும் பின்னர் அது நற்பயன் விளைக்கும் என்ற கருத்தில்தானே அறுவை செய்கிறார். அதேபோலத்தான் இறைவன் கொடுக்கின்ற தண்டனையும், அந்த ஆன்மாவை முன்னேற்றவே யாகும். அது சரி, 'கொல்லவும் வேண்டுமா?' என்ற வினா அடுத்து வரும். ஆத்மாக்கள் என்றும் அழிவதில்லை. எனவே இருப்பதும், இறப்பதும் உடலே தவிர ஆத்மா அன்று. இதுபற்றிக் கூறவந்த கீதாசார்யன்,

வாஸாம்ஸி ஜீர்ணாணி யதா விஹாய
நவாணி க்ருஷ்ணாதி நரோபராணி
ததா சரீராணி விஹாய ஜீரிணான்யன் யானி
ஸம்யாதி நவாணி தேஹி

(அத்தியாயம்—2—22

[பழுதுபட்ட துணிகளைக் களைந்துவிட்டுப் புதியவ வற்றை மனிதன் அணிவதுபோல, ஆத்மா பழைய உடலா களை நீத்துவிட்டுப் புதிய உடலங்களில் புகுந்துவிடுகிறது

என்று கூறுகிறான். சில உடம்பினுள் இருக்கும் சில ஆத்மாக்கள், வேறு வழியில் திருத்தப்பட முடியா நிலையை அடைந்துவிட்டால், அந்த உடல்களை அழித்துத்தான் அந்த ஆத்மாக்களை முன்னேற்ற முடியும் அதிலும் இறைவன் கருணைதான் வெளிப்படுகிறது காரணம் விருப்பு வெறுப்பு என்ற இரட்டைகளிலிருந்து முற்றிலும் விடுபட்டவன் பரம்பொருள். அவனை பொறுத்தமட்டில் இராவணன், இந்திரசித்து, வீடண கும்பகண்ணன், குகன், சுக்ரீவன், ஏன்? அனுமன் உள்பட அனைவரும், ஒன்றுதான். சிலர் மாட்டு அன்பு சிலர்மாட்டு வெறுப்பும், அவனிடம் இல்லை. எனவே அவன் தண்டிக்கப் புகுந்தால், அது மைந்தனைத் தந்தை தண்டிப்பது போன்றதே தவிரப் பகைவன் தண்டிப்பது போன்றது அன்று.

இந்த ஒரு பாடலின்மூலம், இந்தக் காப்பிய முழுவதிலும் கவிஞன் தான் கூறவந்த இறை இல கணத்தைத் தொகுத்துக் கூறிவிடுகிறான். பரம்பொருளின் இலக்கணம் கூறியாயிற்று. எத்துணைத் தூரம் அறிவினா ஆய முற்பட்டாலும், ஓரளவே அறிந்துகொள்ளக்கூடி பரம்பொருளைப் பற்றிக் குறிகள், அடையாளங்க முதலியவற்றைக் கொண்டு ஓரளவு விளக்க முய றுள்ளான்.

இராமகாதையைக் கம்பன் எடுத்துக்கொண்ட நோக்கத்தையும் ஓரளவு இதன்மூலம் அறிய முடிகிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக உயரிய வாழ்வு வாழ்ந்த இத்தமிழர், ஒப்பற்றது என்று போற்றியது கற்புநெறி. அவர்கள் வாழ்ந்து, அனுபவம் பெற்று, அறிவினால் ஆய்ந்து, உணர்வினால் உணர்ந்து, ஒப்பற்றது என்று கூறியது அறநெறி வாழ்க்கை; அத்தமிழர் கண்ட கடவுட் பொருள், என்ற இம்மூன்றும் இராமகாதையில் மிகச்சிறந்த இடத்தைப் பெற்றிருப்பதால், கம்பன் இக்கதையைத் தேர்வு செய்துகொண்டான். கதை வடநாட்டில் தோன்றி இருப்பினும் இத்தமிழர்கள் தம் உயிரினும் சிறந்தவை என்று கருதிய விழுப்பொருள்கள் (Values) இக்கதையில் இருப்பதை அறிந்த கம்பன், அதற்கு முழு வடிவு கொடுத்து, இத்தமிழர்களைத் தட்டி எழுப்பவே, இக்கதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்.

இவற்றின் காரணமாக, இக்கதையை ஏற்றுக்கொண்டு அதனைக் கூறும் முறையில், இத்தமிழ் நாகரிகத்தின் இறங்கு முகத்திற்குக் காரணமாக இருந்த பரத்தமை, கள்ளுண்டல், காழ்ப்புணர்ச்சி, போரிடுதல் என்பவற்றை ஒதுக்கிவிட்டு, மேலே கூறப்பெற்ற அற வாழ்க்கை வாழ்ந்தால்தான் இத்தமிழச்சாதி நின்று நிலைபெற முடியும் என்பதையும், கவிச்சக்கரவர்த்தி கம்பன் நிறுவிவிட்டான். உலகிலுள்ள பிற சமயவாதிகள் அனைவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய முறையில், கடவுள் தத்துவத்தையும் விளக்கிய பெருமை கம்பனுக்கே உண்டு. இந்த நுணுக்கத்தை அறிந்தவன் பாரதி ஒருவனே. எனவேதான் இத்தகைய நூல் படைக்கும் ஆற்றலுடைய ஒரு சமுதா யத்தை அமரத்துவம் வாய்ந்தது என்று கூறினான்.

இவற்றுடன், கம்பன் மானுட சாதியின் பெருமை யையும் நன்கு உணர்ந்திருந்தான். நாம ரூபமற்ற

*பரம்பொருள் கூட வடிவெடுத்து வர விருபினால் மானுட வடிவைத்தான் மேற்கொள்கிறது என்று கருதினான். தேவர், இயக்கர், முனிவர், அரக்கர் முதலிய எத்தனையோ இனங்கள் இருப்பினும் மானுட இனத்தைத்தான் பரம்பொருளும் ஏற்கிறது என்பதைக் கூறவந்த கவிஞன்,*

ஆறுகொள் சடிலத் தானும்,
அயனும் என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம்,
மானுடம் வென்றது அம்மா!

*(நட்புக்கொள் படலம்—19)*

*[கங்கை தங்கிய சிவன், அயன் என்ற மும்மூர்த்திகள் குழு, தேவர்கள் குழு என்று, வேறு வேறாக உள்ள கூட்டத்தை எல்லாம் மானுடம் வென்றது.]*

*என்று பேசுகிறான்.*

*‘தேவர்கள் முதலிய குழுவினர் புலனடக்கம் கடைப்பிடிப்பதில்லை’ என்று தமிழர்கள் நம்பினர் என்பதற்குக் குறள் ஒன்றே சான்றாகும். அற்பர்கள் (சுயவர்கள்) பற்றிக் கூறவந்த வள்ளுவப் பேராசான், “கயவர்கள் தேவர்களைப் போலவே உள்ளனர்; ஏன் என்றால் மனம் போனபடி, விரும்பினதை நல்லது கெட்டது ஆராயாமல், உடனே செய்துவிடுவார்கள்” என்ற கருத்தில்.*

தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்து ஒழுக லான்

*(திருக்குறள்—1073)*

*என்கின்றான்.*

*புலனடக்கம் இன்மைக்கு உதாரணம் தேடி அதிக தூரஞ் செல்ல வேண்டிய தேவை இல்லை. தேவர்கள் அரசனாகிய இந்திரன், அகலிகைபால் கொண்ட தவறான*

வெறி ஒன்றே போதும் அல்லவா? எனவேதான் புலனடக்கம் இல்லாத கயவரைக் குறிக்கத் தேவர்களைக் குறிப்பிடுகின்றான் வள்ளுவன்.

புலனடக்கத்தின் சிறப்பையும், பழைய தமிழ் மரபின் உயிர்நாடியான அறம், கற்பு, என்பவற்றின் சிறப்பையும் விரிவாகப் பேச, இராம காதை இடந் தந்தமையின் அக்கதையை எடுத்துக்கொண்டான் கவிஞன். அதன் இடையே தான் கண்ட கடவுட் கொள்கையை விரித்துப் பேச, ஒரு வாய்ப்பையும் ஏற்படுத்திக் கொண்டான்.

தமிழ் மக்கட்கு இயல்பாக இருந்த கவிதை உணர்வைத் தூண்டிவிட்டு, அற்புதமான கவிதைகளைப் படிக்கும் வாய்ப்பை நல்கினான். அடுத்தபடியாக, அந்த இனத்திற்கு இருந்த குறைபாட்டை, இலைமறை காயாக, எடுத்துக் கூறி அவர்களைத் திருத்த முயன்றான். ஆழ்வார்களும், நாயன்மார்களும் வைணவம், சைவம் என்ற வட்டத் துக்குள் நின்று பக்திப் பயிரை வளர்த்தனர். அவர்கள் காலத்தில் அது தேவைப்பட்டது. ஆனால் கம்பன் காலத்தில், சமய ஒருமைப்பாட்டை வலியுறுத்தி, நாம ரூபங் கடந்த பரம்பொருளைப் பற்றிக் கூற வேண்டிய சூழ்நிலை உருவாகிவிட்டது. எனவே இராமன் மும்மூர்த்திகட்கும் மேம்பட்ட பரம்பொருளே என்பதை நிறுவினான். இராம காதையில் ஈடுபட்டவர்கள், கவிதைச் சிறப்பில் ஈடுபட்ட வர்கள், ஒப்பற்ற காப்பியம் என்பதற்காக ஈடுபட்டவர்கள் என்று இப்படிப் பல தரத்தவர்களும் அவனுடைய இராமாயணத்தைப் படிப்பர். நாளடைவில் அவன் அக்காப்பியத்துள் பொதிந்து வைத்துள்ள அறமும், நீதியும் மெள்ளமெள்ள மக்கள் மனத்துட் பதியும், அதன் பயனாக இத்தமிழச்சாதி உயர்ந்து முன்னேறும் என்று கம்பன் கண்ட கனவே, இக்காப்பியத்தை அவன் இயற்றக் காரண மாய் அமைந்தது எனலாம்.

# 9. கவிக்கு நாயகன்

கம்பநாடன் மக்கள் உலகிலும், விலங்கு உலகிலும் பறவை உலகிலும், பாத்திரங்கள் படைத்துள்ளான். இவை ஒவ்வொன்றையும் தனித்தனியே எடுத்துக் கொண்டாலும் ஒப்பற்று விளங்குகின்றன. இரண்டு பாடல்களில் வந்துபோகும் நீலமாலை என்ற பாத்திரத்திலிருந்து, நூல் முழுதும் ஊடுருவி நிற்கும் காப்பியத் தலைவன் வரை, ஒவ்வொன்றும் தன்னேரில்லாத சிறப்புடன் விளங்குமாறு படைத்துள்ளான்.

## உடையவர்கள் - இல்லாதவர்கள்

இராம காதையை அவன் எடுத்துக்கொண்ட நோக்கம் பற்றி முன்னர் ஆராயப்பெற்றது. இக்கதையை எடுத்துக் கொண்டு, மக்கட் சமுதாயத்திற்குப் பொதுவாகவும், தமிழகத்திற்குச் சிறப்பாகவும் சில அறவுரைகளைக் கூறவேண்டும் என்பதே அவன் தலையாய நோக்கம் என்பது கூறப்பெற்றதன்றோ. அவற்றுள்ளும் தலையாயது புலனடக்கம். அது மனித குலத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுவது என்பதை வலியுறுத்துவதாகும். அதனால்தான் காப்பியத் தொடக்கத்திலேயே ஐந்து பொறிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவை நேர்வழியை விட்டு விலகாத மக்கள் நிரம்பிய கோசலம் என்று கூறினான். எனவே புலனடக்கம் பேசுவது அவனுடைய குறிக்கோள் என்பதை அறியமுடிகிறது. இராமன், இலக்குவன், பரதன், சத்ருக்னன், வசிட்டன் விசுவாமித்திரன், சனகன், அனுமன், வீடணன், குகன் என்ற பாத்திரப்படைப்புகளின் அடித்தளமே புலனடக்கந்

தான். இவர்களின் எதிராகத் தசரதன், சுக்ரீவன், வாலி, கும்பகர்ணன், இந்திரசித்தன், இராவணன், என்பவர்கள் புலனடக்கம் இல்லாதவர்கள்.

## கிட்கிந்தையில் மூவர்

மனிதப் படைப்பே அல்லாமல், விலங்கு உலகிலும் ஓர் ஒப்பற்ற படைப்பை ஆக்க விரும்புகிறான். காப்பிய நாயகனுக்குப் புலனடக்கம் முதலியவற்றில் இணையான ஒரு பாத்திரமாக அது அமைய வேண்டும். அவ்வாறு செய்தால் காப்பியத் தலைவனின் சிறப்பைக் குறைப்பதாக ஆகிவிடும். இந்த இக்கட்டிலிருந்து அற்புதமாகத் தன்னை விடுவித்துக் கொள்கிறான் கவிஞன். அவ்வாறு அவன் படைக்கும் பாத்திரம் காப்பியத் தலைவனுக்கு உதவு வதாகவும், அவனுடைய சிறப்பை அதிகப்படுத்துவ தாகவும் அமைத்துவிட்டால் இன்னும் சிறப்பல்லவா? இவை அனைத்தையும் மனத்துட்கொண்டே அனுமன் என்ற பாத்திரத்தைப் படைக்கிறான். கிட்கிந்தையில் முக்கியமாக மூன்று பாத்திரங்களைப் படைக்கிறான் என்றாலும், மூன்றும், மூன்று விதம்! புலனடக்கத்தில் ஈடு இணையற்ற அனுமன்; புலனடக்கம் என்றால் என்ன என்று தெரியாதவனும் உயிருக்குப் பெரிதும் அஞ்சுப வனும், ஓயாத சந்தேகம் கொள்பவனும், அவசரப்பட்டு முடிவு எடுப்பவனும் ஆகிய சுக்ரீவன், புலனடக்கத்தைக் கைக்கொண்டு, மாபெரும் தவம் இயற்றி எல்லை இல்லாத வரபலத்தைப் பெற்ற பிறகு, புலனடக்கத்தைக் காற்றில் பறக்கவிட்ட வாலி என மூவர் எதிர்படுகின்றனர்.

## ஏன் வாலி?

எத்துணை வரபலம் இருப்பினும், புலனடக்கம் இல்லாத பொழுது, ஒருவன் வரபலம் அழிவை நோக்கியே அவனை அழைத்துச் செல்கிறது என்பதை அறிவுறுத்தவே

வாலி அமைக்கப்படுகிறான். ஆனால் இறக்கும் நேரத்தில் தன் பிழையை நினைந்து வருந்தினதால், வீடு பெறுகிறான்.

## மார்ச்சால சுக்ரீவன்

சுக்ரீவன் புலனடக்கம் இல்லாதவனாக, வாழ்க்கையைத் தொடங்கி, இறுதியில் இராமனிடம் கொண்ட அளவிறந்த அன்பால் பயனடைகின்றான். இவன் இராமனிடம் அன்பு செலுத்தியதைவிட, இராமன் இவனிடம் காட்டிய கருணையே அதிகம். இவன் மேற்கொண்ட வழியை 'மார்ச்சால மார்க்கம்' என்று கூறலாம். அதாவது பூனைக்குட்டியின் வழியாகும். பூனைக்குட்டி தாயைப் பற்றிக்கொண்டு செல்லும் சக்தி இல்லாதது. தாய்ப் பூனைதான், இதனைத் தன் வாயில் கவ்விக்கொண்டு, இங்கும் அங்கும் செல்லும். ஆபத்துக் காலத்தில்கூட இக்குட்டி தன்னைத்தான் காத்துக்கொள்ளும் சக்தி இல்லாதது. அப்பொழுதும் தாய்ப்பூனைதான் குட்டியைக் கவ்விப் பாதுகாப்பான இடத்தில் கொண்டு சென்று வைக்கும். அந்த முறையில், அப்பாவியான சுக்ரீவன் இராமனால் பாதுகாக்கப்படுகிறான். முதன்முறையாக இராமனைச் சந்தித்தபொழுது 'உன்னைச் சரணடைகின்றேன்' என்று கூறிவிட்டான். எனவே, அவன் என்ன நிலையில் இருப்பினும். அவனைக் காக்கும் பொறுப்பு இராகவனுடையது ஆகிவிடு கிறது.

## அடைமொழிக் களஞ்சியம்

இனி மூன்றாவதாக உள்ளவன் அனுமன் என்பவன். இந்த ஒரு பாத்திரத்தைக் கம்பன் படைத்துள்ள முறை, உலக இலக்கியம் அனைத்தையும் தேடினாலும், இப்படி ஒரு படைப்பைப் பார்ப்பது கடினம் என்று கூறவேண்டிய தரத்தை எட்டிவிடுகிறது. இவனைப் பற்றி நூற்றுக்கணக்கான அடைமொழிகளை வழங்குகிறான் கவிஞன். இன்னுங்

கூறவேண்டுமாயின் இராமகாதை முழுவதிலும் ஊடுருவி நிற்கும் காப்பிய நாயகனாகிய இராமனுக்குக்கூட, இத்துணை அடைமொழிகள் இல. எதிர்த் தலைவனாகிய இராவண னுக்கும் இத்துணை அடைமொழிகள் இல. கிட்கிந்தை, சுந்தரம், யுத்தம் என்ற மூன்றே காண்டங்களில் மட்டுமே வருகின்ற அனுமனுக்கு இத்துணைச் சிறப்பைத் தருகிறான் என்றால், அதற்கேற்ற காரணமும் உள்ளது.

இராமனாக இருப்பவன் தசரதன் புதல்வன்; அறத்தின் மூர்த்தி; கருணை வள்ளல், என்ற முறையில்தான் பெரும் பாலான பாத்திரங்கள் அவனை அறிகின்றன. வசிட்டன், விசுவாமித்திரன், முனிவர்கள் என்பவர்கள் தம் தவ வன்மையால், இராமன் யார் என்பதை அறிந்துள்ளனர். விராதன், கவந்தன் போன்றவர்கள், தங்கள் இழிபிறப்பு நீங்கித் தேவவடிவம் பெற்றவுடன் இராமன் உண்மையில் யார் என்பதை அறிந்து பேசுகின்றனர். இந்தக் கூட்டங்களின், இடையே தன் கல்வி, கேள்வி, அறிவு, பரஞானம் அபரஞானம் என்பவற்றுடன் ஈடு இணையற்ற புலனடக்கம் என்பதையும் துணையாகக் கொண்டு, பிறர் யாரும் 'இவன் இன்னான்' என்று அறிமுகம் செய்து வைக்காத நிலையிலும், இராமன் உண்மையில் யார் என்பதைக் கண்டுகொண்டவன் அனுமான் ஒருவனே ஆவான். இராமன் வந்து தோன்றிய இராவணனை அழிப்பது என்ற ஒரே காரியத்துக்காகத்தானே. இதனை இந்நாட்டவர் அவதார நோக்கம் என்று கூறுவர்.

## அவதார நோக்கம் நிறைவேற

இந்த அவதார நோக்கம் நிறைவேற எத்தனையோ பேர் உதவி புரிந்துள்ளனர். பலர் தெரியாமலும், சிலர் தெரிந்தும் உதவியுள்ளனர். கைகேயி, சூர்ப்பணகை போன்றவர்கள் தம் செயலின் பயன் என்னவாகும் என்று தெரியாமலே உதவி புரிந்துள்ளனர். விசுவாமித்திரன், கவந்தன் போன்றோர் அவதார நோக்கம் தெரிந்தே

உதவியுள்ளனர் என்றாலும், அவதார நோக்கம் நிறைவேற அனுமன் செய்த உதவிபோல யாரும் செய்யவில்லை என்றுதான் கூற வேண்டியுள்ளது. கைகேயி வரங்கொள்ள வில்லை எனில், இராமன் தசரதனுக்குப் பிறகு சில ஆயிரம் ஆண்டுகள் அரசு வீற்றிருந்திருப்பான். எனவே அவள் உதவி மிகச் சிறந்தது. ஆகவேதான் கவிஞன்,

அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல் அறம் துறந்தனள் தூமொழி மடமான்
(மந்தரை சூழ்ச்சிப் படலம் —8)

என்று அவள் செயலுக்கு அமைதி கூறுகிறான். சூர்ப்பணகை போன்றோரும் அவதார நோக்கம் நிறைவேற உதவுகிறார்கள் எனில், அவர்கள் செயலால் இராமன் பெருந்துயரத்தை அடைய நேரிடுகிறது. அவதார நோக்கம் நிறைவேற அவர்கள் உதவினார்கள் என்றாலும், அவதார புருஷன் அந்த உதவிகளால் அவதியுற்றது உண்மை. இவர்கள் செயல்களால் இராமனுடைய புகழ் வளர்ந்தது என்பது உண்மைதான். பரம்பொருளாக இருக்கும் ஒருவன், நிர்க்குண, நிராமய, நிராலஞ்சனாய் நிற்கும் ஒருவன், உயிர்கள் மாட்டுக் கொண்டுள்ள பரம கருணை வெளிப்பட, அவனுடைய அவதாரம் உதவுகிறது. அதே அவதாரமே, மறக்கருணையால் இராவணனைக் கொன்று நல்லோர் துயர் துடைக்க உதவுகிறது.

## கோதண்டப் பெருமை

ஆனால், தீயோர் இறந்து உக நூறவும், நல்லோரைக் காக்கவும் இராமன் முயலும்பொழுது, எதை வைத்துக் கொண்டு இவற்றைச் செய்தான். திருமாலுக்குரிய சங்கு சக்கரமோ, அன்றிச் சிவபிரானுக்குரிய மழுவோ கொண்டு இவற்றை இராமன் செய்யவில்லை. அவனுக்கு உதவியாக இருந்தது அவன் கையில் இருந்த கோதண்டம் என்ற வில்லே அன்றோ? தசரத இராமன், அயோத்தி இராமனாகி, வனத்து

வாழ் இராமனாக மாறிய நிலையிலும், அவன் புகழ் ஓங்க வழி இல்லை. கோதண்ட இராமனாக ஆகும்பொழுதுதான் அவன் புகழ் ஓங்குகிறது; அவதார நோக்கம் நிறைவேறுகிறது. தீயோர் அழிக்கப்படுகின்றனர்; நல்லோர் காக்கப்படுகின்றனர். எனவே, இராமனுடைய பல்வேறு கோலங்களில் எல்லாம் உயர்ந்தது கோதண்டராமனாக உள்ள நிலை. இந்தக் கோதண்டத்தின் பெருமை அளவிடற்பாலதோ? சிறை இருந்த செல்வி, அனுமனிடத்தில், 'அனும! இந்தத் துன்பம் இழைக்கின்ற இலங்கை மாக்களையும், ஏன்? எல்லையில்லாத உலகங்கள் அனைத்தையுங் கூட, என் ஒரு சொல்லினால் சுட்டுவிடுவேன். ஆனால் அவ்வாறு செய்துவிட்டால் தூயவனாகிய இராமபிரானின், வில்லின் ஆற்றற்கு மாசு உண்டாகும் என்ற கருத்தினால் அந்த எண்ணத்தை விட்டுவிட்டேன்' என்ற கருத்தில்,

> எல்லை நீத்த உலகங்கள் யாவையும் என்
> சொல்லினால் சுடுவேன்; அது தூயவன்
> வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்.
>
> (சூடாமணிப் படலம் —8)

என்று கூறுகிறாள்.

எனவே இராமனுடைய கோதண்டத்துக்கு எவ்வித மான மாசும் வாராமல் காப்பது தலைவியின் கடமை ஆகிவிடுகிறது. சாதாரணமாக ஒரு மனிதனுக்கு மாசு ஏற்படக்கூடாது என்றுதான் உலகவர் கூறுவர். இங்கே பிராட்டி தலைவனின் வில்லுக்கு மாசு வரக்கூடாது என்று பேசுகிறாள். ஏன் இவ்வாறு கூறுகிறாள்? தன் தலைவனாகிய இராகவன் எக்காரணத்தாலும், எந்த இடத்திலும், எந்தச் சூழ்நிலையிலும், யாராலும் மாசுபட முடியாதவன். செம்பில் களிம்பு ஏறுமே தவிரப் பொன்னில் களிம்பு ஏறுவதில்லை. எனவேதான் வில்லைப் பற்றி மட்டும் பிராட்டி பேசுகிறாள்.

## அனுமனுக்கு மட்டும் உரியது

*தூயவனாகிய இராமனின் வில்லுக்கு மாசு வாராமல் காப்பது ஒன்று. அதனைப் பிராட்டி செய்கிறாள். ஆனால் மாசு வராமல் காப்பது மட்டும் போதாதே! தசரதராமன் கோதண்டராமனாக ஆகவேண்டுமாயின், அந்தக் கோதண்டம் பணி புரிய வேண்டும். அது எப்பொழுது பணிபுரிய முடியும்? அதற்குரிய இலக்கைக் காட்டினால் தான் அது பணிபுரிய முடியும். அதன் இலக்கு யார் என்பதையும், அவன் எங்கே உள்ளான் என்பதையும், எப்படி அது பணிபுரிய வேண்டும் என்பதையும் கண்டு கூறினவன் அனுமன். கோதண்டம் பணிபுரிந்தமையின் இராமன் புகழ் பெற்றான்; அந்தக் கோதண்டம் பணிபுரிய அனுமன் மட்டுமே பேருதவி புரிந்தான். எனவே இராமன் புகழ் பரவவும், அனைவரும் அதில் பங்கு கொள்ளவும் உதவியவன் அனுமன் என்ற ஒரே பாத்திரம் ஆவான். எனவேதான், வேறு யாருக்கும் தராத ஒரு பெருமையைக் கவிஞன் அனுமனுக்கு மட்டும் தருகிறான்.*

> செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும்
> கவிக்கு நாயகன்.................
>
> *(ஊர்தேடு படலம்—132)*

*[இராகவன் புகழ் கேட்போர் செவியில் தேன் வந்து பாய்வது போலச் செய்யும் பணியில் அவன் புகழினைச் சமைத்து உதவும் குரங்குத் தலைவன்.]*

*என்றும் கவிஞன் அனுமனைப் பற்றிப் பேசுகிறான்.*

## திருத்தும் கவிக்கு நாயகன்

*'திருத்தும்' என்ற சொல் சிந்திக்கத் தகுந்த ஒன்று. இன்றுங்கூடச் சில இனத்தவர்கள் வீடுகளில் 'காய்கறி களைத் திருத்தியாயிற்றா?' என்று கேட்கும் பழக்கம் இருந்து வருகிறது. காய்களைத் திருத்துதல் என்றால்*

என்ன? வாழைக்காய், பூசுணைக்காய் போன்றவைகள் முழுசாக இருந்தால் அவற்றை நாம் அனுபவிக்க இயலாது. அவற்றை நாம் அனுபவிக்க வேண்டுமாயின், அவற்றை நறுக்கித் துண்டம் செய்து பக்குவப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் அவற்றை நாம் அனுபவிக்க முடியும். அதேபோல, இராமன் புகழ் நம் சிந்தனைக்கு எட்டாததாய் இருந்தது. அனைத்தும் பரம்பொருள்தான் என்பதை நம் போன்றவர்கள் அறியவோ உணரவோ முடியாது. எனவே, அப்புகழை நாம் அறிந்து அனுபவிக்க முடியாது. அனுமன்தான் இராமனுடைய அவதார நோக்கம் நிறைவேறவும், அவன் கையிலுள்ள வில் புகழ் பெறவும், நேரிடையாக உதவினான். எனவே, இராமன் புகழினைப் பக்குவப்படுத்தி, நம்போலியரும் அனுபவிக்குமாறு செய்தவன் அனுமனே என்று கூறுகிறான் கவிஞன்

## கம்பனுடைய அனுமன்

வான்மீகத்திலும், அனுமன் மிகப் பெரிய கல்விமான் என்றும், அனைத்து வேதங்களையும் கற்றவன் என்றும் கூறப்பெற்றுள்ளது என்றாலும், கம்பநாடன் படைத்த அனுமன் வான்மீகியின் அனுமனிலும், முற்றும் வேறானவன். அனுமனிடம் கம்பநாடனுக்கு இத்துணை ஈடுபாடு வரக் காரணம் யாது? அவனும் ஏனைய பாத்திரங்கள் போலக் கம்பனுடைய படைப்புத்தான் என்றாலும், அனுமனுக்குத் தனி இடம் ஒன்றைக் கம்பன் தருவதை யாரும் மறுப்பதற்கில்லை. கம்பன் அனுமனிடத்தில் இத்தகைய தனியான ஈடுபாடு கொள்ளக் காரணம் என்ன என்பதை அறிய வேண்டுமாயின், அவன் நூலுள் நுழைந்துதான் காணமுடியும்.

நூற்றுக்கணக்கான அடைமொழிகளை அனுமனுக்கு வழங்குகிறான் கவிஞன் என்று கூறப்பெற்றதல்லவா? அவை அனைத்தையும் காண்டல் இக் கட்டுரையின்

நோக்கத்திற்கு அப்பால் மிகுந்துவிடும். ஆதலின் ஒரு சிலவற்றை மட்டும் காண்டல் பயன் உடையதாகும்.

மெய்ம்மையின் வேசு போல்வான் *(3775)*
தருமத்தின் தனிமை தீர்ப்பான் *(3781)*
பொய் இல்லாதவன் *(3853)*
பொய்இல் மாருதி *(3879)*
பொய்த்தல இல உள்ளத்து அன்பு
பொழிகின்ற புணர்ச்சியான் *(4142)*
கோது இல் சிந்தை அனுமன் *(4294)*
அறிவாளன் *(4731)*
மாண்டு அற உலர்ந்தது மாருதிப் பெயர்
ஆண்தகை மாரிவந்து அளிக்க ஆயிடை
ஈண்டு அறம் முளைத்தென முளைத்தது இந்துவே *(4886)*
நூற்பெருங்கடல் நுணங்கிய கேள்வியின் *(5040)*
அறிவன் *(5286)*
அலவன் *(5458)*
ஐம்புலம் வென்றவன் *(5695)*
அறத்துக்கு ஆங்கு ஒரு தனித்துணை *(5803)*
மடத்தோகையர் வலி வென்றவன் *(7895)*
பொய்யொடும் பகைத்துத்து நின்ற குணத்தன் *(8576)*
தருமம் என்று அறிஞர் சொல்லும் தனிப் பொருள் *(9574)*
தொல் அறச் சான்று என நின்றவன் *(10267)*

(இவ்விடை தரப்பெற்றுள்ள தொடர் எண்கள் சென்னைக் கம்பன் பதிப்புப்படி அமைந்தன)

ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதமாவதுபோல, நூற்றுக்கணக்கான அடைமொழிகளுள், சிறப்புடையனவும் பன்முறை ஆளப்படுவனவுமான சில அடைமொழிகள் இங்கே காட்டப்பெற்றுள்ளன. கவிஞன் அனுமனை என்ன வடிவோடு, என்ன பண்புகளோடு படைக்கின்றான் என்பதை அறிய இவை உதவும்.

## பொய் இல் மாருதி

முதலாவது 'பொய் இல்லாதவன்' 'பொய் இல் மாருதி' 'பொய்யொடும் பகைத்து நின்ற குணத்தினான்' என்ற தொடக்கத்தவை, அனுமன் எந்த நிலையை அடைந்தவன் என்பதைக் காட்ட வந்தன. 'பொய்யர் நெஞ்சில் புகான் ஈசன்' என்பது முதுமொழி. பொய்யைத் தவிர்த்தவனே, இறைவனை அணுக முடியும் என்பது இந்நாட்டவர் கண்ட முடிவான கருத்தாகும். முனிவர் தேவர் முதலிய குழுக்களைத் தவிர இராமன் யார் என்பதை அறிந்தவர்கள் அவன் தம்பியர் மூவர். அவர்களை அல்லாமல் பார்த்த மாத்திரத்தில் அவனை இனங்கண்டு கொண்டவன் அனுமன் என்பதைக் கம்பன் அறிவிக்கின்றான். அயோத்தி யில் உள்ளவர்களும், இலங்கையில் உள்ளவர்களும், இராமனோடு பழகினவர்களும் அறிந்துகொள்ள முடியாத மறை பொருளை அனுமன் ஒருவன்தான் முதன்முதலில் கண்டு கொண்டவன். இவ்வாறு பரம்பொருளை அறியக் கூடியவனுக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் அனைத்தை யும் வரிசைப்படுத்திக் கவிஞன் அனுமனுக்கு ஏற்றிவிடுகிறான்.

சத்திய தரிசனம் செய்யும் தகுதி பெற்றவன் பொய் நடமாடாத உள்ளமுடையவனாக இருத்தல் வேண்டும் என்பதை, மணிவாசகர் போன்ற சத்திய தரிசனம் செய்தவர் பலர் பல படியாகக் கூறிச் சென்றுள்ளனர்.

> பொய் எலாம் விடத் திருவருள்
> தந்து தன் இணையடி காட்டி
>
> (அற்புதப் பத்து—11)

என்பது திருவாசகம். அவன் திருவடி தரிசனம் கிடைக்க வேண்டும் என்றால் அதற்கு இன்றியமையாது வேண்டப்படுவது பொய்யை அறவே ஒழித்தலாகும். அனுமன் இராமனை முதன்முதல் பார்த்தபோதே, அவன் யார் என்பதை அறிந்து விட்டான் என்றால், உறுதியாக

அவன் பொய் கடிந்தவனாகத் தான் இருத்தல் வேண்டும் என்பது கம்பன் துணிவு. எனவேதான், பன்முறை அவன் 'பொய்யில் மாருதி' என்று கூறுகிறான். பொய் கடிதல் என்பது எதிர்மறை முகமான பண்பாகும். பொய் கடித லுடன் மெய்க்குத் (சத்தியத்திற்குத்) துணையாகவும் இருத்தல் வேண்டும். அதனைத்தான் 'மெய்ம்மையின் வேலி போல்வான்' என்று, கவிஞன் சுட்டிக்காட்டுகிறான்.

இந்த நிலையில் அனுமன் இராமனைச் சந்தித்த நிகழ்ச்சியைக் கம்பன் கண்ட முறையில் காண்பது பயனுடையதாகும். இரலையின் குன்றத்தை அடுத்து, இராம இலக்குவர்கள் வருவதைக் கண்ட சுக்ரீவன், இவர்கள் வாலியால் அனுப்பப்பட்டவர்கள் போலும் என்று மலை முழைஞ்சில் ஓடி ஒளிந்து கொள்கிறான். கற்றறிவுடைய மாருதி மட்டும் தான் சென்று அவர்கள் யார் என்று கண்டுவருவதாகக் கூறிவிட்டு, பிரம்மச்சாரி வடிவு கொண்டு தூரத்தே நின்று, இராம இலக்குவர்களைக் கூர்ந்து நோக்குகிறான்.

## அனுமனின் கூரிய பார்வை

தூரத்தே நின்று நோக்கும் அனுமன் மனத்துள் ஓடும் எண்ண ஓட்டங்களைக் கூறுமுகமாகவே கவிஞன் அனுமன் யார் என்பதை நாம் அறியுமாறு செய்கிறான். 'வெஞ்சமத் தொழிலர், தவ மெய்யர், கைச் சிலையர்'. இது அவன் கண்ட காட்சி. போரில் ஈடுபடுபவர்கள்; ஆனால் தவவேடம் பூண்டுள்ளனர்; அதே நேரத்தில் அவ் வேடத்துக்கு ஒவ்வாத வில்லைத் தாங்கி உள்ளனர் என்றால், இவர்களிடம் ஏதோ ஒரு புதுமை இருக்க வேண்டும் என்று நினைக்கிறான். மும்மூர்த்திகள் என்று நினைக்கலாம் எனில் இவர்கள் இருவராக உளர், இவர்கட்கு இணை என்று யாரையும் கூறுமாறு இல்லை. (அனுமப்படலம்—5) ஆழமான துயரத்தில் நொந்தவர்கள்

போலத் தெரிகின்றது. ஆனால் நோவைத் தாங்கிக்கொள்ள முடியாத சிறுமை உடையவர்கள் அல்லர். ஏதோ ஒன்றை இழந்து தேடிக் கொண்டு வருகின்றனர். (6) தருமம், தகவுடைமை என்பது இவர்களிடமே உள, சிறந்த ஒன்றை இடையில் இழந்தவர். இப்பொழுது அதனை இங்கும் அங்கும் தேடி வருகின்றனர். (7) கோபம் என்பதைத் துறந்தவர்கள், கருணைக் கடலாக உள்ளவர்கள். (8) கொடிய வேங்கை முதலிய விலங்குகள் தம் கன்றைக் கண்டது போல, இவர்களைப் பார்த்துக் களிக்கின்றன. கனலைக் கக்கும் பரல்கற்கள் இவர்கள் பாதம் பட்டவுடன் மலர் களைப் போலக் குலைகின்றன. செல்லும் திசைதோறும் மரமும் புல்லும், இவர்கட்கு வணக்கம் செய்வதுபோலச் சாய்கின்றன. எனவே அறம் என்ற ஒன்றே மானுட வடிவு தாங்கி இங்கு வந்துள்ளது (12).

இவை அனைத்தும் கற்றறிவும், நுண்மாண் நுழை புலமும், ஆழ்ந்த ஆராய்ச்சியும், உடைய அனுமனின் நுணுக்கமான பார்வையில் கிடைத்தவை. இந்தச் செயல்களைக் கொண்டு ஒரு முடிவுக்கு வருகிறான் அஞ்சனைச் சிறுவன்.

துன்பினைத் துடைத்து மாயத்
  தொல்வினை தன்னை நீக்கி,
தென்புலத்து அன்றி, மீளா
  நெறிஉய்க்கும் தேவரோ தாம்
என்பு எனக்கு உருகு கின்றது;
  இவர் கின்றது அளவில் காதல்;
அன்பினுக்கு அவதி இல்லை;
  அடைவுஎன்கொல் அறிதல் தேற்றேன்?

(அனுமப் படலம்—13)

[தம்மை வந்து அடைந்தவர்கள் துன்பத்தை முற்றிலும் போக்கி, இரு வினைகளிலிருந்தும் அவர்களை மீட்டு, வீணாகச் செத்து மடியாமல் வீட்டுலகுக்கு அனுப்பும் பரம்பொருளோ இவர்கள்? கண்ட மாத்திரத்தில் எனக்கு

*எலும்புகள் உருகுகின்றன: அளவில்லாத பக்தி ஏற்படுகிறது; இவர்கள் மாட்டு அன்பு வளர்கிறது. காரணம் என்ன வென்றே தெரியவில்லையே!]*

*என்ற முடிவுக்கு வருகிறான். இந்த முடிவுக்கு வர அவனுக்கு உதவி புரிந்தவை யாவை? தூரத்திலிருந்து பார்த்த மாத்திரத்தில் தன் கூர்மையான கண்களின் துணை கொண்டு பார்த்தவற்றை மட்டும் வைத்துக் கொண்டு இந்த முடிவுக்கு வந்தான் எனில், அவனுடைய அறிவும், ஆற்றலும், கல்வியும், எல்லையற்றவை என்பதைக் கவிஞன் விளங்க வைக்கின்றான். ஒருவனுடைய கல்வி, கேள்வி, அறிவால் மட்டும் இத்துணை அளவு ஆற்றல் வந்துவிடும் என்று நினைப்பது, அத்துணைப் பொருத்த மாகாது. எனவே, கவிஞன் அவனுடைய புலனடக்கத்தைப் பற்றிக் கூறுகிறான்.*

## புலனடக்கமே காரணம்

*'ஐம்புலம் வென்றான்', 'மடத்தோகையர் வலிவென் றவன், வெல்லப்பட்டார் அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார்; அவனும் (மாருதி) நல் அறிவை ஒத்தான்' என்பவை போன்ற அடைமொழிகளைத் தருவதன் மூலம் அனுமனை நன்கு அறிய வழிவகுக்கின்றான். இத்துணை அளவு புலடனக்கஞ் செய்தவன், கல்வி கேள்விகளில் சிறந்து நிற்றலும், கண்களால் பார்த்தவற்றை மட்டும் வைத்துக் கொண்டு வருகின்றவர்கள் யார் என்ற முடிவுக்கு வருவதும் வியப்பன்று! வான்மீகியில் வரும் அனுமன் கற்றறிவுடைய னாகக் காட்சியளிக்கிறான். ஆனால் வருகிறவர்களைத் தூரத்தே நின்று பார்த்து எடை போடுகின்ற காட்சி இல்லை.*

*இனி, காப்பியத்தைக் கற்கின்ற நாம், நடைபெற்ற தையும், அவன் மனத்திரையில் ஓடிய எண்ணங்களையும், அவன் கண்ட முடிவுகளையும் பார்த்து, அனுமன் எத்தகையவன் என்ற ஒரு முடிவுக்கு வருமாறு வாய்ப்*

*பளித்த கவிஞன் இராமனின் எதிரே அனுமனை நிறுத்தி ஒரு நாடகமே நடத்திக் காட்டுகிறான்.*

*சோதரர் இருவரும் நெருங்கி வந்தவுடன், அனுமன் எதிர் சென்று வணங்கினும் 'வரவு நல்குவராகுக' என்று கூறாமல், 'நும் வரவு துன்பம் இல்லாமல் அமைவதாக' என்ற கருத்தில், 'கவ்வை இன்றாக நுங்கள் வரவு' என்று கூறுகின்றான். இதனை அடுத்து இராமன் 'நீ யார்?' என்ற ஒரு வினாவைக் கேட்டலும், அனுமன் இரண்டு பாடல்களில், விடை கூறுகிறான்.*

மஞ்சு எனத் திரண்ட கோல
　　மேனிய! மகளிர்க்கு எல்லாம்
நஞ்சு எனத் தகையவாகி
　　நளிர்இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய
　　கண்ண! யான் காற்றின் வேந்தற்கு
அஞ்சனை வயிற்றின் வந்தேன்
　　நாமமும் அனுமன். என்பேன்.

இம்மலை இருந்து வாழும்
　　எரிகதிர்ப் பரிதிச் செல்வன்
செம்மலுக்கு ஏவல் செய்வேன்;
　　தேவ! நும் வரவு நோக்கி
விம்மல் உற்று அனையான் ஏவ
　　வினவிய வந்தேன் என்றான்;

*(அனுமப் படலம்—15,16)*

*[மேகம் திரண்டது போன்ற அழகிய உடம்பை உடையாய்! மகளிர் கண்டால் தம் மனத்தைப் பேதலிக்கச் செய்யும் நஞ்சு என்று கூறும் அழகுடைய, பனியால் வாடிக் கூம்பாத, தாமரை போன்ற கண்ணை உடையாய்! யான் காற்றின் வேந்தனுக்கு அஞ்சனை வயிற்றில் பிறந்தேன் அனுமன் என்பது பெயர். இந்த மலையில் வாழும் சூரியன் மகனார் சுக்ரீவனுக்குப் பணி செய்கின்றேன். தேவ! உம்முடைய*

*வரவைக் கண்டு ஆனந்தத்தில் மூழ்கியுள்ள அவன் ஏவலினால், உம்மைக் கண்டு யார் என்று அறியவேண்டி வந்தேன்.]*

## இதுவா சொற் செல்வம்?

*அனுமன் கூறிய விடையாக அமைத்த சொற்கள் கம்பனில் இவ்வளவுதான். வான்மீகத்தில் அனுமன் மிக நீண்ட சொற்களால் மிக நீண்ட உபசாரம் கூறுகிறான். மூல நூலில் மூன்று பக்கங்களில் மேல் உள்ள அனுமன் சொற்களை ஒன்றரைப் பாடலில் முடித்து விடுகிறான் கம்பன். இப்பாடல்களில் அனுமன் கூறிய விடை அவன் இடத்தில் வேறு யார் இருந்திருப்பினும் கூறக்கூடியவை தான். எனவே இந்தச் சொற்களை மட்டும் வைத்துக் கொண்டு அனுமனைக் கல்விமான் என்றோ, பேர் அறிவாளி என்றோ கூறிவிட முடியாது. ஆனால், அனுமன் கூறிய இந்தச் சொற்களைக் கேட்டுவிட்டு, இராமன் இலக்குவனிடம் பேசும் செய்திகள், நம் கவனத்தை ஈர்க்கின்றன.*

மாற்றம் அஃது உரைத்தலோடும்,
வரிசிலைக் குரிசில் மைந்தன்,
தேற்றம் உற்று, இவனின் ஊங்குச்
செவ்வியோர் இன்மை தேறி,
'ஆற்றலும், நிறைவும்; கல்வி
அமைதியும், அறிவும் என்னும்
வேற்றுமை இவனோடு இல்லை
யாம்' என விளம்ப லுற்றான்

*(அனுமப் படலம் —17)*

*[மாருதி கூறிய சொற்களைக் கேட்டுத் தசரதன் மைந்தன் ஆற்றல், நிறைவு; கல்வியால் விளைந்த அமைதி என்பவை வேறுபாடில்லாமல் இவன்பால் நிறைந்துள்ளன என்பது தேர்ந்து இவனைவிடச் செம்மையுடையார் இவ்வுலகத்தில் இல்லை என்ற முடிவுக்கு வந்து பேசத் தொடங்கினான்.]*

தூரத்தில் இருவரையும் கண்ட மாத்திரத்தில் அனுமன், எவ்வாறு அவர்கள் யார், என்பதை அறிந்து எடை போட்டானோ, அதேபோல அனுமன் பேசிய இந்தச் சாதாரணமான சொற்களை வைத்துக்கொண்டு, இராமன் அனுமனை எடைபோட்டுவிடுகிறான். இவர்கள் இருவரும் புலனடக்கத்தாலும், அதனை அடுத்து வருகின்ற பண்பாட்டாலும் ஒத்துப் போதலின் ஒருவரை ஒருவர் எடைபோட முடிந்தது என்று கருதுவது ஒரு வகையில் சரியானதேயாகும். இராமனைப் பொறுத்தவரை அனுமன் கூறிய விடையில் உள்ள சொற்களைக் காட்டிலும், அவனுடைய நிற்கும் நிலை, ஆளுமை (Personality) என்பவற்றுடன் அனுமன் கண்கள் மூலமாக அவனுடைய அகத்தை அறிகிறான் என்பதே நேரிதாகும். அனுமனும், இராமனுடைய உடலழகில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. ஏனையோரைப் பொறுத்தவரை "தோள் கண்டார் தோளே கண்டார்; தாள் கண்டார் தாளே கண்டார்; தடக்கை கண்டாரும் அஃதே!" (உலாவியல் படலம்—79). எனவே யாரும் வடிவினை முடியக் காண்கிலர் என்பது சரி. ஆனால் ஆஜானுபாகுவான இராமனின் வடிவழகில் ஈடுபடாமல், அவனுடைய கண்களை மட்டுமே அனுமன் கண்டான் என்பது அவன் சொற்களிலிருந்தே தெரிகிறது. மகளிர்க்கு நஞ்சு போன்று உள்ளன இராகவன் கண்கள் என்ற அடிக்கு, பழைய முறையில், இவன் கண்களைக் கண்ட மகளிர் அவன்பால் ஈடுபட்டுத் துயர் அடைகின்றனர் என்று பொருள் கூறுவர். அது சரியாகப் படவில்லை.

### மகளிர்க்கு நஞ்சு-ஏன்?

ஆனால் புலனடக்கத்தின் உச்சியில் நிற்கின்ற அனுமன் அந்தப்பொருளில் கூறியதாக நினைப்பதற்கில்லை. பிராட்டியைத் தவிர, ஏனையோர்க்கு அக் கண்கள் கமலமாகவே காட்சி அளிக்கும். ஆனால், வேறு எண்ணத்

துடன் இராமன் கண்களை மகளிர் பார்ப்பார்களே யானால் அவர்களுடைய அந்தக் காம இச்சைக்கு நஞ்சாகி, அக் காமத்தை அழித்து, அவர்களை நல்வழிப்படுத்தும் என்ற கருத்தில் அனுமன் கூறியதாகவே கொள்ளுதல் நேரிது. மேலும் 'பனிக்குத் தேம்பாக் கஞ்சம்!' என்று கூறியதை இலக்கண அடிப்படையில் வெளிப்படை எனக் கொண்டு, கமலம் போன்ற கண் என்று பொருள் கூறுவதும் சிறப்பாக இல்லை. தாமரைக்கு ஊறு விளைப்பது பனி. பனி வந்தால் தாமரை கூம்பிவிடும். ஆனால் தாமரைக்கு ஊறு விளைக்கும் பனியைப் போல, இராகவனுக்கு இடுக்கண் விளைக்கும் துன்பம் வந்தாலும் அவனுடைய கண்கள் அத்துயரத்தால் வாடுவதில்லை என்பதையும்; அனுமன் கூறுகிறான். பெறுதற்கரிய ஒன்றை இழந்துவிட்டுத் தேடிக்கொண்டு வருகிறார்கள் என்று நினைத்தவன் அவன்தானே? பக்கத்தில் நின்று இராகவன் கண்களைப் பார்த்த பிறகு எத்தகைய துன்பத்திலும் மனம் ஓடியாத சமநோக்கம் (சமதிருஷ்டி) உடையவன் இராமன் என்பதையும், அனுமன் கண்டுவிட்டான். எனவே புலனடக்கத்தில் தலை நின்றவன் இராமன் என்பதைக் கண்டுகொண்ட அனுமன், தான் கண்டுகொண்டதை மிக அற்புதமாக இராமனை விளிக்கின்ற சொற்களின் மூலமாகவே வெளிப்படுத்தி விட்டான். மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது இராமனின் அழகில் ஈடுபட்டு இவ்வாறு விளித்தான் என்று பொருள் கூற முடியும். ஆழ்ந்து நோக்கினால் அனுமனின் ஆற்றலை அறிய இச் சொற்கள் வாய்ப்பளிக்கின்றன. இராமனுடைய கண்களைப் பார்த்த மாத்திரத்தில் அவன் ஸ்திதப் பிரக்ஞன் என்பதையும் புலனடக்கத்தில் தலை நின்றவன் என்பதையும், ஏகபத்தினி விரதன் என்பதையும், துன்பம், துயரம் என்பவற்றால் கலங்காத உறுதி படைத்த 'மதிருஷ்டி உடையவன் என்பதையும் கண்டு, அதனை

இரண்டே வரிகளில், அதுவும் கண்களைக் கூறும் முறையிலேயே வெளிப்படுத்தி விட்டான் என்றால், அனுமனை இராமன் இச்சொற்களின் மூலம் எடைபோட்டது சரியே!

## இராமன் கண்ட அனுமன்

இராகவனும் அனுமன் சொற்களின் முற்பகுதியைக் கேட்ட மாத்திரத்தில், அவனிடம் ஆற்றல், நிறைவு, கல்வி, அமைதி, அறிவு என்பவை நிறைந்துள்ளன என்பதையும், அவனும் புலனடக்கத்தில் தேர்ந்தவன் என்பதையும், பரதனைப் போலச் செம்மையின் ஆணியாவன் என்பதையும், தன் மனத்துள் விளங்கிக் கொண்டான் என்றும் கவிஞன் கூறுகிறான். இதுவரை உள்ளவை இராமன் மனத்துள் எண்ணிய எண்ண ஓட்டமும், அவன் கண்ட முடிவுமாகும்.

இதனை அடுத்து, இராகவன் தன் பக்கத்தில் நிற்கின்ற இளைய பெருமாளைப் பார்க்கின்றான். எதிரே நிற்கும் பிரம்மச்சாரி, இளையவன் மனத்தில் எத்தகைய உணர்ச்சிகளை உண்டாக்கினான் என்று அறிய ஆவல் கொண்டான் போலும்! ஆனால், இளையவனிடத்தில் எவ்வித மாறுதலும் காணப்படவில்லை. எனவே, இராகவன் பேசத் தொடங்குகிறான். 'வில்லைத் தோளில் தாங்கி நிற்கும் இளைய வீரனே! தன் புகழ் உலகம் முழுவதும் பரவும்படியாக, இவன் கல்லாத கலையோ, வேதமோ இல்லை என்பதை இவன் சொற்கள் அறிவிக்கின்றனவே! இச்சொல்லின் செல்வன் யாராக இருக்க முடியும்? நான்முகனோ? சிவபிரானோ? என்ற பொருளில்,

இல்லாத உலகத்து எங்கும்,
இங்கு இவன் இசைகள் கூறக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே என்னும் காட்சி

சொல்லாலே தோன்றிற்று அன்றே?
யார்கொல் இச் சொல்லின் செல்வன்?
வில் ஆர்தோள் இளையவீர!
விரிஞ்சனோ? விடைவ லானோ?

*(அனுமப் படலம்—18)*

*என்று விளக்குகிறான்.*

## 'வில்ஆர் தோள் வீர!'

*இப்பாடலில் இளையவனை விளிக்கும் இராகவன் 'வில்ஆர் தோள் இளையவீர!' என்று கூறுவது கருத்துடை அடைமொழி என்று கூறப்பெறும். அறிவைப் பயன்படுத்தி எதிரே நிற்பவன் யார்? எத்தகையவன்? இவன் நமக்குப் பயன்படுவானா? என்றெல்லாம் சிந்திக்காமல் இளையவன் நிற்பதால்—'வில்லை ஏந்தி இருப்பது மட்டும் போதாது; அத்தோளின் மேலே உள்ள முளையையும் பயன்படுத்த வேண்டும் என்று குறிப்பாகப் பேசுகிறான்' என்று நினைய வேண்டியுளது.*

*இந்த விளிச்சொற்களுக்கு இவ்வாறு குறிப்புப் பொருள் (Suggestion) உண்டு என்று கருத இடந்தருவது அடுத்த பாடலாகும். இவ்வளவு தூரம், இராகவன் கூறிய பிறகாவது இளையவன் சிந்தித்திருக்க வேண்டும்; சாதாரணமாக 'இன்னார் மகன் நான்' என்று விடை கூறியவனைச் சொல்லின் செல்வன் என்று அண்ணன் கூறுகிறானே! இதில் ஏதோ கருத்து இருக்க வேண்டுமே என்று நினைத்துப் பார்த்திருக்க வேண்டும். அவ்வாறு நினைத்திருந்தால், வார்த்தைகளை அளந்து பேசும் இராகவன் இவ்வாறு கூற வேண்டுமானால் அதற்குள் ஏதோ ஒரு கருத்து அடங்கி இருத்தல் வேண்டும் என்ற உண்மை புலப்பட்டிருக்கும். இவ்வளவு கூறியும் இளையவன் அறிவிற்கு ஒன்றும் புலப்படவில்லை யாதலால், இராகவன் அவனை இடித்துக் கூறத் தொடங்கினான்.*

## தம்பிக்கு இடித்துக் கூறுகிறான்

*'வெறும் பிரம்மச்சாரி என்று அவன் புறத்தோற்றத்தை மட்டுங் கொண்டு நீ முடிவு செய்துவிடாதே! மகனே! இவ் உலகுக்குக் கடையாணி போன்ற ஆற்றலுடையவன் இவன். இவனுடைய ஒப்பற்றதும், நாளும் வளர்வதுமான பெருமையை ஐயத்திற்கு இடன் இன்றி ஆராய்ந்து தெளிந்துவிட்டேன். என் சொற்கள் எவ்வளவு மெய்ம்மை ஆனவை என்பதை நீ பின்னர்க் காணலாம்' என்று இடித்துக் கூறினான், என்ற பொருளில்,*

மாணியாம் படிவம் அன்று,
  மற்று இவன்வடிவம்! மைந்த!
ஆணி இவ் உலகுக்கு எல்லாம்
  என்னலாம், ஆற்றற்கு ஏற்ற
சேண் உயர் பெருமைதன்னைச்
  சிக்கு அறத் தெளிந்தேன். பின்னர்க்
காணுதி மெய்ம்மை என்று
  தம்பிக்குக் கழறிக் கண்ணன்,

*(அனுமப்படலம்—19)*

*கூறுகிறான். இந்த உரையாடல் நடைபெற்ற சில விநாடிகளில் எதிரே உள்ளவன் இந்த உலகங்கட்கு எல்லாம் ஆணி என்று கூறத்தகுந்த ஆற்றல் படைத்தவன் என்பதை இராமன் கண்டுவிட்டானாம். அது மட்டுமன்று ஏதோ உணர்ச்சி வசப்பட்டு இவ்வாறு கூறினதாகத் தம்பி நினைந்து விடக்கூடாது என்பதற்காக, 'மைந்த' என்று அழைத்து, 'சிக்கு அறத் தெளிந்தேன்' என்று தமையன் கூறுகிறான். தன் இளவல் இவ்வளவு கூறியும் இன்னும் சிந்திக்கத் தொடங்கவில்லையே என்று வருந்தியதால் 'இளையவீர!' என்று பாட்டில் விளித்த இராகவன், இப்பாடலில் உரிமை பாராட்டித் தந்தையின் இடத்தில் இருந்து மைந்தனைத் திருத்துபவன் போலப் பேசத் தொடங்கி, 'ஆழ்ந்து சிந்தித்துத்தான் இம்முடிவுக்கு*

*வந்தேன்' என்று கூறியும், விழிப்புணர்ச்சி ஏற்படாத தம்பியை நோக்கி, இடித்துக் கூறினான் என்று பேசுகிறான் கவிஞன். 'கழறுதல்' என்ற சொல்லுக்கு இடித்துக் கூறுதல் என்பது பொருளாகும்.*

## கல்வி மட்டும் போதாது

*இந்த மூன்று பாடல்களிலிருந்து ஓர் உண்மையைப் புலப்படுத்த விரும்புகிறான் கவிஞன். ஒரு சிலரை, ஒரு சிலரே அறிய முடியும். ஒரு சிலர் பார்த்த மாத்திரத்திலேயே எதிரே இருப்பவரை உள்ளவாறு அறிய முடியும். இன்னுஞ் சிலர் ஓரளவு பழகிய பின்னர் அறிய முடியும். இன்னும் சிலருக்குப் பட்டால்தான் புத்தி வருகிறது. இராமனை அறிந்தவர்களுள் தலையாய இடத்தில் இருப்பவன் அனுமன், வெறும் கல்வி கேள்விகளாலோ, அன்றித் தவத்தாலோ, அவன் இராமனை இன்னான் என்று அறிந்துகொண்டான் என்று கருதுவது தவறாக முடியும். கல்வி, கேள்விகளால் அன்றித் தவத்தால் மட்டும் பரம்பொருளை அறிய முடியும் என்றால், வாலியும், இராவணனும், ஏன் இரணியனுங் கூடத் தொடக்கத்திலேயே அறிந்திருக்க வேண்டும். சத்திய தரிசனத்துக்குக் கல்வி எவ்வளவு தூரம் உதவுகிறது என்பதே ஆராய்ச்சிக் குரியது ஆகும். கல்வி பல சமயங்களில் உண்மையைக் காட்டுவதற்குப் பதிலாகத் தன்னைப் பெற்றவனின் மண்டையை வீங்கவைத்து விடுகிறது. எனவேதான் மணிவாசகர் போன்ற பெரியவர்கள்,*

> கற்றாரை யான் வேண்டேன்;
> கற்பனவும் இனி அமையும்
>
> *(திருப்புலம்பல்—3)*

*என்றும், தாயுமானவப் பெருந்தகை*

> கல்லாத பேர்களே நல்லவர்கள் *(சித்தர்—10)*

என்றும் பாடிச் சென்றனர். கல்வியில் உள்ள இந்தக் குறை, கல்வியில் இல்லை; அதனைப் பெற்றவனிடம் உள்ள குறைதான் ஆகும் என்றாலும், இந்தக் குறை கற்றவர்களிடமும் உள்ளது என்பதை மறுத்தற்கில்லை. இதனையே வடநூலார் 'வித்யா கர்வம்' என்று கூறுவர். எனவே, அனுமனிடத்தில் அனைத்துக் கலைகளும் நிரம்பியிருந்தன என்று மட்டும் கூறுவதால் பயனில்லை. கல்வி நிறைந்தவனாக இருந்தான் என்று கூற வரும்பொழுதே, இராகவன் 'கல்வி அமைதியும்' என்று கூறுவதன் உட்கருத்து இதுவே ஆகும். உண்மைக் கல்வி நிரம்ப, நிரம்ப அமைதியைத் தர வேண்டும். அனுமனைப் பொறுத்த மட்டில், அவன் அந்த அமைதியைப் பெற்றிருந்தான் என்கிறான் இராகவன்.

அப்படியானால், இராமனை, அனுமன் தன் கல்வியறிவால் காணவில்லை என்பது நிறுவப்பட்டால், வேறு எதனால் என்ற வினா எழுமன்றோ? அதற்கு விடை நேரிடையாகக் கூறப்படவில்லை, அவன் சொல்லாலே தோன்றிற்று என்று இராகவன் கூறுவதைச் சிந்திக்க வேண்டும். சொல்லாலே என்ன தோன்றிற்று? அனுமன் தான் யார் என்பதையும், யாரிடம் பணிபுரிகிறான் என்பதையும், கூறினதை வைத்துக்கொண்டு 'சொல்லின் செல்வன்' என்பதற்கு இதுவரை, பொருள் கூறினவர் பலராவர். யார் என்ற ஒரே வினாவிற்கு இத்தனை விடையையும் கூறினதே சொற்செல்வம் என்று பொருள் கூறினர். இவ்வாறு இவர்கள் பொருள் கூற வழிகாட்டியது சிலப்பதிகாரமாகும். 'யார் நீ' என்ற பாண்டியன் வினாவிற்கு, அவன் அடுத்த வினாக் கேட்க இடமில்லாமல் கண்ணகி விடை இறுத்ததைச் 'சொற்செல்வம்' என்று கூறி வந்தனர். இதுவும் அதுபோல என்று நினைத்து, அனுமன் விடையைக் கொண்டே இராகவன் 'சொல்லின் செல்வன்' என்ற பட்டத்தை அனுமனுக்கு வழங்கினான்

என்று கூறிப் போந்தனர், இந்த விளக்கம் ஓரளவுக்குச் சரியானதே. அனுமன் பேச்சில் தன்னைப் பற்றிய முழு விவரமும் தந்த பகுதியில், இராகவன் ஈடுபட்டு, இப்பட்டத்தைத் தரவில்லை என்பதைக் காட்டுவதே இதுவரை கூறிவந்த விளக்கம்.

புலனடக்கத்தில் தலைநின்ற அனுமன், இராமன் கண்களை வருணிப்பதைச் சான்றாக வைத்து, இராமனின் புலனடக்கத்தையும், சான்றாண்மையையும், சமதிருஷ்டியையும் குறிப்பாக உணர்த்தியதை வைத்துக் கொண்டு தான் இராமன் இப்பட்டத்தை வழங்கினான் என்று கருதுவதே நேரிதாகும்.

## செல்வம், ஆணி, பதம்

இதன்பிறகு அனுமன் இராமனை வணங்கலும், இராமன் அந்தணனாகிய அவன், தன்னை, வணங்குவது தகாது என்று கூற, அனுமன் தானும் குரக்கினத்தவனே என்று கூறித் தன் உருவத்தைக் கொண்டு நின்றான். இதனைக் கண்ட இராமன், தம்பியை நோக்கி 'காலம் அறுதியிட்டுக் கூற முடியாத வேதங்களாலும் குற்றமற்ற நல் ஞானத்தாலும் அறிந்துகொள்ள முடியாத ஒரு பதம் குரங்கு வடிவம் கொண்டு இவ்வுலகில் வந்தது' என்று கூறுகிறான்.

'நாட்படா மறைகளாலும், நவைபடா ஞானத்தாலும்
கோட்படாப் பதமே ஐய! குரக்கு உருக்கொண்டது என்றான்'
(அனுமப் படலம்—33)

எனவே, இராகவன் சொல்லின் செல்வன் என்று தொடங்கி, உலகுக்கு எல்லாம் ஆணி என்று கூறி, இறுதியாக மறைகளுக்கு அப்பாற்பட்ட பதமே, குரக்கு உருக்கொண்டது என்று முடிக்கிறான் என்றால், இதைவிட அனுமனைப் பற்றி வேறு யாரும் எவையும் கூற வேண்டிய தேவை இல்லையல்லவா?

## யாரிடம் எதைக் கூற வேண்டும்?

*சுக்ரீவனிடம் திரும்பிச் சென்ற அனுமன், வந்தவர்கள் யார் என்பதை சுக்ரீவன் மனங்கொள்ளும் முறையில் பேசுகிறான். இராமன் பரம்பொருள் என்பதைப் புலனடக்கம் காரணமாக எழுந்த பரஞானத்தால் அறிந்துகொண்டான், மாருதி. ஆனால் சுக்ரீவனிடம் இவ்வாறு கூறினால் அவன் மனத்தில் சென்று தைக்காது. 'கஞ்சி வரதப்பா' என்று அன்பர் ஒருவர் கூற, 'எங்கு வரதப்பா?' என்று கேட்பவனைப் போல உள்ளான் சுக்ரீவன். அவனைப் பொறுத்தவரைக் 'கொக்குக்கு ஒன்றே மதி' என்ற பழமொழியை மெய்யாக்கும் மனநிலையில் உள்ளான். என்றாவது ஒருநாள், யாருடைய தயவினா லாவது வாலியை ஒழித்துவிட்டுத் தான் அரசு கட்டில் ஏற முடியுமா என்ற கனவில் இலயித்துள்ளவன். எனவே அறிவுமிக்க மாருதி பேசத் தொடங்கும்போதே, அவன் கவனத்தையும், கருத்தையும் தன் பக்கம் திருப்பும் முறையில் பேசுகிறான்.*

................விரை செய்தார்
வாலி என்ற அளவிலா வலியினான் உயிர்தெறக்
காலன் வந்தனன்; இடர்க் கடல் கடந்தனம், எனா
ஆலம் உண்டவனின் நின்று அருநடம் புரிகுவன்
*(நட்புக்கோள் படலம்—2)*

## தொகுத்தும் வகுத்தும் கூறல்

*புலனடக்கம் செய்தவன் உணர்ச்சிகட்கு இடம் கொடுப்பது இல்லை. ஆனால் 'வாலியைக் கொல்ல எமன் வந்தான்; நம் துயர் தீர்ந்தது' என்று கூறிவிட்டுச் சிவபெருமானைப் போல ஏன் நடஞ் செய்ய வேண்டும்? தன் எஜமானனாகிய சுக்ரீவனை நன்கு அறிந்த மதியூகியாகிய மாருதி, தன் நடனம்தான், தான் சொல்வதில் சுக்ரீவனுக்கு நம்பிக்கை ஊட்டும் என்று*

*கருதுகிறான். அடக்கத்தின் உறைவிடமான மாருதியே அடக்கத்தை விட்டுவிட்டுக் குதிக்கிறான் என்றால், அவனைப் பொறுத்தமட்டில் உறுதியாக நம்பும்படி யானதும், தனக்கும் அவனுக்கும் நலம் பயக்கக் கூடியது மான செய்தி ஒன்றுள்ளது என்பதுதானே பொருள். எனவே மாருதி நட்பும், அமைச்சன் என்ற முறையில் தன் தலைவனான சுக்ரீவனுடைய கவனத்தைத் திருப்பி, இராமன் பால் கொண்டு சேர்க்க உதவும். வாலி விண்பெறக் காலன் வந்தனன் என்று கூறும் செய்திக்குச் சுக்ரீவன் உடனே செவி சாய்ப்பான் என்று மாருதி கருதியது முற்றிலும் பொருத்தமானதே.*

*இனிச் சுக்ரீவனுடைய கவனத்தைத் தன் பக்கம் திருப்பிவிட்ட பிறகு, அவன் மனங் கொள்ளுமாறு இராமன் வரலாற்றைக் கூற வேண்டும். அனுமன் தனக்கே உரிய முறையில் இதனைச் செய்கிறான்.*

1. ஆர் உயிர்க்கு அமுதமேபோல் உளார்,
   *(நட்புக்கோள் படலம்—3)*
2. எளிதின் நிற்கு அரசுதந்து உதவுவார்.
3. நெடுங் கடவுள் வெம் படையினார். *(5)*
4. தாடகை விளிந்து உருள வில்கோலினார்.
5. கால்இயம் பொடியினால் நெடிய கல்படிவம் ஆம்
   ஆலிகைக்கு, அரியபேர் உரு அளித்தருளினான். *(6)*
6. தியம்பகம் எனும் வில் இறுத்தருளினான்.
7. வளை உடைப் புணரிசூழ் மகிதலத்திரு எலாம்
   இளையவற்கு உதவி, இத்தலை எழுந்தருளினான். *(9)*
8. விராதனை இராவகை துடைத் தருளினான்.
9. நீ, ஐயா! தவம் இழைத் துடைமையால், நெடுமனம்
   தூயையா உடைமையால், உறவினைத் துணிகுவார். *(10)*

*இவ்வாறு தொகுத்தும் வகுத்தும், தன் தலைவன் மனங் கொளக் கூறிய அனுமனைக் கம்பநாடன் 'மந்திரம் கொடு*

நூல் மரபு உணர்ந்து உதவுவான்' (15) என்று குறிக்கிறான். மேலே காட்டிய ஒன்பது கூற்றுக்களும் இரண்டு வகையாகப் பிரியும். ஒன்று இராமன் வலிமையை எடுத்து விளக்கியது. இரண்டு அவன் கருணை உடையவன் என்று கூறியது. 3, 4, 6, 8 ஆகியவை இராமன் வீரம் பற்றியது. 1, 2, 5, 7 என்பவை அவன் கருணை பற்றியது. ஏன் இவ்விரண்டு இயல்புகளையும் விரிவாகப் பேசுகிறான் என்பதை எளிதில் புரிந்துகொள்ள முடியும். சுக்ரீவனின் பகைவன் வாலி. அவன் ஆற்றல் உலகம் அறிந்த ஒன்றாகும். சுக்ரீவனுக்குத் துணையாக எத்தனை பேர் வந்தாலும் அவனை வெல்வது இயலாத காரியம். இயற்கையின் இறந்த ஆற்றல் பெற்றவர்களே அவனுடன் நின்று போரிட முடியும். எனவே வந்தவனுடைய ஆற்றலை வரிசைப்படுத்திக் கூறுகிறான் அனுமன். 'கடவுள் வெம்படை தாங்கினார்' என்பதால் வாலியின் வரபலத்துக்கு ஈடுகொடுக்கக் கூடியவர்கள் என்பதும், அதற்கு ஆதாரம் வேண்டுமே என்பதற்காகவே தாடகை, கரன், விராதன் முதலியவர்களை அழித்ததையும் கூறுகிறான். சிவபிரானுடைய திரியம்பகம் என்ற வில்லை ஒடித்தமை உரைத்ததும் இராமனது ஆற்றலை விளக்கியவாறாயிற்று.

## அரசு தந்து உதவுவார்

இத்தனையும் கேட்ட பிறகு, வாலியை இராமன் வெல்ல முடியும் என்று நம்பினாலும், அடுத்து, அந்தச் சந்தேகப் பிராணிக்கு மற்றுமோர் ஐயம் பிறந்துவிடும். இத்துணைப் பாடுபட்டு வாலியைக் கொன்று கிட்கிந் தையை வெல்பவர் அதனைத் தாமே அடைய வேண்டும் என்றுதானே கருதுவார்கள். எனவே, புதிதாக வந்தவர்கள் ஆற்றல் உடையவர்களாக இருந்து வாலியை வென்றாலும், தனக்கு அதனால் என்ன ஊதியம் கிடைக்கப்போகிறது என்ற முறையில்தானே அவன் மனம் வேலை செய்யும்?

அதனைத் தடுத்து, அவர்கள் கருணை உடையவர்கள், பிறர் பொருளுக்கு ஆசைப்படாதவர்கள் என்றும் கூற வேண்டும். அதிலும் இராமன் தன் உரிமைப் பொருளையே தம்பிக்குக் கொடுத்துவிட்டவன் என்பதைக் கூறினால் சுக்ரீவன் மனம் மகிழ்ந்து அவர்களைக் காண வருவான். அதற்காகவே 'எளிதில் அரசு தந்து உதவுவார்', 'இளையவற்கு உதவினான்' என்றெல்லாம் கூறுகிறான். இத்துணை விரும்பத்தக்கவை இருக்கும் என்று அறிந்த பிறகும், நம்மைத் தேடி ஏன் வந்தார்கள் என்ற வினா அவன் மனத்தில் தோன்றினால் என்ன செய்வது என்று, இறுதியில் அதற்கும் விடை கூறுகிறான் மாருதி. 'நீ தவம் செய்தவன், மனம் தூயவன், எனவே நின்பால் வந்தனர்' என்கிறான். தவம் செய்தவர்களை நாடி அவர்களே வந்து இடர் தீர்க்கிறார்கள் என்று எடுத்துக்காட்டத்தான் அகலிகைக்கு சாப விமோசனம் அளித்தவர்கள் என்று மாருதி கூறுகிறான். அவன் நோக்கமும் அதுவே.

## அனுமன் மறைத்த செய்தி

இதில் ஆழமானதும் நுணுக்கமானதும் ஆன ஒரு செய்தியும் உண்டு. இராம, இலக்குவர்களை யார் என்று மாருதி வினவியபொழுது, இளையவன் தங்கள் வரலாறு முழுவதையும் அந்த வினாடிவரைக் கூறித் தீர்த்தான். 'அவன் (இராமன்) தோற்றம் ஆதி, இராவணன் இழைத்த மாயப்புன் தொழில் ஈறாக், 'ஒன்றும் ஆண்டு ஒழிவுறாமல் உணர்த்தினன்' (அனுமப்படலம்—29) என்றால், கவந்தன் 'சுக்ரீவன் துணையை நாடிப் பின் பிராட்டியைத் தேடும் முயற்சியில் ஈடுபடுக' என்று கூறினதையும் இலக்குவன் அனுமனிடம் கூறித்தானே இருப்பான். இதனை அறிந்திருந்தும், அனுமன் சுக்ரீவனிடம் பேசும்போது, உன் உதவியை நாடிவந்துள்ளனர் என்ற கருத்தைக் கூறாதது சிந்திக்கற்பாலது. 'மதி இலா நிருதர் கோன் மனைவியைத் தீய கான்நெறியின் உய்த்தனன்;

அவள் தேடுவார் நின் உறவினைத் துணிகுவார்'(நட்புக்கோள் படலம் 14) என்று மட்டும் கூறினானே தவிர, அவர்கள் சுக்ரீவனை நாடி ஏன் வந்தனர் என்று கூறவில்லை. தன்னிடத்தில் ஒரு பயனை நாடி வந்துள்ளனர் என்று தெரிந்தால் சுக்ரீவனைப் போன்ற சந்தேகப் பிராணிகட்கு அவர்கள்மேல் இருக்கும் மதிப்புத் திடீரென்று குறைந்துவிடும். அதனால்தான் தன் தலைவனின் பண்புகளை நன்கறிந்த மாருதி இதனைக் கூறாமல் விட்டுவிட்டான். இராமன் கருத்து இது என்று முன்கூட்டியே சுக்ரீவனிடம் அனுமன் கூறாமையால், இராமன் 'கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தேம்' (34) என்று கூறினாலும், சுக்ரீவன் செவிகளில் அச்சொற்கள் ஏறவே இல்லை. இதன்பிறகு இராமனையும், சுக்ரீவனையும் சந்திக்குமாறு அனுமன் செய்ததும், இருவரும் நட்புக் கொண்டபின் சுக்ரீவன் இருப்பிடத்திற்கு அவர்களை அழைத்து வந்ததும், உணவு பரிமாறியதும், அதனை உண்ட பிறகு அவ்வீட்டில் பெண்கள் இல்லை என்பதை இராமன் அறியுமாறு செய்ததும், 'பொருந்து நல்மனைக்கு உரிய பூவையைப் பிரிந்துளாய் கொலோ நீயும் பின்?' (35) என்று கேட்க வைத்ததும், அனுமன் மதிக் கூர்மையாலேயே யாகும்.

நா நலம்

இராமனை, 'நீயும் மனைவியைப் பிரிந்து வாழ்கிறாயா?' என்று கேட்குமாறு செய்தவன் மாருதி. அவனாகக் கேட்ட பிறகு, வாலியைப் பற்றிப் பேசுகிறான் மாருதி. முதன்முதலில் இராமனைச் சந்தித்துப் பேசும்பொழுது, வாலியால் துரத்தப்பட்டான் சுக்ரீவன் என்று கூறினானே தவிர, மனைவியை இழந்த வரலாற்றைக் கூறவில்லை.

> ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
> கருதி இடத்தாற் செயின் (திருக்குறள்—483)

என்பதை நன்கு அறிந்த அறிஞன் ஆதலால், காலம், இடம் அறிந்து பேசுகிறான். தம்பிக்கு நாட்டைக் கொடுத்த

*வனிடம் முதலில் பரிவைப் பெறுவதற்கு, தம்பியின் நாட்டை அண்ணன் பிடித்துக்கொண்டு விரட்டிவிட்டான் என்று மட்டும் கூறினான். இப்பொழுது தன் சொற்களால் இராமனே சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்குமாறு நாடகம் ஆடிவிட்டான் மாருதி. இராமன் அவ்வாறு கேட்ட பிறகு, சுக்ரீவன் மனைவியைப் பற்றி ஒன்றும் முதலில் கூறாமல், 30 பாடல்கள் வாலியைப் பற்றியும், அவன் வீரம் பற்றியும் பேசிவிட்டு 31ஆவது பாடலில்*

உருமை என்று இவற்கு உரிய தாரமாம்
அருமருந்தையும் அவன் விரும்பினான்.
இருமையும் துறந்து இவன் இருந்தனன்.
கருமம் இங்கு இது, எம் கடவுள்! என்றனன்.

*(நட்புக்கோள் படலம்—67)*

## இருவகைப் பயன்கள்

*'நீயும் மனைவியை இழந்தவனா' என்ற வினாவிற்கு 'ஆம்' என்பதுதானே நேரான விடை. அதைக் கூறிவிட்டல்லவா இழக்க நேர்ந்த காரணத்தைக் கூற வேண்டும். அப்படி இருக்கச் சொல்லின் செல்வனாம் அனுமன், 'மற்றொன்று விரித்தல்' என்னும் குற்றம் தோன்றும்படி, 30 பாடல்களில் வாலியைப் பற்றிக் கூறுவது ஏன்? இவ்வாறு கூறுவதால் இரண்டு வகையான பயனை விரும்புகிறான் மாருதி. பகைவன் யார் என்பதை விவரமாகத் தெரிந்து கொண்டு பிறகே, அவன் ஆற்றல் எத்தகையது என்பதை அறிந்துகொண்ட பிறகே, இராகவன் ஒரு முடிவுக்கு வர முடியும். அப்படி அவன் முடிவுக்கு வர வாய்ப்பளிப்பதே நியாயமாகும். இரண்டாவது புதிதாக நண்பனாக வந்துள்ள இராகவன், எவ்வளவு தூரம் இந்த அண்ணன் தம்பிப் போராட்டத்தில் பங்கு எடுத்துக்கொள்ள விரும்புவான் என்பதையும் அறிந்துகொள்ள, ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.*

*இவ்விரண்டு பயன்கள் போக, நுண்ணறிவுடைய மாருதி வேறு ஒரு பயனையும் கருதி, இவ்வளவு விரிவாக வாலி பற்றிப் பேசுகிறான். ஒப்பற்ற வீரனாகிய இராகவன் மற்றோர் ஒப்பற்ற வீரனாகிய வாலி பற்றி அறியும்பொழுது, என்ன நினைக்கிறான் என்பதை அறிய வேண்டும். இராகவனை முதலில் தான் தனியாகச் சந்தித்தபொழுதே, அண்ணனால் துரத்தப்பட்டுச் சுக்ரீவன் இரலையின் குன்றத்தில் ஒதுங்கி (பதுங்கி) வாழ்கிறான் என்பதைக் குறிப்பிட்டுக் கூறினான். ஆனால் இராகவன் அதுபற்றி மேலும் விசாரிக்கவில்லை யாகலின், மாருதி மனத்தில் ஓர் ஐயம் இருந்துகொண்டே இருந்தது. எனவே வாலியைப் பற்றி இவ்வாறு விரிவாகப் பேசிக்கொண்டு வரும்போதே, இராகவன் முகத்தைக் கூர்மையாகக் கவனித்துக் கொண்டே வருகின்றான். வாலியைப் பற்றிக் கேட்ட சூழ்நிலையில், தம்பியை வேண்டு மென்று எந்தத் தவறும் செய்யாத நிலையிலும் கொடுமைப் படுத்தினான் என்ற செய்தியை அறியும்போது, இராகவன் முகத்தில் சினக்குறி தோன்றியிருக்க வேண்டும். அதைக் கண்டு, இதுவே நல்ல சூழ்நிலை என்று கருதிய மாருதி, இவன் தாரத்தையும் அவன் வவ்விக் கொண்டான் என்று கூறி முடித்தான். அவன் எதிர்பார்த்தபடியே இராகவன் முகம் இறுகிக்கொண்டே வந்தது போலும். இந்த வார்த்தை களை அனுமன் கூறியவுடன் இராகவன் வெடிக்கின்றான்.*

உலகம் ஏழினோடு ஏழும் வந்து, அவன் உயிர்க்கு உதவி
விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டி
தலைமையோடு, நின்தாரமும், உனக்கு இன்று தருவென்
புலமையோய்! அவன் உறைவிடம் காட்டு, என்று புகன்றான்.

*(நட்புக்கோள் படலம்—70)*

*[பதினான்கு உலகங்களும் அவனைக் காக்க உதவி செய்யினும், வில்லில் அம்பைப் பூட்டி உனக்கு அரசையும், மனைவியையும் இன்று தருகின்றேன். அவன் இருப்பிடம் காட்டு என்றான்.]*

*இவ்வாறு இராகவன் சொல்ல வேண்டும் என்பது தான் மாருதியின் விருப்பம். சொல்லின் செல்வனாகிய அனுமன் தன் பேச்சாற்றலால் இதனைச் செய்து முடித்து விடுகிறான்.*

## சுக்ரீவன் ஐயம்

*இவ்வளவு தூரம் இராமன் கூறியும் சுக்ரீவனுடைய மனத்தில் நிறைந்துள்ள ஐயம் நீங்கினபாடில்லை. எனவே, சுக்ரீவன் தன் அமைச்சர்களைத் தனியே அழைத்துச் சென்று ஆலோசனை நடத்துகிறான். அவன் மனத்தில் உள்ள ஐயத்தைப் புரிந்துகொண்ட மாருதி பேசத் தொடங்குகிறான்.*

அன்ன வாலியைக் காலனுக்கு அளிப்பது ஓர் ஆற்றல்
இன்ன வீரர்பால் இல்லை என்று அயிர்த்தான். *(73)*

[*அயிர்த்தல்—சந்தேகித்தல்.*]

*இதனை உணர்ந்து "ஐயா! அவன் கைகளிலும் கால்களிலும் சங்கு சக்கரக் குறிகள் உள. இந்த இராமன் அத்திருநெடுமாலே! அறம் நிறுத்தற்கு ஈண்டும் பிறந்தனன். என்னைப் பெற்றவன். உலகைப் படைத்த நான்முகனைப் பெற்றவனாகிய திருமாலுக்கு அடிமை செய்; அதுவே உனக்குத் தவம்; அதுவே உன்னைப் பெற்ற எனக்கும் நலம் என்று உரைத்தான். நான் 'யாவர்க்கும் துன்பம் தோன்றும் பொழுது உடன் தோன்றுபவனாகவும், யாவருக்கும் முன்பு உள்ளவனாகவும் உள்ள அவனை அறிதற்கு வழி யாது?' என்று கேட்டேன். 'அன்பே சான்றாகும்' என்று என் தந்தை கூறினான். இராமனைக் கண்டபொழுது என் உடம்பில் எலும்பே இல்லாததுபோல் உருகிற்று! வேறு என்ன வேண்டும்?" என்ற பொருளில் அனுமன் கூறுகிறான்.*

சங்கு சக்கரக்குறி உள, தடக்கையில், தாளில்
..............................

செங்கண் வில்கரத்து இராமன், அத்திரு நெடுமாலே!
இங்கு உதித்தனன், ஈண்டு அறம் நிறுத்துதற்கு...........

*(நட்புக்கோள் படலம்—74)*

என்னை ஈன்றவன், இவ்வுலகு யாவையும் ஈன்றான்
தன்னை ஈன்றவற்கு அடிமைசெய்; தவம் உனக்கு அஃதே
உன்னை ஈன்ற எற்கு உறுபதம் உளது என உறைத்தான்
.........................................................

*(75)*

துன்பு தோன்றிய பொழுது உடன் தோன்றுவான்; எவர்க்கும்
முன்பு தோன்றலை அறிதற்கு முடிவு என்? என்றுஇயம்ப,
அன்பு சான்று, என உரைத்தனன்; ஐய! என் ஆக்கை
என்பு தோன்றல உருகின எனின், பிறிது எவனோ?

*(77)*

*அனுமனுடைய ஆன்ம வளர்ச்சி எத்தகையது என்பதை அறிய இப்பகுதி வாய்ப்பு அளிக்கின்றது. 77ஆவது பாடலில் 'துன்பு தோன்றியபொழுது உடன் தோன்றுவான்' என்ற அடி ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. அதுவரை ஆண்டவனை நினைக்காதவன்கூடத் துன்பம் வந்தவுடன் உடனே ஆண்டவனைத்தான் நினைக்கிறான். 'நோயுளார் வாயுளான்' என்னும் தேவாரம், 'அஞ்சு முகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்' என்பது பிற்காலத்துப் பாடல். எனவே, சுக்ரீவனுக்குப் புரிகின்ற வகையில் இராமன் யார் என்பதை எடுத்து விளக்கும் மாருதியின் திறம், அறிந்து மகிழ்தற்குரியது.*

*இதே மாருதிதான், இராவணன் எதிரே வேறுவிதமாகப் பேசுகிறான். 'நீ திருமாலா, சிவபிரானா?' என்று கேட்கும் இராவணனுக்கு, 'நீ சொன்ன புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்!' என்று கூறுகிறான். அப்படியானால் இரண்டு விதமாக அனுமன் பேசக் காரணம் யாது என்று சிந்திப்பதில் தவறு ஏதும் இல்லை. மும்மூர்த்திகள் பற்றிய செய்திகளை மட்டும் அறிந்தவன்*

*சுக்ரீவன். அதற்குமேல் இறை இலக்கணத்தை யாரேனும் பேசத் தொடங்கினால் அவன் காதுகளில் அவை ஏறா. அவனுடைய அறிவின் அளவு அதனை ஏற்றுக்கொள்ளும் வளர்ச்சியையும் பெற்றிருக்கவில்லை. எனவே 'திருமாலுக்கு அடிமை செய்' என்று தந்தை கூறியதைக் கூறி, வந்தவன் திருமாலே என்ற விவரத்தைக் கூறுகிறான். யார் யார், எந்த அளவு அறிவு பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள முடியுமோ, அந்த அளவை அறிந்து அவர்கட்கு வழங்குபவனே சிறந்த அறிவாளி எனப்படுவான். அடுத்த படியாகத் தன் கல்விப் பெருக்கம், அனுபவ அறிவு பரஞானம் ஆகிய அனைத்தையும் வெளிப்படுத்தி இறை இலக்கணத்தை அதனை முற்றிலும் அறிந்துகொள்ளக் கூடிய இராவணன் எதிரே அழகாகப் பேசுகிறான். அங்கே நான்முகன் திருமால் சிவன் என்றவர்கள் பற்றிய பேச்சே இல்லை.* **பரம்பொருளின் இலக்கணம் அதனை** *அனுமன் தருக்க முறையில் பேசுகின்ற ஒரே இடம் இராவணன் எதிரில்தான்.*

## மாருதி முடிவுக்கு வாராதது ஏன்?

*இனி அவனுடைய சொந்த அனுபவத்தின் அடிப் படையில், இராமன் பற்றி என்ன நினைத்தான் என்பதை, அறிய முயல்வது பயனுடையதாகும். இரலைக் குன்றத்தில் இராமன் தம்பியொடும் வருகின்ற பொழுது, அனுமன்,*

> அவர்களோ தருமம் ஆவார்? *(அனுமப் படலம்—12)*
>
> மீளா நெறி உய்க்கும் தேவரோதாம்? *(13)*

*"பிறப்பை அறுக்கும் தேவரோ?" என்பதில் ஓரளவு அவனுடைய ஐயம் தெரிகிறது என்றாலும், 'இவர் நிலைமை தேர்வது எக்கிழமை கொடு?' (5) என்ற நிலையில்தான் இருக்கிறான். அடுத்துத் தன் தந்தை கூறிய அடிப்படையில் தன் எலும்பு உருகுகின்றதையும், தன்*

அன்பு செல்கின்றதையும் உணர்ந்து, வந்தவன் திருமால் என்ற முடிவுக்கு வர முயல்கிறான்.

இந்த நாட்டு மரபுப்படி இறைவியின் அருள் இல்லாமல் இறைவன் திருவருளைப் பெற முடியாது. வைணவ மரபில் புருஷகார வைபவம் இன்றி, இறைவனின் அருளைப் பெறவோ, அவனை அறியவோ முடியாது. இப்பொழுது அனுமன் இராமனை மட்டும் காண்கிறானே தவிரப் பிராட்டியைக் காண்கிலன் அன்றோ? எனவே அவன் இராமன் யார் என்பதில் தொண்ணூறு சதவீதம் உறுதி கொண்டிருந்தாலும், எஞ்சிய பத்துச் சதவீதம், முடிவுக்கு வர இயலவில்லை. இது முற்றுப் பெற அவன் இலங்கை செல்ல வேண்டியுளது. இராமன் தனி உரையாடலில், பிராட்டியின் அங்க அடையாளங்களை அறிந்துகொண்டு செல்கிறான். இதிலும் ஒரு வேடிக்கை இருக்கிறது. இராமன் பிராட்டியின் அடையாளம் கூறியதைப் பார்த்தால், அயோத்தியில் தசரதன் மருகியாக இருந்த பொழுது இருந்த வடிவ அமைப்புத்தான் நினைவில் வரும். நாடவிட்ட படலத்தில் முப்பத்து மூன்று பாடல்களில் இராகவன் பிராட்டியை வருணித்துக் கூறுகிறான். புலனடக்கத்தில் தலைநின்ற அனுமன் அவன் கூறிய அங்க அடையாளங்களை அப்படியே மனத்தில் பதித்துக் கொண்டான். அசோகவனத்தில், பகைவன் தொல்லைகட்கு ஆட்பட்டு அவதியுறும் ஒரு கற்பின் செல்வியை, இராமனாலும் கற்பனை செய்து பார்க்க முடியவில்லை.

## இராமன் செய்த சிறு தவறு

இராமன் என்ற அன்புக் கணவன், தான் அன்றுவரை பழகிய சீதையைத்தான், தன் மனத்திரையில் எழுதி வைத்து வழிபட்டு வருகிறான். எனவே அவன் அனுமனிடம் பேசும்போது அந்த வடிவ அடையாளத்தையே கூறினான்,

இதனை அப்படியே தன் மனத்தில் வாங்கிக்கொண்டு இலங்கை செல்கிறான் அனுமன். பிறர் காண முடியாச் சிறிய வடிவம் எடுத்துக்கொண்டு இராவணன் அரண்மனையில் நுழைந்த அனுமன், ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டு செல்கிறான். அந்த நிலையில் ஒரு மாபெருந் தவற்றைச் செய்கிறான். மகளிர் உறங்கும் அந்தப்புரம் சென்று காணும்பொழுது, இராமன் கூறிய அடையாளங்கள் பெரும் பகுதி பொருந்தி இருக்கும் ஓர் அணங்கு உறங்குவதைக் கண்டான்.

அன்னள் ஆகிய சானகி இவள் என அயிர்த்து
அகத்து எழு வெந் தீ
துன்னும் ஆர் உயிர் உடலொடு சுடுவது ஓர்
துயர் உழந்து, இவை சொன்னான்.

எற்பு வான்தொடர் யாக்கையில் பெறும் பயன்
இழந்தனள்! இது நிற்க
அற்பு வான்தளை இற்பிறப்பு அதனொடும்
இகந்து தன் அருந் தெய்வக்
கற்புநீங்கிய கனங்குழை இவள்எனின்,
காகுத்தன் புகழொடும்
பொற்பும், யானும், இவ் இலங்கையும், ஆக்கமும்
பொன்றுதும் இன்று என்றான்,

*(ஊர்தேடு படலம்—200)*

[என்புடன் கூடிய உடம்பெடுத்த பயனை இவள் இழந்தாள். மேலும் அன்புடன் கூடிய நற்குடிப்பிறப்பையும் விட்டு, தன் கற்பும் நீங்கிய கனங்குழை இவள் எனில், காகுத்தன் புகழொடு யானும் இலங்கையில் இன்றே இறப்பது சரி.]

அனுமன் கண்டது இராவணன் மனைவியும், கற்புடைப் பெருமாட்டியும் ஆகிய மண்டோதரியையே ஆகும். இராமன் வருணித்த அழகு ஒருபுடை ஒத்தலின்

*சீதையோ என ஐயுறுகின்றான். அனுமன் இத்தவற்றை அவன் செய்ய முழுதும் பொறுப்பானவன் இராகவனே ஆவான். கடுமையான பிரமச்சரிய விரதத்தில் நிற்கும் அனுமனிடம் அவன் கூறிய அடையாளம் அரண்மனையிலிருந்த சீதை பற்றியது. ஆகவேதான், அனுமன் இத்தவற்றைச் செய்தான். என்றாலும் அவனுடைய அகமனம் இம்முடிவை ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே சற்று நின்று, உண்மையை அறிந்து விடுகிறான்.*

## பத்துச் சதவீதச் சந்தேக நீக்கம்

*இனிப் பல இடங்கள் சென்று தேடி, இறுதியாக அசோகவனத்தில், ஒரு மரக்கிளையின் மேல் நின்று, கீழே இருக்கும் சீதையைக் காண்கிறான். முதன்முறையாக அவளைக் கண்ட உடன் அனுமன் மனத்தில் தோன்றிய முதலாவது எண்ணம் பற்றி இதோ கம்பனே கூறுகிறான்:*

மூவகை உலகையும் முறையின் நீக்கிய
பாவிதன் உயிர்கொள்வான் இழைத்த பண்புஇதால்
ஆவதே; அரவணைத் துயிலின் நீங்கிய
தேவனே அவன் இவள் கமலச் செல்வியே!

*(காட்சிப் படலம்—66)*

*[மூன்று உலகங்களையும் செந்நெறியில் செல்ல ஒட்டாமல் நீக்கிய பாவியாகிய (இராவணன்) தன் உயிரை இராமன் கொள்வதற்கு வகுத்த வழி இதுவோ? அவன் அரவின்மேல் துயில் நீங்கியவனே ஆவான். இவள் தாமரை உறையும் செல்வியே ஆவாள்.]*

*பிராட்டியைத் தவக்கோலத்தில் பார்த்தவுடன் அனுமன் நினைவு இராமனிடம் தாவிற்று. காரணம். தொண்ணூறு பங்கு அவன் இன்னான் என்று தெரிந்திருந்தும், பிராட்டி இன்மையால் முழுவதுமாக அதை ஏற்க விரும்பாமல் இருந்தவனாகலின், இப்பொழுது*

இவளை முதன்முறையாகப் பார்த்தஉடன், பழைய நினைவு வலுப்பட்டதாகலின், 'துயிலின் நீங்கிய தேவனே அவன்' என்று அதை முதலில் கூறி, அதற்குக் காரணம் கற்பிப்பவன் போல, 'இவள் கமலச் செல்வியே' என்று முடிக்கிறான்.

அசோகவனத்தில் பிராட்டி இருந்த கோலத்தைக் கண்ட அவன், மலை இடுக்கில் மழை இன்றி வாடிய மருந்துச் செடி உலர்ந்து நிற்பதைப் போன்று, அவள் காட்சி அளிப்பதைக் கண்டு, இதோ பேசுகிறான்:

பேண நோற்றது மனைப் பிறவி, பெண் மைபோல்
நாணம் நோற்று உயர்ந்தது, நங்கை தோன்றலால்
மாண நோற்று ஈண்டு இவள் இருந்தவாறு எலாம்
காண நோற்றிலன், அவன் கமலக் கண்களால்!

(காட்சிப் படலம்—73)

[இந்த நங்கை பிறத்தலால் குடிப்பிறப்பும் நாணமும் உயர்ந்தன; தவஞ்செய்துகொண்டு இங்கு இவள் இருக்கும் நிலையை, அவன் காணக் கொடுத்து வைக்கவில்லையே! கமலம் போன்ற கண்கள் இருந்து என்ன பயன்?]

அறிவின் மேம்பட்டவனாகிய மாருதிகூட உணர்ச்சி வசப்பட்டு இவ்வாறு பேசத் தொடங்குகிறான். அவன் கமலக் கண்களால் இவளைப் பார்க்கும் நிலை ஏற்பட்டால், இவள் இப்படி வாடி, வருந்தி, மாண நோற்று இருக்க வேண்டிய நிலையே வந்திராதே என்பதனைக்கூட மறந்துவிட்டுப் பேசுகிறான். 'தவம் செய்த தவமாம் தையல்' என்று பின்னரும் பேசுகிறான்.

## தன் புகழ் பேசான்

இலங்கையில் பெரும் போர் நிகழ்த்தி, கறங்கு கால்புகா, கதிரவன் ஒளிபுகா அந்நகரை எரியூட்டி, உடல் முழுதும் புண்களுடன் மீண்ட அனுமனை, அவன்

கூடவந்த சாம்பன் முதலானவர்கள் நடந்ததைக் கூறுமாறு கேட்கவும், அனைத்தையும் கூறி, தான் வெற்றி பெற்ற மையை மட்டும் கூறவில்லையாம்.

ஆண்தகை, தேவி உள்ளத்து
அருந்தவம் அமையச் சொல்லி,
பூண்டபேர் அடையாளம் கைக்
கொண்டதும் புகன்று, போரில்
நீண்ட வாள் அரக்கரோடு
நிகழ்ந்ததும், நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான்–தான் தன்
வென்றியை உரைப்ப வெள்கி.

*(திருவடி தொழுத படலம்—9)*

[தேவி அருந்தவம் ஆற்றுவதையும், அப்பெருமாட்டியிடம் அடையாளம் கைக்கொண்டதும் கூறிவிட்டு, அரக்கருடன் போரிட்டதையும், இலங்கையை எரியூட்டியதையும் கூறவில்லை. ஏன்? தானே தன் வெற்றியை உரைப்பதற்கு வெட்கப்பட்டமையால்.]

யாரும் உட்செல்ல முடியாத இலங்கையின் உள்ளே புகுந்ததும், தேவர்களும் அஞ்சி நடுங்கும் அரக்கருடன் போரிட்டதும் தீக்கடவுளும் உள்நுழைய முடியாத இலங்கையை எரியூட்டியதும், யாரும் கனவினுங் கருத முடியாத செயல்களன்றோ? அப்படி இருந்தும், இந்த வெற்றிகளை அனுமன் கூறவில்லை என்றால், அவனுடைய பண்பாட்டின் சிறப்பை என் என்று கூற முடியும்? இத்தகைய பண்பாடும், தற்பெருமை இன்மையும் அனுமனுக்கு எவ்வாறு கிடைத்தன? அவனுடைய புலனடக்கத்தால் பண்பாடு வந்துள்ளது. அதன் பயனாக அகங்கார மமகாரங்கள் அறவே நீங்கினமையின், நடப்பவெல்லாம் இறைவன் செயல் என்ற உறுதி ஏற்பட்டு விட்டது. இறைவன் அருளால், அவனுடைய கருவியாக இருந்து, தான் இவற்றைச் செய்ததாகவும், இதில் தான்

*பெருமையோ அகங்காரமோ அடைவதற்கு ஒன்றும் இல்லை என்பதும், அந்த அறிஞன் கண்ட பேருண்மைகளாகும். இந்தப் பண்பாடுடையார் நாணம் என்னும் சிறப்பினைப் பெற்று விளங்குபவர்.*

நாண் அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர் மருட்டியற்று. *(திருக்குறள்—1020)*

*[தம் மனத்தில் நாணம் இல்லாதவர், உயிருடன் உலவுதல் மரப்பொம்மை இயந்திரக் கயிற்றினால் உலா வருதல் போலாம்.]*

*அனுமன் என்ற பெருமகன், எத்துணை அடக்கமும் நாணமும் உடையவன் என்பதை விளக்க, இன்னும் இரண்டொரு எடுத்துக்காட்டுகளையும் காணலாம்.*

## ஏவல் கூவல் பணி

*அசோக வனத்தில் சிறை இருந்த செல்வியைக் கண்டு பேசிய பிறகு விடைபெற நிற்கின்றான் அனுமன். அந்த நிலையில், தம்பி ஒருவனைத் தவிர, வேறு துணையே இல்லையே தன் தலைவனுக்கு என்று வருந்தும் பிராட்டிக்குச் சுக்ரீவன் படைபலம் பற்றிக் கூறவந்த அனுமன், தன்னைப் பற்றியும் கூறவேண்டிய இக்கட்டான நிலையில் உள்ளான்.*

அண்ணல் பெரியோன், அடிவணங்கி,
அறிய உரைப்பான், அருந்ததியே!
வண்ணக் கடலின் இடைக்கிடந்த
மணலின் பலரால் வானரத்தின்
எண்ணற்கு அரிய படைத்தலைவர்,
இராமற்கு அடியார்; யான் அவர்தம்
பண்ணைக்கு ஒருவன் எனப்போந்தேன்
ஏவல் கூவல் பணி செய்வேன்.

*(சூடாமணிப் படலம்—114)*

*[அண்ணலாகிய அனுமன் பிராட்டியின் திருவடிகளை வணங்கி, 'தாயே! வானரப்படைத் தலைவர்கள் இராமனுக்கு அடியார்களாய் உள்ளவர்கள், ஒளி பொருந்திய கடலிற்கிடந்த மணலைக்காட்டிலும் பலராவர். அந்தப் பெரிய பண்ணைக்கு அடையாளமாக யான் ஒருவன் வந்தேன். அவர்கள் படைத்தலைவர்கள்; யானோ அவர்கட்கு எடுபிடி ஆளாய் உள்ளவன்' என்கிறான்.]*

*பாடலின் இறுதியில் அப்பெருமகன் படைத்தலைவர் கடலிடு மணலினும் பலராவர்; அவர்களுள் தான் எடுபிடி வேலை செய்யும் பணியாளன் என்று தன்னைப் பற்றிக் கூறிக் கொள்கிறான், செயற்கருஞ் செயல்களை அநாயாசமாகச் செய்பவனும், பிராட்டியின் இருப்பிடத்தைக் காணும் பேராற்றல் படைத்தவனும், இராவணன் எதிரே இருந்து கொண்டு 'புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்' என்று கூறும் ஆற்றல் பெற்றவனுமான மாருதி, தன்னைப் பற்றிக் கூறவேண்டிய நிலைமை வரும்பொழுது, 'ஏவல் கூவல் பணி செய்வேன்' என்று கூறுகிறான் என்றால்,*

பணியுமாம் என்றும் பெருமை *(திருக்குறள்—978)*
அடக்கம் அமரருள் உய்க்கும் *(திருக்குறள்—121)*

*என்னும் குறள்களுக்கு இலக்கணமாய் விளங்குகிறான் என்பதை நாம் எளிதில் அறியலாம் அன்றோ?*

## நம்பிக்கை ஊட்டப் பயன்பட்டது

*'சொல்லின் செல்வன்' என்று இராகவனால் பட்டம் சூட்டப்பெற்ற மாருதி இரண்டு இடங்களில் தன் சொற்செல்வத்தை வெளிக்காட்டுகிறான். மனம் உடைந்துபோன பிராட்டி, இனித் தன் கணவன் தன்னை மீட்பான் என்ற நம்பிக்கையை இழந்து, அனுமனிடம் சில செய்திகள் கூறுகிறாள். பத்துப் பாடல்களில் தன் மனக் கருத்தை வெளியிடும் அவள் இறுதியாகக் கூறிய சொற்கள்,*

அவள் நம்பிக்கை இழந்து பேசுகிறாள் என்பதனுடன், பெண்களுக்கே உரிய மன உளைச்சலும் வெளிப்படக் காரணமாக உள்ளன. ‘இராகவன் எப்பொழுது வருவான் என்று வருந்தித் தளர்ந்துள்ள உலகைத் திருப்திப்படுத்தவும், தாயாரின் துயர் துடைக்கவும், பரதன் மன வருத்தத்தைப் போக்குதற்கும் அயோத்திக்குப் போய்விடுவானே அல்லாமல், என் ஒருத்தி பொருட்டாக இங்கே எங்கே வரப்போகிறான்?’

‘அனுமனே! எந்தை, தாய் முதலிய உறவினர்க்கும் என் வணக்கம் கூறுக. சுக்ரீவனிடம் கூறி, இராமனைத் தொடர்ந்து காத்துச் சென்று, அயோத்தியில் முடிசூட்டச் சொல்லுக’ என்ற பொருளில்,

தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும், பரதன் அங்கு ஆற்றுறும்
இன்னல் நோய்க்கும், அங்கு ஏகுவது அன்றியே
என்னை நோக்கி, இங்கு, எங்ஙனம் எய்துமோ?

எந்தை, யாய் முதலிய கிளைஞர் யாவர்க்கும்
வந்தனை விளம்புதி; கவியின் மன்னனை
‘சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தம் இல் திருநகர்க்கு அரசன் ஆக்கு’.............

(சூடாமணிப் படலம்—37, 38)

என்று கூறுகிறாள். அவளுடைய மனத்துயரின் ஆழத்தை இச்சொற்களிலிருந்து எளிதில் கண்டு கொள்ளலாம். இரண்டாவது பாடலில் ‘வணக்கம் சொல்க’ என்று கூறுகிறவள், தன் தாய் தந்தையரை மட்டும் நினைவுகூர்ந்து சொல்வது, வேதனையின் அளவைக் காட்டும்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட மாருதி 35 பாடல்களில் பிராட்டிக்கு அமைதி கூறுகிறான். சாதாரண முறையில் கூறினால் எடுபடாது என்று நினைத்த அந்த அறிஞன், நகைச்சுவையுடன், தொல்காப்பியங் கூறும் அங்கத முறையில் பேசுகிறான்.

வீவாய் நீ இவண்? மெய் அஃதே?
ஒய்வான் இன்னுயிர், உய்வானாம்!
போய், வான் அந் நகர் புக்கு அன்றோ?
வேய்வான் மௌலியும் மெய் அன்றோ?
*(சூடாமணிப் படலம்—40)*

*[நீ இங்கு இருந்து உயிர் விடுவாய், அதைப் பார்த்து அவன் உயிர் விடானாய் அயோத்தி திரும்பிச் சென்றால் அன்றோ முடிசூடும் நிகழ்ச்சி நடைபெறுவது?]*

கைத்து ஓடும் சிறை, கற்போயை
வைத்தேன் இன்னுயிர் வாழ்வானாம்!
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்!
இத்தோடு ஒப்பது யாது உண்டோ? *(41)*

*[யாரும் வெறுத்து ஓடுகின்ற சிறையில் கற்புடைய உன்னை வைத்தவன் உயிருடன் வாழ்வான்; பொய்யாக வில்லைத் தாங்கிய இருவரும் அவனைப் பழிவாங்காமல் போவார்கள் என்றால், இதுபோன்ற வேறு ஏதேனும் வேடிக்கை உண்டா?]*

*இறுதியாக அனுமன் தனக்கே உரிய முறையில் ஒரு சபதம் செய்கின்றான்.*

குரா வரும் குழலி! குறித்த நாளினே,
விரா அரு நெடுஞ் சிறை மீட்கிலான் எனின்
பராவரும் பழியொடும் பாவம் பற்றுதற்கு
இராவணன் அவன்; இவன் இராமன் என்றனன் *(74)*

*[மருதோன்றிப் பூ மணம் வீசும் கூந்தலை உடையாய்! நீ குறித்த நாளில் இந்த நெடுஞ் சிறையிலிருந்து நின்னை மீட்கவில்லையானால், பழியும் பாவமும், பற்றுதலினால், அவன் இராவணன் என்றும் இவனே இராமன் என்றும் ஏசப்படுவர்.]*

*இந்த முறையில் சற்றுக் கடுமையாக அனுமன் பேசினதால்தான், பிராட்டி தன் துயரை நீக்கி ஓகை*

கொண்டு களிக்கும் மனத்தள் ஆயினாள். எனவே அனுமனை அல்லாமல் அவனை ஒத்த வலி படைத்தவர் வேறு யாரேனும் இலங்கையில் அவன் இடத்தில் வந்திருந்தாலும், அவன் செய்த, செய்யப் போகும், வீரச்செயல்களைச் செய்திருந்தாலும், அவர்களால் பிராட்டியின் துயரைப் போக்கி இருக்க முடியாது.

## என்ன கைம்மாறு?

இத்தகைய பேருபகாரம் செய்த அனுமனுக்குப் பிராட்டி கைம்மாறு செய்ய விரும்புகிறாள். ஒருவருக்கு ஓர் உபகாரம் அல்லது கைம்மாறு செய்ய வேண்டும் எனின், என்ன செய்ய வேண்டும்? அவர்களிடம் முன்னமே இல்லாததும், அவர்கட்குப் பயன்படக் கூடியதும் ஆன ஒன்றைத் தருதலே சிறப்புடைமை ஆகும். அப்படியானால் அனுமனுக்கு என்ன செய்ய முடியும்? அவன் கலைகளின் உறைவிடம்; எல்லையற்ற ஆற்றல் படைத்தவன்; தவ பலம் உடையவன்; இவை எல்லாவற்றையும்விட, புலனடக்கம் காரணமாக எதுவும் வேண்டும் என்று விரும்பாதவன். எதிலும் பற்றில்லாதவனை யார்தான் என்ன செய்ய முடியும்?

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை
யாண்டும் அஃது ஒப்பது இல்.

*(திருக்குறள்—363)*

எதுவும் வேண்டா என்று நினைப்பதே மிக மிக உயர்ந்த செல்வமாகும். வேறு எங்கும் அதை ஒத்த செல்வம் வேறு இல்லை என்பது அறநூல். வேண்டாமை என்ற அத்தகைய விழுமிய செல்வத்தை நிரம்பப் பெற்றுள்ள அனுமனுக்கு யார்தான் எதைத் தர முடியும்?

எனவே, பிராட்டி பலபடியாக அவனைப் பாராட்டுகிறாள்.

மும்மை ஆம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூது ஆய்
செம்மையால் உயிர்தந்தாய்க்கு செயல்
என்னால் எளியது உண்டே?
அம்மையாய், அப்பன் ஆய, அத்தனே
அருளின் வாழ்வே!
இம்மையே மறுமைதானும் நல்கினை
இசையோடு என்றாள்.

*(உருக்காட்டுப் படலம்—70)*

*தன்னைப் பெற்ற தாயும் தகப்பனும் அனுமனே, என்று போற்றுகிறாள். இவ்வாறு அப்பிராட்டி கூறும்பொழுது, ஆழ்ந்த பொருளை உள்ளடக்கியே கூறுகின்றாள். அவளைப் பெற்ற சனகனும், அவன் மனைவியும் இம்மையில் அவள் வாழ வழிவகுத்தனர் என்பது உண்மையே. ஆனால், அந்த இம்மை வாழ்வு அழியப் போகின்ற இந்த நேரத்தில் சனகன் ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்தப் பழியுடன் தான் இறந்தால், மறுமையும் தனக்கு இல்லாமல் போகும் என்று நினைக்கிறாள். அப்படியானால் இவள்மாட்டுக் கொண்ட அருளின் காரணமாகத் தற்கொலை முயற்சியிலிருந்து இவளைத் தடுத்து, இம்மை வாழ்வு அளித்தான். இராகவன் வந்து போர் தொடுத்து இராவணனை அழித்து அவளுக்குப் பழி உண்டாகாமல் தடுக்க அதன்மூலம் மறுமையையும் தருகிறான். பெற்றெடுத்த தந்தையும், தாயும் ஒன்றுஞ் செய்ய முடியாத பொழுது, உயிர், இம்மை மறுமை என்ற மூன்றையும் அனுமன் தந்தான். ஆகலின் சனகன் மகளாக இதுவரை இருந்த பிராட்டி, இனி அனுமன் மகளாக ஆகிவிடுகிறாள். எனவே, தந்தையின் இடத்தில் இருக்கும் அனுமனுக்கு அவள் என்ன செய்ய முடியும்? அவனோ எல்லாச் செல்வங்கட்கும் மேம்பட்ட வேண்டாமை என்ற விழுச் செல்வத்தைப் பெற்றுள்ளான். இந்நிலையில், புதுமுறையில் பிராட்டி வாழ்த்துகிறாள்.*

பாழிய பணைத்தோள் வீர!
 துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறுஇலா
 மனத்தேன் என்னின்
ஊழி ஓர் பகலாய் ஓதும்
 யாண்டு எலாம், உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும்
 இன்று என இருத்தி என்றாள்.

*(உருக்காட்டுப் படலம்—72*

*[வலி பொருந்திய தோளையுடையாய், துணை இல்லாதவளாகிய என் துயரம் தீர்த்த வள்ளலே! வாழ்க! யான் குற்றமற்றவள் என்றால், ஓர் ஊழியை ஒரு பகலாய் ஓதும் அத்தகைய பகல்கள் நிறைந்த ஆண்டுகள் எல்லாம், பதினான்கு உலகங்களும் அழிகின்ற காலத்தும், இன்று போல் என்றும் இருப்பாயாக.]*

*இந்த வாழ்த்தில் உள்ள சிறப்பைக் கவனிக்க வேண்டும். 'இன்று என இருத்தி' என்றால், அனைத்தும் பெற்று, புலனடக்கத்துடன், வேண்டாமை என்ற செல்வத்துடன், வாழும் இந்த நிலை என்றும் மாறாமல் இருப்பாயாக என்று வாழ்த்துவதே புதுமை ஆகும்.*

## அறவாழ்க்கை

*முதன்முதலில் பரம்பொருள் மானுடனாக வந்துள்ளதை அறிந்தவன் இந்த அனுமன்தான். ஆனால் 'ஸ்ரீ' என்று சொல்லப்படுகிற புருஷாகார வைபவத்தை அடைந்தல்லது, இறையனுபவத்தில் திளைக்க முடியாது. அவனுடைய புலனடக்கம் பற்றி முன்னரே குறிப்பிடப் பெற்றது. அடுத்து சத்திய தரிசனம் செய்ய முயல்பவன் அறத்தைக் கடைப்பிடித்து வாழ வேண்டும். புலன்களை அடக்கி, அறத்தில் நின்று பொய்மை ஒழித்தால் முன்னேற்றம் தானே வரும். அனுமன் ஒன்றையும்*

மூன்றையும் முற்றிலும் கடைப்பிடித்தவன் என்பது கவிக் கூற்றாகவும், இராகவன் கூற்றாகவும் எடுத்துக்காட்டப் பெற்றது. இனி அவனுடைய அறநெறி வாழ்க்கை பற்றிக் கவிஞன் பேசுவதையும் காண்டல் வேண்டும்.

முனிவு எனும் வடவை வெங்கனலை அறிவு எனும்
பெரும் பரவை அப் புனலினால் அவித்தோன்
(ஊர்தேடு படலம்—129)

அறவன் (பொழில் இறுத்தபடலம்—30)

அறவோன் (அக்ககுமாரன் வதைப் படலம்—34)

[இந்திரசித்தன் விட்ட அயன் படைக்கு வணக்கஞ் செலுத்தி, அதனால் கட்டப்பெற்று அனுமன் கீழே சாய்ந்ததைக் கூறும் கவிஞன் அறக்கடவுளின் கண்ணில் நீர் பெருகச் சாய்ந்தான் என்கிறான்.]

அண்ணல் மாருதி, அன்று, தன்பின் சென்ற அறத்தின்
கண்ணின் நீரொடும்.........சாய்ந்தான்.
(பாசப் படலம்—83)

அறத்துக்கு ஆங்கு ஒரு தனித்துணை
என நின்ற அனுமன் (பாசப் படலம்—87)

மாருதி அறத்தை ஓம்புவான்
(கும்பகர்ணன் வதைப் படலம்—260)

தருமம் என்று அறிஞர் சொல்லும் தனிப்பொருள்
(வேலேற்ற படலம்—44)

தீண்ட அரும் தீவினை தீய்க்கத் தீர்ந்து போய்
மாண்டு, அற உலர்ந்தது. மாருதிப் பெயர்
ஆண் தகை மாரிவந்து அளிக்க ஆயிடை
ஈண்டு அறம் முளைத்தென, முளைத்தது இந்துவே!
(ஊர்தேடு படலம்—52)

[கொடிய தீவினை சுடுதலால் வன்மை தீர்ந்து அறக் காய்ந்து மடிந்த அறம் எனும் பயிர், மாருதி என்ற மாரி வந்ததால் முளைத்ததுபோல் நிலாப் புறப்பட்டது.]

அறந்தலை நிறுத்தத் தோன்றினான் இராகவன். அவனுக்கு உறுதுணையாக நிற்கப் போகிறான் அனுமன். எனவே அவனும், அறத்தின் அடிப்படையில் வாழ்க்கை நடத்துபவனாகத்தானே இருத்தல் வேண்டும்? இந்த அறத்தின் தனித்துணையாக உள்ள அனுமனுடைய வாழ்வில் நடைபெற்ற ஒப்பற்ற நிகழ்ச்சி ஒன்றை இலைமறை காயாகக் கவிஞன் கூறுகிறான்.

## ஜோதி தரிசனம்

புலனடக்கம், அறவாழ்வு, அன்புடைமை, அகங்கார மமகார அழிவு, பணிவுடைமை, தொண்டுள்ளம் இவற்றால் நிறைந்துள்ள ஒருவனுக்கு இறையருள் கிட்ட வேண்டியது முறைதானே. இராமனை நேரே காண்பதுதான் இறையருள் என்றால், இராவணன், கவந்தன் முதலியோரும் இராமனை நேரே கண்டவர்கள் தாமே. எனவே, ஆன்மிக முறையில் ஏனையோருக்குக் கிட்டாத ஒன்று அனுமனுக்குக் கிடைக்க வேண்டும். அதற்காகவே சூடாமணிப் படலத்தின் இறுதிப் பகுதியில் பிராட்டி அனுமனிடம் சூடாமணியைக் கொடுத்தாள் என்று கூறுவதற்கு முதல் பாட்டில், சூடாமணி காட்டினாள் என்று கூற வரும்பொழுது, ஒரு நுணுக்கத்தை வைத்துக் கூறுகிறான்.

கூந்தல் மென்மழை கொள் முகில்மேல் எழுகோளின்
வேந்தன் அன்னது; மெல்லியல் தன் திருமேனி
சேந்தது! அந்தம்இல் சேவகன் சேவடி என்னக்
காந்து கின்றது; காட்டினள். மாருதி கண்டான்.

(சூடாமணிப் படலம்—82)

[கூந்தலைப் போன்று கருமையுடைய மேகக் கூட் டத்தின் மேல் எழுகின்ற கோள்களின் அரசன் ஆகிய கதிரவனை ஒப்பது; பிராட்டியின் உடம்பில் பொருந்தி இருந்தது; முடிவு இல்லாத வீரனாகிய இராகவன்

திருவடிகளைப் போல ஒளிவிடுகின்றது; அதனைப் பிராட்டி காட்டினாள்; மாருதி கண்டான்.]

இதன் முன்னர் மூன்று பாடல்களில், அதன் ஒளியைப் பற்றியே கவிஞன் பேசுகிறான். சூடாமணி என்ற சொல்லே இந்த நான்கு பாடல்களிலும் இல்லை. பிராட்டி தன் துணியில் மறைத்து வைத்திருந்ததை வெளியே எடுத்தாள் என்பது முதற் பாடல். கையில் எடுத்து (எதை என்று கூறவில்லை), இராமன் நினைவில் ஏங்கினாள்; அனுமன் இது என்ன என்று வியந்தான்; உலகம் ஏழிலுமுள்ள இருள் அனைத்தையும் விழுங்கியது அது என்பது, இரண்டாவது பாடல். கதிரவன் இந்த இலங்கை மீது வந்தான் என்று கொடிய கண்களை உடைய அரக்கர் ஐயுற்றனர். தாமரை மலர்ந்தது என்பது மூன்றாவது பாடல். நான்காவது பாடல், மேலே முழுவதுமாகத் தரப் பெற்றுள்ளது. இந்த நான்கு பாடல்களிலும், சூடாமணி குறிப்பிடப்படவில்லை. மேலாகப் பார்க்கும்பொழுது, இந்த நான்கு பாடல்களும் சூடாமணியின் சிறப்பையும், ஒளியையும் விளக்குவன என்று பொருள் கொள்வதில் தவறு இல்லை.

ஆழ்ந்து நோக்கினால் வேறு ஏதோ ஒரு கருத்தையும் இதனுள் ஆசிரியன் கூற விழைகிறான் என்று எண்ணத் தோன்றுகிறது. நான்காவது பாடலை மறுபடியும் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். 'அந்தமில் சேவகன் சேவடி என்னக் காந்துகின்றது' என்பதுதான் திறவுகோல். சூடாமணியின் ஒளிக்கு இராகவன் மேனியைக் கூறி இருந்தால் சரி. முன்னரே, 'அவன் மேனியில் வெய்யோன் ஒளி மறைந்தது' என்றும் கூறியுள்ளான். எனவே, அவன் மேனிபோல் ஒளி விடுகிறது என்று கூறி இருந்தால் அதுபற்றிக் கவலை இல்லை. அதனை மாற்றி 'சேவகன் திருவடி போலக் காந்துகின்றது' என்று கூறுவது வியப்பைத் தருகின்றது. பரம்பொருள் உருவம் அற்றது என்பதனை அனைவரும்

அறிவர். எனவே சிற்சிலவற்றிற்கு அடையாளமாக (Symbols) சில உறுப்புக்களைக் கூறுதல் மரபுதான். **கூந்தல் ஞானத்துக்குக் குறியீடு.** அதே போல அவன் **திருவடி, திருவருளுக்குக் குறியீடு.** அவனுடைய திருவருளைப் பெறுதலைத்தான் திருவடி அடைதல் என்று மரபாகக் கூறுகிறோம். திருவையாற்றுப் பதிகம் 20 பாடல்களிலும் இறைவனின் **திருவடிப் பெருமையைப்** பேசுகிறார் **திருநாவுக்கரசர்.** அதில் ஒரு பாடல் பொருளைத்தான், கம்பன் பாடலும் தெரிவிக்க எழுந்ததோ என்ற ஐயத்தைத் தோற்றுவித்தது.

ஓதிய ஞானமும், ஞானப்
பொருளும், ஒளி சிறந்த
வேதியர் வேதமும், கேள்வியுமாவன;
விண்ணும் மண்ணும்
சோதியும் செஞ்சுடர் ஞாயிறும்
ஒப்பன; தூமதியோடு
ஆதியும் அந்தமும் ஆன
ஐயாறன் அடித்தலமே.

*(திருமுறை—4—92—17)*

*[ஐயாறன் திருவடி ஓதிய ஞானமும், ஞானப் பொருளும், அந்தணர் வேதமும், கேள்வியுமாவன; விண்ணும், மண்ணும், ஒளியும், ஞாயிறும், தூமதியும் ஒப்பன ஒளியில், ஆதியும் அந்தமும் உயிர்கட்கு அவையே ஆம்.]*

திருவடிக்கு ஒளி உண்டு என்பது ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றுதான். இதனை ஓரளவு மாற்றி, திருவடிபோல ஒளிவிடும் ஒன்றைக் காட்டினாள் பிராட்டி; மாருதி அதனைக் கண்டான் என்று கூறும்பொழுது, குருவாக நின்று ஒளியைக் காட்டலும், அதனைச் சீடன் காண்டலும் நினைவுக்கு வருகின்றது. அனைத்துத் தகுதிகளும் நிறைந்தவன் அனுமன் என்பதைப் பரம்பொருளே, அவனைப் பார்த்த மாத்திரத்தில் கூறிவிட்டான்.

அப்படியானால் உடனே அவனுக்கு ஏன் அருள் செய்யவில்லை! 'தீட்சை செய்தல்' என்று இதனைக் கூறுவர். நயன, ஸ்பரிச, திருவடி தீட்சை என்று இது பலவகைப்படும். கண்களால் பார்த்த மாத்திரத்தில் விளக்கம் பெறுமாறு செய்வது நயன தீட்சை எனப்படும். உடம்பின் ஏதாவதொரு பகுதியைத் தன் கை அல்லது ஒரு கருவி கொண்டு தொட்டுச் செய்வது ஸ்பரிச தீட்சை எனப்படும். திருவடி தீட்சை என்பது முழுவதுமாக ஏற்றுக்கொண்டு அவனை மற்றொன்றாக மாற்றுவதாகும். அவரவர் மனநிலை, பக்குவம் என்பவற்றை ஒட்டி இத்தீட்சைகள் செய்யப் பெறும். இறைவன் கருணைக்கு ஆளாக வேண்டுமெனில் அன்னையின் மூலமாகவே அது நடைபெற வேண்டும் என்று, இந்நாட்டவர் கருதினர். நாம ரூபங் கடந்த பொருளுக்கு ஆண், பெண் வேறுபாடு கற்பித்து அன்னையின் அருள் வேண்டும் என்று கூறுவது சரியா என்ற வினா எழலாம். ஒரே பரம்பொருள் தான் செய்கின்ற செயலால், பல பெயர்களைப் பெறுகின்றது. பணிமனையில் அலுவலர் என்றும், மனைவிக்குக் கணவர் என்றும், குழந்தைகளின் தந்தை என்றும், நண்பர் களிடத்தில் நண்பன் என்றும், ஒரே மனிதன் பெயர் பெறுவதுபோல, இங்கும் அருள் செய்யும் தலைவன் அவனேயாயினும் அவனுடைய கருணையைத் தாய் என்று குறியீட்டால் கூறுவர். இறைவனை அவனுடைய கருணையிலிருந்து பிரிக்க முடியாது. ஆகலின், பிராட்டி யைப் பெருமாளிடத்திருந்தும், உமையைச் சிவபெரு மானிடமிருந்தும் பிரித்தல் இயலாது என்றும் கூறுவர்.

## சூடாமணியும் ஒரு குறியீடா?

அனைத்துப் பண்புகளும் நிரம்பி, நீக்கவேண்டிய குறை எதுவுமில்லாமல் உள்ள அனுமனுக்கு தீட்சை செய்யப்பட வேண்டிய காலம் வந்துவிட்டது. எனவே பிராட்டி திருவடி

போன்ற ஒளியுடைய ஒன்றைக் காட்டினாள்; அவன் கண்டான் என்று, குறிப்பாகக் கூறிவிட்டான் கவிஞன். இந்தக் குறிப்பைக் கூறத்தான் காந்துகின்றது காட்டினாள் என்று கூறினான். அனுமனுக்கு ஒளிக்காட்சி (ஜோதி தரிசனம்) காட்ட விரும்பினாள் என்பதைத்தான் காட்டினாள் என்றான். இறைவன் கருணை மிகுதியால் இக்காட்சியைக் காட்டினாலும், அதனைக் காணும் தகுதி உடையவர்கள் மட்டுமே அதனைக் காண முடியும். அனுமனைப் பொறுத்தவரை அவள் காட்டினாள்; மாருதி கண்டான். மேலும், காப்பிய நோக்கில் பார்த்தால் அவள் காட்டியது சூடாமணியை, சூடாமணி என்பது நடு வகிட்டில் நெற்றிக்கு நேரே தலையில் அணியும் அணியாகும். நடு வகிட்டில் நெற்றியில் படும்படி ஓர் அணியை அணிந்தால் அது நடுநெற்றியில் இரு புருவங்கட்கு மத்தியில் தொங்கிக் கொண்டிருக்கும். இரு புருவங்கட்கு மத்தியில் உள்ள பகுதியைத்தான் 'ஆஞ்ஞை' என்று கூறுவர். மனிதனுக்கு உள்ள மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், விஷுத்தி, ஆஞ்ஞை, ஸகஸ்ரதளம் என்று கூறப்பெறும் ஆறு ஆதாரங்களில் (ஷடாதாரம்), ஆஞ்ஞை என்பது இரு புருவங்களின் நடுவே நெற்றியின் நடுப்பாகத்தின் அடிப்பகுதி என்பதாகும். இங்கேதான் ஒளிக்காட்சி அல்லது ஜோதி தரிசனம் நடைபெறும் என்று அறிஞர் கூறுவர். எனவே சூடாமணியைக் காட்டினாள் என்று கூற வேண்டிய கம்பன் நேரிடையாகக் கூறாமல் இக் குறிப்பின் பொருளும் விளங்குமாறு கவிதை செய்துள்ளான்.

## இதனை இவன் முடிக்கும்

அனுமனை எந்த அளவிற்கு இராகவன் மதித்துப் பயன்படுத்திக் கொண்டுள்ளான் என்பதையும் காண்டல் வேண்டும். ஏனைய வீரர்களைப் பிற திசைகளில்

அனுப்பிவிட்டுத் தென் திசை செல்ல அனுமனை ஏற்பாடு செய்தான் சுக்ரீவன். இராமன் அவனைத் தனியே அழைத்துப் பிராட்டியின் அங்க அடையாளங்களைக் கூறி அனுப்பினான். எனவே, 'கண்டு வரும் என்று இருக்கும் காகுத்தன்' என்று பின்னர் அனுமன் நினைத்தது சரியே என்று எண்ணத் தோன்றுகிறது. 'பிராட்டி எவ்வாறு உள்ளாளோ? எத்துணைத் துன்பங்களை ஏற்றாளோ? உயிருடன் இருக்கிறாளோ இல்லையோ?' என்றெல்லாம் கவன்று உருகும் இராகவனிடம் சென்ற அனுமன், பலர் இருக்கும்பொழுது விவரமாகப் பேசுதல் தகாது எனக் கருதி, இராமனை வணங்காமல் தென்திசை நோக்கி வீழ்ந்து வணங்கினானாம். இக்குறிப் பொருளை உணர்ந்த காகுத்தன் மகிழ்ச்சி அடைந்தான். அடுத்து நெருங்கிச் சென்று 'கண்டனென், கற்பினுக்கு அணியைக் கண்களால்' (திருவடி தொழுத படலம்—25) என்று தொடங்கினான் சொல்லின் செல்வன். ஆதலால், நான்கு சொற்களில் இராமன் கவலையை அடியோடு மாற்றிவிடுகிறான். 'கண்டனென் கண்களால்' என்பதால் பிறர் கூறித் தெரிந்து கொள்ளவில்லை என்ற பொருளும், கண்களால் காணக் கூடிய முறையில் உயிருடன் இருக்கிறாள், என்ற பொருளும் பெற வைத்துவிட்டான். அடுத்து, 'பகைவர் கையில் சிக்கிய பாவை என்னுற்றனள் கொல்?' என்று ஒருவேளை ஐயம் வந்திருக்குமேயானால், அதற்கும் விடை இறுக்கும் முறையில் 'கற்பினுக்கு அணியை' என்று கூறிவிட்டான்.

## தகை சான்ற சொல் காத்தாள்

ஒரு பெண் தான் கொண்ட கணவன், அவன் பிறந்த இடம், தான் பிறந்த இடம் இம்மூன்று இடங்கட்கும் நற்பெயர் வாங்கித் தரல் வேண்டும். சாதாரணமாகப் பிறந்து வாழ்ந்து மடிகின்றவர்களும் இதனைச் செய்யவே

*முனைவர். ஆனால் அவள் ஒரு தவறு இழைத்துவிட்டால், மேலே கூறிய மூன்றும் அடிபட்டுப் போகும். 'உன் பெருந்தேவி என்ற உரிமைக்கும், உன்னைப் பெற்றவன் (தசரதன்) மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன் தன் பெருந்தனயை என்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்' (25) என்று கூறி,*

விற்பெருந் தடந்தோள் வீர!
வீங்கு நீர் இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தள் ஆய நங்கையைக்
கண்டேன் அல்லேன்,
இற்பிறப்பு என்பது ஒன்றும்
இரும்பொறை என்பது ஒன்றும்,
கற்பு எனும் பெயரது ஒன்றும்,
களிநடம் புரியக் கண்டேன்,

*(திருவடி தொழுத படலம்—29)*

*[வில் ஏந்திய வீர! இலங்கையில் தவஞ் செய்யும் ஒரு பெண்ணைப் பார்த்தேன் என்பது தவறு. நற்குடிப் பிறப்பு, எல்லையற்ற பொறுமை, கற்பு என்பவை களிநடம் புரிவதைக் கண்டேன்.]*

*என்று கூறுகிறான். இதுவரை 5 பாடல்களிலும், அவனே பேசிக்கொண்டு செல்வது தவிர இராமன் வாய் திறந்து ஒரு சொல்கூடச் சொல்லவில்லை. ஏதாவது ஒரு வினாவையோ, ஓர் ஐயத்தையோ கேட்க வேண்டிய நிலை ஏற்படவில்லை. இவ்வாறு கூறுவதால், இராமன் என்ற வினாவையும் கேட்க விரும்பவில்லை என்பது பொருளன்று. சொல்லின் செல்வனாகிய அனுமன், இராமன் கேட்க வேண்டும் என்று மனத்தில் நினைக்கு முன் அந்த வினாவுக்குரிய விடையை அடுத்தடுத்துக் கூறிவிடுகிறான். ஆதலின் இராமன் செவிகட்கு மட்டுமே வேலை இருந்தது. அடுத்து அனுமன் கூறிய செய்தி,*

இராமனை இன்னும் விரகம் கொளச் செய்வதாய் அமைந்தது.

## தவம் செய்த தவம்

வேலையுள் இலங்கை என்னும்
　　விரிநகர் ஒருசார், விண்தோய்
காலையும் மாலை தானும்
　　இல்லது ஓர் கனகக் கற்பச்
சோலை, ஆங்கு அதனில் உம்பி
　　புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள் ஐய!
　　தவஞ்செய்த தவமாம் தையல்.

*(திருவடி தொழுத படலம்—31)*

*[கடல் நடுவே உள்ள இலங்கை என்னும் அகன்ற பெரிய நகரின் ஒரு பக்கத்தே, பகலும் இரவும் அறிய முடியாத ஒரு கற்பகச் சோலை உளது. அதில், உன் தம்பி கையினால் தொடுத்த பன்ன சாலையில் இருந்தாள்! யார் தெரியுமா? தவஞ்செய்த தவமே போல்வாள்.]*

*என்று அனுமன் கூறியதால், அவள் எவ்வித இடையூறும் இன்றி உள்ளாள் என்பதையும், தம்பி சமைத்த பன்ன சாலையில் உள்ளாள் என்பதால், இராவணன் மிடுக்கு அவள்பால் சாயவில்லை என்பதும் கூறியவாறாயிற்று என்றால், 'ஒருத்தி எவ்வாறு இப்படி, இந்தச் சூழலில் இருக்க முடியும் என்கிறாயா? ஆம்; தவமே தவம் செய்து பெற்ற தையலாதலின் இது இயன்றது' என்பதே விடை.*

## சாலையின் சிறப்பு

*'உம்பி புல்லினால் தொடுத்த சாலையில் இருந்தாள்' என்பதிலும் ஓர் உட்கருத்தைப் பெய்கிறான் கவி. மேலாகப் பார்ப்பதற்கு இலக்குவன் அமைத்த பன்னசாலையோடு நிலத்தைப் பெயர்த்து எடுத்து வந்தான் என்ற கருத்தைக்*

கூறியவாறு ஆயிற்று. ஆழ்ந்து நோக்கினால் வேறு ஏதோ ஒரு கருத்தையும் உட்பெய்துள்ளான் என்பது விளங்கும். உம்பி என்றது இலக்குவனையே ஆகும். இலக்குவன் எத்தகையவன்? இந்திரியங்களை வென்று, ஊண் உறக்கம் இன்றி வாழ்ந்தவன். எனவே, புலனடக்கம் என்ற தவத்தால் அவன் பெற்றிருக்கக் கூடிய வன்மை இருக்கிறது. அவன் சமைத்த பன்னசாலை புல்லால் ஆயதுதான். என்றாலும் என்ன? அதனை ஆக்கியவன் தவவலிமை அந்தச் சாலைக்கும் வந்துவிட்டது. புலனடக்கத்தின் பயனாக விளைந்த ஆற்றலுடன் கட்டப்பட்ட சாலையில் யார் இருக்க முடியும். இராவணன் போன்ற புலனடக்கம் இல்லாதவர்கள் அதை நெருங்க முடியாதன்றோ? எத்தனை வரபலம் இருப்பினும், புலனடக்கத்தின் வலிமையின் எதிரே அந்த வரபலம் ஒன்றுஞ் செய்ய முடியாது! இதற்கு உதாரணம் வேண்டுமெனில், இராவணன் அகத்தியனிடம் இசை வாதில் தோற்றதே சாலும். சாமகானம் ஓதுவதில் ஈடு இணையற்றவனான இராவணன், சிவபெருமானைக்கூடத் தன் சாமகானத்தால் மயக்கும் இராவணன், அகத்தியரிடம் இசைப் போட்டியில் தோற்றது எதனால்? புலனடக்கம் உடையவனுடன், அது இல்லாதவன் என்ன போரிட்டாலும் தோற்பது உறுதி.

இலக்குவனாகிய அடக்கமுடையான் ஆக்கிய பன்ன சாலையில் தவஞ் செய்யலாமே தவிர, வேறு தவறான செயல்கட்கு அக்குடிசை இடந்தராது. எனவேதான், தம்பி தொடுத்த சாலையில் தவஞ்செய்த தவமாம் தையல் இருந்தாள் என்று அனுமன் கூறினான். புலனடக்கத்தின் சிறப்பை இராகவன் அறிந்தவனாகலின், பிராட்டி அச்சாலையில் இருக்கின்றவரை எவ்விதக் குறையும் ஏற்படாது என்பதை அறிய வேண்டி, மறைவான பொருளுடன் இவ்வார்த்தைகளைக் கூறினான் அனுமன். ஏனையோர் இவ்வார்த்தைகளைக் கேட்டால் அவர்கள்

ஒன்றும் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் இராகவன் மட்டும் அக்குறிப்புப் பொருளை அறிந்துகொள்வான் என்ற கருத்தில் சொல்லின் செல்வன் கூறுகிறான்.

## மறுபடியும் நினைவூட்டுகிறான்

பிராட்டி இருந்த நிலையையும், அவர்கள் சொல்லி அனுப்பிய செய்திகளையும், வரன் முறையாக விளங்கக் கூறிய அனுமன், தன் தூதின் முடிவை அறிவிக்குமுன், மறுபடியும் இராமன் மனத்தில் பதிய வேண்டிய ஒரு கருத்தை வலியுறுத்துகிறான்.

இங்குள்ள தன்மை யெல்லாம்
இயைபுளி இயையக் கேட்டாள்.
அங்குள்ள தன்மை எலாம்
அடியேனுக்கு அறியச் சொன்னாள்.
'திங்கள் ஒன்று இருப்பென் இன்னே;
திருவுளம் தீர்ந்த பின்னை
மங்குவென் உயிரோடு' என்று, உன்
மலரடி சென்னி வைத்தாள்

(திருவடி தொழுத படலம்—45)

விரகத்தால் வாடும் இராமன், தன் துயரையே எண்ணிப் பிராட்டி கூறிய முக்கியமான செய்தியை மறந்துவிடக் கூடாது என்பதற்காக, மறுபடியும் அனுமன் அதை வலியுறுத்திக் கூறுகிறான். ஒரு திங்கள் இருப்பாள்; பின்னர் மங்குவாள் உயிரோடு, என்பதை மனத்துட் கொண்டு செயலில் இறங்க வேண்டும் என்பதே கருத்தாகும். இராமன் கொண்ட துயரத்திலிருந்து அவனை எழுப்பி, மேற்கொண்டு கடமைகளை ஆற்றச் செய்ய வேண்டும். இலக்குவன் முதல் அனைவரும் இராமனைத் தலைவனாகவும் தம்மை அடியவர் ஆகவும் ஏற்றுக் கொண்டு தம் வாழ்க்கையை வகுத்துக் கொண்டவர்கள், அவனைத் தட்டி எழுப்பிப் பணிபுரியுமாறு கூற யாருக்கும்

உரிமை உண்டு. சொல்லின் செல்வன் நல்ல வழி ஒன்றைக் கடைப்பிடிக்கிறான். யார் பொருட்டால் பெருவருத்தம் அடைந்து, தன்னை மறந்து இருக்கிறானோ, அந்தச் சீதை இன்னும் ஒரு மாதம்தான் உயிருடன் இருப்பேன் என்று கெடு வைத்துள்ளாள் என்பதை இறுதியாகக் கூறுவதன் மூலம், இராகவனைத் தட்டி எழுப்பி விட்டான். இலக்குவனும், சுக்ரீவனும் செய்ய முடியாத செயலை, மாருதி செய்து முடித்துவிடுகிறான்.

## அறிவினால் ஆய்பவன்

இத்தகைய அறிவுடைச் செயல்களைக் காலம் அறிந்து இடன் அறிந்து செய்வதால், இராகவன் எல்லாக் கட்டங்களிலும் மாருதியின் அறிவுரையைக் கேட்பது என்று முடிவு செய்துவிட்டான். எத்தகைய சூழ்நிலையிலும் உணர்ச்சிக்கு இடங்கொடாமல், அறிவைப் பயன்படுத்தி, உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரு நிலைகளிலும் நின்று ஆராய்ந்து, முடிவு சொல்லக்கூடிய பேராற்றல் படைத்தவன் மாருதி ஒருவனே இராமனுடன் இருப்பவர்கள் அனைவருள்ளும் நடுநிலையில் நின்று, உணர்ச்சி வசப்படாமல் விருப்பு வெறுப்புக்களைக் களைந்து, எதனையும் ஆராயும் ஆற்றல் மாருதிக்கு மட்டுமே உண்டு. முழுப் புலனடக்கம் கைவரப் பெற்றமையின் அவனுக்கு இந்த ஆற்றல் கைவந்துள்ளது. இலக்குவனும் புலனடக்கம் உடையவனேனும், அவனுடைய குருட்டுத்தனமான இராம பக்தியால், பரதனைக்கூடச் சரியான முறையில் எடைபோட முடியவில்லை. பேசுபவன் இராமனாகவே இருப்பினும், நடுநிலை தவறாமல் பேசுபவன் மாருதி ஒருவனே ஆவான்.

இதனைப் பூரணமாக அறிய ஒரு சந்தர்ப்பம் வருகிறது. இராமன் படைகளுடன் தென் கடற்கரையில் சென்று பாடி வீடு கொண்டுள்ளான். திடீரென்று வீடணன், துணைவர் நால்வருடன் இராமன் பாசறை வாயிலில் வந்து

*நிற்கிறான். அரக்கரை வாயிலில் கண்ட குரங்கினம் ஏக அமர்க்களம் செய்கின்றது. மயிந்தன் என்பவன் வீடணனைச் சந்தித்து உரையாடுகிறான். வீடணனே நேரில் பேசுவது பொருத்தமாயிராது என்பதால், அனலன் என்பவன் இலங்கையில் நடந்தவற்றைக் கூறி,*

பகவலன் வழிமுதல்; பாரின் நாயகன்;
புகல் அவன் கழல் அடைந்து, உய்யப் போந்தனன்.
*(வீடணன் அடைக்கலப் படலம்—42)*

*[சூரியன் மரபில் வரும் மன்னனாம் இராகவன் கழலில் சரணடைய வந்துள்ளான்.]*

*என்று தான் வந்த காரணத்தை விளக்குகிறான். அனலன் முதலானவர்கள் கூறியவற்றை அப்படியே மயிந்தன் கூறுகிறான்.*

அரண் பிறிது இல்என அருளின் வேலையைச்
சரண் புகுந்தனன் எனமுன்னம் சாற்றினான். *(51)*

*மேலும் அனைத்து விவரங்களையும் மயிந்தன் கூறிய பிறகு, இராகவன் தன் உடன் இருப்பவர்களை நோக்கி "இவன் கைபுகற்பாலனோ? கழியற்பாலனோ? ஒப்புற நோக்கி நும் உணர்வினால், இயம்புவீர்" (55) என்று பேசுகிறான்.*

## இராமன் உடன் இருப்பவர்கள்

*உடனிருப்பவர்களுள் எவரும் கல்வி கேள்விகளில் சிறந்தவராய், இன்றியமையாத அரசியல் விஷயங்களை ஆராய்ந்து காணும் நுணுக்கமுள்ளவர்களாய் இருப்பதாகத் தெரியவில்லை. சுக்ரீவன், சாம்பன், நீலன் என்பவருடன் பிறமந்திரக் கிழவர்களும் உள்ளனர். அரசியல் நுணுக்கம் அறியாதவர்களாயினும், சிறந்த ஜனநாயக வாதியான இராகவன், அவர்களை மதித்து அவர்கள் கருத்து என்ன*

*என்று கேட்பது அவனுடைய பண்பாட்டையே அறிவிப்பதாம். உணர்ச்சி வசப்பட்டு முடிவு செய்யாமல், 'ஒப்புற நோக்கி இயம்புவீர்' என்கிறான்.*

*முதலில் சுக்ரீவன் பேசத் தொடங்கி, 'அண்ணனை விட்டு வருவது நீதியா? அரக்கரில் எவன் நல்லவன்? (59) போருக்குப் பயந்து நம்முடன் வருபவன்' (61) என்றெல்லாம் பேசிவிட்டு, இறுதியாக 'நஞ்சினின் கொடியனை நயந்து கோடியோ? அஞ்சன வண்ண!' (28) என்று முடிக்கிறான். சாம்பன், நீலன் ஆகிய அனைவரும் சுக்ரீவன் கருத்தையே முன்மொழிந்து விட்டனர். இராமன் இப்பொழுது இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொண்டான். அவன் விருப்பத்திற்கு எதிராகவே அனைவரும் பேசிவிட்டனர். இந்த நிலையில்,*

'செறி பெருங் கேள்வியாய்!
கருத்து என் செப்பு' என,
நெறிதரு மாருதி என்னும் நேர் இலா
அறிவனை நோக்கினான்; அறிவின் மேலுளான்.
*(வீடணன் அடைக்கலப் படலம்—93)*

*[நிறைந்த கேள்வி ஞானம் உடையாய்! உன் கருத்தைக் கூறுக, என்று மாருதி என்ற அறிஞனை நோக்கிக் கேட்டான், அறிவிற்கு அப்பால் உள்ளவனாகிய இராமன்.]*

## விளியிலேயே நுணுக்கம்

*இப்பாடலில் இராமன் அனுமனை விளித்த சொல் பொருளாழம் உடையதாகும். எத்துணைக் கல்வி ஞானம் உடையவனும், இப்பொழுது நடைபெறும் நிகழ்ச்சிக்குத் தன் கல்வி ஞானத்தை வைத்து விடைகூறல் இயலாது. இதுபோன்ற சந்தர்ப்பங்களில் பிற மன்னர்கள் எவ்வாறு முடிவெடுத்தனர்? அம்முடிவுக்கு என்ன அடிப்படை இருந்தது? அவர்கள் எடுத்த முடிவால் என்ன பயனை*

அடைந்தனர், என்பன போன்ற தகவல்கள், கேள்வி ஞானத்தால் மட்டுமே வருபவை. ஆனாலும் இவற்றைச் சொல்கிறவர்களுடைய மனநிலை, விருப்பு, வெறுப்பு என்பவற்றையும் ஆராய்ந்து காண்டல் வேண்டும். இவற்றை எல்லாம் மனத்துட் கொண்டுதான் இராகவன் 'செறிந்ததும், அதிகமானதுமான கேள்வி ஞானம் உடையாய்!' என்று விளிக்கிறான்.

இப்பொழுது அனுமன் நிலை தருமசங்கடமாக உள்ளது. இவனுக்கு முன்னர்ப் பேசிய அனைவரும் இவனுக்கு மூத்தவர். அதிகார முறையில் சுக்ரீவன் இவன் தலைவன். சாம்பன் அமைச்சருள் மூத்தவன். நீலன் தானைத் தலைவன். சுக்ரீவனுடைய அதிகார முறைவைப்பில் (Protocal) அனுமனின் இடம் நிர்ணயிக்கப்படாத ஒன்றாகும். அதிகார முறைவைப்பில் அனுமனுக்கு இடம் இல்லை. அமைச்சர் குழுவிலும் அவன் தனி இடம் பெற்றதாகத் தெரியவில்லை. இந்த நிலையில், அவன் தன் கருத்தைக் கூற வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுள்ளது. சக்கரவர்த்தித் திருமகனுக்கு இந்த அதிகார முறைவைப்புப் பற்றி நன்கு தெரியும். ஆதலால்தான் அவனும் அனுமனை வாய்விட்டு, 'நீ என்ன கூறுகிறாய்?' என்று கேட்பதுடன், குறிப்பினாலும் கேட்கிறான். 'நோக்கினான்' என்ற சொல்லுக்குப் பொருளோடு பார்த்தான் என்பதே பொருள்.

## முகமே அகத்தை அறிவிக்கும்

இத்தனை இடையூறுகட்கு இடையே, மாருதி விடை கூற முற்படுகிறான். அதிகாரப் படியில் எங்கோ கீழே இருக்கிறான் அவன். ஆனால் அறிவு, கல்வி, கேள்விகளில் இராமனுக்கு அடுத்தபடியாக உள்ளான் என்றாலும், அடக்கம் என்னும் அருங்குணத்தின் உறைவிடமாக இருத்தலின், அவன் விடையும் அதற்கேற்பவே உள்ளது.

'இங்குள அத்தனை பெரியவர்களும், நன்கு ஆய்ந்து, ஒருசேர இது தவறு எனக் கூறிவிட்டனர். இனி நான் என்ன சொல்லப் போகிறேன்? (85). தூயவர்களாகிய அவர்கள் துணிந்து கூறிய கருத்தும் நல்லதே இருந்தாலும் ஒரு கருத்தைச் சொல்ல விரும்புகிறேன்' (86) என்று முன்னுரை கூறித் தொடங்குகிறான்.

தீயவன் என்று இவனை யான்
அயிர்த்தல் செய்கிலேன்?

*(வீடணன் அடைக்கலப் படலம்—86)*

என்று கூறிவிட்டு, அதற்குரிய காரணங்களை வரிசைப் படுத்திக் கூறுகிறான்.

வஞ்சர் வாண்முகம், கண்டதுஓர்
பொழுதினில் தெரியும் (87)
உள்ளத்தின் உள்ளதை, உரையின் முந்துற
மெல்லத் தம் முகங்களே விளம்பும். (88)

இங்குக் காட்டப்பெற்ற மூன்று இடங்களும் ஒரே கருத்தை எடுத்துக் கூறுகின்றன. 'வஞ்சகர் முகங்கள் கண்டது ஓர் பொழுதினில் தெரியும்'. வஞ்சகர் என்று கூறிவிட்டமையின், உள்ளத்தில் உள்ளதை வெளிக்காட்டாமல் பழகியவர்கள் என்ற கருத்தும் பெறப்படுகிறது. வஞ்சகர் தம் சொல், செயல் என்பவற்றால் தம் மனக்கருத்து வெளிப்படாமல் பார்த்துக் கொள்ளலாம். பல சமயங்களில் முகத்தை மூடி போட்டது போல மாற்றிக் கொள்ளும் ஆற்றல் உடையவர்போல் இருக்கலாம். என்றாலும் எல்லா நேரமும் அவர்கள் இம் முகமூடி அணிந்திருக்க முடியாது. எனவே 'கண்டது ஓர் பொழுதினில் தெரியும்' என்கிறான். பலமுறை கண்டாலும் ஏதோ ஒரு பொழுதினில் தெரிந்துவிடும் என்ற பொருளும் அமையுமாறு பேசுகிறான். அதே கருத்தை மறுபடியும்

வலியுறுத்தும் முறையில் 'உள்ளத்தின் உள்ளதை' என்று கூறுவதால் மனத்தை விலக்கி, உள்ளே உள்ள அக மனத்தைப் பேசுகிறான். அகமனத்தில் உள்ளவை உறக்கத்திலும், மயக்கத்திலும், உறுதியாகச் சொற்கள் மூலம் வெளிவந்துவிடும். அங்ஙனம் வருவதற்கு முன்னரே கூட, முகங்கள் விளம்பும் என்கிறான்.

இந்த இரண்டு சோதனைகளை அனைவரும் செய்துவிட முடியாது. மாருதியைப் போன்ற பெரிய அறிவு, அனுபவம், கூர்மையான பார்வை உடற்கூறு நூல் (சாமுத்திரிகா லட்சணம்) என்பவற்றுடன், மனவியல் அறிவும் உடையவர் தாம் இதனைச் செய்ய முடியும்! அப்பாவிகளான சுக்ரீவன் போன்றவர்கள் புறத் தோற்றத்தை மட்டும் கொண்டு முடிவு செய்பவர்கள்; அவர்களால் இது முடியாத காரியம். அனுமனைப் போலக் கல்வி, கேள்வி, அனுபவம் என்பவற்றை உடையவர் களாவது இதனைச் செய்ய முடியுமா? என்றால், இயலாது என்றே கூறிவிடலாம். ஏனெனில் அவர்கள், தான் என்ற முனைப்பும், பிறருடைய எண்ணங்கட்கு மதிப்புக் கொடுத்துக் கணிக்கும் ஆற்றலும் இல்லாதவர்கள். முனைப்பு ஒழிந்தால்தான் பிறருடைய எண்ணங்களை உள்ளவாறு அறிய முடியும். இதற்கு ஒரே வழி புலனடக்கமும், அகங்கார மமகார அழிவுமே ஆகும். உதாரணந் தேடி அதிகத் தூரம் செல்ல வேண்டியதில்லை. அனுமனும், இராமனும் ஒருவரை ஒருவர் கண்டு சில சொற்கள் பேசிக்கொண்ட உடனேயே ஒருவரை ஒருவர் எடை போட முடிந்ததல்லவா? இதனால்தான், முக பாவத்தைக் கொண்டு பண்பாட்டைக் கணிக்கும் முறைக்கு அனுமன் அதிக மதிப்புத் தருகிறான். பேச்சும், செயலும், நடை உடை பாவனைகளும் ஒருவருடைய எண்ணங்கட்குக் கட்டுப்பட்டவை ஆகலின், உள்ளே இருப்பதை வெளிக்காட்டாமல் மறைக்கவும் முடியும்.

*ஆனால் முகத்தில் அகமனம் பிரதிபலிப்பதை யாரும் மறைக்க முடியாது. இதனைத்தான் வள்ளுவன்,*

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். *(திருக்குறள்—706)*

*என்று கூறுகிறான்.*

## அனுமனை நம்பக் காரணம்

*அனுமனுடைய இந்த ஆற்றலை இராகவன் நன்கு அறிந்தவன் ஆகலானும், அவன் இலங்கையில் முன்னரே வீடணனைச் சந்தித்தவன் ஆதலானும், அவனுடைய தீர்ப்பில் அதிக நம்பிக்கை வைத்துள்ளான் இராகவன். அந்த நம்பிக்கை பழுதடையாமல், இரண்டு காரணங் களைக் காட்டி, இவன் தீயன் அல்லன் என்று முடிவு கூறினான் அனுமன். ஒருவன் நல்லவனாகக்கூட இருக்கலாம்; ஆனால் இப்பொழுது இங்கே ஏன் வந்தான் என்பதற்கு, நல்லவன், தீயவன் என்பது விடை ஆகாது. சுக்ரீவன் முதலியோர், 'மாரீசனைப் போன்றவன் இவன் உளவு அறிந்து செல்லவே வந்துள்ளான்' என்றுதானே குற்றஞ் சாட்டினர். அந்தக் குற்றத்திற்கு மறுப்புரை வழங்குகிறான் அனுமன். ஆனால் அவர்கட்கு மறுப்புக் கூறும் அதிகாரம் அவனிடம் இல்லை. எனவே, அவர்கள் வாதத்தைக் கண்டு கொள்ளாதவன் போல் இதோ பேசுகிறான்:*

வாலி விண்பெற, அரசு இளையவன் பெற,
கோலிய வரிசிலை வலியும், கொற்றமும்
சீலமும் உணர்ந்து, நிற்சேர்ந்து, தெள்ளிதின்
மேல் அரசு எய்துவான், விரும்பி மேவினான்.
*(வீடணன் அடைக்கலப் படலம்—19)*

*வாலி விண் பெற்றதையும், அவனுடைய அரசைச் சுக்ரீவனுக்கு ஈந்ததையும் கண்டு, உன் வில் ஆற்றலையும்,*

வெற்றிச் செய்கையையும், பண்பாட்டையும் உணர்ந்து, நின்னைச் சேர்ந்து மேலே இலங்கை அரசைப் பெறவே, இவண் வந்துள்ளான் என்று விரிவாகக் காரண காரிய முறையில் ஆராய்ந்து, வந்தவனுடைய நோக்கம் என்ன என்பதைக் கூறி முடித்தான். வந்தவனுடைய நோக்கம் (Motive) மிக முக்கியம். அதில் தவறு உள்ளது என்பது தானே பிறர் வாதம். அதனை மறுத்துத் தன்னல அடிப்படையில்தான் வந்துள்ளான் எனக் கூறுகிறான். ஆதலால் இவனால் தீமை விளையாது என்பது அவன் முடிவு.

## ஒருவன் நோக்கத்தை அறிய வேண்டும்

எந்த ஒருவனுடைய செயலையும் ஆராயும்பொழுது, நோக்கம் என்ற ஒன்றைத்தான் இன்றும் முக்கியமாக ஆய்கிறார்கள். அது தெளிவாக விளங்கிவிட்டால், எத்தகையவனையும் வைத்து ஆளுதல் எளிதாகும். இன்ன எண்ணத்துடன்தான் வந்தான் என்பதை ஒப்புக்கொண்டால், இத்தனை காலம் இல்லாமல், இப்பொழுது ஏன் வந்தான் என்ற வினா அடுத்துத் தோன்றும் அல்லவா? அதற்கு விடையை, அடுத்த பாடல்களில், அரக்கர்தம் அரசு சீரியோர் நெறியில் செல்லவில்லை; நீண்டநாள் நிலைபெறாது என்று இவன் முடிபு செய்ததே, இவன் உன்னிடம் வருவதற்குக் காரணமாகும். ஏன் இராமனிடம் வந்தான் எனில், அவன் ஒருவன்தான் தனக்குச் சொந்தமான ஆட்சியைத் தானே விரும்பி இளவலுக்கு ஈந்தவன் (90) என்றும் கூறுகிறான். காலம் அல்லாத காலத்தில் வந்தான் என்று கூறுகிறவர்கட்கு அடுத்த பாடலில் விடை வருகிறது.

"வாலி ஒழிந்தான் என்பதறிந்து, அடுத்து இராவணனுக்கு இறுதி உறுதி என்பதால், தன் உறவை முறித்துக் கொண்டு இவன் வந்தான்" (91).

என்ற சமாதானம் அறிவுக்குப் பொருத்தமானதே. இனிப் பகைவனான இவனைச் சேர்த்துக் கொண்டால் தன் உயிருக்கு ஊறு விளையலாம் என்ற வாதத்திற்கு அனுமன் விடை அழகானது.

உயர்ந்தவர்கள், இத்தகைய சூழ்நிலையில் உள்ளவர்கள் வந்தால் அவர்களால் நம் வலி தொலையுமோ என அஞ்சுதல் சரியே. ஆனால் எளியவர்கள், தஞ்சம் என்று வந்தவர்கள் திறத்து இவ்வாறு எண்ணுதல் சரியன்று என்பது, அவன் விடை (93).

## தருக்கம் வல்லான்

மந்திரத்திலுள்ளவர்கள் கருத்தை மறுத்து, அதற்குரிய விடையைக் கூறி, அவர்கள் கருத்துச் சரியன்று என்பதை நிலைநாட்ட முயன்றானே அல்லாமல், தன் கருத்தை இதுவரை கூறவில்லை. தருக்க சாத்திரம் நன்கு பயின்ற வர்கட்கு பரபக்கம், சுபக்கம் என்ற இரண்டு நன்கு தெரியும். பரபக்கம் என்பது பிறர் கொள்கையை மறுத்தல் எனப் பொருள்படும். சுபக்கம் என்பது தன் கொள்கையை நிலைநாட்டல் என்று பொருள்படும். தருக்கம் வல்லவ னாகிய அனுமன், பிறர் கொள்கையை இதுவரை களைந்து இனித் தன் கருத்தைப் பேசத் தொடங்குகிறான்.

"என்னை உடனே பற்றிக் கொல்ல வேண்டும் என்று இராவணன் ஆணை இட்டபொழுது, 'தூதர், மாதர், அறிவு குறைந்தவர் என்பவர்களைக் கொல்லுதல் தூய்மையன்று' என்றான் (95).

"இவன் மாளிகையை இரவில் சுற்றிவந்த பொழுது நன்னிமித்தங்கள் பல தோன்றின (96).

"நறவமும் ஊனும், இவன் வீட்டில் இல்லை; தரும தானமும், நீதியும் பிறவுமே நிறைந்திருந்தன (97).

*தன் தமையன் வரபலம் முதலியவை உன் வில்லுக்கு ஆற்றாது அழியும் எனக் கருதி வந்துள்ளான். உன்னிடம் வந்துள்ள இவன் தவஞ் செய்தவனே ஆவான்." (99)*

*இவற்றை அடுத்து வலுவான வாதம் ஒன்றை முன் வைக்கின்றான். இதுவரை அவன் கூறியவற்றை மறுத் துரைப்பவர் அக்கூட்டத்தில் யாரேனும் இருந்திருப்பின், கூறப்போகும் இந்த வாதத்தை மறுக்க முடியாமல் தலை சாய்த்தே தீரல் வேண்டும்.*

தேவர்க்கும் தானவர்க்கும், திசைமுகனே
முதலாய தேவ தேவர்
மூவர்க்கும் முடிப்பரிய காரியத்தை
முற்றுவிப்பான் மூண்டு நின்றாய்;
ஆவத்தின் வந்து 'அபயம்' என்றானை
அயிர்த்து அகல விடுதியாயின்,
கூவத்தின் சிறுபுனலைக் கடல் அயிர்த்தது
ஒவ்வாதோ? – கொற்ற வேந்தே!

*(வீடணன் அடைக்கலப் படலம்—100)*

*[அரசே! தேவர்கள், தானவர்கள், மும்மூர்த்திகள் ஆகிய அனைவரும் செய்யமுடியாத காரியத்தை முடிக்கவே இங்கு வந்துள்ளாய்! உன்னிடம் அபயம் என்று வந்த வனைச் சந்தேகித்து விட்டுவிடுவாய் எனில், ஒரு கிணற்றிலுள்ள நீரைக் கடல் சந்தேகப்பட்டதுபோல ஆகாதோ?]*

*இந்தப் பாடலின் நுணுக்கத்தைக் காண்டல் வேண்டும். பகைவனிடமிருந்து வந்த இவன் உளவு அறிய வந்துள்ளான் எனவே, நமக்குத் தீங்கு விளைவிப்பான் என்று கருதினால் அதற்கும் ஒரு சமத்துவம் வேண்டும். இருவரும் ஒத்த வன்மையுடையவராக இருப்பின், இவ்வாறு கூறுவது சரியே; ஆனால் உன் பெருமை*

*அளவிடற்கரியது. மூவர்க்கும் முடியாத ஒன்றைச் செய்ய வருபவனாகிய நீ, இவனை ஒத்த ஒருவனால் தீமை விளையும் என்று அஞ்சினால், அது கிணற்று நீரைக் கண்டு, கடல்நீர் அஞ்சுவது போலாம் என்கிறான்.*

*அடுத்து,*

பகைப்புலத்தோர் துணை அல்லர் என்று இவனைப்
பற்றாயேல், அறிஞர் பார்க்கின்
நகைப் புலத்த தாம் அன்றே............

*(வீடணன் அடைக்கலப் படலம்—110)*

*என்று கூறிவிட்டு, இறுதியாகத் தன் கருத்தைத் தொகுத்துக் கூறுகிறான். அவ்வாறு கூறும்பொழுதுகூட அவனுடைய அடக்கம் முன்னின்று உதவுகிறது. இதோ அனுமன் பேசுகிறான்:*

ஆதலால், இவன் வரவு நல்வரவே
என உணர்ந்தேன், அடியேன்; உன்தன்
வேதநூல் எனத் தகைய திருவுளத்தின்
குறிப்பு அறியேன், என்று விட்டான்.
காதல் நான்முகனாலும் கணிப்பு அறிய
கலை அனைத்தும் கதிரோன் முன் சென்று
ஓதினான், ஓதநீர் கடந்து, பகை கடந்து
உலகை உய்யக் கொண்டான்.

*(102)*

*[மேலே கூறிய காரணங்களால், இவன் வரவு நல்வரவே என, அடியேன் உணர்ந்தேன். வேதம் எனத் தகைய உன் திருவுளத்தின் குறிப்பை அறியாமல் பேசிவிட்டேன் என்று கூறினான். யார் என்றால் நான் முகனும் கணக்கிட முடியாத கலைகளை எல்லாம் கதிவரன் கூடவே, அவன் முன்னர்ச் சென்றுகொண்டே ஓதினவனும், கடலையும், பகையையும் கடந்து உலகத்தின் இடர் தீர்த்தவனுமாகிய அனுமன்.]*

## சுக்ரீவனா பேசுகிறான்?

*இவ்வாறு மாருதி கூறியவுடன், இராகவன் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தான். ஏன் தெரியுமா? அவன் வீடணனுக்கு அடைக்கலம் தர முடிவு செய்துள்ளான் எனினும், ஜனநாயக வாதி ஆதலால் உடன் உள்ள மந்திரக் கிழவர்களை ஆலோசனை கேட்டான். அவனுடைய துரதிர்ஷ்டம், ஒருவன்கூட அவன் மனக்கருத்தைப் புரிந்துகொள்ளவில்லை. ஏதோ தன்னை மதித்து அவன் கேட்டுவிட்டானே என்ற எக்களிப்பில் வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசத் தொடங்கிவிட்டனர். அதிலும் வேடிக்கை என்னவென்றால், அடைக்கலம் என்று கூறி, அண்ணன் கட்சியைக் கேளாமலேயே அவனிடம் பகை உண்டாக்கி, வாலியைக் கொல்வித்தவனாகிய சுக்ரீவன், தன் கருத்தைப் பேசும்போது, வீடணன் அண்ணனை விட்டு வந்தது நியாயமோ என்ற கருத்தில், 'தம்முனைத் (அண்ணன்) துறந்தது தரும நீதியோ?' (59) என்று பேசும் அளவுக்கு அவன் அறியாமை விரிந்து கிடக்கிறது. அதிலும் வேடிக்கை என்னவென்றால், எந்த இராமனைக் கொண்டு தன் அண்ணனைக் கொன்றானோ, அந்த இராமனிடமே, இப்பொழுது இப்படிப் பேசினால், இராமன் சிரிக்காமல் இருந்தது வியப்பே ஆகும்.*

## பேர் அறிவாள! நன்று

*இப்படிப்பட்டவர்களைப் பார்த்துதான் இராகவன் 'நும் கருத்து யாது?' என்று கேட்டுவிட்டான். அனைவரும் ஒருமுகமாக அவன் கருத்துக்கு விரோதமாகப் பேசிய நிலையில், அவனைக் காப்பாற்ற அவன் கருத்தை எடுத்துக்கூற நாதி இல்லாத நிலையில், அனுமன் சமய சஞ்சீவியாக வந்து, இராமன் கருத்துக்கு அரண் செய்தான் என்றாலும், அவர்கள் அனைவரும் தலைவர்கள். எனவே இராமன்,*

மாருதி அமுத வார்த்தை செவிமடுத்து இனிதுமாந்தி,
'பேர் அறிவாள நன்று! நன்று!' என.................

*(வீடணன் அடைக்கலப் படலம்—103)*

*மாருதியின் சொற்கள் இராமனுக்கு அமுதமாக இருந் தனவாம். ஏன்? நண்பர்கள் அனைவரும் ஒருமுகமாக வீடணனை ஏற்பது தகாது என்று கூறிவிட்ட நிலையில், இராமன் என்ன செய்ய முடியும்? அவர்களை மீறி, நீங்கள் கூறுவது தவறு, அடைக்கலம் வந்தவனை ஏற்றே தீருவேன் என்று கூறி இருக்கலாம். அப்படி ஏன் செய்யவில்லை. அவ்வாறு செய்தால் தனக்குத் துணையாக வந்தவர்களின் மனத்தை முறிப்பதாக முடியும். வெளியில் கூறாவிட் டாலும் 'நாங்கள் கூறும் உரையைக் கேட்பதில்லை என்பது முடிவானால், இவர் ஏன் எங்களைக் கேட்க வேண்டும்?' என்ற சிந்தனை எழலாம் அல்லவா! இவ்வளவு தூரம் தனக்காகப் படை திரட்டி வந்தவர்களை, எளிதாக இராமன் மனம் முறியச் செய்யமாட்டான். இவர்கள் மனம் முறியச் செய்யவும் கூடாது. அதே நேரத்தில், இவர்கள் கூறுவதை மீறியும் ஆக வேண்டும். இந்த இக்கட்டான நிலையில்தான், மாருதியிடம் குறிப்பாகக் கேட்டான்.*

*அந்தக் குறிப்பின் பொருளை உணர்ந்து, அதுவும் தன் கருத்துடன் ஒத்துப்போவதால், மாருதி விரிவாகக் காரண காரியங்களுடன் பேசினான். தன்னுடைய தரும சங்கடமான நிலையிலிருந்து விடுபடும் வாய்ப்பை அனுமன் சொற்கள் நல்கின. எனவேதான் அது அமுதவார்த்தை ஆயிற்று. அமுது போகும் உயிரை நிறுத்தும். இவன் சொற்கள் இராமன் மனத்துள் விளைந்த சங்கடத்தைப் போக்க உதவின. அமுதை மகிழ்ச்சியுடன் மாந்துவதுபோல, இவனும் அனுமன் சொற்களை மாந்தினான்; தன் மகிழ்ச்சியை விளக்கும் விதத்தில் 'பேர் அறிவாள!' என்று விளித்தான். இவ்வாறு விளிப்பதிலும்*

ஒரு பொருள் உண்டு. ஏனையோர் அனைவரும், ஏற்பட்டுள்ள பிரச்சினையை அறிவு பூர்வமாக அணுகிக் குறைவு நிறைவு காணாமல், உணர்ச்சி வசப்பட்டுப் பேசினர். அறிவினால் ஆராய வேண்டிய பிரச்சினையை உணர்ச்சி அடிப்படையில் ஆய்ந்தால். விளைவது ஆபத்துத்தான். இவர்கள் குறைபாட்டை நன்கு அறிந் துள்ளான் ஆகலின், இராமன் பேசும்போதே 'நும் உணர்வினால் ஒப்புற நோக்கி இயம்புவீர்' (55) என்று கூறினான். அதே இராகவன் மாருதியை நோக்கி 'உன் கருத்து யாது' என்று கேட்கும்போது 'அறிவினை நோக்கினான், அறிவின் மேலுளான்' (83) என்று கூறுகிறான் கவிஞன். அதே காரணத்தால்தான் 'பேர்அறிவாள, நன்று நன்று' என்று மாருதியைப் புகழ்ந்துவிட்டு, அவர்கள் அனைவருக்கும் சிந்திக்க இடம் கொடாமல், சாதுரியத் தினால் இராகவன் இதோ பேசுகிறான்.

மற்று இனி உரைப்பது என்னோ?
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி; அன்னது அன்று
எனின், பிறிது ஒன்றானும்
வெற்றியே பெறுக, தோற்க,
வீக வீயாது வாழ்க,
பற்றுதல் அன்றி உண்டோ,
அடைக்கலம் பகர்கின் றானை?

*(வீடணன் அடைக்கலப் படலம்—105)*

[வேறு பேசுவதற்கு என்ன உளது? மாருதி ஆராய்ந்து சொன்ன ஆராய்ச்சியே சிறந்த காரியம். அது அல்லாமல் மற்றொன்றைக் கடைப்பிடிப்பதால் வெற்றி தோல்வி எது வரினும் சரி; சாவு வாழ்வு எது வரினும் சரி; அடைக்கலம் என்று வந்தவனை ஏற்றுக்கொள்வது தவிர வேறு உண்டோ?]

## சரணாகதியை ஏற்பதே சிறந்தது

*இராமன் இதில் தொடங்கி, 15 பாடல்களில் அடைக்கலம் ஏற்பதன் சிறப்பையும், அதனை ஏற்காது மறுப்பதன் இழிவையும் விரிவாகப் பேசுகிறான். இப் பாடல்களைப் படிக்கும்போது ஓர் ஐயம் தோன்றத்தான் செய்கிறது. சுக்ரீவன் 'வீடணன் சரணம் என்று வரவில்லை; அது நடிப்பு' என்கிறான் (68). சாம்பன் சரணமடைய வந்தான் என்று கூறவில்லை. நீலனும் சரணம் பற்றிப் பேசவில்லை. அப்படி இருக்க, அனுமன் ஒருவன் மட்டும், தான் பேசும் 16 பாடல்களில், ஒரே ஒரு முறை 'அபயம்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறான். அப்படி இருக்க, 'அபயம் என்று அடைந்தவர்களைக் காத்தலே கடன்' என்று இராகவன் விரிவாகப் பேசக் காரணம் யாது? வேறு காரணம் காட்டி வீடணனை ஏற்பதைச் சுக்ரீவன் முதலியோர் மறுப்பதற்கு இடம் உண்டு. ஆனால் சரணம் என்று கூறிவிட்டால், மறுப்பதற்கு வாய்ப்பே இல்லாமல் போய்விடும். எனவேதான் சரணம் என்ற சொல்லை ஒருமுறை அனுமன் பயன்படுத்தினாலும், அதை அப்படியே பற்றிக்கொண்டு, தன் கருத்தை அச்சொல்லின் மேலேயே வைத்துக் காட்டுகிறான் இராகவன்.*

## இராகவன் அரசியல் ஞானி

*இவை எல்லாவற்றையும்விட அற்புதமானது இராகவன் முடிப்புரை. மாருதி தவிர யாருமே பயன் படுத்தாததும், ஏற்றுக் கொள்ளாததும் ஆகிய, 'அபயம்— சரணம்' என்பவற்றை அவர்களே கூறியதாகக் கூறி, ஒரு முடிவுக்கு வருகிறான் இராகவன்.*

ஆதலான், 'அபயம்' என்ற
　　பொழுதத்தே, அபய தானம்
ஈதலே கடப்பாடு என்பது;
　　இயம்பினீர், என்பால் வைத்த

காதலால்; இனிவேறு எண்ணக்
கடவது என்? கதிரோன் மைந்த!
கோது இலாதவனை நீயே,
என்வயின் கொணர்தி என்றான்

*(வீடணன் அடைக்கலப் படலம்—117)*

[*ஆதலினால் அவன் அபயம் என்று கூறின உடனேயே, என்பால் வைத்த அன்பினால், அபயதானம் தருதல்தான் கடன் என்று கூறினீர்கள். இனி ஆராயவேண்டியது ஒன்றும் இல்லை. சூரியன் மைந்தனான சுக்ரீவனே! நீயே சென்று குற்றமில்லாத வீடணனை என்பால் அழைத்துவா என்றான்.*]

*இராகவனைப் போன்ற அரசியல் தந்திரம் வல்ல ஒருவனால்தான், இக்கட்டான இந்த நிலையைச் சமாளிக்க முடியும். 'என்மேல் வைத்த அன்பால் அபயதானம் அளிப்பதே என் கடமை என்று கூறினீர்கள்' என்று கூறுவது எத்துணை அற்புதமானது! ஒருவரும் சொல்லாத சொற்களை, அவர்களே சொன்னதாகச் சொல்கிறான். 'இல்லை' என்று அவர்கள் மறுக்காமல் இருக்க, 'என்பால் வைத்த காதலால்' என்று வேறு ஒரு காரணம் காட்டுகிறான். 'இப்பொழுது நாங்கள் சொல்லவில்லையே' என்று மறுப்பதானால், இராமனிடம் அன்பில்லாதவர்கள் என்ற பட்டியலில் சேர்க்கப்படுவர். எனவே இப்பொழுது எதனையும் மறுக்க முடியாது. அதுமட்டுமன்று, இந்த நேரத்தில் அவர்களுடைய மனத்திலும் ஒரு மகிழ்ச்சி உண்டாகிறது. ஏதோ தாங்களே இந்த அறவுரையைக் கூறியது போலவும், அதனை இராகவன் ஏற்றுக் கொண்டது போலவும், அவர்கள் மனத்தில் ஒரு மகிழ்ச்சி நிறையுமாறு செய்துவிட்டான் காகுத்தன். இத்தனைக்கும் மூலமாக இருந்த அனுமனை ஏன் இப்பொழுது குறிக்காமல் விட்டான்? வெறும் புகழ்ச்சிக்கு மகிழ்பவன் அல்லன் அனுமன். மேலும், சுக்ரீவன் முதலானவர்கள்*

எதிரே அனுமனைப் புகழ்தல் சரியன்று. எனவேதான், அனுமனைப் பற்றிக் குறிப்பிடாமல், 'இயம்பினீர்' என்று பொதுவாகக் கூறிவிட்டான் இராகவன். இராகவனது அரசியல் அறிவுக்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

## வளரும் வலிமை

இதுவரை அனுமனுடைய கல்வித் தகுதி, நுண்மாண் நுழைபுலம், அடக்கம் உடைமை, புலனடக்கம், பணிவு உடமை, இராமனிடத்தில் முழுச் சரணாகதி என்பவை பற்றிப் பேசப்பட்டது. இனி இத்துணை அடக்கம் உடையவனாயினும், வீரத்திற்கும் அவன் உறைவிடமாகிறான் என்பதற்கு ஒன்றிரண்டு எடுத்துக்காட்டுகள் காணலாம். அனுமன் வலிமை இராவணன் வலிமை போல உள்ளதன்று. வாய்மை இன்மை, புலனடக்கம் இன்மை, கழி காமம் என்பனவற்றால் இராவணன் வன்மை, உள் அரிக்கப்பட்டதாக ஆகிவிட்டது. ஆனால், அனுமனின் வன்மை, அவனுடைய பண்பு நலன் காரணமாக, நாளும் வளர்கின்ற ஒன்றாக இருந்தது. அனுமன் வலிமை அறத்தின் அடிப்படையில் எழுந்தது என்ற உண்மையைச் சாம்பன் இதோ கூறுகிறான். மயேந்திர மலையில் நின்று, யார் கடலைக் கடந்து செல்லும் ஆற்றல் பெற்றவர் என்ற பிரச்சினை பற்றி ஆராயப்பட்ட பொழுது சாம்பன் அனுமனை நோக்கி, 'நீரே இக் கடல் தாவும் வேகம் அமைத்தீர்' (மயேந்திரப் படலம்—19) என்று கூறுகிறான். திடீரென்று சாம்பன் இம்முடிவுக்கு வரவில்லை. 10 பாடல்களில் அனுமனுடைய ஆற்றலை விரிவாகப் பேசுகிறான்.

வெப்புறு செந்தீ, நீர், வளியாலும் விளியாதீர்;
செப்புறு தெய்வப் பல்படையாலும் சிதையாதீர்;

[பஞ்ச பூதங்களாலும், தெய்வப் படைக்கலங்களாலும் அழியமாட்டீர்.]

மேரு கிரிக்கும் மீதுஉற நிற்கும் பெருமெய்யீர்;
மாரி துளிக்கும் தாரை இடுக்கும், வரவல்லீர்;

*[மேரு மலையைவிடப் பெரிய உடம்பை எடுக்க வல்லீர். மழைத்துளி விழும் தாரைக்குள்ளும் புகுந்து வர வல்லீர்.]*

போர்முன் எதிர்ந்தால்
மூவுலகேனும் பொருள் ஆகா;
ஓர்வுஇல் பலங்கொண்டு, ஒல்கல்இல்
வீரத்து உயர்தோளீர்.

*(மயேந்திரப் படலம்—10, 12, 14)*

*[போர் எதிர்ப்பட்டால் மூவுலகையும் வெல்லும் ஆற்றலுடையீர்! தளர்தல் இல்லா வீரமும் வெற்றியுங் கொண்ட தோளீர்!]*

அடங்கவும் வல்லீர்; காலம்
அது அன்றேல்; அமர்வந்தால்
மடங்கல் முனைந்தா லன்ன வலத்தீர்;

*(மயேந்திரப் படலம்—17)*

*[காலம் சரியில்லை எனின் அடங்கி இருக்கவும் வல்லீர், சிம்மம் முனைந்தது போலப் போரிடும் வன்மையும் உடையீர்.]*

*இவ்வாறு பேசுகிறான் சாம்பன். அனுமன் இதுவரைத் தன் வன்மையைத் தான் அறியான். அவனிடமுள்ள சிறப்பே அதுதான். சாம்பன் கூறும் முறையில் அனுமன் ஆற்றலில் உள்ள தனிச்சிறப்பும் வெளிப்படுத்தப்படுகிறது. எத்துணை ஆற்றல் உடையவர்களும், காலம், இடம் அறிந்தே செயல்பட வேண்டும் என்று கட்டளை விதிக்கின்றது அறநூல். காலம் அறிதல் பற்றிக் கூறவந்த குறள்,*

பகல் வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது *(திருக்குறள்—481)*

என்று பேசுகிறது. அனுமன் காலமறிந்து வினை செய்பவன் என்பதனைச் சாம்பன் 'அடங்கவும் வல்லீர்' என்று கூறுகிறான்.

## ஆற்றலின் அடித்தளம்

இவ்வளவும் கூறியபிறகு இத்துணை ஆற்றல் அனுமனிடம் எவ்வாறு வந்தது? இத்துணை ஆற்றல் உடைய அவன் இவ்வளவு அடக்கத்துடன் வாழக் காரணம் என்ன? என்பவற்றிற்கு விடை கூறுபவன்போலச் சாம்பன் பேசுகிறான்.

நீதியில் நின்றீர்; வாய்மை அமைந்தீர்; நினைவாலும்
மாதர் நலம் பேணாது வளர்ந்தீர்; மறை எல்லாம்
ஓதி உணர்ந்தீர்! ஊழி கடந்தீர்: உலகு ஈனும்
ஆதி அயன்தானே என யாரும் அறைகின்றீர்.

(மயேந்திரப் படலம்—15)

[அறத்தில் நின்று, வாய்மை காத்து, மனத்தாலும் மாதர் நலம் பேணாது வளர்ந்தீர், அனைத்துக் கலைகளையும் ஓதி உணர்ந்தீர். பல ஊழிக்காலம் வாழ்கின்றீர்.]

நீதியில் சலியாது நிற்றலும், வாய்மையை விடாது கடைப்பிடித்தலும், பொய்யை விலக்குதலும், நினைவிற்கூட மாதர் நலம் பேணாதிருத்தலும் யாருக்கு முடியும்? ஒரே வரியில் விடை கூற வேண்டுமெனில் புலனடக்கத்தைப் பின்பற்றி அதில் வெற்றி கண்டவர்கட்கே மேலே கூறியவை இயலும். எனவே அனுமனின் பலம், கேவலம் உடல் வன்மை மட்டும் அன்று; மனவலிமை மட்டுமன்று; தவவலிமை மட்டுமன்று; ஆன்ம வலிமையும் உடன் சேர்ந்ததாகும். எனவேதான் செயற்கு அரியவற்றை எளிதில் செய்யக்கூடிய பெரியவனாக அவன் நிற்கின்றான். இவை அனைத்துடன் கூடப் பணிவு எவ்வாறு கிடைத்தது?

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. (திருக்குறள்—419)

என்பதற்கேற்ப, நுணங்கிய கேள்வி மேலோனாக அனுமன் இருந்தான். 'மறை எல்லாம் ஓதி உணர்ந்தீர்' என்றும், 'பகலோன் தேர்முன் நடந்தே ஆரிய நூலும் தெரிவுற்றீர்' (14) என்றும் சாம்பன் கூறுவதிலிருந்தும், இராகவன் 'இவன் கல்லாத கலையும் வேதக் கடலுமே இல்லை' என்பதிலிருந்தும், அவன் கல்விப் பெருக்கத்தை அறிய முடிகிறது. இத்துணைக் கல்வியும், கேள்வியும் விழலுக்கு இறைத்த நீராக மாறி, அவனுடைய அகங்காரத்தை வளர்க்கவில்லை என்றால், அவன் கல்வி, உண்மையிலேயே பயனுடைய கல்வி, என்பதை அறிய முடிகின்றது. இக்கல்விப் பெருக்கமும், பண்பாடும், நல்லொழுக்கமும், புலனடக்கமும் உடைய ஒருவன் இவற்றுள் எதுவும் இல்லாத சுக்ரீவனிடம் பணிபுரிய நேர்ந்தது விதியின் விளையாட்டுப் போலும். அப்படி இருந்தும், தன் தலைவனுக்கு அடங்கியவனாய், அவனுடைய நம்பிக் கைக்குப் பாத்திரமானவனாய், அவனுடைய நல்வாழ்வுக்கு வழி தேடுபவனாய், அவனிடம் நன்றி பாராட்டுபவனாய் வாழ்ந்தது அனுமனின் பெருமையைப் பல மடங்கு உயர்த்துகிறது.

## அனுமனை அறிந்தவன் வாலியே!

இதிலும் ஒரு வேடிக்கை அமைந்துள்ளதைக் காணலாம். அனுமன் சுக்ரீவனிடம் பணிபுரிகின்றான். அவனிடம் பணிபுரிபவர் யாரும், இவனுக்குச் சமமானவர் ஆகார். சுக்ரீவன் இவனுடைய அருமை பெருமைகளை அறிந்துகொண்டதாகவோ, அதற்கேற்ற ஓர் இடத்தை அனுமனுக்குக் கொடுத்ததாகவோ தெரியவில்லை. ஆனால், அந்தச் சுக்ரீவனின் பகைவனாகவும், அண்ண னாகவும் அமைந்த வாலி, அனுமனை உள்ளவாறு

*அறிந்திருந்தான். தன் பகைவனும், தம்பியுமாகிய சுக்ரீவனை, எவ்வளவு துல்லியமாக எடை போட்டிருந்தானோ, அதேபோல அனுமனையும் எடை போட்டிருந்தான் என்பதை, அவன் இறக்குமுன் இராமனிடம் பேசிய பேச்சுக்களிலிருந்து அறியலாம். இறக்கப் போகும் வாலி தன்னைக் கொன்றவனாய இராமன் யார் என்பதை அறிந்த பிறகு,*

'ஓவிய உருவ! நாயேன்
உளது ஒன்று பெறுவது உன்பால்;
பூ இயல் நறவம் மாந்தி,
புந்திவேறு உற்ற போழ்தில்,
தீவினை இயற்று மேனும்,
எம்பிமேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும்
கூற்றனை ஏவல்' என்றான்.

*(வாலி வதைப் படலம்—134)*

*[ஓவியம் போன்ற வடிவுடையாய்! நான் உன்னிடம் வேண்டுவது ஒன்று உண்டு. என் தம்பி குடித்துவிட்டுப் புத்தி தடுமாறித் தீவினை செய்தாலும், நீ கோபித்து என்மேல் ஏவிய அம்பை அவன் மேல் ஏவிவிடாதே.]*

## வாலியின் பரிந்துரை

*வாலி, இப்பொழுது பண்பாட்டின் உச்சியில் நின்று பேசுகிறான் என்பதற்கு, இதைவிட வேறு உதாரணம் தேவை இல்லை. எந்தத் தம்பி தன் உயிருக்கு உலை வைத்தானோ அந்தத் தம்பியின் பண்பாட்டை நன்கு அறிந்த வாலி, இப்பொழுது அவனைக் காக்கப் பாடுபடுகிறான். சுக்ரீவன் பற்றிய வாலியின் கணிப்பு எவ்வளவு உண்மையானது என்பதைக் கார்காலப் படலத்தில் காண முடிகிறது. இந்த நேரத்தில் இராமனும், வாலியைப் பற்றிய தன் பழைய கணிப்பை மாற்றிக்*

*கொண்டு, அவன்மீது எல்லையற்ற மதிப்பும் மரியாதையும் கொண்டுவிடுகிறான். எனவே, வாலியின் சொற்களுக்கு அதிக மதிப்புத் தரும் நிலையில் உள்ளான். இப்பொழுது அதே வாலி அனுமனைப் பற்றி இராமனிடம் பேசுகிறான்.*

அனுமன் என்பவனை ஆழிஐய! நின்செய்ய செங்கைத்
தனு எனநினைதி;

*((வாலி வதைப் படலம்—137)*

*[ஐயனே! அனுமன் என்பவனை உன் கையிலுள்ள கோதண்டமாகிய வில் என்றே நினைப்பாயாக.]*

*இவ்வாறு வாலி பேசியது வியப்பைத் தருவதாகும். இராமன் அனுமனை நன்கு அறிந்திருந்தாலும், வாலியின் பேச்சு, அவனுள் ஒரு புதிய எண்ணத்தையே உண்டாக்கி இருக்க வேண்டும். இராகவன் செய்ய செங்கையில் உள்ள கோதண்டம் என்ற வில்தான் அவதார நோக்கத்தை நிறைவேற்றித் தசரதன் மகனாகிய இராமனைக் கோதண்ட ராமனாகப் பெயர் மாற்றியது. கோதண்டத்திலிருந்து இராமனைப் பிரிக்க முடியாது. கோதண்டத்திற்கு என்று தனிப்பட்ட விருப்பு வெறுப்பு எதுவும் இல்லை. தன்னைத் தாங்கிய இராமன் மனத்தில், என்ன நினைத்துத் தன்னைப் பயன்படுத்துகிறானோ, அந்த எண்ணத்தை நிறைவேற்ற வேண்டிய ஒரே கடமைதான் கோதண்டத்திற்கு. இராமன் பயன்படுத்தாத நேரத்தில் அஃறிணைப் பொருளாகிய அது, தனக்கென ஒரு தற்போதம் இல்லாமல், தன் தலைவன் தன்னை எங்கே எப்படி வைத்தானோ, அங்கே அப்படியே இருப்பதுதான் கோதண்டத்தின் இயல்பு.*

## பசு கரணம் பதி கரணம் ஆனவன்

*இங்கு அந்த வில்லுக்குக் கூறிய அனைத்தும் அனுமனுக்கும் பொருந்தும். பிராட்டி இருக்கும் இடத்தைக்*

கண்டு பிடித்ததிலிருந்து, பிரமாத்திரம் முதலியவற்றால் ஊறு விளையாமல் காத்ததிலிருந்து. கடைசியாகப் பரதன் தீப்புகாமல் காத்ததிலிருந்து அவதார நோக்கம் நிறைவேற அனுமன்தான் உதவினான். இராமனை அனுமனிட மிருந்தும் பிரிக்க முடியாது. தலைவனாகிய இராகவ னுடைய நண்பர்கள் இவனுக்கும் நண்பர்கள். அவன் பகைவர்கள் இவனுக்கும் பகைவர்களே. இஃதல்லாமல் இவனுக்கு என்று பகை, நட்பு நொதுமல் என்று எவரும் இலர். இராமன் மனத்தில் என்ன நினைக்கிறானோ அந்த நினைவு அப்படியே அனுமன் மனத்திலும் தோன்றும். எனவே, அதனை நிறைவேற்றுவதே அவன் வாழ்க்கையின் குறிக்கோள். இராமன் பணி இடாத நேரத்தில், அவனுடைய தற்போதம் முழுவதும், இராமபக்தியிலும் அவன் நினைவிலுமே கழிகிறது. காளத்தி வேடனாகிய கண்ணப்பரைப் பற்றிச் சேக்கிழார் கூறிய,

தன் பரிசும், வினை இரண்டும்,
சாருமலம் மூன்றும் அற
அன்பு பிழம்பாய்த் திரிவர்

(கண்ணப்பர் புராணம்—154)

என்ற சொற்கள் அனுமனுக்கும் முற்றிலும் பொருந்தும். கண்ணப்பர், அனுமன் போன்றவர்களுடைய கருவி, கரணங்களைப் பசுகரணங்களாக இருந்தவை மாறிப் பதிகரணமானவர்கள் என்று கூறுவர். (அந்தக் கரணங் களாவன—மனம் சித்தம், புத்தி, அகங்காரம் என்பவை.)

இவ்வளவு ஆற்றலும், அவனுடைய அடக்கத்துள் அடங்கி இருந்தமையின், வெளியில் தெரிய வாய்ப்பே இல்லாமல் இருந்தது. ஆர்ப்பாட்டம் இல்லாமையின், இவன் வீரத்தைக் குறைவாக எடைபோட்டு உயிரிழந் தவர்கள், அக்ககுமாரன் முதல் பலராவர்.

## உணர்ச்சியும் தணித்தலும்

*இராமனுக்குத் தீங்கு செய்தவர்கள் என்று கண்டால் இவனும் உணர்ச்சி வசப்படுவான். ஆனால் அந்த உணர்ச்சி வரம்பு கடந்து போகாமல், அவனுடைய அறிவு துணை செய்கிறது. பிராட்டியை நாடி இலங்கை சென்று இராவணன் அரண்மனையுள்ளும் கட்புலனாகாச் சிறுவடிவுடன் நுழைந்து சுற்றி வருகிறான். உறங்கும் கும்பகர்ணனைக் கண்டு இவன்தான் இராவணன் என்று தவறாக நினைக்கிறான். நினைந்த உடன் பிராட்டியைக் கவர்ந்த கள்வன் என்ற எண்ணம் தோன்றுகிறது. உடனே எல்லையற்ற சினங்கொள்கிறான். ஆனால், அடுத்த வினாடி அறிவு தொழிற்படுகிறது. இராவணன் பத்துத் தலைகளும், இருபது கரங்களும் உடையவன்; இவனுக்கு அவை இல்லை. எனவே, இவன் இராவணன் அல்லன், என்ற முடிவுக்கு வந்தவுடன் சினம் மறைகிறதாம்.*

குறுகி நோக்கி, மற்று அவன் தலை ஒருபதும், குறித்த
இறுகு திண்புயம் இருபதும், இவற்கு இலை என்னா,
மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெங்கனலை,
அறிவு எனும் பெரும் பரவை அம்புனலினால், அவித்தான்

*(ஊர் தேடு படலம்—131)*

*தூய வீரனாகிய அனுமன், இராவணனை எல்லா வகையிலும் ஒத்த வீரம் உடைய கும்பகன்னனை, இராவணனோ என்று சந்தேகித்தது. அவனுடைய நுண்மாண் நுழை புலத்தையே காட்டும். உறங்கும் வீடணனைக் கண்டு 'குற்றம் இல்லது ஓர் குணத்தினான்' (137) என்று முடிவு செய்தான்.*

## உடற்கூறு கண்டு எடை போடுதல்

*இன்னும் பல இடங்கள் கடந்து சென்று ஒப்பற்ற வீரன் ஒருவன் உறங்குவதைக் கண்ணுறுகின்றான். அவன் மனத்திரையில் ஓடிய எண்ணங்களைக் கவிஞன் கூறுகிறான்.*

'வளையும் வாள்எயிற்று அரக்கனோ?
கணிச்சியான் மகனோ?–
அளையில் வாழ் அரி அனையவன்–
யாவனோ? அறியேன்:
இளைய வீரனும், ஏந்தலும்
இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும்
உளது' என உணர்ந்தான்.

இவனை இன்துணை உடையபோர்
இராவணன், என்னே?
புவனம் மூன்றையும் வென்றது ஓர்
பொருள் எனப் புகறல்?
சிவனை, நான்முகத்து ஒருவனை,
திருநெடு மாலாம்
அவனை, அல்லவர் நிகர்ப்பவர்
என்பதும், அறிவோ?'

*(ஊர் தேடு படலம்—141, 142)*

*[வளைந்த பற்களை உடைய அரக்கனோ மழுப்படையுடைய சிவபிரான் மகன் முருகனோ? குகையில் உள்ள சிங்கத்தை ஒத்தவன் யாவனோ அறியேன். இளைய வீரனாகிய இலக்குவனும், இராமனும் பலநாள் கடுமையாகப் புரிய வேண்டிய போரை, இவனுடன் நிகழ்த்த வேண்டிவரும்.*

*இத்தகைய ஒரு வீரனை, இனிய துணையாகப் பெற்றுள்ள இராவணன், மூன்று உலகத்தையும் வென்றுள்ளான் என்று கூறுவது, பொருளற்ற சொற்களாம். மும்மூர்த்திகளுள் யாரேனும் ஒருவருடன் ஒப்பிடுவதன்றி வேறு கூறுவதும் அறிவுடைமை ஆகுமோ.]*

இந்த இரண்டு பாடல்களும், இன்னான் என்று தெரியாமல் இந்திரசித்தன் உறங்கும் நிலையில், அவனைக் கண்டு, அனுமன் கூறிய சொற்களாகும். உறங்குகின்ற

'வளையும் வாள்எயிற்று அரக்கனோ?
கணிச்சியான் மகனோ?–
அளையில் வாழ் அரி அனையவன்–
யாவனோ? அறியேன்:
இளைய வீரனும், ஏந்தலும்
இருவரும் பலநாள்
உளைய உள்ளபோர் இவனொடும்
உளது' என உணர்ந்தான்.

இவனை இன்துணை உடையபோர்
இராவணன், என்னே?
புவனம் மூன்றையும் வென்றது ஓர்
பொருள் எனப் புகறல்?
சிவனை, நான்முகத்து ஒருவனை,
திருநெடு மாலாம்
அவனை, அல்லவர் நிகர்ப்பவர்
என்பதும், அறிவோ?'

*(ஊர் தேடு படலம்—141, 142)*

*[வளைந்த பற்களை உடைய அரக்கனோ மழுப்படை யுடைய சிவபிரான் மகன் முருகனோ? குகையில் உள்ள சிங்கத்தை ஒத்தவன் யாவனோ அறியேன். இளைய வீர னாகிய இலக்குவனும், இராமனும் பலநாள் கடுமையாகப் புரிய வேண்டிய போரை, இவனுடன் நிகழ்த்த வேண்டி வரும்.*

*இத்தகைய ஒரு வீரனை, இனிய துணையாகப் பெற்றுள்ள இராவணன், மூன்று உலகத்தையும் வென்றுள்ளான் என்று கூறுவது, பொருளற்ற சொற்களாம். மும்மூர்த்திகளுள் யாரேனும் ஒருவருடன் ஒப்பிடுவதன்றி வேறு கூறுவதும் அறிவுடைமை ஆகுமோ.]*

இந்த இரண்டு பாடல்களும், இன்னான் என்று தெரியாமல் இந்திரசித்தன் உறங்கும் நிலையில், அவனைக் கண்டு, அனுமன் கூறிய சொற்களாகும். உறங்குகின்ற

நிலையிலும், ஒருவன் இன்னான் என்று தெரியாத நிலையிலும் அவனையும், அவன் வீரத்தையும் இவ்வளவு நுண்மையாக அளவிடும் வீரன் எத்தகையவனாக இருத்தல் வேண்டும் என்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

## பகைவனை மதிக்கத் தெரிந்தவன்

அனுமன், அவன் எதிரிகளான இந்திரசித்தன், இராவணன் ஆகிய மூவரும் ஒப்பற்ற வீரர்கள். தவபலம், வரபலம், கல்வி, கேள்வி, ஞானம் ஆகிய அனைத்தும் உடையவர்கள். இவர்கள் யார் யாருடன் போரிட்டாலும்; ஒருவரை மற்றவர் கொல்வது என்பது இயலாத காரியம். அத்தகைய வீரர்களாயினும், இவர்களுக்குள் இருக்கும் தாரதம்மியத்தை ஆய்தல் பயனுடையதாகும்.

தூய வீரம் படைத்த அனுமன், கும்பகன்னனையும், இந்திரசித்தனையும், உறங்கும் நிலையில் கண்டுங்கூட, அவர்கள் ஆற்றலை நுணுக்கமாக எடை போட்டானே! ஆனால் இந்திரசித்தன் போர்க்களத்தில் நேரே அனுமனுடன் பொருகின்றவரை 'சுள்ளியில் இருந்து உறை குரங்கு; பூவின் தேன் உண்குரங்கு' என்றுதான் பேசுகிறான். அக்ஷய குமரன் இறந்த பிறகும், சம்புமாலி, கிங்கரர், பஞ்சசேனாபதிகள் இத்துணைப் பேரையும், யானை, குதிரை, தேர் முதலியன எவையும் இல்லாமல், கையில் ஓர் ஆயுதமும் இல்லாமல், தான் ஒருவனாகவே நின்று அழித்துள்ளான் அனுமன் என்றாலும், இந்திரசித்தன் அவன் வீரத்தை மதிக்கத் தயாராக இல்லை. அதே நேரத்தில் அலட்சிய மனப்பான்மையும் உடன் எழுகிறது. இராவணனிடஞ் சென்று,

'கிங்கரர், சம்பு மாலி,
கேடு இலா ஐவர் என்று இப்,
பைங்கழல் அரக்க ரோடு
உடன்சென்ற பகுதிச் சேனை

இங்கு ஒரு பேரும் மீண்டார்
    இல்லையேல், குரங்கு அது எந்தாய்!
சங்கரன், அயன், மால் என்பார்
    தாம் எனும் தகையது ஆமே!'

*(பாசப் படலம்—10)*

*என்று இவ்வாறு அனுமனைப் பற்றிப் பேசும் இந்திர சித்தன், ஒரு சில வினாடிகளில் மனம் மாறி,*

'ஆயினும், ஐய! நொய்தின்,
    ஆண்தொழில் குரங்கை யானே
'ஏ' எனும் அளவில் பற்றித் தருகுவென்..............'

*(12)*

*என்று பேசுகிறான் என்றால், இதிலிருந்து அறிய வேண்டியது ஒன்றுளது. பகைவரைக் குறைத்து மதிக்கும் தவற்றை, மறந்தும் அனுமன் செய்யவில்லை. ஆனால், பகைவன் ஆற்றல் தெரிந்தும், அதனைக் குறைத்து மதிக்கும் தவற்றை இந்திரசித்தனும், இராவணனும் செய்கின்றனர் எனில், அதன் காரணம் யாது? அகங்காரம் ஒன்றினால் மூடப்பட்ட இந்திரசித்தன். இராவணன், இருவரும் தத்தம் வீரத்தில் கொண்ட நம்பிக்கை, நம்பிக்கை நிலையைக் கடந்து அகங்காரமாக மாறி, உலகத்தில் தம்மை ஒத்தவர் யாரும் இருக்க முடியாது என்ற முடிவுக்கு வரத் தூண்டிவிட்டது.*

## அகங்காரம் மறைக்கும்

*இவ்வாறு அகங்காரம், ஒரு மனிதனுடைய அறிவு, அனுபவம் என்ற அனைத்தையும் மறைத்துவிடுமா என்று ஐயங்கொள்ளத் தேவை இல்லை. இன்று நம் காலத்தில் வாழ்ந்த, வாழ்கின்ற இட்லர் போன்றவர் இதற்கு உதாரணம் ஆவர். இந்த அகங்கார வெறி பிடித்தவர்களை மாற்றுதல் இயலாத காரியம். ஆனால் இதன் எதிராக, அனுமன் மட்டும் எவ்வாறு பகைவனையும் மதித்துப் போற்றும்*

*பண்பைப் பெற்றான்? அவனுடைய புலனடக்கம் ஒன்றுதான் அவனை ஆணவங் கொள்ளாமல் தடுத்துவிட்டது. அகங்காரமாகிய கண்ணாடியை அணிந்துகொண்டு பார்க்கும் இந்திரசித்தனுக்கும், இராவணனுக்கும், அனுமன்—சுள்ளியில் உறை குரங்கு; இராம இலக்குவர்கள்—அரக்கர்கள் உண்ணும் உணவு! அந்தக் கண்ணாடி இல்லாத வீரர்களாகிய அனுமன் முதலாயினோர்க்கு இந்திரசித்தன் மகாவீரன், பல நாள் போரிட வேண்டிய ஆற்றல் உள்ளவன், என்று படுகிறது. இதுவும் அனுமன் புலனடக்கத்தால் பெற்ற பேறாகும்.*

## போர்த்திறம்-கும்பனுடன்

*இனி இந்தத் தூய வீரனாகிய அனுமன் செய்த போர்களில் ஒன்றிரண்டு காணலாம். கும்பகன்னன் போர்க்களத்தில் சுக்ரீவனைச் சந்திக்கிறான். அவன்மேல் சூலத்தை எறிகின்றான். சுக்ரீவன் மடிந்தான் என்று பார்ப்பவர் பேசும் அந்த வினாடியிலேயே, 'எட்டினன் அது பிடித்து, இறந்து நீக்கினான், ஒட்டுமோ, மாருதி அறத்தை ஓம்புவான்' (கும்பகருணன் வதைப்படலம்—260) இது கண்ட கும்பன் மனந்திறந்து அனுமனைப் பாராட்டுகிறான்:*

கருதவும் இயம்பவும் அரிது. உன் கைவலி;
அரியன முடிப்பதற்கு அனைத்து நாட்டினும்
ஒரு தனி உளை; இதற்கு உவமை யாது? என்றான்.

*(கும்பகருணன் வதைப் படலம்—226)*

*இவ்வாறு வஞ்சகமில்லாமல் கும்பன் அனுமனைப் புகழ்ந்தது போலவே, அனுமனும் கும்பனைப் புகழ்ந்ததும் உண்டு. மாருதி ஒரு மலையை எடுத்துக் கும்பன்மேல் எறியும்போது, 'நீ இதனால் சாகவில்லை எனில், நின்னொடு இனிப் போர் புரியேன்' என்று கூறி எறிந்தான்.*

*அம்மலை கும்பன் தோளில் பட்டுப் பொடியானது. அவன் கண்ணைக்கூட இமைக்கவில்லை. அதுகண்ட அனுமன்,*

..................இவனது ஆற்றல்
அளக்குறற் பாலும் ஆகா;
குலவரை அமரின் ஆற்றா;
துளக்குறும் நிலையன் அல்லன்;
சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேல், பிளக்கும் என்னா,
மாருதி பெயர்ந்து போனான்.

*(கும்பகருணன் வதைப் படலம்—203)*

*என்று மனமாரப் பாராட்டுகின்றான். அதைவிடச் சிறப்பு என்னவென்றால் சுந்தரத் தோளனாகிய இராமன் அம்பு ஒருவேளை இவன் தோளைப் பிளந்தாலும் பிளக்கலாம் என்று கூறுகிறான். இராம பாணம் கூட ஒருவேளை பிளக்க முடியாமல் போனாலும் போகலாம் என்று அனுமனே கூறுவது வியப்புக்குரியது.*

*முதற் போர்புரி படலத்திலேயே அனுமன் இராவணனைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டுகிறது. அனுமன் இராவணன் இருவரும் ஒருவரை ஒருவர் ஒவ்வொரு குத்துக் குத்த வேண்டும் என்றும், அதில் வலி குன்றியவர் மறுபடி போரிடக் கூடாது என்றும் ஒரு சூளுரை செய்து கொண்டனர். அவ்வாறு அனுமன் கூறியவுடன், இராவணன் அவனைப் புகழ்ந்து பேசுகிறான்.*

வீரர்க்கு உரியது சொற்றனை;–
விறலோய்!–ஒரு தனியென்
நேர்நிற்பவர் உளரோ? பிறர்
நீ அல்லவர்? இனி, நின்
பேருக்கு உலகு அளவே; இனி
உளவோ பிற?.........

*(முதற் போர் புரி படலம்—167)*

ஒன்று ஆயுதம் உடையாய் அலை;
ஒரு நீ எனது உறவும்
கொன்றாய்; உயர் தேர்மேல் நிமிர்
கொடுவெஞ்சிலை கோலி,
வன்தானை யினுடன் வந்த என்
எதிர்வந்து, நின் வலியால்
நின்றாயொடு நின்றார் இனி நிகரோ?... (168)

முத்தேவர்கள் முதலாயினர்; முழு மூன்று உலகிடையே
எத்தேவர்கள், எத்தானவர், எதிர்வார் இகல்; என்நேர்
பித்தேறினர் அல்லால்? இடைபேராது, எதிர்மார்பில்
குத்தே எனநின்றாய்; இது கூறும் தரம் அன்றால்.
*(முதற் போர் புரி படலம்—169)*

*[ஒரு வீரனுக்குரிய சொற்களையே கூறினாய்! வலியாய்! உன்னையல்லாமல் ஒரு தனியே என்னுடன் நேர் நின்று போரிடுபவர்கள் உண்டா? நின் புகழுக்கு இவ்வுலகே அளவு.*

*ஒரு படைக்கலமும் இல்லை; ஒருவனாக நின்ற நீ என் மகனைக் கொன்றாய் (அக்க குமாரன்). உயர்ந்த தேரின் மேல் ஏறிக்கொண்டு, கொடுமையான வில்லையும் தாங்கி, வலிய சேனையுடன் வந்துள்ள என் எதிரே வந்து, உன் வலிமையே துணையாகக் கொண்டு நிற்கின்றாய்! இங்குள்ளவர் யார் உனக்கு நிகராவார்?*

*முத்தேவர்கள், மூன்று உலகினும் உள்ள தேவர், தானவர் என்பார்களுள் என்னை எதிர்த்துப் போர் புரிவார் யார்? பித்தேறினவர்களே இது செய்யத் துணிவர். இம்மியளவும் இடம்பெயராது மார்பில் குத்து என நின்றாய்! இது கூறும் தரத்ததன்று.]*

*இத்தகைய உரையாடலில், இரு பெரு வீரர்கள் ஒருவரை ஒருவர் மனமாரப் பாராட்டிக் கொள்ளுதலைக் காண முடிகிறது. அனுமன், இலங்கை வந்து சென்ற பிறகு*

இராவணன்கூட. அவனைக் குரங்கு என்று பேசுவதைத் தவிர்த்துவிட்டான் என்பதையும் அறிய முடிகிறது. இதன் பிறகு இருவரும் குத்திக்கொள்ள உடன்பட்டு, முதலில் அனுமன் இராவணனைக் குத்துகிறான். அக்குத்தால் இராவணன் தள்ளாடிய வடமேருவின் சலித்தானாம். சிறிது பொழுது கழிந்த பிறகுதான், இராவணனுக்கு உணர்வே வந்ததாம். அதன் பிறகு இராவணன், அனுமனைப் புகழ்ந்து இதோ பேசுகிறான்:

'வலி என்பதும் உளதே? அது
நின்பாலது; மறவோய்!
அலி என்பவர், புறம் நின்றவர்;
உலகு ஏழினும் அடைத்தாய்;
'சலி' என்று எதிர்மலரோன் உரை
தந்தால், இறை சலியேன்;
மெலிவு என்பதும் உணர்ந்தேன்;
எனை வென்றாய், இனி விறலோய்!'

(முதற் போர் புரி படலம்—181)

[வலிமை என்பது உண்டு என்றால், அது உன்னிடந் தான் உளது! உன்னையல்லாமல் பிறர் உள்ளவர் அனைவரும் அலிகளே! நான்முகன் என் எதிரே வந்து 'நீ கொஞ்சம் சலிப்பாய்' என்று கூறினால்கூட ஒரு வினாடி சலிக்க மாட்டேன். (நீ குத்திய பிறகுதான்) தளர்ச்சி (மெலிவு) என்பதும் உண்டு என அறிந்துகொண்டேன். எனை வெற்றி கொண்டுவிட்டாய்.]

அடுத்துத் தான் குத்தப் போகுமுன் இராவணன் அனுமனைப் பார்த்து,

............................'என் ஒருகை
குன்றின் மிசை கடை நாள்
விழும் உரும் ஏறு எனக் குத்த,
நின்று, உன் நிலை தருவாய் எனின்
நின் நேர் பிறர் உளரோ?

இன்றும் உளை; என்றும் உளை;
இல்லை, ஓர் பகை!' என்றான் (182)

[என் ஒரு கையினால் யுகாந்த முடிவில் குன்றின் மேல் விழும் ஆண் இடிபோல ஒரு குத்துக் குத்த நீ நின்ற உன் பழைய நிலையில் இருப்பாய் என்றால் உன்னை நிகர்ப்பவர் எவரும் இரார். இன்றும், என்றும் நீ இருப்பாய்! (சிரஞ்சீவி). பகை என்பது உனக்கிராது.]

என்று கூறிவிட்டுக் குத்துகிறான். இக்குத்தால் அனுமன் இராவணனைப் போலவே சலித்துவிட்டான். ஆகலின் தாங்கள் செய்துகொண்ட உடன்படிக்கைப்படியே, ஒருவருடன் ஒருவர் இறுதிவரை, போரிடவே இல்லை.

## கம்பன் சங்கடம்

பிரமாத்திரத்தால் இலக்குவன் முதல் யாவரும் கட்டுண்டு கிடக்கின்றனர். இராமன், தம்பி இறந்தான் என்று நினைந்து உணர்வு இழந்து கிடக்கின்றான். இந்நிலையில் சாம்பன் அனுமனிடம் மருத்துமலை கொணரச் சொல்கின்றான். அந்த வேளையில், மருத்து மலை வந்தால்தான், இலக்குவன் முதலானோர் பிழைப்பர் என்பதைக் கூறவந்த சாம்பன்,

எழுபது வெள்ளத் தோரும்,
இராமனும், இளைய கோவும்
முழுதும் இவ்உலகம் மூன்றும்,
நல்அற மூர்த்தி தானும்,
வழுஇலா மறையும், உன்னால்
வாழ்ந்தன ஆகும்; மைந்த!
பொழுது இறை தாழாது, என்சொல்
நெறிதரக் கடிது போதி. (மருத்துமலைப் படலம்—23)

என்று அனுமனிடம் கூறி, அவனை மருத்துமலை கொணர அனுப்புகிறான். அந்த வேளையில், இலக்குவன்

அஸ்திரத்தால் கட்டுண்டு கிடக்க, இலக்குவன் நிலைகண்டு இராகவன் அவசமுற்றுக் கிடக்க, வீடணன், சாம்பன், இருவரும் செய்வதறியாது திகைத்து நிற்கின்றனர். இந்த நிலையில் இராமன் மயக்கந்தெளிந்து எழுந்து, 'இலக்குவனே போனபின் யான் எதற்காக உயிர் வாழ வேண்டும்' என்று கவன்று கூறுகிறான். அனுமன் மருந்துமலைக்குப் போனதைக் கூறி, உடன் வந்து விடுகிறான், எனச் சாம்பன் இராமனைத் தேற்றுகிறான்.

இந்தச் சூழ்நிலை கம்பனுக்கே, ஒரு கடக்கமுடியாத சூழ்நிலையை உருவாக்குகிறது. பரம்பொருளே இராமனாக வந்துள்ளான் என்று கதைப்போக்கை இதுவரை கொண்டு வந்துவிட்டான் கவிஞன். நாக பாசத்தைப் போக்கிய கருடனுக்கு, 'முன்பின் தெரியாத எங்கட்கு இத்தகைய உபகாரஞ் செய்த உனக்கு என்றும் கடமைப்பட்டுள்ளேன்' (நாகபாசப் படலம் 267—269) என்று, இராமனைப் பேசுமாறு செய்கிறான் கம்பன். ஆனால் இப்பொழுது நிலைமை வேறு விதமாக உள்ளது. 'இங்கே இருந்து அப்பாவி போல் பேசு வதைக் காட்டிலும், அமரில் இறந்த அன்பர்களை அமரர் நாட்டிடைக் காண்பதே நலம்' என்று பேசத் தொடங்குகிறான்.

இந்தத் தருணத்தில், சாம்பன் தனக்கே உரிய முறையில் 'இராமா, முடிகுவென் உடன் (81) என்று கூறுகிறாய். உன்னையே நீ இன்னான் என்று உணர்ந்து கொள்ள வில்லை. ஆனால் நீ யார் என்று முன்னமே நான் அறிவேன். அதை இப்பொழுது வெளியிடல் தீதாகும். தேவர்கட்கு அது முடியும். பின்னர் சந்தர்ப்பம் வரும் பொழுது விளக்கமாகக் கூறுவேன்' என்ற கருத்தில்,

> உன்னை நீ உணர்கிலை; அடியனேன் உனை
> முன்னமே அறிகுவன்; மொழிதல் தீது; அது,
> என் எனில், இமையவர் எண்ணுக்கு ஈனம் ஆம்;
> பின்னரே தெரிகுதி;—தெரிவில் பெற்றியோய்!
>
> (மருத்துமலைப் படலம்—82)

என்று பேசுகிறான். 'இலக்குவன் பிரமாத்திரத்தால் படினும் அது உன்னை ஒன்றுஞ் செய்யவில்லை என்பதை நினைத்துப் பார்! எனவே, என் சொற்களை நம்புவாயாக' என்று தேற்றிக் கொண்டிருக்கும் வேளையில், அனுமன் மலையுடன் வர, அனைவரும் உயிர் பெற்று எழுகின்றனர்.

## உள்ளம் திறந்து பேசுகிறான்

தம்பியைத் தழுவி மகிழ்ந்த இராகவன், தன்னை வணங்கி நிற்கும் அனுமனிடம் பேசுகிறான். இதுவரை அனுமனிடம் இராகவன் இப்படி உள்ளம் திறந்து பேசவேண்டிய நிலை ஏற்படவில்லை. காரணம் புலனடக்கம் பயின்ற இருவரும் வாய்விட்டுக் கூறாமலே, ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டனர். இராமனுடைய அகமனத்தில் ஓடும் எண்ண ஓட்டங்களை அனுமன் நன்கு அறிவான். ஆதலால் வாய்ப் பேச்சுக்குத் தேவை இல்லாமல் இருந்தது. ஆனால் இப்பொழுதைய நிகழ்ச்சியும், சூழ்நிலையும், அனுமன் செய்த உபகாரத்தின் அளவும், இராமன் வாய்திறந்து பேசச் செய்துவிட்டன.

'ஒருவன் சாகப் போகின்ற காலத்தில் செய்த உதவிக்குக் கைமாறாக உயிரையே கொடுத்தாலும் அமையும். இன்று எம்முடைய உயிரை மட்டுமல்லாமல், எமக்கு வரும் பழியையும் வாராமல் காத்து, அடுத்து எங்கட்குள்ள பகையையும் காத்து, இனி எம்முடைய மரபையுங் காத்து, எமக்குரிய மறைகளையும் காத்தாய்' என்ற பொருளில்,

> அழியுங்கால், தரும் உதவி, ஐயனே!
> மொழியுங்கால், தரும் உயிரும் முற்றுமே?
> பழியுங் காத்து, அரும் பகையும் காத்து, எமை
> வழியுங் காத்தனை; நம் மறையும் காத்தனை.
>
> *(மருத்து மலைப் படலம்—111)*

என்று கூறினதுடன் அமையவில்லை இராகவன்.

## உன் பிள்ளைகள் நாங்கள்

*கொஞ்சம் கொஞ்சமாக அந்த அதிர்ச்சி நீங்கியவுடன், அனுமன் உதவியின் ஆழம் தெரியத் தொடங்குகிறது. நன்றி உணர்வு பெருக்கெடுத்துப் பொங்குகிறது. அதன் பயனாகப் பேசத் தொடங்குகிறான் இராகவன்,*

முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது,
என்னின் தோன்றிய துயரின், ஈறு சேர்
மன்னின் தோன்றினோம் முன்னம்; மாண்டுளோம்;
நின்னின் தோன்றினோம், நெறியில் தோன்றினாய்!

*(மருத்து மலைப் படலம்—110)*

*[எம் முன்னோர்களின் முறையின் நீங்காது வாழ்ந்து, என்னால் தோன்றிய துயரால் உயிரிழந்த மன்னனாகிய, தசரதன் பிள்ளையாகப் பிறந்த நாங்கள் இறந்துவிட்டோம். இப்பொழுது அறநெறியில் வாழும் உன்னிடத்துப் பிறந்தோம்.]*

*என்று கூறியதன் அருமைப்பாட்டை அறிய வேண்டும். தான் மட்டும் இல்லாமல், தம்பியர் உட்பட அனைவருமே அனுமனிடத்தில் தோன்றியதாகக் கூறும் நன்றிப் பெருக்கினை அறிய வேண்டும். அனுமனை முதல் முதலில் கண்டபோது இவ்வுலகங்கட்கெல்லாம் அவன் ஆணி என்று கூறினான் அல்லவா? ஆணி என்பது யாது? வண்டி குடை சரியாமல் காப்பது கடையாணி தானே! அது போலத் தசரதன் குலமாகிய வண்டி குடைசாயாமல் இன்று அனுமன் காப்பாற்றி, இராமன் கூற்றை மெய்ப்பித்து விடுகிறான்.*

*காரைக்கால் அம்மையார் தலையினால் நடந்து, கைலை மலையில் ஏறும்பொழுது, உமையம்மை இறைவனைப் பார்த்து 'ஐயனே, அன்பே வடிவான இந்த எலும்புடம்புடன் வருபவர் யார்?' என்று கேட்டாராம். அதற்கு இறைவன்*

உமையே! வரும் இவள் நம்மைப் பேணும்
அம்மை காண்!...................

*(காரைக்கால் அம்மையார் புராணம்—58)*

*என்று விடை இறுத்தார் என்று சேக்கிழார் பாடிச் செல்கிறார். தாய் தந்தையற்ற பரம்பொருள் சமயத்தில் பெற்றோர் இல்லையே என்று வருந்தும் போலும்! தூய அன்பைப் பயன் கருதாது, செலுத்தபவர் எவராவது இருந்தால், அவர்களையே தனக்குத் தாய் தந்தையாகப் பரம்பொருள் வரித்துக் கொள்ளும் போலும்! இங்கு அனுமனைப் பார்த்து 'நெறியில் தோன்றினாய்! நின்னில் தோன்றினோம்' என்று பரம்பொருள் பேசுகிறது. இதிலும் ஒரு சிறப்புண்டு. சிவபிரான் உமையையும் உடன் சேர்த்துக்கொண்டு 'நம்மைப் பேணும் அம்மை' என்றானே தவிர, 'என்னைப் பேணும்' என்று கூறவில்லை. அதேபோல இங்கும் இராகவன் 'நின்னின் தோன்றினேன்' என்று கூறாமல் 'தோன்றினோம்' என்று உளப்பாட்டுத் தன்மைப் பன்மையில் கூறுகிறான். இவ்வாறு இராமனே கூறினான் எனில், அனுமனுடைய ஆற்றலுக்கும், பக்திக்கும், தன்னலம் இன்மைக்கும், புலனடக்கத்துக்கும் வேறு சான்று வேண்டுவதில்லை அல்லவா.*

## பரதனையும் காக்கிறான்

*பிராட்டியை அழைத்துக் கொண்டு, புட்பக விமானத்தில் அயோத்தி திரும்பும் இராமன், வழியில் பரத்துவாச—முனிவன் வேண்ட, அவன் ஆசிரமத்தில் உணவு கொள்ளத் தங்கினான் என்றாலும், அவனுடைய மனத்தில் பரதன் நிலை நினைவில் உறுத்திக்கொண்டே இருந்தது போலும்! எனவே உடன்வந்த அத்துணைப் பேரினும், தன் எண்ணத்தை முடிக்க வல்லவன் அனுமன் ஒருவனே என்பதை அறிந்த இராகவன், அனுமனை அழைத்து,*

இன்று நாம் பதிவருதுமுன், மாருதி! ஈண்டச்
சென்று, தீது இன்மை செப்பி, அத்தீமையும் விலக்கி
நின்ற காலையின் வருதும்..........................

*(மீட்சிப் படலம்—200)*

[*இன்று புறப்பட்டு நாம் அயோத்தி வருமுன்னர், விரைவாக முன்சென்று, நம் நலம் கூறி, அங்கு நடைபெற இருக்கும் தீமையையும் விலக்கி, நீ இருக்கும் போது நாம் வருவோம்.*]

*என்று கூறி அனுப்புகிறான்.*

*அனுமனை நன்கறிந்திருந்தது போலவே, பரதனை நன்கறிந்திருந்தவன் இராமன் ஒருவனே. எனவேதான் பரதன் ஏதாவது ஒரு கொடிய (தீக்குளித்தல்) செயலைச் செய்வான் என்பதை முன்கூட்டியே சிந்தித்து, அனுமனை விரைவில் சென்று 'அத்தீமையும் விலக்கு' என ஆணை இடுகின்றான். அவ்வாறே விரைந்து அயோத்தி அடைந்த மாருதி, பரதன் தீப்புகா வண்ணம் அவனைக் காத்தான். அடுத்து இராகவன் வந்து முடிகவிக்கும் விழா மங்கலத்தில் அரியணையை அனுமன் தாங்கினான்.*

## அரியணை என்பது யாது?

*அரியணை என்பது அதிகாரத்தின் இருப்பிடம். அரசன் தன் எல்லையில்லாத அதிகாரத்தையும், ஆற்றலையும் பெறுவது அரியணையிலிருந்து முடிகவித்த பிறகுதானே ஏற்படுகிறது. எனவே அரியணை என்பது, அரச அதிகாரத்தின் அடையாளம். அதனை 'அனுமன் தாங்கினான்' என்றால், அந்த அரச அதிகாரத்தின் அடித்தளம் என்ன என்பதைக் கம்பன் கூறுகிறான். அனுமன் என்பவன் புலனடக்கம், தன்னலத் தியாகம், தொண்டுள்ளம் என்பவற்றின் மொத்த வடிவம் அல்லவா? இனி நடைபெறப் போகும் இராமராஜ்யத்தில் அதிகாரத்தின் அடித்தளம்,*

தன்னலம், ஏதேச்சாதிகாரம் என்பவையாக இராமல், அடக்கம், பரநலம், தொண்டுள்ளம் என்பவையாகவே இருக்கும். அன்றியும் அனுமன் என்றுமே பிறர் அறியும் முறையில், விளம்பரம் ஆகும் முறையில் எதனையும் செய்ததில்லை. எனவே, இப்பொழுதும் அரியணையைத் தாங்கும் பணியை அவன் மேற்கொண்டான். **தாங்க** என்ற சொல்லைச் சொல்லும்பொழுதே தாங்குபவன் மிக மிகப் பெரிய வன்மை படைத்தவனாக இருத்தல் வேண்டும்; அதன் மீது சாய்கின்ற பொருளும் கனமுடையதாக இருக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறதல்லவா? அரச பாரம் என்ற ஒரு வழக்கும் உண்டு. இது பாரம் என்றும், அறிவுடையோர் இதனை விரும்பமாட்டார்கள் என்றும், இராமனே கூறுகிறானல்லவா? பரதன் வந்து அயோத்தி மீளவேண்டும் என்று தமையனை வேண்டும்பொழுது, இராமன் கூறிய விடையல்லவா அது.

வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ் உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்.

*(திருவடி சூட்டுப் படலம்—64)*

எனவே, வேறுவழி இல்லாமல் இராகவன் இப்பொழுது இந்த அரச பாரத்தைத் தாங்கப் போகிறான் என்றால், அதன் அடியில் இருப்பது அனுமன், அதாவது தொண்டு, தன்னலத் துறவு, புலனடக்கம் முதலியன. இதனால் இராம ராஜ்யம் பிற ஆட்சிகள் போல் இராமல், 'மக்களுக்காகவே மன்னன்' என்ற முறையில் நடைபெறும் என்பதையும் குறிப்பாகக் கூறுகிறான் கவிஞன்.

## எற்று என்று இரங்கும் செயல்

எற்று என்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்,
மற்று அன்ன செய்யாமை நன்று.

*(திருக்குறள்—655)*

இன்று நாம் பதிவருதுமுன், மாருதி! ஈண்டச்
சென்று, தீது இன்மை செப்பி, அத்தீமையும் விலக்கி
நின்ற காலையின் வருதும்..........................

(மீட்சிப் படலம்—200)

[இன்று புறப்பட்டு நாம் அயோத்தி வருமுன்னர், விரைவாக முன்சென்று, நம் நலம் கூறி, அங்கு நடைபெற இருக்கும் தீமையையும் விலக்கி, நீ இருக்கும் போது நாம் வருவோம்.]

என்று கூறி அனுப்புகிறான்.

அனுமனை நன்கறிந்திருந்தது போலவே, பரதனை நன்கறிந்திருந்தவன் இராமன் ஒருவனே. எனவேதான் பரதன் ஏதாவது ஒரு கொடிய (தீக்குளித்தல்) செயலைச் செய்வான் என்பதை முன்கூட்டியே சிந்தித்து, அனுமனை விரைவில் சென்று 'அத்தீமையும் விலக்கு' என ஆணை இடுகின்றான். அவ்வாறே விரைந்து அயோத்தி அடைந்த மாருதி, பரதன் தீப்புகா வண்ணம் அவனைக் காத்தான். அடுத்து இராகவன் வந்து முடிகவிக்கும் விழா மங்கலத்தில் அரியணையை அனுமன் தாங்கினான்.

## அரியணை என்பது யாது?

அரியணை என்பது அதிகாரத்தின் இருப்பிடம். அரசன் தன் எல்லையில்லாத அதிகாரத்தையும், ஆற்றலையும் பெறுவது அரியணையிலிருந்து முடிகவித்த பிறகுதானே ஏற்படுகிறது. எனவே அரியணை என்பது, அரச அதிகாரத்தின் அடையாளம். அதனை 'அனுமன் தாங்கினான்' என்றால், அந்த அரச அதிகாரத்தின் அடித்தளம் என்ன என்பதைக் கம்பன் கூறுகிறான். அனுமன் என்பவன் புலனடக்கம், தன்னலத் தியாகம், தொண்டுள்ளம் என்பவற்றின் மொத்த வடிவம் அல்லவா? இனி நடைபெறப் போகும் இராமராஜ்யத்தில் அதிகாரத்தின் அடித்தளம்,

தன்னலம், ஏதேச்சாதிகாரம் என்பவையாக இராமல், அடக்கம், பரநலம், தொண்டுள்ளம் என்பவையாகவே இருக்கும். அன்றியும் அனுமன் என்றுமே பிறர் அறியும் முறையில், விளம்பரம் ஆகும் முறையில் எதனையும் செய்ததில்லை. எனவே, இப்பொழுதும் அரியணையைத் தாங்கும் பணியை அவன் மேற்கொண்டான். **தாங்க** என்ற சொல்லைச் சொல்லும்பொழுதே தாங்குபவன் மிக மிகப் பெரிய வன்மை படைத்தவனாக இருத்தல் வேண்டும்; அதன் மீது சாய்கின்ற பொருளும் கனமுடையதாக இருக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறதல்லவா? அரச பாரம் என்ற ஒரு வழக்கும் உண்டு. இது பாரம் என்றும், அறிவுடையோர் இதனை விரும்பமாட்டார்கள் என்றும், இராமனே கூறுகிறானல்லவா? பரதன் வந்து அயோத்தி மீளவேண்டும் என்று தமையனை வேண்டும்பொழுது, இராமன் கூறிய விடையல்லவா அது.

வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ் உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்.

*(திருவடி சூட்டுப் படலம்—64)*

எனவே, வேறுவழி இல்லாமல் இராகவன் இப்பொழுது இந்த அரச பாரத்தைத் தாங்கப் போகிறான் என்றால், அதன் அடியில் இருப்பது அனுமன், அதாவது தொண்டு, தன்னலத் துறவு, புலனடக்கம் முதலியன. இதனால் இராம ராஜ்யம் பிற ஆட்சிகள் போல் இராமல், 'மக்களுக்காகவே மன்னன்' என்ற முறையில் நடைபெறும் என்பதையும் குறிப்பாகக் கூறுகிறான் கவிஞன்.

## எற்று என்று இரங்கும் செயல்

எற்று என்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்,
மற்று அன்ன செய்யாமை நன்று.

*(திருக்குறள்—655)*

*இராமன் வாழ்க்கையில் 'ஏன் இதனைச் செய்தோம்?' என்று, பின் இரக்கம் கொள்ளக்கூடிய செயல் எதுவும் இருந்ததாகத் தெரியவில்லை—ஒன்று தவிர. அந்த ஒரு செயல் சுக்ரீவனிடம் தோன்றிய கழிவிரக்கத்தால் வாலியைப் பற்றி முழுவதும் அறிந்துகொள்ளாமல், மறைந்து நின்று கொன்ற செயலாகும். இறக்கும்பொழுது, வாலியின் மனமாற்றத்தைக் கண்ட இராகவன், தான் செய்தது சரியா என்று ஐயங்கொள்ளத் தொடங்கிவிட்டான். மேற்கொண்டு ஒன்றுஞ் செய்யமுடியாத நிலையில், வாலியின் மகனாகிய அங்கதனிடம் உடைவாளை நீட்டி, 'நீ இது பொறுத்தி' என்று கூறித் தந்தான். எனவே மனிதனாகப் பிறந்த பரம்பொருள் மனித நிலையில் இயல்பாக ஏற்படக்கூடிய சிறிய தவறுக்குத் தானும் ஆளாகிவிட்டான். அச்செயலில் கழிவிரக்கம் கொண்டதால்தான், அவன் மகனிடம், 'நீ இச்செயலைப் பொறுத்துக் கொள்க' என்ற கருத்தில், 'நீ இது பொறுத்தி' என்று வாயினால் கூறி, அச்செயலுக்கு அடையாளமான வாளையும் அவன் கையில் தந்துவிட்டான். அதாவது, இனி இத்தகைய தவறு நடைபெறாது என்பதற்கு அடையாள மாக, அரியணை ஏறும்போது அங்கதனே உடைவாள் தாங்கினான். ஓர் அரசனுக்கு அடையாளமான சிலவற்றுள் உடைவாளும் ஒன்றல்லவா?*

## தவறு நடைபெறாமையை அறிவிக்க

நத்தியம் பதியின் தலை, நாள்தொறும்
சந்தி இன்றி நிரந்தரம், தம்முனார்
பந்தி அம்கழல் பாதம் அருச்சியா
இந்தியங்களை வென்று இருந்தான் அரோ.

*((மீட்சிப் படலம்—203)*

*அரியணை, பரநலம், தொண்டுள்ளம் என்பவற்றால் தாங்கப்படுதல் போல, உடைவாள் தவறிழைக்காமையை*

*அறிவுறுத்தும் அடையாளமாக அமைந்துவிட்டது. இனிப் பரதன் வெண்குடை கவிப்பது சாலச் சிறப்புடையதே. கீழே அரியணை, மேலே வெண்குடை. பரதனின் சிறப்பு யாது?*

*அனுமனைப் போலவே பரதனும் இந்திரியங்களை வென்றிருந்தான் என்றால், புலனடக்கத்தின் உச்சியில் நின்றான் என்பதே பொருள். புலனடக்கத்தால் வந்த உறுதிப்பாடு பரதனைத் தவம் செய்பவனாக ஆக்கி விட்டது. இத்தவ வாழ்க்கை அவனை வேண்டாமை என்ற விழுச்செல்வம் உடையவனாக ஆக்கிவிட்டது. இந்த வேண்டாமை என்பதே அவனை யாவரினும் உயர்ந்த வனாகவும் ஆக்கிவிட்டது. வேண்டாமைச் செல்வம் உடையானை அதிகாரமோ, ஆற்றலோ, வீரமோ எதுவும் ஒன்றுஞ் செய்ய முடியாது.*

*மீட்டுவந்த நிலையில், பரதனை இலக்குவன் வீழ்ந்து வணங்கினான் என்று கூறவந்த கவிஞன் சமத்காரமாக ஓர் உண்மையை விளக்க வருகிறான். வீரம் மிக்கவனாகிய இலக்குவன், இந்திரசித்தனை வென்றவன், ஒருவன் தாளில் வீழ்ந்தான். அந்த ஒருவன் யார்? அரசச் செல்வம் அனைத்தை யும் தோல் செருப்புக்கு ஈந்தவன் என்று பேசுகிறான்.*

..........................................
கனைகழல் அமரர் கோமான்
 கட்டவன்—படுத்த காளை,
துணைபரி, கரி, தேர் ஊர்தி
 என்று இவை பிறவும், தோலின்
வினை உறு செருப்புக்கு ஈந்தான்
 வினைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

*(மீட்சிப் படலம்—329)*

*[வீரக்கழல் அணிந்த, தேவராசனாகிய இந்திரனை வென்ற, இந்திரசித்தனை வென்றவனாகிய இலக்குவன்*

குதிரை, யானை, தேர், வண்டி என்ற அரசர்க்கு உரியவற்றைத் தோலில் தைக்கப்பட்ட செருப்புக்கு ஈந்தவனாகிய பரதன் திருவடிகளில் வீழ்ந்தான்.]

பரதனுடைய புலனடக்கமும், வேண்டாமையும், அரசச் செல்வத்தை வைத்துக்கொண்டே அதில் ஈடுபடாமல் துறவு வாழ்க்கை வாழ்ந்த மாபெரும் துறவாகும். ஒன்றும் அகப்படாத காட்டில் மேற்கொள்ளும் துறவு வேறு; எல்லாம் கிடைக்கும் நாட்டில் அரசனாக இருப்பவன் துறவு மேற்கொள்வது மாபெருந் துறவே அன்றோ?

எனவே, அரியணை தாங்கியவனும், வெண் கொற்றக் குடை பிடித்தவனும், புலனடக்கம், துறவு, பரநலம், தொண்டு, என்பவற்றின் மொத்த வடிவமாவார்கள். இதில் நடுவில் இராகவன் முடிகவிக்கப் பெறுகிறான். அடியும், முடியும் புலன் அடக்கத்தின் அடையாளமாக உள்ள இருவர் உளர் என்றால் நடுவே உள்ள பரம்பொருள் எத்தகையதாக இருக்கும் என்று கூறத் தேவை இல்லையல்லவா? காப்பியத்தின் தொடக்கத்தை மறுபடியும் நினைவுகூற வேண்டும். 'ஐந்து பொறிகளாகிய அம்புகளும், மகளிர் கண் என்னும் போர் புரிகின்ற அம்பும் தமக்கு என வகுக்கப் பெற்ற செந்நெறியிலிருந்து புறத்தே செல்லாத மக்கள் வாழும் கோசல நாட்டைக் கூறத் தொடங்குகிறது காப்பியம். எனவே, புலனடக்கம் உடையவர்கள் வாழும் நாட்டை வருணிக்கத் தொடங்கும் காப்பியம், அதனை முடிக்கும் பொழுது, அந்த நாட்டை ஆளும் அரசனைப் பற்றிக் கூறுகிறது. மக்கள் புலனடக்கத்தில் தொடங்கி மன்னன் புலனடக்கத்தில் முடிகிறது காப்பியம். அரசன் மட்டுமா? இல்லை; அவன் அமர்ந்துள்ள சிம்மாசனம்; அவன் மேல் நிழற்றும் வெண்கொற்றக் குடையுங்கூடப் புலனடக்கத்தின் அடையாளமாகவே உள்ளன என்று முடிக்கிறான்.

கம்பநாடன் காப்பியம், இந்தியா முழுவதும் பரவி இருந்த ஒரு கதையை எல்லோரும் பாடுவதுபோலத் தமிழில் பாடப்பட்டது என்று நினைத்துவிடக் கூடாது. இத்தமிழ் நாட்டின் அன்றைய நிலையைக் கண்டு, அதனைச் சீர்திருத்தும் எண்ணத்துடன் ஆக்கப் பெற்றது என்பதை அறிதல் வேண்டும். நீதிநூல் தந்த வள்ளுவன் கூறிய சட்ட திட்டங்கட்கு விளக்கம் கொடுக்கும் முறையில் காப்பியத்தை அமைக்கும் பொழுது, அதன் உயிர் நாடியாகப் புலனடக்கம் என்ற கொள்கையை அற்புதமாக அதனுள் அமைத்துப் பாடியுள்ளான் என்பதை அறிய வேண்டும்.

## மாருதிக்குப் பரிசில் தருகிறான்

இக்கட்டுரையின் தலைவனாகிய அனுமனை, இறுதியாகச் சந்திக்க வேண்டிய இடம், இராமன் விடை கொடுக்கும் பொழுது நிகழ்ந்தவை பற்றியதாகும். 'ஈதலோ எளிது; வரிசை அறிதலோ பெரிது' என்பது புறப்பாடல். எனவே அவரவர் தகுதியும் நிலையும் தெரிந்து பரிசுகள் வழங்கி விடை கொடுக்கிறான் இராகவன். அனுமனுடைய முறை வருகிறது. இராமன் என்ன செய்யப் போகிறான் என்று நாம் அனைவரும் எதிர்பார்க்கிறோம். அங்கு வந்துள்ள அனைவரும் வரிசை அறிந்து அனுப்பப்பட வேண்டியவர்கள். அனுமனை எந்த வரிசையில் சேர்ப்பது? பிராட்டிக்கும், இளையவற்கும் உயிரை நல்கினவன்; இராகவனே, நின்னின் தோன்றினோம் என்று நன்றிப் பெருக்கோடு கூறியுள்ளான். இத்தகைய ஒருவனுக்கு எவ்வாறு விடை கொடுத்தனுப்ப முடியும்? கம்பன் ஒருவன்தான் தனக்கே உரிய முறையில், இதற்கு முடிவு காண முடியும்.

## கம்பன் மட்டுந்தான் இதைச் செய்ய முடியும்

ஐயன் மகிழ்ந்து, மாருதியை இனிதாக அருளுடன் நோக்கி, 'உன்னை அல்லால் யார் இத்தகைய உதவியைச்

*செய்ய முடியும்? அன்று நீ செய்த பேருதவிக்கு யான் செய்யக்கூடிய கைம்மாறு வேறு ஒன்றும் இல்லை. போரிலும் உதவிய வலிய தோளை உடையாய்! பொருந்தி, இடைவெளி இல்லாமல் நீ என்னைக் கட்டித் தழுவிக் கொள் என்ற பொருளில்,*

மாருதி–தன்னை ஐயன் மகிழ்ந்து, இனிது
அருளின் நோக்கி,
'ஆர் உதவிடுவதற்கு ஒத்தார், நீ அலால்
அன்று செய்த
பேர் உதவிக்கு யான்செய் செயல் பிறிது
இல்லை, பைம்பூண்
போர் உதவிய திண்தோளாய்! பொருந்துறப்
புல்லுக..........................'

*(விடை கொடுத்த படலம்—20)*

*என்று கூறுகிறான் பரம்பொருள். ஆம்! அது வேண்டும், இது வேண்டும் என்று கேட்கிறவர்கட்கு அவ்வவற்றைத் தருவதே அவன் தொழில். 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' (திருமுறை 6-23-1) என்பது அப்பர் பெருமான் தேவாரம். ஆனால் அனுமன் போன்ற சிலர் எதுவும் வேண்டா என்று கூறுவார்கள். இவர்கட்கு எதை வழங்குவது? அன்றியும் உயிரையே தந்த ஒருவனுக்கு, ஏன்? இரகு குலம் முழுவதும் உயிர்வாழ வழிசெய்த ஒருவனுக்கு யானையையும், குதிரையையும், பொன்னையும், பொருளையும் தந்தான் என்று கூறுவது, அவனை அவமதிப்பதாகும். அனுமனுக்கு இத்தகைய அவமானத்தை இழைப்பானா காகுத்தன்? எனவே அனுமனுக்கு மட்டும், பிறர் யாருக்கும் தராத பரிசு ஒன்றைத் தருகிறான் இராகவன். பரம்பொருளின் திருவடியை அடைய வேண்டும் என்றுதான் உயிர்கள் விரும்புகின்றன. அந்தத் திருவடிப் பேறுகூட வேண்டா; அவனை ஓயாது பார்த்துக் கொண்டு, அவன் புகழைப் பாடிக்கொண்டு இருப்பதே*

வாழ்வின் குறிக்கோள் என்று கருதும் சிலரும் உண்டு. இத்தகையவர்களைப் பற்றிச் சேக்கிழார்,

ஈர அன்பினர் யாதும் குறைவிலார் என்றும்,
கூடும் அன்பினில் கும்பிடவே அன்றி,
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.

*(திருக்கூட்டச் சிறப்பு—9, 8)*

என்றும் பாடுகிறார்.

## அவன் தன்னையே தருதல்

ஆம்! அனுமனும் அத்தகையவன்தான்! அவன் வீடுபேற்றைக்கூட விரும்பவில்லை. இராமபக்தி சாம்ராஜ்யத்தில் இராமனைவிடச் சிறந்ததாகிய, இராமநாமத்தை ஜபித்துக்கொண்டு வாழ்வதே குறிக்கோள் என்று கருதுபவன் அவன்! அவன் எதையும் விரும்பவில்லை என்பது உண்மைதான். ஆனால் அவன் தலைவனாகிய இராகவன் ஒன்றை விரும்புகிறான்; அதுவே, தன்னை அவனுக்குத் தர வேண்டும் என்று நினைக்கின்ற நினைவு, எல்லோரும் அவனுடைய படைப்புத்தான் என்றாலும், ஒரு சிலருக்கு அவன் தன்னையே தர விரும்புகிறான். அப்படித் தருவதால் முடிவில்லாத ஆனந்தம் கிடைக்கிறதாம். யார் இவ்வாறு கூறுகிறார்கள்? நூல்களைக் கற்றுவிட்டுப் பேசுகிறவர்கள் கூறும் கூற்றா இது? இல்லை. இவ் அனுபவத்தை நேரே பெற்று அனுபவித்த ஒருவர் பேசுகிறார்.

தந்தது உன்தன்னை; கொண்டது என்தன்னை:
சங்கரா! யார் கொலோ சதுரர்?
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்;
யாது நீ பெற்றது ஒன்று என்பால்?

*(திருவாசகம்—கோயில் பதிகம்—10)*

என்று பாடுகிறார் மணிவாசகப் பெருந்தகை! எனவே அனுமனுக்கு அந்தம் ஒன்று இல்லாத ஆனந்தத்தைத் தர வேண்டும் என்று நினைக்கிறான் பெருமான். எவ்வாறு தருவது? தன்னையே அவனுக்குத் தருவதன் மூலம் இதனைச் செய்கிறான்:

மேலும் தழுவிக் கொள்வதிலும் ஒரு நியதி உண்டு; தழுவுகின்றவன் உயர்ந்தவன் என்றும், தழுவப் பெற்றவன் ஒருபடி இறக்கம் என்றும் கூறும் மரபு உண்டு. இராமன் அனுமனைத் தழுவினால் இராமன் ஒருபடி உயர்ந்த வனாகவும், அனுமன் ஒருபடி இறக்கமாகவும் கொள்ள இடம் உண்டு. ஆனால் இப்பொழுது இராகவன் அதனை ஒழிக்க விரும்பி, அனுமனை நோக்கி, 'ஐயா! பொருந்துறப் புல்லுக' (நீ என்னை வந்து, தழுவிக் கொள்வாயாக) என்று பேசுகிறான்! எனவே இராமன் பிறருக்குத் தந்த பரிசுகள் அனைத்துக்கும் ஒரு விலை உண்டு; மதிப்பு உண்டு. ஆனால் அனுமனுக்குக் கொடுத்த பரிசு விலைமதிப்பு அற்றது. ஆம்! பரம்பொருளுக்கு என்ன விலை? பரம் பொருள் தன்னையே தந்துவிடும்போது, அதற்கு எவ்வாறு விலை இடுவது? புலனடக்கமும், தொண்டுள்ளமும் இருந்துவிட்டால், ஒருவன் பரம்பொருளை நாடிச் செல்ல வேண்டிய தேவை இல்லை. அதற்குப் பதிலாகப் பரம் பொருள் அவனைத் தேடிக்கொண்டு வருகிறது. பரிசிலும் தருகிறது. எத்தகைய பரிசில்?

ஒரு நீயாகத் தோன்ற விழுமிய
பெறல் அரும் பரிசில் நல்குமதி

என்று திருமுருகாற்றுப்படை இப்பரிசிலுக்கு விளக்கம் தருகிறது. இராம காதையில் அனைவரும், முனிவர்கள் உள்பட இராகவன் அருளுக்கு ஏங்கி நின்றனர். ஆனால் இராகவன் அனுமனுடைய அன்புக்கு ஏங்கி நின்றான். அனுமனுடைய அந்தத் தூய அன்பில் அப்படியே மூழ்கிப்

போனான். அப்படி மூழ்குவதைத்தான் 'நீ என்னை வந்து பொருந்துறப் புல்லுக' என்று கவிஞன் பேசுகிறான்.

இத்துணைச் சிறந்த முறையில், முன்பின் இலக்கியங்களில் எங்கும் காணாத முறையில், இராகவன், 'என்னை வந்து நீ தழுவிக்கொள்' என்று அனுமனைப் பார்த்துக் கூறியதாகப் பாடிவிட்ட பிறகு, அடுத்த பாடலில் யானை, குதிரை, ஆபரணம் முதலியவற்றைத் தந்தான் என்று கவிஞன் பாடுவானா? ஆனால், இன்றுள்ள பதிப்புகள் அனைத்திலும் அனுமனுக்கு அனைவரும் பரிசு தந்ததாக உள்ள பாடல்கள் உள்ளன. 'பொருந்துறப் புல்லுக' என்ற பிறகு, பரிசு தந்தான் என்றும், அதை அனுமன் பெற்றுக்கொண்டான் என்றும், எப்படிக் கம்பன் பாடுவான்? பட்டாபிஷேகத்தில் பரிசுகள் வசூல் பண்ணும் காலட்சேப காலத்து இடையே புகுந்த பாடல்கள் போலும் இவை!

# 10.கம்பன் கண்ட விழுப்பொருள்கள்

## சொல் என்பது குறியீடே

ஒவ்வொரு மொழியிலும் எல்லாச் சொற்களும் பொருள்களைக் குறிக்கும் குறியாகவே உள்ளன. பல்வேறு மொழிகள் ஒரே பொருளைப் பல்வேறு சொற்களால் குறிக்கின்றன. இதன் எதிராகப் பல்வேறு பொருள்களை, ஒருமொழியில் உள்ள ஒரே சொல் குறிப்பதும் உண்டு. அதேபோல, ஒரு பொருளைப் பல்வேறு சொற்கள் குறிப்பதும் உண்டு. ஒரே பொருளைப் பல்வேறு சொற்கள் குறிப்பதும், பல்வேறு சொற்களை ஒரே சொல் குறிப்பதும், அந்த அந்த மொழியின் வளர்ச்சிக்கும் செறிவுக்கும் ஏற்ப நிறைந்து காணப்பெறும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டுத் தோன்றிய இலக்கணமாகிய தொல்காப்பியம், இதனை

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே

*(தொல்காப்பியம்—சொல்—பெயரியல்.1)*

என்றும்.

வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல்
ஆயிரு வகைய—பலபொருள் ஒரு சொல்
வினை வேறு படாப் பல பொருள் ஒரு சொல்

*(சொல்—கிளவி—52)*

என்றும் கூறிச் செல்கிறது. வளர்ச்சி அடைந்துள்ள எல்லா மொழிகட்கும் இது பொருந்தும். இவ்வாறு கூறுவதால் ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களும் எவ்வித வேறுபாடும் இல்லாமல், தம்முள் பொருளைக் குறிக்கும் ஆற்றலைச் சுயமாகப் பெற்றுள்ளன என்பது குறிப்பாம். இரண்டு சொற்கள் ஒரே பொருளைக் குறித்தாலும், அவற்றுள் ஓசை முதலிய வேறுபாட்டால் ஓரளவு நுண்மையான வேறுபாடு உண்டு. இதனால்தான் கவிதை சிறக்கின்றது. கவிஞன் கூறவந்த ஒன்றைக் குறிப்பதற்கு, ஒன்றுக்கு மேம்பட்ட பல சொற்கள் இருப்பினும், அவற்றுள் சிறந்த ஒரு சொல்லைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துபவனே, சிறந்த கவிஞன். சிறந்த ஒரு சொல்லைத் தேர்ந்துகொள்வது அவனுடைய கல்வி, அறிவு, கேள்வி, அனுபவத்தின் அடிப்படையிலேயே நடைபெறும்.

## உயிரோட்டமுள்ளது சொல்

இதனால்தான், ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு ஆக்கஞ் செய்வது கடினமாக ஆகிவிடுகிறது. மூலத்தில் உள்ள ஒரு சொல் பன்னூறு ஆண்டுகளாக அம்மொழியில் உள்ள பல அறிஞர்களாலும், கவிஞர்களாலும் பயன்படுத்தப் பெற்று, மெருகு ஏற்றப் பெற்றுள்ளது. இக்கருத்தை விளக்க வந்த அமெரிக்க உச்ச நீதிமன்ற நீதிபதியும், தலைசிறந்த திறனாய்வாளரும் ஆகிய ஆலிவர் வென்டால் ஹோம்ஸ் என்பார், *'ஒரு சொல் என்பது வைரம் போன்று ஒரே மாதிரியாக என்றும் ஒளி

---

* A word is not a crystal transparent and unchanged. It is the skin of a living thought and may vary greatly in colour and content according to the circumstances and the time in which it is used.

—Justice O. W. Holmes, TOWNE vs EISNER.

விட்டுக் கொண்டிருக்கும் என்பது சரியன்று; எண்ணங்கள் என்பவற்றின் மேல் போர்த்தப்பட்டுள்ள உயிரோட்டமுள்ள தோல் போன்றது சொல். அது தோன்றும் நேரம், இடம் என்பவற்றிற்கேற்ப அதன் பொருளும், இயல்பும் மாறுபடும்' என்று கூறுவது சாலப் பொருத்தம் உடையதாகும்.

ஆங்கிலத்தில் உள்ள பல சொற்களைத் தமிழில் பெயர்ப்பது இயலாத காரியம். அதேபோலத் தமிழில் உள்ள பல சொற்களை ஆங்கிலம், வடமொழி முதலிய பிற மொழிகளில் பெயர்ப்பதும் இயலாத காரியம்; அறம் என்ற தமிழ்ச் சொல்லை தர்மம் என்று கூறுவது பொருந்தாது.

## ஓரளவு பொருத்தமுடையது

ஆங்கிலத்தில் 'வேல்யூஸ்'[1] என்ற ஒரு சொல் உண்டு. இதற்கு விளக்கம் தரவந்த ஆக்ஸ்பர்ட் அகராதி, 'எவற்றை வேறு பயன் கருதாமல் அவற்றுக்காகவே உயிரினும் சிறந்ததாக மதிக்கிறோமோ, அவையே 'வேல்யூஸ்' என்ற சொல்லின் பொருளாகும்.'[2] என்று கூறுகிறது. எனவே, இச்சொல்லை நேரிடையாக மொழி பெயர்க்க முடியா விடினும், இதனுடன் ஓரளவு பொருத்தம் உடைய தமிழ்ச் சொல்லைத் தேடினால் 'விழுப்பொருள்கள்' என்பது ஓரளவு பொருந்துவதாக உள்ளது.

## குறிப்பே சொல்லின் உயிர்நாடி

ஒருவன் ஒரு சொல்லைப் பயன்படுத்தும்பொழுது, அச்சொல் ஆயிரம் ஆண்டுகளாக அவன் முன்னோர்கள், அறிஞர்கள், கவிஞர்கள் என்பவர்களால், பயன்படுத்தப் பட்டிருத்தலின், அத்துணை நுண்மையான பொருள் வேறு

1. Values 2. That which is esteemed for itsj own sake.

பாடுகளுடன் கேட்போன் செவியில் நுழைகின்றது. கேட்பவனுடைய தகுதி, கல்வி, கேள்வி, அனுபவம் என்பவற்றிற்கு ஏற்ப, அவன் மனத்தில் அச்சொல் பொருளை ஆழத்துடன் விளக்குகிறது; இத்தனை பொருள் களையும் நேரிடையாக அச்சொல் விளக்குவது இல்லை. குறிப்பால் உணர்த்தும்[1] இயல்பு சொல்லுக்கு உண்டு.

## விழுப்பொருள்கள் இருவகை

இம்முறையில் 'விழுப்பொருள்கள்' என்று கூறும் பொழுது, வேறு ஒரு பயனையும் கருதாமல், எவ்வெவற்றைத் தம் உயிரினும் சிறந்தவை என்று இத்தமிழர் கருதினார்களோ, அவற்றையே ஈண்டு, குறிக்கிறோம். இந்த விழுப்பொருள்கள் தனிமனிதனுக்கு உரியவை; சமுதாயத்துக்கு உரியவை என இருவகைப்படும். இவ்வாறு கூறுவதாலும், விழுப்பொருள்கள் என்று பெயர் கூறுவதாலும், இவை பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக மாறாமல் இருப்பவை என்று யாரும் கருதிட வேண்டா. இவ்விழுப்பொருள்களுள் 'மாறும் விழுப்பொருள்கள்'[2], 'மாறா விழுப்பொருள்கள்'[3] என இருவகை உண்டு.

'தனி மனிதன் போற்றும் விழுப்பொருள்கள்' என்று கூறும்பொழுது, அவனை ஒத்த தனி மனிதர்கள் அனைவரும் அவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நினைப்பது சரியன்று. ஒரு சமுதாயம் ஒரு காலகட்டத்தில், விழுப்பொருள்கள் என்று ஏற்றுக்கொண்ட ஒன்றை, அதே சமுதாயம் பிறிது ஒரு காலகட்டத்தில், அதையே விழுப்பொருள்கள் என்று ஏற்றுக் கொள்ளவேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. இவை அனைத்தும் 'மாறும் விழுப்பொருள்கள்' எனப்படும்.

---

1. Suggestion.2. Changing Values 3. Non-changing or Permanent Values.

## மாறா விழுப்பொருள்கள்

இதன் எதிராகச் சிலவற்றை மாறா விழுப்பொருள்கள் என்று தனி மனிதர்களும், சமுதாயமும், ஏற்றுக்கொள்வதுண்டு. பிறருக்குத் தீங்கு நினைக்கவோ, செய்யவோ கூடாது. தன்னலத்தைத் துறந்தேனும், பிறருக்கு நலஞ் செய்ய வேண்டும் என்பவை போன்ற விழுப்பொருள்கள் மாறா இயல்புடையவை என்று கருதப் பெறுபவை. ஏறத்தாழ எல்லாச் சமுதாயங்களும் இப்பொதுவான விழுப்பொருள்களைப் போற்றும் இயல்புடையன. இவற்றைப் போற்றும் சமுதாயத்தை, நாகரிகம் முதிர்ந்த சமுதாயம் எனக் கூறுகிறோம்.

## கம்பன் காணும், மாறும் விழுப்பொருள்

பல தார மணம் என்பதை, ஒருகாலத்தில் எல்லாச் சமுதாயங்களும் ஏற்றுக் கொண்டிருந்தன என்பதை அறிகின்றோம். ஆனால் கம்பன் இதை ஏற்பதாகத் தெரியவில்லை. பெண்கட்குக் கற்பு கற்பிப்பது போல் ஆண்கட்கும் கற்புடைமை வேண்டும். ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டைக் கம்பன் விரும்பினான் என்று தெரிகிறது. அவன் வாழ்ந்த ஒன்பதாம் நூற்றாண்டில்கூடப் பலதார மணம் தவறுடையது என்று சமுதாயம் கருதினதாகத் தெரியவில்லை. ஒருவனுக்கு ஒருத்தி என்பதைத் தனிமனிதனுக்குரிய விழுப்பொருளாகக் கருதிய கம்பநாடன், இதனைக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் தெரிவிக்கின்றான்.

உலக இலக்கிய கர்த்தாக்கள் அனைவரினும் மேம்பட்டு நிற்பவனாகிய கம்ப நாடன், தனிமனிதனுக்குரிய பல்வேறு விழுப்பொருள்கள், சமுதாயத்துக்குரிய விழுப்பொருள்கள் ஆகிய பலவற்றையும் எடுத்துக்காட்டிச் செல்கிறான். தனிமனிதனுக்குரிய விழுப்பொருள்களிலும்,

பல வேறுபாடுகள் உண்டு. தசரதன் பிள்ளைகளாகிய இராம இலக்குவர்கள் என்று எடுத்துக்கொண்டால் கூட இருவருடைய விழுப்பொருள்களும் வேறு வேறு. விழுப்பொருள்கள் வேறாக இருத்தலின் ஒருவருக்கொருவர் காட்ட வேண்டிய அன்பில் குறை இருக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. ஒரே மனிதனுடைய சூழ்நிலையும், அடிப்படையும், மாறும்போது பழைய விழுப்பொருள்களை உதறிவிட்டுப் புதியனவற்றை ஏற்றுக்கொள்கிறான்.

ஜனகனிடம் இராம இலக்குவர்களை அழைத்துச் செல்கிறான் விசுவாமித்திரன். பெண்ணைப் பெற்றவர் கட்கு இளைஞர்கள் யாரைக் கண்டாலும் தம் மகளுக்கு ஏற்ற மணாளனாக இவன் அமைவானா? என்ற எண்ணம் உண்டாவது இயற்கைதானே! எனவேதான் விசுவாமித் திரன் 'நின் வேள்வி காணிய வந்தார்; வில்லும் காண்பார்' என்று கூறுகிறான். இடையே இவர்கள் யார் என்று அறிமுகப்படுத்தும் முறையில் தசரதனுடைய பிள்ளைகள் இவர்கள் என்பதைத் தெரிவிக்கிறான் முனிவன். இதனைக் கேட்டவுடன் எதிர்கால மாமனாராகிய ஜனகன் மனத்தில் ஓர் ஐயம் தோன்றத்தானே செய்யும்? அறுபதினாயிரம் மனைவியரைத் தந்தை மணந்தான் எனில், அவன் பிள்ளை எப்படி இருப்பானோ? என்ற ஐயம், தோன்றுவது இயல்புதானே! அதற்கும் விடையளிக்கும் முறையில் முனிவன் பேசத் தொடங்குகிறான். பெற்ற கடமைதான் தசரதனுக்கே தவிர, 'உபநயன விதி முடித்து, வில்வித்தை முதலிய கலைகளைக் கற்றுத் தந்தவன் வசிட்டனே காண்' என்று கூறி முடிக்கிறான். இராமன் ஒருதாரக் கொள் கையன் என்பதைப் பிறிதோர் இடத்தில் வெளிப்படக் கூறுகிறான். 'இந்த இப்பிறவிக்கு இருமாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்று இராகவன் பிராட்டி யிடம் கூறியதாகவும் கூறுகிறான். இது வெளிப்படையாகக்

கூறிய இடம். முதற் காப்பியத்தில் சொல்லப்பட்ட முறையை மாற்றிவிடுகிறான் கம்பநாடன். பல மனைவியர் இருப்பதில் தவறு இல்லை என்பதைப் பழைய காப்பிய காலம் விழுப்பொருளாகக் கொண்டிருந்தது. கம்பனின் இலக்கியக் காப்பியம், அந்த விழுப்பொருளை (Values) உதறிவிட்டுப் புதிய விழுப்பொருளை மேற்கொண்டு விட்டது. ஒரு தாரமே சிறந்தது என்பது புதிய விழுப் பொருள்.

தனிமனிதனுக்கு விழுப்பொருள் கூறும்பொழுதுகூடக் கவிஞன் அந்தத் தனி மனிதனுடைய கல்வி, ஒழுக்கம், பண்பாடு, குடிப்பிறப்பு என்பவற்றிற்கு ஏற்பவே விழுப்பொருளை அமைக்கிறான். காடு செல்ல முடிவு செய்த இராமன் தன் செல்வத்தைத் தானம் செய்கிறான். அதனைப் பெற்றுக் கொள்ள வந்தவர்களுள் கிழட்டு அந்தணன் ஒருவன் பசுக்களைத் தானமாகப் பெற வருகிறான். அவன், எவ்வளவு பசுக்கள் வேண்டும் என்று கேட்கப்பட்ட பொழுது, தனது கைத்தடியைச் சுழற்றி எறிந்து, அது எவ்வளவு தூரம் செல்லுமோ அந்த அளவு பசுக்கள் வேண்டும் என்று கூறிவிட்டு, அந்தக் கிழவன் மிக முயன்று கம்பை எறிகிறானாம். அவன் ஆசைக்கு அளவில்லை. உள்ளவை அனைத்தையும் வழங்க முற்படும் இராமனும், அளவிலா ஆசை கொண்ட கிழட்டு அந்தணனும் அயோத்தியிலேயே ஒரே காலத்தில் வசித்தவர்கள்தாம். ஆனால் இருவருடைய வாழ்க்கையிலும் எவ்வளவு மாறுபட்ட விழுப்பொருள்கள்!

## சோதரருள் மாறுபட்ட விழுப்பொருள்

கிழட்டு அந்தணனும், இராகவனும் சமுதாயத்தின் இரு துருவங்கள் போன்று, இரண்டு முனைகளில் உள்ளவர்கள். அவர்களுக்குள் ஓர் ஒற்றுமையைக் காண்பது கடினம். ஆனால் ஒரே வீட்டில் அண்ணன் தம்பியாகப்

பிறப்பவர்களுள்ளும் ஒத்த குலம், ஒத்த கல்வி, ஒரே தாய் தந்தையர் என்றாலும் என்ன? அவரவர் வாழ்க்கையில் எவ்வெவற்றை விழுப்பொருள் என்று கொண்டார்கள் என்று பார்த்தால், உண்மை விளங்கும். இராமனும், இலக்குவனும் அண்ணன் தம்பியர்தாம்! இவர்கள் இருவரும் கொண்டிருந்த விழுப்பொருள்கள் வெவ்வேறே அன்றோ! இராமனைப் பொறுத்தமட்டில் அறம் ஒன்றே அவனுக்கு விழுப்பொருள்! அறத்தின் அடிப்படையில் தாய், தந்தை, மனைவி ஆகிய அனைவரும் மதிக்கப்படும் உறவுகளே! ஆனால், இலக்குவனுக்கோ விழுப்பொருள் வேறு! இராமபக்தி என்ற ஒன்றுதான், அவன் கொண்ட விழுப்பொருள். அதன் எதிரே தாய், தந்தை, சோதரன் ஆகிய அனைவரும் ஒதுக்கப்பட வேண்டியவர்களே! இந்த இருவரும் கொண்ட தனித்தனியான விழுப்பொருள்களை நன்கு எடுத்துக்காட்டி, அவ்வவ் விழுப்பொருள்களுக்காக அவர்கள் எந்தத் தியாகத்தையும் செய்யத் தயாராக உள்ளனர் என்பதையும் கவிஞன் விரிவாகக் கூறுகிறான்.

## விழுப்பொருளை மாற்றலாம்

இனி, ஒருவன் தன் வாழ்நாளில் கொண்டிருக்கும் விழுப்பொருளை, ஒரு குறிப்பிட்ட காலத்தில், குறிப்பிட்ட காரணத்திற்காக மாற்றிக் கொள்வதும் உண்டு. காரணம், அந்தக் குறிப்பிட்ட காரணம், தான் அதுவரை கொண்டிருந்த விழுப்பொருளைவிட உயர்வானது என்பதுதான். காந்திஜி அஹிம்சையை உயிரினும் மேலாக மதிப்பவர். பசுப் பாதுகாப்பைப் போற்றுபவர் என்றாலும், இங்கிலாந்தில் ஒருமுறை ஜின்னாவை உணவுக்கு அழைத்தார். விருந்தினராக வந்த ஜின்னாவுக்கு மகாத்மா என்ன உணவைத் தந்தார் தெரியுமா? தாம் உண்ணும் வேர்க்கடலையை அன்று. பசுமாட்டுக் கறியைத் தந்தார். இதன் உட்பொருளை அறியாத மக்கள் அவரைக் குறை

கூறினர். ஆம்! பல சமயங்களில் ஒருவர் கொண்டிருக்கிற விழுப்பொருளை மாற்றிக் கொள்வதில் தவறில்லை. ஆனால், மாற்றிக் கொள்வதற்குத் தகுந்த காரணமும் இருக்க வேண்டும். எந்த இந்து தர்மம் பசுப் பாதுகாப்பைப் போற்றுகிறதோ, அதே இந்து தர்மம், அதிதியை (விருந்தினரை) உபசரிக்கும் பொழுது அவர்கள் விரும்புவதையே தரல் வேண்டும் என்று கூறுகிறது. எனவே அடிகளார் தம் அழைப்பை ஏற்று வந்துள்ள விருந்தினர் விரும்புவதையே தருவது தன் தலையாய கடமை என எண்ணினார். தம் விழுப்பொருளைத் தக்க காரணத்துக் காகவே மாற்றிக் கொண்டார்.

இந்த நுண்மையான கருத்தைக் கவிஞன், காப்பிய நாயகனும், அறத்தின் மூர்த்தியுமான, இராகவனிடமே வைத்துக் காட்டுகிறான். பெண்ணின்மேல் அம்பு தொடுத்தல் ஆகாது என்று, அதுவரை தான் கொண்டிருந்த விழுப்பொருளை, விசுவாமித்திரன் சொல் கேட்டு, இராகவன் உதறிவிடுகிறான். இதுபற்றி முன்னர் விரிவாகப் பேசப் பெற்றது.

இராகவனை ஒத்த ஒருவன், தான் அதுவரை கொண்டிருந்த விழுப்பொருளை உதறவும் முடியாமல், ஏற்கவும் இயலாமல், தன்னுள்ளேயே போராடி, இறுதியில் அதற்கு முடிவு காண்பதாகவும் கவிஞன் கூறுகிறான்.

தன் மனமாற்றத்தைக் கூறத் தொடங்கிய இராகவன் மிகக் கவனத்துடன் பேசுகிறான். 'ஐயனே! அறம் அல்லா ததைச் செய்க என்று, நீயே ஏவினால், நின் சொற்களை வேதம் என்று கொண்டு செய்வதே எனக்கு அறமாகும்' என்ற பொருளில்,

ஐயன் அங்கு அதுகேட்டு, 'அறன் அல்லவும்
எய்தினால், 'அது செய்க' என்று ஏவினால்

